இந்தியா - நாடும் மக்களும்

# நமது அரசியலமைப்பு

(இந்தியாவின் அரசியலமைப்பும்
அரசியலமைப்புச் சட்டவியலும் பற்றிய ஓர் அறிமுகம்)

ஆங்கில மூலம்: சுபாஷ். சி. கஷ்யப்
தமிழாக்கம்: கண்ணையன் தட்சிணாமூர்த்தி



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

# உள்ளடக்கம்

# நூன்முகம்

புகழ்பெற்ற எழுத்தாளர் ஒருவரிடம் ஒருமுறை, அவருடைய பிரபலமான ஆய்வுக்கட்டுரைகளை எழுதுவதற்கு எத்துணை காலம் பிடித்தது என்று வினவினர். அதற்கு அவர் பதிலளிக்கும்போது, "எழுதுவதற்கு ஒன்றரை ஆண்டுகள்தான் ஆயின. ஆனால் அவற்றுக்குப் பின்புலத் தேவையாக வாழ்நாள் முழுவதுமான அனுபவமும் ஆராய்ச்சியும் அமைந்தன" என்றார். இந்த நூலுக்கும் அதுபோன்ற பின்னணி உண்டு என்பதை மிகுந்த பணிவுடன் சொல்லிக் கொள்ள விழைகிறேன்.

நான் கடந்த நாற்பதாண்டுகளுக்கும் மேலாக அரசியலமைப்பு மற்றும் அரசியலமைப்புச் சட்டவியலை தொடர்ந்து பயின்று வந்திருக்கிறேன். சொல்லப்போனால், இந்திய அரசியலமைப்பு இயற்றப்பட்டு, ஏற்கப்பட்டு, நடைமுறைக்கு வந்ததில் இருந்து நான் இத்துறை மாணவன் எனலாம். இந்திய பொது நிர்வாக நிறுவனத்தின் வெளியீடாக "இந்திய அரசியலமைப்பின் உருவாக்கம்" என்ற தலைப்பில் ஐந்து தொகுதிகளை எழுதிய பின்னர், இந்திய அரசியலமைப்பு வளர்ந்து, செயல்பட்டு, விவாதிக்கப்பட்ட விவரங்கள் குறித்த எளிய நூல் ஒன்றை எழுத வேண்டும் என்று நெடுங் காலமாகவே எண்ணி வந்தேன். ஆயினும் இடைப்பட்ட ஆண்டுகளில் அரசியல், அரசாங்கம், நாடாளுமன்றம் போன்ற துறைகளில் பல நூல்களை நான் வெளியிட்ட போதிலும், அரசியலமைப்பைப் பற்றிய நூல் எழுதும் பணி பின்னுக்குத் தள்ளப்பட்டுவிட்டது. கையடக்கமான இந்த நூல் முற்றுப்பெற்று இப்போது வெளிவருவதற்குககூட நேஷனல் புக் டிரஸ்ட்தான் காரணம்.

இந்திய அரசியலமைப்பைப் பற்றி ஆயிரம் பக்கங்களுக்கு மேல் விரிவான நூல் ஒன்றை எழுதுவதென்பது எனக்கு மிக எளிதாக இருந்திருக்கும். அளவில் இந்நூல் பெரியதாகிவிடக்கூடாது என்பதற்காக நான் கடினமாக உழைக்க வேண்டியிருந்தது; அறிவார்ந்த விளக்க நூலாக இல்லாமல், சாதாரண வாசகரும் ஆர்வத்துடன் படிக்கக் கூடியதாகவும், செய்திகளை மட்டும் சொல்லுகின்ற எளிய முறையிலும் இந்த நூலை அமைக்க மிகவும் சிரமப்பட்டேன். இதற்காகவே, ஆதாரங்களை விரிவாக மேற்கோள் காட்டுவதையும், அடிக்குறிப்புகள் தருவதையும் தவிர்ந்திருக்கிறேன். ஆயினும், மிக முக்கியமான கூறு எதுவும் விடுபட்டுப் போகாதிருக்கவும் நான் பெரிதும் முயன்றுள்ளேன். தீர்ப்புரைக்கப்பட்ட சான்று வழக்குகளைப் பொறுத்தவரையில், தெரிந்தெடுக்கப்பட்ட சில

உச்சநீதிமன்றத் தீர்ப்புகளை மட்டுமே நான் எடுத்தாண்டிருக்கிறேன். மேலும், இந்தியாவின் அரசியல் முறை, அரசியலமைபபுச் சட்டவியல் ஆகியவற்றின் மாணவன் என்ற முறையில் நமது அரசியலமைப்பின் முரண்பாடுகள் சிலவற்றைப்பற்றி நான் சில தீவிரமான கருத்துக்களைக் கொண்டிருந்த போதிலும், அவற்றை வேண்டுமென்றே இந்நூலில் வலியுறுத்தாமல் தவிர்த்துள்ளேன்; வேறொரு கண்ணோட்டத்தில் நான் எழுதவிருக்கும் மற்றொரு நூலில் அவை இடம் பெறும்.

நமது அரசியலமைப்பினைப் பற்றி, பல்வேறு தொகுதிகளாக ஏற்கெனவே பல நூல்கள் வந்துள்ளன. ஆனாலும், எல்லா விஷயங்களையும் உள்ளடக்கியதாகவும், ஆதாரபூர்வமாகவும் கையடக்கமான நூல் ஒன்று நீண்ட காலத் தேவையாக இருந்து வந்துள்ளது. அத்தேவையை இந்நூல் நிறைவு செய்யும் என்று நம்புகிறேன். ஆட்சியியல், அரசியலமைப்புச் சட்டவியல் போன்றவற்றைப் பயிலும் மாணவர்கட்கு மட்டுமின்றி நமது அரசியலமைப்பைப் புரிந்து கொள்ளவும், நமது அரசியல்—அரசியலமைப்புச் சூழ்நிலையைப் பற்றித் தெரிந்து கொள்ளவும் விரும்புகின்ற பொது மக்களுக்கும், வழக்குரைஞர்களுக்கும் இந்நூல் பயனுள்ளதாய் அமையும்.

அரசியலமைப்பு வாசகங்கள் மற்றும் அரசியல் நிர்ணயசபை விவாதங்கள் தவிர, பல்வேறு சட்ட அறிக்கைகளையும் நான் பயன் படுத்தியுள்ளேன். மேலும், நீதிபதி ஹிதாயத்துல்லா, நீதிபதி பெக், நீதிபதி ஹெக்டே, நீதிபதி கஜேந்திரகட்கர், என்.ஏ. பல்கிவாலா, ஷிவராவ், எச்.எம்.சீர்வை, கிரான்வில் ஆஸ்டின், ஆர்.சி.எஸ். சர்க்கார், பி.எம். பக்ஷி, எம்.பி. ஜெயின், ஜே.என்.பாண்டே, வி.என். சுக்லா, டி.டி.பாசு, மற்றும் அரசியலமைப்பு அறிஞர்களின் படைப்புகளும் இந்நூலுக்கு உதவியுள்ளன. அவர்கள் அனைவருக்கும் நன்றியுடையேன்.

இதற்கு முன்னர் நான் எழுதியவற்றையும் இந்நூலில் முழுமையாகப் பயன்படுத்திக் கொண்டுள்ளேன். 'அடிப்படை உரிமைகள்' அத்தியாயத்தை எழுத திரு. எம்.சி. ஷாவும், 'நீதித்துறை' அத்தியாயத்தை எழுத பி.ஆர். மிட்டலும் உதவினர். நூற்பட்டியலையும் அட்டவணையையும் தொகுக்கவும் திரு. ஷா உதவினார். மேலும், இந்நூலை எழுதி முடிக்க நேரிடையாகவும் மறைமுகமாகவும் எனக்கு உதவிய ஏனைய நண்பர்களுக்கும், எனது குடும்பத்தாருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலின் முதற்பதிப்பு (ஆங்கிலத்தில்) 1994-ல் வெளியானது. ஒரு வருடத்திற்குள் மறுஅச்சு செய்ய வேண்டியதாயிற்று; புத்தகம் பரந்த வரவேற்புக்குள்ளாகியிருப்பதை இது சுட்டுகிறது. இந்தியிலும், பிற இந்திய மொழிகளிலும் இப்புத்தகம் விரைவில் வெளியாகும்.

*சுபாஷ் சி. கஷ்யப்*

டி- 298 சர்வோதயா
புதுதில்லி - 110017
ஜனவரி, 1995

# 1

# அறிமுகம்

## அரசியலமைப்பு என்றால் என்ன?

ஒரு நாட்டு மக்களை ஆட்சி புரியும் அடிப்படையான அரசியல் முறையைக் கூறுவதே அந்நாட்டின் அரசியலமைப்பு ஆகும். அரசின் தலையாய அங்கங்களாகிய சட்டமியற்றும் சபை, நிர்வாகம், நீதித்துறை ஆகியவற்றைத் தோற்றுவித்து, அவற்றின் அதிகாரங்களை வரையறுத்து, பொறுப்புகளைப் பகுத்து, பரஸ்பரம் அவற்றுக்கு இடையேயும், அவற்றுடன் மக்களுக்கும் உள்ள உறவுகளை நெறிப்படுத்துவதே அரசியலமைப்பு ஆகும்.

மக்களாட்சியில், இறையாண்மை மக்களிடம் இருக்கிறது; மக்கள் தங்களைத் தாங்களே ஆள்கிறார்கள். ஆனால், தேசிய அரசுகளின் அளவும் நிர்வாகமும் பல்கிப் பெருகிச் சிக்கலாகி வருகின்ற சூழ்நிலையில், நேரிடையான மக்களாட்சி என்பது இனிமேலும் சாத்தியம் இல்லை. நவீன, பிரதிநிதித்துவ மக்களாட்சி அமைப்புகளில், தாங்கள் எப்படி, யாரால் ஆளப்படவேண்டும் என்பதை மக்கள் பாராதீனப்படுத்த முடியாத தம்முடைய உரிமையினால் தீர்மானிக்கிறார்கள். அவ்வகையில், மக்கள் தம்முடைய இறையாண்மையைப் பயன்படுத்துகின்ற முதலாவதும் மிக அடிப்படையானதுமான பணி, தமக்குத் தாமே ஓர் அரசியலமைப்பை உருவாக்கிக் கொள்வதாகும். அரசின் பல்வேறு அங்கங்களிடையே சில அதிகாரங்களைப் பகிர்ந்து கொள்வது பற்றியும், அந்த அதிகாரங்களை அவ்வமைப்புகள் பயன்படுத்துவது பற்றியும் சில அடிப்படையான விதிகளைக் கொண்டதாக அந்த அரசியலமைப்பு விளங்கும்.

கூட்டரசு (சமஷ்டி) அமைப்பு முறையில், ஒருபுறம் மைய அரசுக்கும், மறுபுறம் மாநில அரசுகளுக்கும் அவற்றின் அங்கங்களை உருவாக்கி, பகுத்து, வரையறுத்து அவற்றுக்கிடையேயான அதிகாரங்கள் பகிர்ந்தளிக்கப்படும்.

ஒரு நாட்டின் அரசியலமைப்பானது, அதன் அரசியல் முறையின் அடிப்படைகளை வரையறுக்கின்ற அஸ்திவாரமான சட்டம் எனலாம். அரசியலமைப்பு எனும் சன்னிதியில்தான் ஏனைய சட்டங்களும், அரசின் நிர்வாகச் செயல்பாடுகளின் செல்லுபடித் தன்மையும் பரிசோதிக்கப்படும்.

எல்லா அரசியலமைப்புகளுமே அவற்றை உருவாக்கிய அறிஞர்களின் நெடுநோக்கினையும் மதிப்பீடுகளையும் பிரதிபலிக்கின்றன. சமுதாய,

அரசியல், பொருளாதார பொதுப்பண்புகளையும் மக்களின் நம்பிக்கைகளையும் எதிர்பார்ப்புகளையும் அடிப்படையாகக் கொண்டு அவை உருவாகியுள்ளன.

ஒரு நாட்டின் அரசியலமைப்பை ஒரு வெற்று ஆவணம் எனக் கருதுவது தவறானது. ஏனெனில், ஆவணத்தில் எழுதப்பட்டிருப்பது மட்டுமே அரசியலமைப்பு அன்று; செயல்படுகின்ற அமைப்புகளின் உயிர்த்துடிப்பே அரசியலமைப்பு ஆகும். அது தொடர்ந்து பரிணாம வளர்ச்சி பெறுகிறது. ஒவ்வோர் அரசியலமைப்பும் அது செயல்படுகின்ற முறையாலும், செயல் படுத்துகின்ற மக்களாலும், அந்நாட்டின் நீதிமன்றங்களில் அதற்கு விளக்க முரைக்கப்படுகின்ற விதத்தாலும், அது செயல்படுகின்றபோது, அதைச் சார்ந்து எழுகின்ற மரபுகள் - பழக்க வழக்கங்களாலும்தான் பொருள் பெறுகிறது.

## அரசியலமைப்புச் சட்டம்

பொதுவாக அரசியலமைப்புச் சட்டம் என்பது ஒரு நாட்டின் அரசியலமைப்புக்கு ஏற்ப உருவாக்கப்பட்ட அடிப்படையான சட்டத்தைக் குறிக்கும். குறிப்பாக, அரசின் அங்கங்களுக்கு இடையேயும், ஒன்றிய* - மாநில அரசுகளுக்கு இடையேயும், அதிகாரங்களைப் பகிர்ந்து கொள்வது தொடர்பான அடிப்படைக் கூறுகளைப் பற்றிய கட்டமைப்பு எனலாம். எனினும் இக்கால அரசியலமைப்புச் சட்டங்கள், அதிலும் குறிப்பாக, முழுமையான பிரதிநிதித்துவ மக்களாட்சி அமைப்புகளின் அரசியலமைப்புச் சட்டங்கள் அடிப்படை மனித உரிமைகளுக்கும், அரசுக்கும் தனி மனிதனுக்கும் இடையேயான உறவுக்குமே பெரிதும் முக்கியத்துவம் அளிக்கின்றன. அத்துடன், அரசியலமைப்புச் சட்டத்திற்கு ஆதாரமானவை அரசியலமைப்பு வாசகங்கள் மட்டுமல்ல; அரசியலமைப்பு குறித்து தீர்ப்புரைக்கப்பட்ட வழக்குகளும், மரபுகளும், அரசியலமைப்புக் கூறுகளின் கீழ் இயற்றப்பட்ட பல்வேறு சட்டங்களும் ஆகும்.

## அரசியலமைப்பு நெறி

அரசியலமைப்பு நெறி என்பது ஓர் அரசியலமைப்பினால் அல்லது அரசியலமைப்பின் கீழ் ஆளப்படுகின்ற வரம்புற்ற ஓர் அரசாட்சி ஆகும் அங்கே சட்டத்தின் ஆட்சியே நிகழும். எதேச்சாதிகாரமான சர்வாதிகார ஆட்சிக்கு எதிர்மறையானது இது. எனவே, அரசியலமைப்புச் சார்ந்த அரசு எனில் அது நிச்சயம் மக்களாட்சியாகத்தான் இருக்கவேண்டும். மேலும் அரசியலமைப்பு நெறி என்பது, இயற்றப்பட்ட ஓர் அரசியலமைப்புடன் சேர்ந்தே உருவாவதாகும். இயற்றப்பட்ட அரசியலமைப்பு, ஒரு நாட்டின் பல்வேறு அங்கங்களின் அதிகாரங்களை வரையறுத்துப் பிரிப்பதால்,

---

* யூனியன் (Union) என்ற சொல்லுக்கு நிகராக 'ஒன்றியம்' என்பது இந்நூலில் பயன்படுத்தப்பட்டுள்ளது. இது மைய அரசைக் குறிக்கவில்லை. மேலும் விவரங்களுக்கு 15-ஆவது அத்தியாயத்தின் கடைசிப் பத்தியைக் காண்க.

அதன் கீழ் அமையும் அரசும் வரம்புற்ற ஓர் அரசாகவே இருக்கும். ஆயினும் சில நாடுகளில் இயற்றப்பட்ட அரசியலமைப்பு இருந்த போதிலும் அவை உண்மையில் மக்களாட்சிகளாக இல்லை என்பதற்கும் பல சான்றுகள் உள்ளன. அவை அரசியலமைப்பைப் பெற்றுள்ள போதிலும் அங்கே அரசியலமைப்பு நெறி இல்லை என்றுதான் சொல்ல வேண்டும்.

## இந்திய அரசியலமைப்பு

நமது இப்போதைய அரசியலமைப்பு - இந்திய மக்கள் தமக்குத் தாமே உருவாக்கி அளித்துக் கொண்ட இந்தியாவின் முதலாவது அரசியலமைப்பு- அரசியல் நிர்ணயசபையால் 1949ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 26ஆம் நாள் ஏற்கப்பட்டது. 1950ஆம் ஆணடு ஜனவரி மாதம் 26ஆம் நாள் முதல் அது முழுமையாக நடைமுறைக்கு வந்தது. தொடக்கத்தில் நாம் ஏற்றுக்கொண்ட அரசியல் சட்டத்தில் 22 பகுதிகளும 395 பிரிவுகளும் 9அட்டவணைகளும் இருநதன. அவ்வப்போது நமது அரசியலமைப்பு திருத்தப்பட்டிருக்கிறது. கடந்த 43 ஆண்டுகளில் 74 முறை திருத்தங்கள் செய்யப்பட்டுள்ளன.

## அரசியலமைப்பின் அடிப்படைகள்

இந்திய அரசியலமைப்பிற்கான ஆதாரங்கள் பலதிறப்பட்டவை. அவை நம் நாட்டிலிருந்தும், வெளிநாடுகளில் இருந்தும் பெறப்பட்டவை. நமது அரசிய லமைப்பை உருவாக்கிய அறிஞர்கள். அனைத்தையும் புதியதாக உருவாக்க வில்லை என்பதைத் தெளிவுபடுத்தியிருக்கிறார்கள். கடந்த கால அமைப்பில் இருந்து முற்றிலும் விலகிப் போகாமல், ஏற்கெனவே இருந்த அமைப்பு களிலிருந்து பெற்ற அனுபவத்தின மூலம், பழைய அமைப்பின்மீதே புதிய அரசியலமைப்பை உருவாக்குவதென்ற தெளிவான முடிவை அவாகள் மேற்கொண்டனர். இந்திய அரசியலமைப்பு பலவாறாக வளர்ந்திருக்கிறது. விடுதலைப் போராட்ட காலத்தின் போது, பொறுப்புடைமை மிக்க பிரதி நிதித்துவ அரசமைப்புகள் தேவையென்று எழுந்த பல்வேறு கோரிக்கைகளும், பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள் அரை மனதுடன அவ்வப்போது வழங்கிய சில சிறுசிறு சீர்திருத்தங்களும் சேர்ந்து, வளர்ச்சிகள் உருவாயின. மிகப்பழங் காலத்தில் இருந்தே அரசியல் ஸ்தாபனங்கள் எளிய முறையில் செயல்பட்டு வந்த போதிலும், இன்றைய நாடாளுமன்ற அமைப்புகள் 1920ஆம் ஆண்டு களின் பிற்பகுதியில் இருந்து தோன்றின எனலாம். சொல்லப்போனால், நமது அரசியலமைப்பின் சில வகையுரை (ஷரத்து)களுக்கான ஆதாரங்களை கிழக்கிந்தியக் கம்பெனியின் தோற்றம், இந்தியாவில் பிரிட்டிஷ் அரசாட்சி ஆகியவற்றிலிருந்தே பெறலாம்.

நமது அரசியலமைப்பின் நெறிமுறைக் கோட்டுபாடுகளில் கிராமப் பஞ்சாயத்துக்கள் பற்றிக் குறிப்பிட்டிருப்பதற்கான தூண்டுதல், பண்டைய இந்தியாவில் நிலவிய சுயாட்சி ஸ்தாபனங்களில் இருந்து தோன்றியதே. இந்திய அரசியலமைப்பின் 73ஆவது 74ஆவது திருத்தச் சட்டங்கள் அவற்றுக்கு வலிமை சேர்த்து மேலும் பொருளுடையதாய் ஆக்கியுள்ளன.

1918ஆம் ஆண்டில், பம்பாயில் நடைபெற்ற இந்திய தேசிய காங்கிரஸ் மாநாட்டிலேயே அடிப்படை உரிமைகள் பற்றிய சில கோரிக்கைகள்

எழும்பிவிட்டன. 1925ஆம் ஆண்டு தேசிய மாநாட்டில் இறுதியாக்கப்பட்ட இந்தியக் காமன்வெல்த் மசோதாவில், சட்டத்திற்கு முன் சமத்துவம், பேச்சுரிமை, குழுவாகக் கூடும் உரிமை, சமய உரிமை போன்றவற்றை உள்ளடக்கிய “உரிமைப் பிரகடனம்” சேர்க்கப்பட்டிருந்தது. 1927ஆம் ஆண்டு சென்னையில் நடைபெற்ற காங்கிரஸ் மாநாட்டில் அடிப்படை உரிமைகளுக்கான கோரிக்கை வலியுறுத்தப்பட்டது. 1928 ஆம் ஆண்டின் அனைத்துக் கட்சிகள் மாநாடு நியமித்த மோதிலால் நேரு குழுவும் தன்னுடைய அறிக்கையில், நியாயமான அடிப்படை மனித உரிமைகளைப் பெறுவதே இந்திய மக்களின் பிரதான நோக்கம் என்று கூறியிருந்தது. மோதிலால் நேரு குழுவின் அறிக்கையில் குறிப்பிடப்பட்டிருந்த பத்தொன்பது அடிப்படை உரிமைகளில், பத்து உரிமைகள் பெருத்த மாற்றம் ஏதுமின்றி அப்படியே இப்போதைய அரசியலமைப்பில் இடம்பெற்றுள்ளன. 1931ஆம் ஆண்டு கராச்சி காங்கிரஸ் மாநாட்டில் இயற்றப்பட்ட தீர்மானம், அடிப்படை உரிமைகளை மட்டுமின்றி, அடிப்படைக் கடமைகளையும் பட்டியலிட்டுக் கூறியது. அதில் சொல்லப்பட்டிருந்த சமுதாய - பொருளாதார உரிமைகள் பலவும் நமது அரசியலமைப்பின் நெறிமுறைக் கோட்பாடுகளில் இடம் பெற்றுள்ளன. அரசியலமைப்பு முதன்முதலாக இயற்றப்பட்டபோது இடம் பெற்றிராத ‘அடிப்படைக் கடமைகள்’ எனும் விதி 1976ஆம் ஆண்டில் 42ஆவது அரசியலமைப்பு திருத்தச் சட்டத்தின் மூலமாகச் சேர்க்கப்பட்டது.

நாடாளுமன்றத்திற்குக் கட்டுப்பட்ட அரசைக் கொண்ட நாடாளு மன்ற அமைப்பு, சிறுபான்மையினருக்குப் பாதுகாப்பு, கூட்டரசு அமைப்பு ஆகியவையும்கூட 1928ஆம் ஆண்டு மோதிலால் நேரு குழு அறிக்கையில் இருந்து தோன்றியவையே எனலாம்.

நமது இப்போதைய அரசியலமைப்பில் கிட்டத்தட்ட 75 சதவீதம் 1935ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டத்தின் மறுபதிப்பு எனலாம். தேவையான சிற்சில மாற்றங்கள் மட்டுமே அதில் செய்யப்பட்டன. ஆட்சி அமைப்பின் அடிப்படை, ஒன்றிய-மாநில உறவுகளை நெறிப்படுத்துவது, அவசர நிலைப் பிரகடனம் முதலிய விதிகள் 1935ஆம் ஆண்டு சட்டத்தையே அடிப்படையாகக் கொண்டவை. உள்நாட்டில் கிடைத்த இந்த ஆதாரங்களைத் தவிர பல வெளிநாட்டு அரசியலமைப்பு மாதிரிகளும் அரசியல் நிர்ணய சபையின் பரிசீலனைக்குக் கிடைத்தன. அவற்றின் காரணமாக ‘நெறிமுறைக் கோட்பாடுகள்’ என்ற கருத்து ஐரிஷ் அரசியலமைப்பில் இருந்து பெறப்பட்டது. நாடாளுமன்றத்திற்குக் கட்டுப்பட்ட அமைச்சரவை கொண்டதான ஆட்சி முறை, பிரிட்டிஷ் அரசியலமைப்பில் இருந்து பெறப்பட்டது. நாட்டின் நிர்வாகத் தலைவராகவும், முப்படைகளின் தலைமைத் தளபதியாகவும், குடியரசுத் தலைவரும், மாநிலங்களவையின் தலைவராகக் குடியரசுத் துணைத்தலைவரும் திகழ்கின்ற முறை அமெரிக்க மாதிரியிலானது. அமெரிக்க அரசியலமைப்பில் இடம் பெற்றுள்ள உரிமை மசோதாவும்கூட நமது அடிப்படை உரிமைகளுக்கு மூலாதாரமாக விளங்கியது எனலாம்.

கூட்டரசு அமைப்பும், ஒன்றிய-மாநில அரசுகளுக்கு இடையேயான உறவுகளும், அதிகாரப் பகிர்வும் கனடாவின் அரசியலமைப்பினைப் பின்பற்றி உருவாயின. ஏழாவது அட்டவணையில் உள்ள ஒன்றிய-மாநிலப்

பொதுப்பட்டியல், ஒன்றிய - மாநில உறவு, வாணிகம், நாடாளுமன்ற உரிமைகள் போன்றவை ஆஸ்திரேலிய அரசியலமைப்பை அடியொட்டி எழுந்தவை. அவசரநிலை பற்றிய விதிகள், பெரும்பாலும் ஜெர்மன் ரெய்ச்-இன் தாக்குறவினால் தோன்றியவை. நீதிப் பேராணைகள், நாடாளுமன்ற உரிமைகள் போன்றவை பற்றிய விதிகளின் விரிவான பரப்பினையும் நோக்கினையும் முழுமையாக அறிந்து கொள்ள வேண்டுமாயின் மீண்டும் நாம் பிரிட்டிஷ் அரசியலமைப்பையே நாட வேண்டியிருக்கும்.

## அரசியலமைப்பிற்கு விளக்கமுரைத்தல்

ஏனைய சட்டங்களின் உட்பொருளை வெளிக்கொணர்வதற்காகப் பின்பற்றப்படும் பொதுவிதிகளே, அரசியலமைப்பின் உட்பொருளை விளக்கியுரைப்பதற்கும் பின்பற்றப்படும். ஆனால் அரசியலமைப்புச் சட்டம் என்பது, மற்ற சட்டங்களை இயற்றும் நாடாளுமன்றத்தை உருவாக்கி, சட்டங்களுக்கு உயிர் கொடுக்கும் தாய்ச் சட்டம் போன்று மிக உயரியதான அடிப்படைச் சட்டம் என்பதை நாம் நினைவில் இருத்த வேண்டும். எனவே, 'தாராள விளக்கவுரைக் கோட்பாட்டின்படி' அரசியலமைப்பின் உட்பொருளை விளக்கியுரைக்க வேண்டிவரும்பொழுது, மிகப்பரந்த கண்ணோட்டத்தில், குறுகிய மனப்போக்கு இன்றி விளக்கம் உரைக்க வேண்டும். அரசியலமைப்புக்கு விளக்கம் உரைக்க பொதுவிதிகளைத் தவிர மேலும் சில சிறப்பு விதிகளும் உள்ளன.

அரசியலமைப்பின் ஒவ்வொரு விதியிலும் பயன்படுத்தப்பட்டுள்ள ஒவ்வொரு சொல்லுக்கும் பொருள் உள்ளதாக விளக்கவுரைகள் அமைய வேண்டும். ஒவ்வொரு சொல்லும் அதன் இயல்பான பொருளில் பயன் படுத்தப்பட்டு இருப்பதாகவும், எனவே அவற்றுக்கு உரிய சாதாரண எளிய பொருளையே கொள்ளவேண்டும் என்றும் உச்சநீதிமன்றம் தீர்ப்பளித் திருக்கிறது. (கேசவானந்த பாரதி எதிர் கேரள அரசு, (1973) 4 SCC 225).

அரசியல் சட்ட விதிகளுக்கு விளக்கமுரைப்பதன் நோக்கம அதனை உருவாக்கிய சிற்பிகளின் உள்ளக்கிடக்கையை உறுதிப்படுத்திக் கொள்வதற்குத் தான. எனவே அதன் வாசகத்தில் உள்ள சொற்களைக் கொண்டு மட்டுமே இவ்வுறுதிப்பாட்டை நாம் எட்ட வேண்டும். ஏதேனும் ஒரு வாசகம் மிகத் தெளிவாகவும், குழப்பம் இல்லாமலும் இருக்குமானால், விளக்கமுரைக்கும் போது அரசியல் நிர்ணயசபையில் அதனை உருவாக்கியவர்கள் எடுத்துரைத்த கருத்துகளோ, அரசியலமைப்பின் உட்கிடக்கையோ கவனத்தில் எடுத்துக் கொள்ளப்பட வேண்டியதில்லை. ஆனால் வாசகங்கள் தெளிவில்லாமல், ஒன்றுக்கும் மேற்பட்ட பொருள்களைத் தருவதாக அமையுமானால், தெளிவு பெறுவதற்காக மேற்சொன்ன விஷயங்களைக் கருத்தில் கொள்ளலாம் (மேனன் எதிர் பம்பாய் அரசு, AIR 1951 SC128; கோபாலன் எதிர் சென்னை அரசு, AIR 1950 SC 27).

அரசியலமைப்பின் ஒவ்வொரு பகுதிக்கும் உரிய கவனம் செலுத்தி அதனை முழுமையாகப் படிக்கவேண்டும். ஏதேனும் இரண்டு வகையுரைகள் முரண்படுவதாகத் தோன்றுமானால், இணக்க விளக்கக் கோட்பாட்டின்படி, இரண்டுமே சுமுகமாகவும் இணக்கமாகவும் செயல்படுவதற்கு ஏற்றவாறு

பொருள் கொள்ள வேண்டும் (வெங்கட் ரமணா எதிர் மைசூர் அரசு, A.1958 SC255; சென்னை அரசு எதிர் சம்பகம்(1951) SCR5257; கோபாலன் எதிர் சென்னை அரசு (1950) SCR 88).

ஒரு வகையுரையின் ஒரு பகுதி மட்டும் செல்லுபடியாகாது எனத் தோன்றினால், அதன் எஞ்சிய பகுதி அதிலிருந்து பிரிந்து தனித்து இயங்கக் கூடியது எனில், இணைபிரிப்புக் கோட்பாட்டின்படி, எஞ்சிய பகுதியின் செல்லுபடியாகும் தன்மை பாதிக்காது (கயா பிரதாப்சிங் எதிர் அலகாபாத் வங்கி AIR 1955 SC765; கோபாலன் எதிர் சென்னை அரசு (1950) SCR88).

உச்சநீதிமன்றம் விளக்கமுறைத்தபடி ஒரு சட்டம் செல்லுபடியாகாது எனில், அது அச்சட்டத்தின்படி நடைபெற்ற கடந்தகாலச் செய்கைகளைப் பாதிக்காது என்ற கோட்பாட்டின்படி கோலக்நாத் வழக்கில் உச்சநீதி மன்றம் தீர்ப்பளித்தது. (கோலக்நாத் எதிர் பஞ்சாப் அரசு, AIR 1967 SC1643).

# 2

# அரசியலமைப்பின் வரலாறு

ஒரு நாட்டின் அரசியலமைப்பு என்னும் மாளிகை அதன் கடந்தகாலம் எனும் அஸ்திவாரத்தின் மீது எழுப்பப்படுகிறது. எனவே, நடைமுறையிலுள்ள எந்த ஓர் அரசியலமைப்பைப் பற்றிப் புரிந்து கொள்ள வேண்டுமானாலும் அந்நாட்டின் வரலாற்றுப் பின்னணியைத் தெரிந்து கொள்வது அவசியமாகும்.

## பண்டைய இந்தியாவில் அரசியலமைப்பு சார்ந்த அரசாங்கம்

மக்களாட்சித் தத்துவங்கள, பிரதிநிதித்துவ அமைப்புகள், ஆட்சியாளர்களின் தன்னிச்சையான அதிகாரத்தின மீதான கட்டுப்பாடுகள், நீதியின் ஆட்சி போன்றவை பண்டைய இந்தியாவில் வழக்கத்தில் இருந்தன. இன்று நாம் பேசுகின்ற "நீதியின் ஆட்சி" அல்லது "வரம்புற்ற அரசு" என்பதற்கும் அந்நாளைய தர்மநெறி என்பதற்கும் பெருத்த வேறுபாடு ஏதுமில்லை. பண்டைய இந்திய அரசர்கள் அனைவருமே தர்மநெறிக்குக் கட்டுப் பட்டவர்கள்; எவருமே தர்மத்திற்கு மேலானவர்கள் அல்லர். பண்டைய இந்தியாவின் பல பகுதிகளிலும் குடியாட்சி அமைப்புகள், பிரதிநிதித்துவ விவாத அமைப்புகள், தல சுயாட்சி அமைப்புகள் போன்றவை செயல்பட்டு வந்தன என்பதற்கும், வேதகாலம் தொட்டே (கி.மு. 3000 - கி.மு. 1000) மக்களின் வாழ்க்கை முறையில் மக்களாட்சிச் சிந்தனைகளும் மரபுகளும் பரவியிருந்தன என்பதற்கும் போதிய சான்றுகள் இன்று நமக்குக் கிடைத்துள்ளன.

ரிக் வேதமும் அதர்வண வேதமும் சபா (பொதுப்பேரவை), சமிதி (மூத்தோர் அவை) ஆகியவை பற்றிக் குறிப்பிடுகின்றன. அய்த்ரேய பிரமாணம், பாணினியின் அஷ்டத்யாயி, கௌடில்யரின் அர்த்தசாஸ்திரம், மகாபாரதம், அசோகரின் கல்வெட்டுக்கள், பௌத்த, சமண நூல்கள், மனுஸ்மிருதி போன்ற அனைத்துமே, வேதகாலத்திற்குப் பின்னர் இந்தியாவில் குடியாட்சி அமைப்புகள் பல செயல்பட்டு வந்தமைக்குச் சான்று பகர்கின்றன. மகாபாரத காலத்திற்குப் பின்னர், பல சிறிய குடியாட்சி அமைப்புகள் தோன்றுவதற்குப் பேரரசுகள் வழிவிட்டன. இத்தகைய குடியாட்சி அமைப்புகள் எங்ஙனம் செயல்பட்டன என்பதற்கு ஜாதகங்களில் பல குறிப்புகள் காணப்படுகின்றன. குடியாட்சியின் உறுப்பினர்கள் சந்தாகரில் கூடி, பொதுப் பேரவையில் தமது பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்தனர்.

அவர்கள் தேர்ந்தெடுத்த கோபன், அவர்களை ஆளும் அரசனாகி, அமைச் சரவையின் துணையுடன் ஆட்சி புரிந்தான்.

கி.மு. நான்காம் நூற்றாண்டில் இருந்த 'க்ஷுத்ரக் மல்ல சங்கம்' என்ற குடியரசுக் கூட்டமைப்பு அலெக்ஸாண்டரின் படையெடுப்பை எதிர்த்துப் போரிட்டது. பாடலிபுத்திரத்திற்கு (பாட்னா) அருகில் லிச்சாவிகளின் தலைநகரான வைசாலி இருந்தது. 'நாயக்' என்ற தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவனால், பேரவை ஒன்றின் உதவியுடன் அந்தக் குடியரசு ஆளப்பட்டது. எனினும், இந்தச் சிறிய குடியரசுகளின் அரசியலமைப்பைப்பற்றி நமக்கு எதுவும் அறியக் கிடைக்கவில்லை. தென்னிந்தியாவில் வழக்கத்தில் இருந்த மக்கள் பேரவைகள் பற்றியும், அரசனின் அதிகாரங்களை அவை கட்டுப் படுத்திய முறைகள் பற்றியும், கிரேக்க அறிஞர் மெகஸ்தனிஸ் எழுதியுள்ள குறிப்புகள் நமக்குக் கிடைத்துள்ளன. கௌடில்யரின் அர்த்தசாஸ்திரம் கூட, பண்டைய இந்திய அரசியலில் ஏகாதிபத்தியத்திற்கோ, மன்னனின் இறை யதிகாரத்திற்கோ இடமில்லை என்று குறிப்பிடுகிறது. துஷ்பிரயோகம் செய்ய முடியாதவாறு அரசனின் அதிகாரங்கள் வரையறுக்கப்பட்டு, பிற பொது அமைப்புகளுக்குச் சுதந்திரமும் அதிகாரமும் அளிக்கப்பட்டிருந்தன. உண்மையில், மன்னன் எனப்பட்டவன வரையறுக்கப்பட்ட அதிகாரங் களைப் பெற்றிருந்த அரசியலமைப்புத் தலைவனாகவே திகழ்ந்தான். அநீதி இழைக்கின்ற கொடுங்கோல் மன்னனை அவனது குடிமக்களே வெறிநாயை அடித்துக் கொல்வதுபோல் கொன்றுவிட வேண்டுமென்று மனுசாஸ்திரம் கூறுகிறது. பத்தாம் நூற்றாண்டில் தோன்றிய சுக்ராசசாரியாரின் 'நிதிசாரா' என்னும் நூல் அரசியலமைப்புப் பற்றியது. மத்திய அரசின் தோற்றம், கிராமப்புற-நகர்ப்புற வாழ்க்கை, அரசவை, அரசாங்கத்தின் பல்வேறு துறைகள் போன்றவை பற்றி அந்நூல் குறிப்பிடுகிறது. பெரும்பாலானமையான மக்களின் கருத்திற்கு ஏற்ப மன்னன் செயல்பட வேண்டுமென்றும் அந்நூல் கூறுகிறது.

## பஞ்சாயத்து ஆட்சி அமைப்புகள்

குடியாட்சி அரசுகள், மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசாட்சி, சபா, சமிதி போன்ற மக்களாட்சி அமைப்புகள் காலப்போக்கில் மறைந்துவிட்ட போதும், கிராம சங்கம், கிராம சபை அல்லது பஞ்சாயத்து என்ற சிற்றூரா அளவிலான பிரதிநிதித்துவ அமைப்புகள் தொடர்ந்து செயல்பட்டுவந்தன அவை பல இந்து, முஸ்லீம் பேரரசுகள் இந்தியாவை ஆண்ட காலத்திலும் தொடர்ந்து செயல்பட்டு, பிரிட்டிஷ் ஆட்சி துவங்கும் வரையில் இயங்கி வந்தன.

## பிரிட்டிஷ் ஆட்சி தொடக்கம் (1600 - 1765)

வாணிகத்திற்காக பிரிட்டிஷார் இந்தியாவுக்கு வந்தனர். கி.பி. 1600ஆம் ஆண்டு டிசம்பர் 31ஆம் நாளன்று லண்டனைச் சேர்ந்த வணிகர்கள் சிலர் எலிசபெத் அரசியிடமிருந்து பெற்ற அரச சாசனத்தின்பேரில் கிழக்கிந்தியக் கம்பெனியைத் தோற்றுவித்தனர். இந்தியாவிலும், தென்கிழக்கு ஆசியாவின் சில பகுதிகளிலும் தொடக்கத்தில் 15 ஆண்டுகளுக்கு வாணிகம் செய்வ

தற்கான ஏகபோக உரிமையை அந்தச் சாசனம் கம்பெனிக்கு வழங்கியது. கம்பெனியின் அமைப்பு, அதிகாரம், உரிமைகள் ஆகியவையும் சாசனத்தில் குறிப்பிடப்பட்டிருந்தன. கம்பெனியின் உறுப்பினர்கள் ஆண்டுதோறும் கவர்னர் ஒருவரையும், 24 ஒரு நபர் குழுக்களையும் தேர்ந்தெடுக்க வேண்டும். இங்கிலாந்தில் இருக்கும் இந்த 25 பேரிடையே கம்பெனியின் நிர்வாகப் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டிருந்தது. பின்னர், இந்த ஒருநபர் குழுவில் இருந்தவர்கள் இயக்குநர்கள் என்றழைக்கப்பட்டனர். இயக்குநர்கள் அனைவரும் சேர்ந்த அமைப்பு இயக்குநர் அவை எனப்பட்டது. கம்பெனியைத் திறம்பட நிர்வகிப்பதற்கும், வாணிகத்தை முறைப்படுத்துவதற்கும், ஊழியர்களிடையே ஒழுங்கை நிலைநாட்டவும் சட்டமியற்ற கவர்னரும் கம்பெனியும் அதிகாரம் பெற்றிருந்தனர் எனினும் கம்பெனியின் சட்டமியற்றும் அதிகாரம் ஒரு வரம்புக்கு உட்பட்டதாகவே இருந்தது. பிரிட்டனில் நடைமுறையில் இருந்த சட்டங்கள், மரபுகள், முன்மாதிரிகளுக்கு முரணான சட்டங்களை அவர்களால் இயற்ற முடியாது.

அடுத்தடுத்து அரசி வழங்கிய சாசனங்களின் மூலம் கம்பெனியின் அதிகாரங்களும் உரிமைகளும் விரிவடைந்தன. கி.பி. 1700ஆம் ஆண்டில் கம்பெனி தனது தொழிற்சாலைகளை (வர்த்தக மையங்கள்) ஏற்படுத்தியிருந்ததுடன், பம்பாய், சென்னை, கல்கத்தா ஆகிய நகரங்களில் தனது பிரதான குடியேற்றங்களையும் ஏற்படுத்தியிருந்தது. 1669ஆம் ஆண்டு சாசனத்தின்படி பம்பாய்த் தீவும் துறைமுகமும் ஆண்டுக்குப் பத்து பவுண்டு வாடகைக்குக் கம்பெனிக்குத் தரப்பட்டிருந்தன. அத்துடன் பம்பாய் நகரையும் அதன் குடிமக்களையும் திறம்பட ஆட்சிபுரிவதற்குத் தேவையான சட்டங்களை இயற்றிக் கொள்ளும் அதிகாரமும் கம்பெனிக்கு வழங்கப்பட்டிருந்தது. இப்படியாக, முதன்முதலாக 1669ஆம் ஆண்டில், குறிப்பிட்டதொரு நிலப்பகுதியையும் அதன் மக்களையும் ஆட்சிபுரிவதற்கான அதிகாரத்தைக் கம்பெனி பெற்றது. அவ்வாறாக, சாதாரண வணிக நிறுவனம் அரசாட்சி புரியும் அமைப்பானது. 1677ஆம் ஆண்டில் கம்பெனி தனது நாணயங்களை வெளியிட்டுக் கொள்ளும் உரிமையைப் பெற்றது. 1683ஆம் ஆண்டு சாசனத்தின்படி போர்ப் பிரகடனம் செய்யவும், உடன்படிக்கைகள் செய்து கொள்ளவும் அதிகாரம் அளிக்கப்பட்டது. எனினும் எந்த ஒரு நிலப்பகுதியின் மீதும் கம்பெனி இறையாண்மை உரிமை கோர முடியாது என்ற நிலை நீடித்தது. கம்பெனியின் கட்டுப்பாட்டுக்குள் வந்த நிலப்பகுதிகளும், கம்பெனி கைப்பற்றிய நிலப் பகுதிகளும் பிரிட்டிஷ் அரசின் பாத்யதைக்கு உட்பட்டவை, கம்பெனி பிரிட்டிஷ் அரசின் பிரதிநிதியாக மட்டுமே இருந்தது.

பம்பாய், சென்னை, கல்கத்தா ஆகிய மூன்று மாகாணங்களின் கவர்னர்களும் கவுன்சில்களும், பிரிட்டனின் சட்டத்திற்கு உட்பட்டு, இயக்குநர் அவையின் ஒப்புதலுடன் துணை விதிகளையும் அவசரச் சட்டங்களையும் பிறப்பித்துக்கொள்ள 1726ஆம் ஆண்டு சாசனம் அதிகாரம் வழங்கியது. இவ்வாறாக பிரிட்டனின் சட்டங்கள் நம் நாட்டில் அறிமுகப் படுத்தப்பட்டு, மூன்று மாகாணங்களிலும் மேயர் நீதிமன்றங்கள் ஏற்படுத்தப்பட்டன.

ஔரங்கசீபின் மறைவுக்குப் (1707) பின்னர் முகலாயப் பேரரசு சிதறுண்டுபோய் நாடு முழுவதும் நிலவிய குழப்பமான சூழ்நிலையை அனுகூலமாகப் பயன்படுத்திக் கொண்ட கம்பெனி மெல்ல மெல்ல ஓர் ஆதிக்க சக்தியாக உருமாறியது. வங்காள நவாப் சிராஜ் உத்தௌலாவிற்கு எதிராக 1757ஆம் ஆண்டு நடைபெற்ற பிளாசிப் போரில் கம்பெனி பெற்ற வெற்றி, பழைய ஆட்சிமுறைக்கு முடிவுகட்டி இந்தியாவில் ஆங்கில ஆட்சி காலூன்ற வழி செய்தது.

1764ஆம் ஆண்டு பக்ஸார் போரில் முகலாய அரசன் ஷா ஆலம், ஔத் நவாப், வங்காள நவாப் ஆகியோரின் கூட்டணிப் படைகளை கம்பெனி தோற்கடித்தது. இதனையடுத்து வங்காளத்தின் முழுமையான கட்டுப்பாடும் கம்பெனியின் கைக்கு வந்தது. 1765ஆம் ஆண்டில் வங்காளம், பீகார், ஒரிசா ஆகியவற்றின் நிதி நிர்வாகப் பொறுப்பை, ஷா ஆலம் கம்பெனியின பொறுப்பில் ஒப்படைத்து விட்டார். அதன்படி, நிலவரி வசூல், குடிமை நீதி நிர்வாகம் ஆகிய பொறுப்புகள் கம்பெனிக்கு வந்தன. சட்டம்-ஒழுங்கு பராமரிப்பு, குற்றவியல் நீதி நிர்வாகம் ஆகியவை மட்டுமே நவாபிடம் இருந்தன. 1765ஆம் ஆண்டிலிருந்து 1772ஆம் ஆண்டுவரை இவ்வாறு நீடித்த இரட்டை ஆட்சிமுறை பெரும்குழப்பத்தை ஏற்படுத்திய தால், பிரிட்டிஷ் பொதுமக்கள்சபை இதுபற்றி விசாரிக்க விசாரணைக் குழு ஒன்றை நியமித்தது. அந்த விசாரணைக் குழு கம்பெனியின் நடவடிக்கைகளை ஒழுங்குபடுத்த வேண்டும் என்று பரிந்துரைத்ததன் பேரில், '1773ஆம் ஆண்டு ஒழுங்கு முறைச் சட்டம்' இயற்றப்பட்டது.

## கம்பெனி ஆட்சி (1773 - 1858)

*ஒழுங்குமுறைச் சட்டம் 1773:* இந்திய அரசியலமைபபு வரலாற்றில் 1773ஆம் ஆண்டுச் சட்டம் மிகவும் முக்கியமானது. ஏனெனில், இந்தியாவில் கம்பெனி நிர்வாகத்தின் மீது பிரிட்டிஷ் நாடாளுமன்றம் தனது கட்டுப்பாடுகளைக் கொண்டு வருவதற்கான முதல் முயற்சியாக அச்சட்டம் அமைந்தது. கம்பெனி ஆட்சியின்கீழ், நிலப்பகுதிகளை நிர்வகிப்பதென்பது கம்பெனி வணிகர்களின் தனிப்பட்ட விவகாரமாகத் தொடர்ந்து நீடிக்க இச்சட்டம் அனுமதிக்கவில்லை. 1773ஆம் ஆண்டின ஒழுங்குமுறைச் சட்டம் முதன் முறையாக கம்பெனி ஆட்சிக்காக, எழுதப்பட்ட அரசிய லமைப்பு ஒன்றை வழங்கி, கம்பெனியின் அரசியல் மற்றும் நிர்வாகப் பொறுப்புகளை அங்கீகரித்தது. இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியை ஒருங்கிணைத்து, நிர்வாகத்தை ஒருகுடையின்கீழ் கொண்டுவருவதற்கான முயற்சியில் இந்தச் சட்டம் முதல்படியாகத் திகழ்ந்தது. இச்சட்டத்தின்படி கல்கத்தாவில் உச்சநீதிமன்றம் ஒன்று ஏற்படுத்தப்பட்டது. முன்பிருந்த கல்கத்தா, பம்பாய், சென்னை ஆகிய மூன்று சுதந்திர மாகாணங்களும் வங்காளத்தில் இருந்த கவர்னர் ஜெனரலின் கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வரப்பட்டன. கவர்னர் ஜெனரலுக்கு உதவியாக நான்கு புதிய கவுன்சிலர்கள் நியமிக்கப்பட்டனர். அத்துடன் இங்கிலாந்தில் இருந்த இயக்குநர் அவையின் அமைப்பில் சில அடிப்படையான சீர்த்திருத்தங்களும் கொண்டு வரப்பட்டன.

*பிட்ஸ் இந்தியா சட்டம்:* 1773ஆம் ஆண்டு சட்டத்தினால் பல நடைமுறைச் சிக்கல்கள் தோன்றின. அந்தக் குறைபாடுகளைக் களைவதற்காக 1781ஆம் ஆண்டில் திருத்தச்சட்டம் ஒன்று கொண்டு வரப்பட்டது. எனினும் அதற்குப் பின்னர் தோன்றிய முக்கியமான சட்டம் 1784ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட 'பிட்ஸ் இந்தியா சட்டம்' ஆகும். இந்தச் சட்டத்தின்படி கிழக்கிந்தியக் கம்பெனியின் இயக்குநர்கள் அவைக்கு வாணிக விஷயங்களைக் கவனிக்கிற பொறுப்பு மட்டுமே அளிக்கப்பட்டது. அரசியல் விவகாரங்களைக் கவனிப்பதற்காக ஆறு உறுப்பினர்களைக் கொண்ட கட்டுப்பாட்டு வாரியம் ஒன்றை பிரிட்டிஷ் அரசு நியமித்தது. இந்தியாவில் பிரிட்டிஷ் ஆளுகையின் கீழ் இருந்த அனைத்து சிவில், ராணுவச் செயல்பாடுகளைக் கட்டுப்படுத்தி, நெறிப்படுத்தி, கண்காணிக்கின்ற அதிகாரம் இந்த வாரியத்திற்கு வழங்கப்பட்டது.

*சாசனச் சட்டங்கள்* **1793 - 1813:** 1793 மற்றும் 1813 ஆம் ஆண்டு சாசனச் சட்டங்கள் கம்பெனியின் சாசனத்தை ஒவ்வொரு முறையும் மேலும் இருபதாண்டுகளுக்கு நீட்டிக்க வகை செய்தன. 1813ஆம் ஆண்டுச் சட்டம் இந்தியாவில் கம்பெனிக்கு இருந்த ஏகபோக வாணிக உரிமையைத் தடை செய்துவிட்டது. சென்னை, பம்பாய், கல்கத்தா ஆகிய மாகாணக் கவுன்சில்கள் விரிவுபடுத்தப்பட்டபோதிலும் அவற்றின் மீதான பிரிட்டிஷ் நாடாளுமன்றத்தின் கட்டுப்பாடுகளும் பெருகிவிட்டன. இந்த மாகாணக் கவுன்சில்கள் அமல்படுத்திய நெறிமுறைகள் யாவும் பிரிட்டிஷ் நாடாளு மன்றத்தின் ஒப்புதலைப் பெற வேண்டும் என்று விதிக்கப்பட்டது.

*சாசனச் சட்டம்* **- 1833:** இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியின்போது அரசியலமைப்பை உருவாக்குவதற்கான தொடக்கப்பணி, '1883ஆம் ஆண்டு சாசனச் சட்டத்தில்' காணப்படுகிறது. இந்தியாவில் இருந்த பிரிட்டிஷ் ஆளுகைப் பகுதிகளின் ஆட்சிமுறையில் அமைப்பு ரீதியான மாற்றம் ஒன்றை இந்தச் சட்டம் கொண்டு வந்தது. கவர்னர் ஜெனரலின் கவுன்சில் கூட்டங்களை, சட்டமியற்றுவதற்கான கூட்டங்கள் என்றும், நிர்வாகக் கூட்டஙகள் என்றும் தனித்தனியாகப் பிரித்துப் பார்க்க இச்சட்டம் வகை செய்தது. பிரிட்டிஷ் ஆளுகையின் கீழ் இருந்த அனைத்து சிவில், ராணுவ நிர்வாகங்களையும் கட்டுப்படுத்தி, நெறிப்படுத்தி, கண்காணிக்கின்ற அதிகாரம் 'இந்திய கவர்னர் ஜெனரலின் கவுன்சிலுக்கு' அளிக்கப்பட்டது. இவ்வாறாக முதன்முறையாக, கவர்னர் ஜெனரலின் அரசு, 'இந்திய அரசு' என்றும் அவருடைய கவுன்சில் 'இந்தியக் கவுன்சில்' என்றும் அறியப்பட்டன. சட்டமியற்றும் அதிகாரத்தையும் இந்தச் சாசனச் சட்டம் ஒரு குடைக்கீழ் கொணர்ந்தது. கவுன்சிலில் ஏற்கெனவே இருந்த மூன்று உறுப்பினர்களுடன், சட்டமியற்றும் பணிக்காக சட்ட உறுப்பினர் ஒருவரும் நியமிக்கப்பட்டார். இந்திய கவர்னர் ஜெனரலின் கவுன்சிலுக்கு இவ்வாறாக, சில கட்டுப் பாடுகளுக்கு உட்பட்டு, இந்தியாவில் உள்ள பிரிட்டிஷ் ஆட்சிப்பகுதி களுக்கான சட்டமியற்றும் அதிகாரம் வழங்கப்பட்டது.

*சாசனச் சட்டம்* **1853:** சாசனச் சட்டங்களின் வரிசையில் கடைசியாக இயற்றப்பட்டது '1853ஆம் ஆண்டு சாசனச் சட்டம்'. இது இந்தியச் சட்டமியற்றும் அமைப்பில் சில முக்கிய மாற்றங்களைக் கொண்டு வந்தது.

பிரிட்டிஷ் இந்தியா முழுமைக்கும் சட்டமியற்றும் அதிகாரம் கவர்னர் ஜெனரலின் கவுன்சிலுக்குத் தொடர்ந்து நீடித்தபோதிலும், அதன் அமைப்பில் பல மாற்றங்கள் செய்யப்பட்டதால் அந்த முறையே முற்றிலும் மாறுபட்டதாகிவிட்டது.

சட்டமியற்றும் பணிகளுக்காக கவுன்சிலில் மேலும் ஆறு உறுப்பினர்கள் சேர்க்கப்பட்டனர். எனினும் சட்டம் இயற்றுவது மற்றும் நெறிமுறைகளை உருவாக்குவதற்கான கூட்டங்கள் தவிர கவுன்சிலின் மற்ற கூட்டங்களில் கலந்து கொண்டு வாக்களிக்கும் உரிமை அவர்களுக்குத் தடை செய்யப்பட்டிருந்தது. இந்த உறுப்பினர்கள் சட்டமியற்றும் கவுன் சிலர்கள் எனப்பட்டனர். கவுன்சிலில் இப்போது கவர்னர் ஜெனரல், படைத்தளபதி (கமாண்டர்-இன்-சீஃப்), சென்னை, பம்பாய், கல்கத்தா, ஆக்ரா ஆகிய நான்கு அரசாங்கங்களின் நான்கு பிரதிநிதிகள் உட்பட மொத்தம் 12 உறுப்பினர்கள் இருந்தனர். கவுன்சிலின் சட்டமியற்றும் பணியும், நிர்வாகப் பணியும் திட்டவட்டமாக வரையறுக்கப்பட்டன. இச்சட்டத்தின் 23ஆவது பிரிவின்படி, சட்டம் இயற்றுவதோ, நெறிமுறைகளை வகுப்பதோ எதுவானாலும் அவை யாவும் கவுன்சிலின் கூட்டத்தில்தான் மேற்கொள்ளப்படவேண்டும் என்பது தெளிவாக வரையறுத்துக் கூறப்பட்டது.

## கம்பெனியிடம் இருந்து பிரிட்டிஷ் ஆட்சிக்கு உட்படல் (1858 - 1918)

**1858ஆம் ஆண்டு சட்டம்:** பிரிட்டிஷ் வரலாற்று ஆசிரியர்கள் 'சிப்பாய்க் கலகம்' என்றும், இந்திய வரலாற்று ஆசிரியர்கள் 'முதல் விடுதலைப்போர்' என்றும் வர்ணிக்கின்ற 1857ஆம் ஆண்டு புரட்சியே, இந்தியாவில் ஆழ வேரூன்றிவிட்டிருந்த பிரிட்டிஷ் ஆட்சியை அகற்றுவதற்கு மேற்கொள்ளப் பட்ட அமைப்பு ரீதியான முதல் போராட்டமாகும். அடக்கப்பட்டுவிட்ட அந்தப் புரட்சி, இந்தியாவில் கிழக்கிந்தியக் கம்பெனியின் ஆட்சிக்கு சாவு மணியடித்தது. புதிய கொள்கைக்கான அடிப்படைக் கோட்பாடுகள் பற்றி விரிவாக விவாதித்த பின்னர் பிரிட்டிஷ் நாடாளுமன்றம் புதிய சட்டம் ஒன்றை இயற்றியது. இந்தச் சட்டமே பின்னர் "1858ஆம் ஆண்டின் இந்திய நல்லாட்சிக்கான சட்டம்" என்றானது. இச்சட்டத்தின்படி அப்போது கம்பெனியின நிர்வாகத்தில் இருந்த இந்திய ஆட்சிப் பகுதிகள் அனைத்தும் நேரிடையாக பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் வந்தன. அப்பகுதிகளை பிரிட்டிஷ் அரசிக்காக, அரசியின் பேரில் இந்தியாவிற்கான அரசின முதன்மைச் செயலாளர் மூலமாக நிர்வகிக்க வகை செய்தது. பிரிட்டிஷ் இந்தியாவை இங்கிலாந்திலிருந்து கட்டுப்படுத்தி, கண்காணித்து, அரசாட்சி செய்வதற்காக, நிர்வாக இயந்திரத்தை எவ்வாறு மேம்படுத்துவது என்பதையே 1858ஆம் ஆண்டுச் சட்டம் பிரஸ்தாபித்தது. இந்தியாவில் அப்போது நிலவிய ஆட்சி முறையைக் குறிப்பிடத்தக்க அளவிற்கு அச்சட்டம் மாற்றிவிடவில்லை.

**இந்தியக் கவுன்சில் சட்டம் 1861:** விரைவிலேயே, இந்திய நிர்வாகத்தைச் சீர்திருத்துவதற்கான நடவடிக்கைகளை மேற்கொள்வதும், பிரிட்டிஷ் அரசு மேற்கொள்ளவிருக்கின்ற பொதுமக்கள் நலன் சம்பந்தப்

பட்ட நடவடிக்கைகளைப் பற்றி அரசுக்கு வெளியேயுள்ளவர்களின் கருத்துக்களை உரிய காலத்தில் பெறுவதும், அரசு அதிகாரிகள் அல்லாதவர்களையும்—ஐரோப்பியர்களையும், இந்தியர்களையும்—கவுன்சிலில் சேர்த்துக்கொண்டு பொதுமக்கள் கருத்துகளுடன் நெருங்கிய தொடர்பு ஏற்படுத்திக் கொள்வதற்கான வழிமுறைகள் பற்றி ஆராய வேண்டியதும் அவசியம் என்று உணரப்பட்டது.

அந்த வகையில் இந்திய அரசியலமைப்பு வரலாற்றில் 1861ஆம் ஆண்டு இந்தியக் கவுன்சில் சட்டம் ஒரு முக்கியமான நிகழ்வாகும். இரண்டு காரணங்களுக்காக இச்சட்டம் முக்கியத்துவம் வாய்ந்தது: முதலாவதாக, விரிவாக்கப்பட்ட கவுன்சிலில் இந்திய மக்களின் பிரதிநிதிகளைச் சேர்த்துக் கொள்ள கவர்னர் ஜெனரலுக்கு அது வழிவகுத்தது. இரண்டாவதாக, கவர்னர் ஜெனரல் கவுன்சிலின் சட்டமியற்றும் அதிகாரங்களை, பம்பாய்-சென்னை மாகாண அரசுகளுக்குப் பகிர்ந்தளிக்கவும் அது வழி செய்தது.

கவர்னர் ஜெனரலின் நிர்வாகக் கவுன்சிலும், ஒரு சட்ட வல்லுநரை ஐந்தாவது உறுப்பினராக சேர்த்ததன் மூலம் விரிவாக்கப்பட்டது. சட்டமியற்றுவதற்காக 6 உறுப்பினர்களுக்குக் குறையாமலும், 12 உறுப்பினர்களுக்கு மிகாமலும் மேலும் உறுப்பினர்கள் சேர்க்கப்பட்டனர். இவர்களில் பாதிப்பேர் அரசு அதிகாரிகள் அல்லாதவர்களாக இருக்க வேண்டும். சட்டத்தில் வெளிப்படையாகச் சொல்லாவிட்டாலும், அரசு அதிகாரிகள் அல்லாதவர்கள் எனும்போது அதில் இந்தியர்களும் சேர்த்துக் கொள்ளப்பட்டனர். 1862ஆம் ஆண்டில் புதியதாக அமைக்கப்பட்ட சட்டமியற்றும் கவுன்சிலில் அப்போதைய கவர்னர் ஜெனரலான கானிங் பிரபு மூன்று இந்தியர்களை—பாட்டியாலா மன்னர், காசி மன்னர், சர் தினகர்ராவ்—நியமித்தார். இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி தொடங்கியதில் இருந்து முதன்முறையாக அப்போதுதான் சட்டமியற்றும் பணியில் இந்தியர்களும் ஈடுபடுத்தப்பட்டனர்.

1861ஆம் ஆண்டு சட்டத்திலும் பல குறைபாடுகள் இருந்தன. மேலும், அது, இந்திய மக்களின் விருப்பங்களை நிறைவேற்றுவதாகவும் அமையவில்லை. கவர்னர் ஜெனரலே எல்லா அதிகாரங்களும் கொண்டவராக விளங்கினார். அதிகாரிகள் அல்லாத உறுப்பினர்கள் பயனுள்ள வகையில் எவ்விதப் பணியையும் செய்ய முடியவில்லை. அவர்கள் எந்தக் கேள்வியையும் எழுப்ப முடியாது; பட்ஜெட் பற்றிய விவாதங்களில் கலந்து கொள்ளவும் முடியாது. நாட்டின் அரசியல்-பொருளாதார நிலைமை சீரழியத் தொடங்கியது. உணவுப் பொருள்களுக்குக் கடுமையான பற்றாக்குறை நிலவியது. 1877ல் கடும்பஞ்சம் மக்களை வாட்டியது. மக்களிடையே அதிருப்தி பரவி புரட்சி வெடிக்கக் கூடிய நிலை உருவானது. 1857ஆம் ஆண்டு புரட்சிக்குப் பின்னர் தலையெடுத்த அடக்கு முறைகளின் காரணமாக பிரிட்டிஷாருக்கு எதிரான கருத்து வலுப்பெற்றது. அத்துடன் ஆட்சிப் பணிகளிலிருந்த ஐரோப்பியர்களுக்கும் இந்தியர்களுக்கும் இடையேயான எல்லாவிதமான பாகுபாடுகளையும் களைய வகை செய்த இல்பர்ட் மசோதாவிற்கு ஐரோப்பியர்களும், ஆங்கிலோ-இந்தியர்களும் எதிர்ப்புத் தெரிவித்ததாலும், பிரிட்டிஷ் எதிர்ப்பு மேலும் வலுவடைந்தது.

**இந்திய தேசியக் காங்கிரஸின் தோற்றம்:** ஏ.ஓ.ஹ்யூம் என்ற ஆங்கிலேயரை முதலாவது தலைவராகக் கொண்டு 1885ஆம் ஆண்டு இந்திய தேசியக் காங்கிரஸ் உருவானது. 1885ஆம் ஆண்டு டிசம்பர் 28-30 தேதிகளில் டபிள்யு.சி. பானர்ஜி தலைமையில் பம்பாயில் நடைபெற்ற அதன் முதலாவது மாநாட்டில் சட்டமியற்றும் கவுன்சில்களைச் சீர்திருத்தி விரிவாக்க வேண்டுமென்று காங்கிரஸ் கோரிக்கை விடுத்தது. அதற்குப் பின்னர் நடைபெற்ற ஒவ்வொரு காங்கிரஸ் மாநாட்டிலும் இந்தக் கோரிக்கை வலியுறுத்தப்பட்டு ஆண்டுகள் செல்லச் செல்ல வலுப்பெற்றது. கவுன்சில் சீர்திருத்தமே மற்ற சீர்திருத்தங்கள் அனைத்திற்கும் மூலவேர் போன்றது என காங்கிரஸ் கருதியது. 1889ஆம் ஆண்டில் நடைபெற்ற காங்கிரஸின் ஐந்தாவது மாநாட்டில் உரையாற்றியபோது, சுரேந்திரநாத் பானர்ஜி கூறினார்: "நீங்கள் அதை அடைந்தீர்களானால் அனைத்தையுமே அடைவீர்கள். இந்த நாட்டின் மொத்த எதிர்காலமும், நம்முடைய நிர்வாக முறையின் எதிர் காலமும் அதைச் சார்ந்தே இருக்கின்றன". கவர்னர் ஜெனரலின் கவுன் சிலையும் மாகாணச் சட்டமியற்றும் கவுன்சிலையும் திருத்தி சீரமைப் பதற்கான மசோதா ஒன்றை பிரிட்டிஷ் நாடாளுமன்றத்தில் கொண்டு வருவதற்கு ஏற்றவகையில் மாதிரித் திட்டம் ஒன்றை 1889ஆம் ஆண்டு காங்கிரஸ் மாநாட்டில் தீர்மானமாக ஏற்குமளவுக்குச் சென்றுவிட்டனர். மேலும் அந்தத் தீர்மானம், இந்தியாவில் இருந்த 21 வயதுக்கு மேற்பட்ட பிரிட்டிஷ் குடிமக்களில் ஆண்களனைவருக்கும் வாக்குரிமை அளிக்க வேண்டுமென்றும், வாக்குச் சீட்டுகள் மூலம் வாக்குப் பதிவுகள் நடைபெற வேண்டுமென்றும் வலியுறுத்தியது.

**இந்தியக் கவுன்சில் சட்டம் 1892:** சட்டமியற்றும் அவைகளில் இந்திய மக்களின் கருத்துக்களை எடுத்துரைக்க, அவர்களின் தேர்ந் தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் அனுமதிக்கப்படாதவரை இந்தியாவைச் சரிவர ஆட்சிபுரிய முடியாது என்ற தனது உறுதிப்பாட்டை காங்கிரஸ் 1899ஆம் ஆண்டில் மீண்டும் வலியுறுத்தியது. இந்திய தேசியக் காங்கிரஸ் 1889ஆம் ஆண்டிலிருந்து 1891ஆம் ஆண்டுவரை தனது மாநாடுகளில் இயற்றிய தீர்மானங்களின் காரணமாகவே, '1892 ஆம் ஆண்டின் கவுன்சில் சட்டம்' இயற்றப்பட்டது. அந்தச் சட்டத்தின்படி கவர்னர் ஜெனரலின் கவுன்சிலில் இடம்பெறும் கூடுதல் உறுப்பினர்களின் எண்ணிகை "பத்துக்குக் குறையாமலும் பதினாறுக்கு மிகாமலும்" உயர்த்தப்பட்டது (ஆறுக்குக் குறையாமலும் பன்னிரண்டுக்கு மிகாமலும் என்று முன்பிருந்தது). இது போலவே மாகாண சட்டமியற்றும் கவுன்சில்களின் கூடுதல் உறுப்பினர் களின் எண்ணிக்கையும் உயர்த்தப்பட்டது.

சட்டமியற்றும் பணிகளுடன், வருடாந்திர நிதிநிலை அறிக்கை அல்லது பட்ஜெட் பற்றிய விவாதங்களை - சில நிபந்தனைகளுக்கும் கட்டுப் பாடுகளுக்கும் உட்பட்டு - நடத்துவதற்கும் கவுன்சில்கள் அனுமதிக்கப் பட்டன. பல்வேறு நிபந்தனைகளுக்கு உட்பட்டு, சில குறிப்பிட்ட விதிகளின்படி, பொதுமக்கள் நலன் குறித்த வினாக்களை எழுப்பவும் கவுன் சிலின் உறுப்பினர்களுக்கு அனுமதி அளிக்கப்பட்டது.

1861ஆம் ஆண்டுச் சட்டத்தைவிட 1892ஆம் ஆண்டுச் சட்டம் நிச்சயம் ஒருபடி மேலானதுதான். ஏனெனில், அது சட்டமியற்றும் கவுன்சிலில் பிரதிநிதித்துவ அம்சத்தைக் கொண்டு வந்ததுடன், கவுன்சிலின் பணிகளை விரிவாக்கி அதன் செயல்படும் முறையில் இருந்த சில கட்டுப்பாடுகளையும் தளர்த்தியது. 'தேர்ந்தெடுக்கப்பட்ட' உறுப்பினர்களின் நுழைவு, கவுன்சிலின் வரலாற்றில் ஒரு புதிய சகாப்தத்தைத் தொடங்கியது.

*சுயராஜ்யம் என்ற இலக்கு:* சுயராஜ்யத்தை அடைவதே தன்னுடைய இலட்சியமென்று 1906ஆம் ஆண்டு மாநாட்டில் காங்கிரஸ் அறிவித்தது. சுயராஜ்யம் என்பதை பிரிட்டிஷ் பேரரசுக்கு உட்பட்ட நாடாளுமன்ற தன்னாட்சி என மிதவாதிகள் கூறினர்: தீவிரவாதிகளோ, முழுமையான சுதந்திரம் என்று கூறினர். "மக்களின் உண்மையான பிரதிநிதித்துவத்தை பிரதிபலிக்கின்ற வகையிலும், நாட்டின் நிதி மற்றும் நிர்வாகத்தில் அதிக அளவில் பங்கு பெறுவதற்கும் ஏற்றவாறு சட்டமியற்றும் கவுன்சில்கள் உடனடியாக விரிவாக்கப்பட வேண்டும்" என்று 1906ஆம் ஆண்டு மாநாட்டுத் தீர்மானம் கோரியது.

*மின்டோ-மார்லி சீர்திருத்தங்கள்:* தேசிய இயக்கத்தில் தீவிர வாதிகளின் பலம் பெருகியதையடுத்தும், நாட்டின் விவகாரங்களை திறம்பட நிர்வகிப்பதற்கு இந்தியர்களுக்குப் போதிய பிரதிநிதித்துவம் அளிக்கப்பட வேண்டுமென்ற மிதவாதிகளின் கோரிக்கைகள் உத்வேகம் பெற்றதை அடுத்தும், லண்டனிலிருந்த இந்தியாவிற்கான பிரிட்டிஷ் அமைச்சர் மார்லி பிரபுவும், அப்போதைய வைஸ்ராய் மின்டோ பிரபுவும் கூட்டாகச் சேர்ந்து சில அரசியலமைப்பு சீர்திருத்தங்களைத் தயாரித்தனர். இப்பணி 1906ஆம் ஆண்டிலிருந்து 1908 ஆம் ஆண்டு வரை நடைபெற்றது. இவையே பின்னர் மின்டோ-மார்லி சீர்திருத்தங்கள் என்று அழைக்கப்பட்டன. சட்டமியற்றும் கவுன்சில்களை விரிவாக்குவது, அவற்றின் அதிகாரங்களையும் செயற்பாடு களையும் பெருக்குவது, நிர்வாகக் கவுன்சில்களில் இந்தியர்களையும் உறுப்பினர்களாக நியமிப்பது, நிர்வாகக் கவுன்சில்கள் இல்லாத இடங்களில் அத்தகைய கவுன்சில்களை ஏற்படுத்துவது, தல சுயாட்சி முறையை மேலும் விரிவுபடுத்துவது போன்ற அம்சங்கள் மின்டோ-மார்லி சீர்திருத்தங்களில் இடம் பெற்றிருந்தன.

***இந்தியக் கவுன்சில் சட்டம் 1909:*** 1909ஆம் ஆண்டு இயற்றப்பட்ட சட்டமும், அதற்குத் துணையாக உருவாக்கப்பட்ட விதிமுறைகளும், கவுன் சில்களை மேலும் விரிவுபடுத்தவும், அவற்றின் செயற்பாடுகளை விரிவாக்கி மேலும் பிரதிநிதித்துவம் மிக்கவையாக ஆக்கவும் வகை செய்தன. உறுப்பினர் களின் எண்ணிக்கை இருமடங்காகவோ, அதற்கு மேலாகவோ அதிகரிக்கப் பட்டது. கவர்னர் ஜெனரலின் கவுன்சிலில் இடம் பெற்றிருந்த அதிக பட்சமான கூடுதல் உறுப்பினர்களின் எண்ணிக்கை பதினாறிலிருந்து (1892ஆம் ஆண்டுச் சட்டத்தின்படி) அறுபதாக உயர்த்தப்பட்டது. (அலுவல் முறையால் உறுப்பினர்களான நிர்வாகக் கவுன்சிலர்கள் நீங்கலாக).

மறைமுகத் தேர்தல் கோட்பாட்டை அந்தச் சட்டம் அங்கீகரித்தது. எனினும், இந்தியாவின் அப்போதைய சூழ்நிலையில், தேர்தல் கோட்பாட்டின்

படி சட்டமியற்றும் கவுன்சில்களை அமைப்பதற்கு நிலப்பரப்பு அடிப்படையில் பிரதிநிதித்துவம் அளிப்பது உகந்ததன்று எனவும், வகுப்பு வாரியாகவும், மக்கள் பிரிவு வாரியாகவும் பிரதிநிதித்துவம் அளிப்பதே நலம்பயக்கும் என்றும் தீர்மானிக்கப்பட்டது. மேலும், உறுப்பினர்கள் நியமன முறையும் தொடர்ந்தது. அதற்கு இரண்டு காரணங்கள்: அரசு அதிகாரிகளை நியமிக்கவும்; தேர்தல் மூலமாக பிரதிநிதித்துவம் அளிக்க இயலாத, அதிகாரிகள் அல்லாதவர்களை நியமனம் செய்யவும் அது உதவியாக இருக்கும். நகராட்சிகள், மாவட்ட வாரியங்கள், உள்ளாட்சி வாரியங்கள், பல்கலைக் கழகங்கள், வாணிகக் கழகங்கள், வர்த்தக சங்கங்கள், நிலஉடைமையாளர்கள் குழு, தேயிலைத் தோட்ட உரிமையாளர்கள் குழு போன்றவை தேர்தல் தொகுதிகளாக அமைய, அவற்றின் பிரதிநிதிகளாக உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இச்சட்டத்தின்படி மாகாண சட்டசபைகளில் அதிகாரிகள் அல்லாத உறுப்பினர்கள் பெரும்பான்மை யாகவும், மத்திய சட்டசபையில் அதிகாரிகள் பெரும்பான்மையாகவும் இருப்பார்கள். மேலும் இச்சட்டம், முஸ்லீம்களுக்குத் தனித் தொகுதிகளையும் அவர்களுக்குத் தனிப் பிரதிநிதித்துவத்தையும் உருவாக்கியது. இப்படித்தான் முதன்முறையாக வகுப்புவாரி பிரதிநிதித்துவம் என்ற பொல்லாங்குக் கோட்பாடு புகுத்தப்பட்டது.

'பொறுப்புள்ள அரசு' என்ற கோரிக்கைக்கு, இந்தச் சட்டத்தின் மூலம் அறிமுகப்படுத்தப்பட்ட சீர்திருத்தங்கள் எவ்விதத்திலும் வகை செய்யவில்லை. ஏனெனில் இச்சட்டத்தின் மூலம் ஏற்படுத்தப்பட்ட கவுன்சில்கள், மக்களால் தேர்ந்தெடுக்கப்படும் அரசின் மூலக்கருத்தான 'பொறுப்புடைமை' என்பது இல்லாமல் இருந்தன.

*மாண்டேகு பிரகடனம்:* லண்டனில் அப்போது இந்தியாவுக்கான அமைச்சராக இருந்த மாண்டேகு பிரபு, 1917ஆம் ஆண்டு ஆகஸ்ட் 20ஆம் தேதி பிரிட்டிஷ் நாடாளுமன்றத்தில் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த அறிக்கை ஒன்றை விடுத்தார். பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் நிலையற்ற பல மாற்றங்களைக் கண்டிருந்த இந்தியாவில் முதன்முறையாக, 'பொறுப்புள்ள ஓர் அரசை' உருவாக்க அந்தப் பிரகடனம் உறுதியளித்தது.

*மாண்ட்போர்டு அறிக்கை (1918):* மாண்டேகு-செம்ஸ்போர்டு அறிக்கை அல்லது மாண்ட்போர்டு அறிக்கை என்றழைக்கப்பட்ட, இந்திய அரசியலமைப்பு சீர்திருத்த அறிக்கையை லண்டனில் இருந்த இந்தியாவுக்கான அமைச்சர் மாண்டேகுவும், இந்திய வைசிராயாக இருந்த செம்ஸ்போர்டு பிரபுவும் கூட்டாகச் சேர்ந்து தயாரித்து 1918ஆம் ஆண்டு ஜூலை மாதம் வெளியிட்டனர்.

1916ஆம் ஆண்டு லக்னோ உடன்படிக்கையின்படி முஸ்லீம்லீகிற்கு மத அடிப்படையில் தனித் தேர்தல் தொகுதிகளைவிட்டுக் கொடுக்க முன் வந்த காங்கிரஸின் பெருந்தன்மையை மாண்டேகு-செம்ஸ்போர்டு மிகவும் விஷமத்தனமாக தமது சீர்திருத்தங்களின் அடிப்படையாக ஆக்கியிருந்தனர். சுயாதிகாரமுள்ள 'டொமினியன்கள்' தேவை என்ற கோரிக்கையைப் பற்றிச் சற்றும் கவலைப்படவில்லை.



அரசியல் நிர்ணயசபையின் தலைவர் டாக்டர் ராஜேந்திர பிரசாத்
அரசியலமைப்புச் சட்டத்தில் கையொப்பமிடுகிறார்



ஜவகாலால் நேரு அரசியல் சட்டத்தில் கையொப்பமிடுகிறார். அருகே (இடது புறம்) கே.எம். முன்ஷி



அரசியல் நிர்ணயசபையின் கூட்டமொன்றில் மௌலானா அபுல்கலாம் ஆஸாத், ஜவகர்லால் நேரு.



1947, ஆகஸ்ட் 14/15 நள்ளிரவில் நடைபெற்ற அரசியல் நிர்ணயசபைக் கூட்டத்தில்
சர்தார் பல்தேவசிங், ஜவகர்லால் நேரு மற்றும் பலர்

## தேசிய இயக்கங்களும் பிரதிநிதித்துவ அமைப்புகளின் வளர்ச்சியும் (1919-1940)

**இந்திய அரசாங்கச் சட்டம் 1919:** மாண்டேகு-செம்ஸ்போர்டு அறிக்கையின் அடிப்படையில் இயற்றப்பட்ட '1919ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டம்' "பொறுப்புள்ள அரசாங்கத்தைப் படிப்படியாக உருவாக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் சுயாட்சி அமைப்புகளை மெல்ல மெல்ல உருவாக்குவதற்கு" மட்டுமே பிரிட்டிஷ் அரசு தயாராக இருக்கிறது என்பதை பட்டவர்த்தனமாகத் தெளிவுபடுத்தியது. அரசிய லமைப்பின் ஒவ்வொருகட்ட முன்னேற்றமும் எப்போது, எப்படி, எந்த இடைவெளியில் அமைய வேண்டும் என்பதை பிரிட்டிஷ் நாடாளுமன்றமே தீர்மானிக்கும்; இந்திய மக்கள் சுயமாக அதுபற்றி எவ்வித முடிவும் மேற்கொள்ள முடியாது என்றும் அச்சட்டத்தில் கூறப்பட்டிருந்தது.

1909ஆம் ஆண்டு சட்டத்தின்படி உருவாக்கப்பட்டிருந்த இந்திய அரசியலமைப்பில், 1919ஆம் ஆண்டு சட்டமும், அதன் கீழ் இயற்றப்பட்ட விதிகளும் பல முக்கிய மாற்றங்களை ஏற்படுத்தின. மத்தியில் இருந்த சட்ட மியற்றும் கவுன்சிலுக்குப் பதிலாக மாகாணங்கள் சபை (மேலவை), சட்ட மன்றப் பேரவை (கீழவை) என்ற ஈரடுக்கு முறை உருவாக்கப்பட்டது. இரண்டு சபைகளிலும் நியமன உறுப்பினர்களைச் சேர்க்கும் முறை நீடித்த போதும், பெரும்பான்மை உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களாகவே இருந்தனர்.

அந்தச் சட்டத்தின் கீழ் உருவாக்கப்பட்ட விதிகளின்படி அமைக்கப் பட்ட தொகுதிகளில் இருந்து நேரிடையாக உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப் பட்டனர். வாக்குரிமையும் பரவலாக விரிவுபடுத்தப்பட்டது. வாக்காளர் களுக்கான தகுதிகளும் பலவாறாக வேறுபட்டிருந்தன. குடியுரிமை, சொத்துடைமை, மதங்கள் போன்ற பல்வேறு காரணிகளின் அடிப்படையில் வரையறுக்கப்பட்டன.

*இரட்டை ஆட்சி:* 1919ஆம் ஆண்டு சட்டம் அறிமுகப்படுத்திய 'இரட்டை ஆட்சி' என்ற புதிய ஆட்சி முறை, 'கவர்னரின் மாகாணங்கள்' என்ற எட்டு பெரிய மாகாணங்களில் முதலில் அறிமுகமானது. ஓரளவு பொறுப்புள்ள அரசாங்கத்தை மாகாணங்களில் ஏற்படுத்துவதற்கான முதல் கட்டப் பணியாக, மாகாண அரசுகளின் பணியை வரையறுக்க வேண்டி வந்தது. அதற்கேற்ப, நிர்வாக விஷயங்களை 'மத்திய' நிர்வாகம் என்றும் 'மாகாண' நிர்வாகம் என்றும் பிரித்து, மாகாண நிர்வாகம் சம்பந்தப்பட்ட விஷயங்களை மாகாண அரசுகளுக்கு வழங்குவதற்கு அச்சட்டத்தில் விதிகள் வகுக்கப்பட்டன. மேலும், மாகாண அரசுகளுக்கு வேண்டிய வருவாய் வழிகளும் மற்ற நிதி ஏற்பாடுகளும்கூட அவ்விதிகள் மூலம் செய்யப்பட்டன. 'அதிகாரப்பகிர்வு விதிகளின்'படி 'மத்திய' மற்றும் 'மாகாண' விஷயங்கள் பற்றிய விரிவான பாகுபாடுகள் செய்யப்பட்டன.

**1919ஆம் ஆண்டு சட்டத்தின் குறைபாடுகள்:** 1919ஆம் ஆண்டுச் சட்டத்தில் பல குறைபாடுகள் இருந்தன. பொறுப்புள்ள அரசாங்கம் என்ற கோரிக்கையை அது நிறைவேற்றவில்லை. மேலும், மாகாணச் சட்ட மன்றங்களில் கொண்டு வரப்படும் மசோதாக்களில் பலவற்றில், கவர்னர்

ஜெனரலின் ஒப்புதல் இல்லாமல் விவாதங்கள் நடத்த முடியாத நிலையும் இருந்தது. மேலும், மத்திய, மாகாண அரசுகளுக்கு இடையே அதிகார வரம்புகள் பிரிக்கப்பட்ட போதிலும், மத்திய சட்டசபையே அதிகாரம் மிக்கதாகவும், சட்டமியற்றும் உரிமை பெற்றதாகவும் திகழ்ந்தது. அதிகாரங்கள் அனைத்தும் குவியப்பெற்றதாக முன்னர் இருந்த மத்திய அரசு முறையை கூட்டரசு அமைப்பாக மாற்ற வேண்டும் என்ற எண்ணம் இல்லாமல், பிரிட்டிஷ் இந்தியாவின் அரசியலமைப்பு ஒரடுக்கு அரசாகவே தொடர்ந்து நீடித்தது.

எல்லாவற்றுக்கும் மேலாக, மாகாணங்களில் அறிமுகப்படுத்தப்பட்ட இரட்டை ஆட்சிமுறை தோல்வி கண்டது. கவர்னரின் அதிகாரமே மேலோங்கி இருந்தது. நிதித்துறை அதிகாரம் இல்லாமல் அமைச்சர்களால் தங்களது திட்டங்களைச் செயல்படுத்த முடியவில்லை. மேலும், அமைச்சர்கள் சட்டசபைக்குக் கட்டுப்பட்டவர்களாகவும் இருக்கவில்லை. கவர்னரின் ஆலோசகர்களாக - நியமிக்கப்பட்டவர்களாக அவர்கள் இருந்தனர்.

நிர்வாக முறை மேலும் பிரதிநிதித்துவம் மிக்கதாகவும், பொறுப்புள்ளதாகவும், கோரிக்கைகளுக்குச் செவிமடுப்பதாகவும் அமையுமாறு சீர்திருத்தங்களைக் கொண்டுவர வேண்டுமென்று காங்கிரஸும் பொதுமக்களும் தொடர்ந்து கோரிக்கை விடுத்தவண்ணம் இருந்தனர். அப்போது முதலாம் உலகப் போர் முடிவடைந்து இருந்ததால், கோரிக்கைகள் நிறைவேற்றப் பட்டுவிடும் என்று அனைவரும் எதிர்பார்த்தனர். ஆனால் ரௌலட் மசோதா என்ற வடிவில் மேலும் பல அடக்குமுறைப் பிரேரணைகள கொண்டு வரப்பட்டன. பலத்த எதிர்ப்புகளுக்கு இடையே அந்த மசோதா சட்டமாக்கப்பட்டது. எனவே, காந்தியடிகளின் தலைமையில் சுயராஜ்யம் பெறுவதற்காக சத்யாகிரகப் போராட்டம், ஒத்துழையாமை இயக்கம், கிலாபத் இயக்கம் போன்றவை தொடர்ந்தன.

***சைமன் கமிஷன்:*** 1919ம் ஆண்டு சட்டத்தின்படி, அச்சட்டத்தின் செயல்பாடு குறித்தும், மேற்கொள்ளப்பட வேண்டிய சீர்திருத்தங்கள் குறித்தும் ஆராய்ந்து அறிக்கை அளிப்பதற்காக 1929ஆம் ஆணடில் ஒரு கமிஷன் நியமிக்கப்படவிருந்தது. ஆனால் மக்களிடையே நிலவிய அதிருப்தியின் காரணமாக குறிப்பிட்ட காலத்திற்கு இரண்டாண்டுகளுக்கு முன்பாகவே, 1927ஆம் ஆண்டிலேயே அந்தக் கமிஷன் - சைமன் கமிஷன் அமைக்கப்பட்டது. சைமன் கமிஷனில் இடம் பெற்றிருந்தவர்கள் அனைவருமே வெள்ளையர் என்பதால் அந்த நியமனம் இந்திய மக்களின் உணர்வுகளை மேலும் புண்படுத்தியது.

***பூர்ண சுயராஜ்யம் கோரும் தீர்மானம்:*** முழுமையான சுதந்திரத்தைப் பெறுவதே தனது இலக்கு என்று காங்கிரஸ் தனது கருத்தை வலுப்படுத்திக் கொண்டது. எனினும், டொமினியன் அந்தஸ்தை அளிக்க பிரிட்டிஷ் அரசுக்கு மேலும் ஓராண்டு அவகாசம் அளிப்பது என்று கல்கத்தா மாநாட்டில் தீர்மானிக்கப்பட்டது டொமினியன் அந்தஸ்திற்கான கோரிக்கை நிராகரிக்கப்பட்டதால், 1929ஆம் ஆண்டு நடைபெற்ற லாகூர் மாநாட்டில் பூர்ண சுயராஜ்யம் அல்லது முழு சுதந்திரம் தேவை என்ற தீர்மானம் இயற்றப்பட்டது. உப்புவரிச் சட்டத்தை எதிர்த்து காந்தியடிகள் மேற்கொண்ட

தண்டியாத்திரையுடன் சட்ட மறுப்பு இயக்கம் தொடங்கியது.

**வட்ட மேஜை மாநாடுகளும் வெள்ளை அறிக்கையும்:** இறுதியாக, அரசியலமைப்புச் சீர்திருத்தங்கள் பற்றி ஆலோசிப்பதற்காக 1930ஆம் ஆண்டு நவம்பர் மாதம் லண்டனில் வட்ட மேஜை மாநாட்டினை நடத்துவது என்று பிரிட்டிஷ் அரசு முடிவெடுத்தது. தொடர்ந்து மேலும் இரண்டு மாநாடுகள் நடந்தன.

மூன்று வட்ட மேஜை மாநாடுகளுக்குப் பின்னர், புதிய அரசியலமைப்பு பற்றிய வெள்ளை அறிக்கை ஒன்றை 1933ஆம் ஆண்டு மார்ச் மாதம் பிரிட்டிஷ் அரசு வெளியிட்டது. கூட்டரசு அமைப்பும் மாகாண சுயாட்சியும் கொண்டதாக அத்திட்டம் இருந்தது. மத்தியில் இரட்டை ஆட்சியும், மாகாணங்களில் பொறுப்புள்ள ஆட்சியும் அமையும் என்று அத்திட்டம் கூறியது.

அந்த வெள்ளை அறிக்கையில் சொல்லப்பட்டிருந்த திட்டத்தை மேலும் பரிசீலனை செய்வதற்காக பிரிடடிஷ் நாடாளுமன்றத்தின் இரு அவைகளின் கூட்டுக் குழு ஒன்றும் நியமிக்கப்பட்டது. லின்லித்கோ பிரபுவின் தலைமையில் அமைந்த அந்தக் கூட்டுக் குழுவில் கன்சர்வேடிவ் கட்சி உறுப்பினர்களே பெரும்பான்மையாக இருந்தனர். பிரிட்டிஷ் இந்தியாவின பிரதிநிதிகளும், சமஸ்தானங்களின பிரதிநிதிகளும் அந்தக் கூட்டுக குழுவின் முன் சாட்சியங்கள் அளித்தனர். 1934ஆம் ஆண்டு நவம்பர் மாதம் அந்தக் கூட்டுக் குழு தனது அறிக்கையைச் சமர்ப்பித்தது. இந்தியாவில் இருக்கின்ற சமஸ்தானங்களில் குறைந்த பட்சம் 50 சதவீத சமஸ்தானங்கள் இணைநதால் மட்டுமே கூட்டரசு அமைப்பை உருவாக்கலாம் என்று அந்த அறிக்கையில் வலியுறுத்தப்பட்டிருந்தது.

கூட்டுக் குழுவின் அறிக்கையின்பேரில 1934 ஆம் ஆண்டு டிசம்பர் 19ஆம் தேதி பிரிடடிஷ் நாடாளுமன்றத்தில் ஒரு மசோதா தாக்கல் செய்யப்பட்டது. இரண்டு அவைகளும் ஒப்புதல் அளித்து, பிரிட்டிஷ் அரசியின் அங்கீகாரமும் பெற்ற பின்னர் 1935ஆம் ஆண்டு ஆகஸ்ட் 4ஆம் தேதி அது சட்டமாகியது. அதுவே 'இந்திய அரசாங்கச் சட்டம் 1935' ஆகும்.

**இந்திய அரசாங்கச் சட்டம் 1935:** இச்சட்டத்தின் மிக முக்கியமான கூறு என்னவெனில், இந்தியாவில் இருந்த பிரிட்டிஷ் மாகாணங்களையும், இணைய விருப்பமுள்ள சுதேசி சமஸ்தானஙகளையும் உள்ளடக்கிய 'அனைத்திந்திய கூட்டரசு' அமைப்பு ஒன்றை உருவாக்கிட வழி செய்ததே ஆகும். 1930ஆம் ஆண்டு வட்ட மேஜை மாநாடு வரை, இந்தியா ஓர் ஒரடுக்கு அரசாங்கமாகவே இருந்தது. மாகாணங்களுக்கு இருந்த அதிகாரங்கள் யாவும் மத்திய அரசாலேயே வழங்கப்பட்டிருந்தன. அதாவது, மாகாணங்கள் மத்திய அரசின் பிரதிநிதிகளாக இருந்தன. 1935ஆம் ஆண்டு சட்டம் முன்வைத்த கூட்டரசு அமைப்பில், பிரிட்டிஷ் இந்தியாவின் கவர்னர் மாகாணங்கள் மட்டுமின்றி, முதன்மை ஆணையாளர்களின் மாகாணங்களும், சுதேசி சமஸ்தானங்களும் இடம்பெற வகை செய்யப்பட்டிருந்தது. அது வரையிலும் பிரிட்டிஷ் இந்தியா நிர்வகிக்கப்பட்டு வந்த ஓரடுக்கு முறைக்கு அச்சட்டம் முற்றுப்புள்ளி வைத்தது. 1919ஆம் ஆண்டு சட்டத்தின்படி அமைந்த அரசியலமைப்பு, கூட்டரசு முறையை உருவாக்குவதைவிட

அதிகாரப் பரவலையே நோக்கமாகக் கொண்டிருந்தது. புதிய சட்டத்தின்படி, முதன்முதலாக மாகாண அரசுகள், தம்முடைய எல்லைக்குள் மத்திய கட்டுப்பாடு ஏதுமின்றி நிர்வாகம் மற்றும் சட்டமியற்றும் பணிகளை ஆற்றக்கூடிய தனியொரு சட்டப்பூர்வ அமைப்பாக உருப்பெற்றன.

இந்தச் சட்டம் இந்தியாவில் இருந்து பர்மாவைப் பிரித்ததுடன், ஒரிசா, சிந்து ஆகிய இரண்டு புதிய மாகாணங்களையும் உருவாக்கியது. மத்தியில் உருவாக்க உத்தேசித்திருந்த திட்டத்திற்கு ஏற்ப கவர்னர் மாகாணங்கள் பதினொன்றும் மத்திய அரசு மற்றும் இந்தியாவிற்கான பிரிட்டிஷ் அமைச்சர் ஆகியோரின் கட்டுப்பாடடிலிருந்தும், கண்காணிப்பிலிருந்தும் முற்றிலுமாக விடுவிக்கப்பட்டன. வேறுவிதமாகச் சொல்வதானால், மாகாணங்களுக்கு என்று தனியாக சட்டப்பூர்வ உருவம் கிடைத்தது. அந்தச் சட்டம் வகை செய்த மாகாண சுயாடசித் திட்டத்தினபடி ஒவ்வொரு மாகாணத்திலும் நிர்வாக அமைப்பு ஒன்றும், சட்டமியற்றும் அமைப்பு ஒன்றும், ஏற்படுத்தப்பட்டன. மாகாணச் சட்டசபைகளுக்குப் பல புதிய அதிகாரங்கள் வழங்கப்பட்டன. அமைச்சரவை, சடடசபைக்கு கட்டுப்பட்டதாக ஆக்கப்பட்டது. சட்டசபை நம்பிக்கை இல்லாத் தீர்மானத்தின் மூலம் அமைச்சரவையை நீக்கவும் வழி இருந்தது. சடட மன்றங்களில் கேள்விகள் எழுப்புவதன் மூலம் நிர்வாகத்தை ஓரளவு கட்டுப்படுத்தவும் வழி இருந்தது. ஆனால் மானியக் கோரிக்கைகளில் கிட்டத்தட்ட 80 சதவீதம் சட்டசபையின் ஏற்புக்கோ, மறுப்புக்கோ அப்பாற்பட்டதாக இருந்தது. சட்டமியற்றுவதைப் பொறுத்தவரையில் மத்திய-மாநில பொதுப்பட்டியலில் உள்ள விஷயங்கள் குறித்தும் மாகாணங்கள் சட்டமியறறலாம் எனறாலும், ஏதேனும் முரண்பாடுகள தோனறினால், மாகாணச் சட்டத்தைவிட கூட்டரசின் சட்டமே மேலோங்கி நிற்கும்.

இந்திய அரசாங்கச் சட்டம் 1935-ன் படியான அரசியலமைபபில் உத்தேசிக்கப்பட்ட கூட்டரசு அமைப்பு உருவாவது நடைமுறைக்கு ஒவ்வாத தாக இருந்தது. மாகாணங்களும், கூட்டரசுத் திட்டத்தை ஏற்கவில்லை; சுதேசி சமஸ்தானங்களின் எண்ணிக்கையில் பாதியாவது கூட்டரசு அமைப்பில் சேரவேண்டுமென்ற நிபந்தனையும் நிறைவேற்றப்பட முடியாததால், அந்தச சட்டத்தில் உத்தேசிக்கப்பட்ட 'சமஷ்டி இந்திய அரசு' உருவாகாமலேயே போய்விட்டது.

இந்திய அரசாங்கச் சட்டம் 1935-ன்படி, மாகாண சட்ட சபைகளுக்கான தேர்தல் 1937ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் நடைபெற்றது.

அந்தத் தேர்தலில் காங்கிரஸ் மாபெரும் வெற்றியைப் பெற்றது. மொத்தமிருந்த ஒதுக்கீடு செய்யப்படாத 836 பொதுத் தொகுதிகளில் 715 இடங்களை காங்கிரஸ் கைப்பற்றியது. முஸ்லீம்கள் பெரும்பான்மையாக இருந்த மாகாணங்களிலும் முஸ்லீம்களுக்கு என்று ஒதுக்கப்பட்ட இடங்களிலும்கூட முஸ்லீம் லீக் சரிவர வெற்றி பெறவில்லை. எந்த ஒரு மாகாணத்திலும் அது அறுதிப் பெரும்பான்மை பெறவில்லை. 482 இடங்களில் 51 இடங்களில் மட்டுமே முஸ்லீம்லீக் வெற்றி பெற்றது.

சென்னை, ஐக்கிய மாகாணம், பீகார், மத்திய மாகாணம், ஒரிசா

ஆகியவற்றில் காங்கிரஸ் அறுதிப் பெரும்பான்மை பெற்றது. பம்பாய் மாகாணத்தில் கிட்டத்தட்ட பாதி இடங்களையும் அது கைப்பற்றியது. அஸ்ஸாமிலும், வடமேற்கு எல்லை மாகாணத்திலும் காங்கிரஸ் தனிப்பெரும் கட்சியாக உருவெடுத்தது. பஞ்சாபில் யூனியனிஸ்ட் கட்சி தனிப் பெரும்பான்மை பெற்றது. வங்காளத்திலும், சிந்து மாகாணத்திலும் சில சிறிய கட்சிகள் உருவெடுத்தன.

இந்திய அரசியலமைப்பு வரலாற்றில் 'இந்திய அரசாங்கச் சட்டம் 1935' மிக முக்கியமான, நிலையான இடத்தைப் பெறுகிறது. எழுதப்பட்ட அரசியலமைப்பு ஒன்றை நம் நாட்டிற்கு வழங்க அது முயன்றிருக்கிறது. இந்த ஆவணத்தை உருவாக்கியதில் இந்திய மக்களுக்கோ, அவர்களுடைய பிரதிநிதிகளுக்கோ எவ்விதமான பங்கும இல்லை என்ற போதிலும், அச்சட்டத்தில் பல பெருங்குறைகள் இருந்தபோதிலும், மொத்தத்தில் அது ஒரு முன்னேற்ற நடவடிக்கை என்றே கூற வேண்டும். சில நூற்றாண்டுகளுக்குப் பினனர், இந்தியர்களுக்கு தமது நாட்டின நிர்வாகத்தை நடத்திச் செல்வதில் பங்கேறகும் வாய்ப்புக் கிடைத்தது. மாகாணஙகளில், மக்களால் தேர்ந் தெடுககப்பட்ட சட்டசபைக்குக் கட்டுப்பட்ட அமைச்சரவைகள் ஆட்சிப் பொறுப்பேற்றன. பிரதமர், அமைச்சர் போனற சொற்கள முதன்முறையாகப் பயன்படுத்தப்பட்டன; பிரதமரின் நடவடிககைகள் முன்னுதாரணமாகக் கொள்ளப்பட்டன. கவர்னர்களுக்கும் அமைச்சர்களுக்கும் சிற்சில சமயங்களில் கருத்து வேறுபாடுகள் எழுந்தபோதும, கவர்னர்கள் காங்கிரஸ் ஆட்சி புரிந்த மாகாணங்களில் அமைசசர்களின அதிகாரங்களையும் பொறுப்புகளையும் மதித்து நடந்து கொணடதுடன் அன்றாட நிர்வாக விஷயங்களில் தலையிடாமலும் இருநதனர். அமைச்சர்கள மிகுந்த பொறுப் புணர்ச்சியுடனும், நிறமையாகவும், பாரபட்சமின்றியும், ஈடுபாட்டுடனும் தமது கடமைகளை நிறைவேற்றினர், மக்களிடையே நனமதிப்பையும் செல்வாக்கையும் பெற்றனர். இந்திய அமைசசர்களின நிர்வாகத் திறமையையும் ஆற்றலையும கண்டு பிரிட்டிஷ் நிர்வாகிகள் வியப்புற்றது மட்டுமின்றி சில விஷயங்களில் அவர்களைப் பின்பற்றவும் தொடங்கிவிட்டனர்.

## சுதந்திரத்தை நோக்கி (1942-1947)

மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசுகள் இரண்டாண்டுகளுக்கு மட்டுமே நீடித்தன. மாகாண சட்டமன்றங்களைக் கலந்து ஆலோசிக்காமல் இரண்டாவது உலகப் போரில் இந்தியாவை ஈடுபடுத்தியதை எதிர்த்து 1939ஆம் ஆண்டில் காங்கிரஸ் அமைச்சரவைகள் அனைத்தும் பதவி விலகின. 1940ஆம் ஆண்டில் பாகிஸ்தான் பிரிவினையை வலியுறுத்தி முஸ்லீம்லீக் தீர்மானம் இயற்றியது.

**கிரிப்ஸ் தூதுக்குழு:** இரண்டாவது உலகப் போர் தீவிரமடைந்த போது, இந்திய மக்களின் மனப்பூர்வமான ஒத்துழைப்பைப் பெறுவது மிகவும் பயனுள்ளதாக இருக்குமென்று கருதப்பட்டது. அதற்காக லண்டனில் இருந்து, கேபினட் அமைச்சர் சர் ஸ்டாப் போர்டு கிரிப்ஸ் 1942ஆம் ஆண்டு மார்ச் மாதம் இந்தியாவுக்கு அனுப்பப்பட்டார்.

அவருடைய முயற்சி தோற்றுப்போனது. கிரிப்ஸ் முன்மொழிந்த திட்டங்களை எல்லா அரசியல் கட்சிகளுமே வெவ்வேறு காரணங்களால் நிராகரித்து விட்டன. இந்தியாவிற்கு டொமினியன் அந்தஸ்து வழங்கப்படும் என்றும், உலகப் போர் முடிவடைந்த பின்னர் இந்தியர்கள் தம்முடைய அரசியல் நிர்ணய சபையில் தமக்கென்று ஓர் அரசியலமைப்பை உருவாக்கிக் கொள்ளலாம் என்றும் கிரிப்ஸ் தனது திட்டத்தில் அறிவித்திருந்தார். அவ்வாறு உருவாக்கப்படும் அரசியலமைப்பில் சேர்ந்து கொள்ளவோ, சேராதிருக்கவோ மாகாணங்களுக்கு உரிமையுண்டு என்றும் அத்திட்டத்தில் சொல்லப்பட்டிருந்தது. இன அடிப்படையில் இந்தியாவைப் பிரிக்க வேண்டும் என்ற தனது கோரிக்கை ஏற்கப்படாததால் முஸ்லீம்லீக் அந்தத் திட்டத்தை நிராகரித்தது. இந்தியாவைப் பல குறுநிலப் பகுதிகளாகப் பிரிந்துபோக வகை செய்யக்கூடும் என்ற காரணத்தாலும், உலகப் போரின் போதே இந்தியர்களின் கைகளுக்கு எவ்விதமான அதிகாரத்தையும் வழங்க வழி செய்யவில்லை என்ற காரணத்தாலும் கிரிப்ஸ் திட்டத்தை காங்கிரஸ் ஏற்கவில்லை. அந்தத் திட்டத்தைப் 'பின் தேதியிட்ட காசோலை' என்று காந்திஜி கண்டனம் செய்தார்.

**வெள்ளையனே வெளியேறு இயக்கம்:** 1942 ஜூலையில் வார்தாவில் கூடிய காங்கிரஸ் செயற்குழு, இந்தியாவில் இருந்து பிரிட்டிஷார் வெளியேற வேண்டும் என்ற தீர்மானத்தை இயற்றியது. இத்தீர்மானத்தை 1942 ஆகஸ்ட் எட்டாம் தேதி நடைபெற்ற காங்கிரஸ் மாநாடும் அப்படியே ஏற்றுக் கொண்டது. அம்மாநாட்டில் உரையாற்றிய காந்திஜி, "செய அல்லது செத்துமடி" என்ற முடிவையே அத்தீர்மானம் குறிக்கிறது எனப் பிரகடனப் படுத்தினார். அதற்குப் பின்னர் நாடு முழுவதும் போராட்டங்கள் நடைபெற்றதையடுத்து காங்கிரஸ் தலைவர்கள் பலரும் கைது செய்யப்பட்டனர்.

**வேவல் திட்டம்:** இதனிடையில் இந்திய வைசிராயாக இருந்த லின்லித்கோ பிரபுவுக்குப் பதிலாக வேவல் பிரபு பொறுப்பேற்றார் அவருடைய திட்டத்தின்படி — இந்தியர்கள் தமக்குத் தாமே ஓர் அரசியலமைப்பை உருவாக்கிக் கொள்ளும்வரை நிர்வாகக் கவுன்சிலில் இந்தியர்களையே இடம் பெறச்செய்வது; அதன்படி முஸலீம்கள் மற்றும் இந்துக்களுக்குச் சம வாய்ப்புகளுடன் இந்திய அரசியல் கட்சித் தலைவர்களை நிர்வாகக் கவுன்சிலில் அமர்த்துவது; சீக்கியர்களுக்கும், பிற்படுத்தப்பட்ட சமூகத்தினருக்கும் கவுன்சிலில் தலா ஒரு பிரதிநிதியைச் சேர்ப்பது; வைசிராய், கமாண்டர்-இன்-சீஃப் ஆகிய இருவருமே கவுன்சிலில் இந்தியரல்லாத உறுப்பினர்கள்; போர் பற்றிய விவகாரங்களைக் கமாண்டர்-இன்-சீஃப் கவனிப்பது; வெளியுறவு, விவகாரங்களை இந்திய உறுப்பினர் கவனிப்பது ஆகியவை கூறப்பட்டிருந்தன.

**சிம்லா மாநாடு:** சிம்லாவில் இந்தியத் தலைவர்கள் அனைவரையும் வைசிராய் அழைத்துப் பேசினார். 1945 ஜூன் 25முதல் ஜூலை 14ஆம் தேதிவரை அம்மாநாடு நடைபெற்றது. இந்தியா ஒன்றுபட்டு இருக்க வேண்டும் என்று காங்கிரஸ் வலியுறுத்தியது. முஸ்லீம் லீகோ, பாகிஸ்தான் பிரிவினை என்ற தனது கோரிக்கையை விட்டுக் கொடுக்கவில்லை. எனவே பேச்சு வார்த்தைகள் தோல்வி கண்டன.

**தேர்தல்களும் கேபினட் மிஷனும்:** நீண்டகாலமாகத் தள்ளிப் போய்க் கொண்டிருந்த மத்திய சட்டசபைத் தேர்தல்கள் 1945ஆம் ஆண்டின் இறுதியில் நடைபெற்றன. மாகாண சட்டசபைகளுக்கான தேர்தல் 1946ஆம் ஆண்டு ஏப்ரலில் முடிவடைந்தது. 'வெள்ளையனே வெளியேறு' தீர்மானத்தை முன்வைத்துக் காங்கிரஸும், பாகிஸ்தான் பிரிவினையை முன்வைத்து முஸ்லீம் லீகும் அந்தத் தேர்தல்களில் போட்டியிட்டன. முடிவில் அஸ்ஸாம், பீகார், பம்பாய், மத்திய மாகாணம், சென்னை, வடமேற்கு எல்லை மாகாணம், ஒரிசா, ஐக்கிய மாகாணம் ஆகிய எட்டு மாகாணங்களில் காங்கிரஸ் அறுதிப் பெரும்பான்மை பெற்றது. எஞ்சிய மூன்று மாகாணங்களில் காங்கிரஸ் இரண்டாவது பெரும் கட்சியாக உருவெடுத்தது. மத்திய சட்டசபையில் தேர்தல் மூலம் நிரப்பப்பட வேண்டிய 102 இடங்களில் 56 இடங்களைக் காங்கிரஸ் கைப்பற்றியது. பொதுத் தொகுதிகளில் காங்கிரஸ் மாபெரும் வெற்றியைப் பெற்று, 1937 ஆம் ஆண்டுத் தேர்தலைக்காட்டிலும் கூடுதல் பலம் பெற்றது. ஆனால் முஸ்லீம்களுக்காக ஒதுக்கீடு செய்யப்பட்ட தொகுதிகளில் காங்கிரஸ் படுதோல்வி அடைந்தது.

மாகாண சட்டசபைகளுக்குத் தேர்தல் நடந்து கொண்டிருந்தபோது 1945 பிப்ரவரி 19ஆம் நாள் பிரிட்டிஷ் நாடாளுமன்றத்தில் பெதிக்லாரன்ஸ் பிரபு ஓர் அறிவிப்பை வெளியிட்டார். பிரிட்டிஷ் உள்துறை அமைச்சர், வாணிக வாரியத்தின் தலைவர்(ஸ்டாப்போர்டு கிரிப்ஸ்), கடற்படையின் உயர்குழு முதல்வர் (ஏ.வி. அலக்ஸாண்டர்) ஆகியோர் அடங்கிய கேபினட் தூதுக் குழு ஒன்று இந்தியாவிற்குச் சென்று வைசிராயுடன் இணைந்து செயல்படும் என்று அந்த அறிவிப்புக் கூறியது. 1946 மார்ச் முதல் மே வரை கேபினட் தூதுக்குழு இந்தியாவில் இருந்தது.

பாகிஸ்தான் எனும் தனிநாடு வேண்டும் என்ற முஸ்லீம்லீகின் கோரிக்கை நடைமுறைச் சாத்தியமற்றது என கேபினட் குழு நிராகரித்தது. பாகிஸ்தான் உருவாக்கப்பட்டால் முஸ்லீம் அல்லாதவர்கள் பெரும்பான்மையோர் பாகிஸ்தானில் இருக்க நேரிடும் என்றும், அது போலவே, கணிசமான அளவுக்கு முஸ்லீம் மக்கள் பாகிஸ்தானுக்கு வெளியே இந்தியாவில் இருக்க நேரிடும் என்றும் கேபினட் குழு கருத்துரைத்தது.

நெகிழ்வான சமஷ்டி அமைப்பு எனும் காங்கிரஸின் திட்டம், அரசியலமைப்பியல் குறைகள், முரண்பாடுகள் கொண்டதாக இருக்கும் என்று அதனையும் கேபினட் குழு நிராகரித்தது. உச்சியில் இந்திய ஒன்றியம், இடையில் மாகாணங்களின் கூட்டமைப்பு, கீழே மாகாணங்களும் மன்னராட்சி சமஸ்தானங்களும் என மூன்றடுக்கு நிலை அமைக்கலாம் என்று அது பரிந்துரை செய்தது.

புதிதாக உருவாகும் இந்திய அரசியலமைப்பு, கீழ்க்கண்டவற்றை அடிப்படையாகக் கொண்டதாக அமையலாம் என கேபினட் தூதுக்குழு பரிந்ததுரைத்தது:

1. பிரிட்டிஷ் ஆட்சிக்கு உட்பட்ட இந்தியா, மற்றும் சமஸ்தானங்களைக் கொண்ட இந்திய ஒன்றியம் அமைய வேண்டும்; வெளியுறவு, பாதுகாப்பு, தொலைத்தொடர்பு, ஆகிய விஷயங்கள் இதன்

பொறுப்பில் இருக்க வேண்டும்; இவற்றை நிர்வகிப்பதற்குத் தேவையான நிதியைத் திரட்டும் அதிகாரமும் அதற்கு இருக்க வேண்டும்.

2. பிரிட்டிஷ் இந்தியா மற்றும் சமஸ்தானங்களின் பிரதிநிதிகளைக் கொண்ட சட்டசபை ஒன்றும், நிர்வாக அமைப்பு ஒன்றும் கொண்டதாக ஒன்றியம் இருக்க வேண்டும். பெரிய இனப்பிரச்சினை குறித்து கேள்வி எழுமானால், அதைப்பற்றி சட்டசபையில் முடிவெடுக்க வேண்டுமானால், இந்து-முஸ்லீம் ஆகிய இரண்டு இன உறுப்பினர்களிலிருந்து பெரும்பான்மையோரும், சட்டசபையின் மொத்த உறுப்பினர்களில் பெரும்பான்மையோரும் கூடி வாக்களித்துத் தீர்மானிக்க வேண்டும்.

3. ஒன்றியத்தின் அதிகாரத்திற்குட்பட்ட விஷயங்கள் தவிர மற்றவை அனைத்தும், பிற அதிகாரங்களும் மாகாணங்களிடம் இருக்க வேண்டும்.

4. ஒன்றியத்தில் சேர்ந்துவிட்ட சமஸ்தானங்களைத் தவிர மற்றவை தமது அதிகாரங்களை தம்வசமே வைத்திருக்கும்.

5. மாகாணங்கள் தமக்குள் ஒரு குழுவாக அமைந்து நிர்வாக அமைப்பையும் சட்டசபையையும் உருவாக்கிக் கொள்ளலாம். அவை தமக்குள் பொதுவாக எடுத்துக் கொள்ளக்கூடிய விஷயங்களைப் பற்றி தீர்மானித்துக் கொள்ளலாம்.

6. அரசியலமைப்பில் மாற்றம் செய்ய வேண்டுமானால், முதலில் பத்தாண்டுகளுக்குப் பின்னரும், அதனையடுத்து ஒவ்வொரு பத்தாண்டு இடைவெளியிலும் ஏதேனும் ஒரு மாகாணம் தனது சட்டசபையில் பெரும்பான்மை வாக்குகளுடன் தீர்மானம் இயற்றி அரசியலமைப்பை மறுபரிசீலனை செய்வதற்கு ஏற்றவாறு ஒன்றியம் மற்றும் மாகாணக்குழு அரசியலமைப்புகளில் விதிகள் இருத்தல் வேண்டும்.

இந்த ஆலோசனைகளை வழங்கிய கேபினட் குழு, ஓர் அரசியலமைப்புக்கான விவரங்களை வழங்குவது தன்னுடைய நோக்கமில்லை என்றும், இந்தியர்கள் தமக்குத்தாமே ஓர் அரசியலமைப்பை உருவாக்கிக் கொள்வதற்கான கருவியாக தான் அந்த ஆலோசனைகளை வழங்குவதாகவும் தெளிவுபடுத்தியது. இந்து-முஸ்லீம் ஆகிய இருபெரும் இன மக்களும் அரசியலமைப்பை இயற்றும் ஓர் அமைப்பை உருவாக்குகின்ற வாய்ப்பு ஏதும் தோன்றாததால்தான் அவ்வாறு பரிந்துரைக்க வேண்டியதாயிற்று என்றும் கேபினட் குழு கூறியது.

***இடைக்கால அரசு:*** முதலாவது இடைக்கால தேசிய அரசு 1946 ஆகஸ்ட் 24ஆம் தேதியன்று அறிவிக்கப்பட்டது. அதில் பண்டிட் ஜவகர்லால் நேரு, சர்தார் வல்லபபாய் படேல், டாக்டர் ராஜேந்திர பிரசாத், ஆஸப் அலி, சரத் சந்திரபோஸ், டாக்டர் ஜான் மத்தாய், சர் ஷபத் அகமதுகான், ஜகஜீவன்ராம், சர்தார் பல்தேவ் சிங், சையத் அலி ஜாகிர், சி. ராஜ கோபாலாச்சாரி, டாக்டர் சி. எச். பாபா ஆகியோர் இடம் பெற்றிருந்தனர்.

சட்டப்படி கூறுவதானால் அவர்கள் அனைவரும் வைசிராயின் நிர்வாகக் கவுன்சில் உறுப்பினர்களே. வைசிராயே தொடர்ந்து கவுன்சிலின் தலைவராக நீடித்தார். எனினும் ஜவகர்லால் நேரு கவுன்சிலின் துணைத்தலைவராக அறிவிக்கப்பட்டார். அவரும் மேலும் பதினொரு உறுப்பினர்களும் 1946 செப்டம்பர் இரண்டாம் தேதி பதவி ஏற்றனர். அவர்களில் மூன்று முஸ்லீம் உறுப்பினர்களும் இருந்தனர். முஸ்லீம் லீகைச் சேர்ந்த உறுப்பினர்கள் கவுன்சிலில் பின்னாளில் வந்து சேர்ந்து கொள்ளவும் கதவுகள திறந்திருந்தன.

முஸ்லீம் லீகையும், கவுன்சிலில் இடம்பெறச் செய்யும் முயற்சியில் அக்டோபர் மாதத்திற்குள் வைசிராய் வெற்றி கண்டுவிட்டார். அதன்படி அக்டோபர் 26ஆம் நாள் கவுன்சில் திருத்தியமைக்கப்பட்டது. முன்னர் பதவி ஏற்றிருந்த சையத் அலி ஜாகிர், சரத் சந்திரபோஸ், சர் ஷபத் அகமது ஆகியோரை நீக்கிவிட்டு அவர்களுக்குப் பதிலாக முஸ்லீம் லீகிலிருந்து ஐந்து உறுப்பினர்கள் சேர்த்துக் கொள்ளப்பட்டனர். இவ்வாறாக முஸ்லீம் லீக் அரசாங்கத்தில் இடம்பெற்றது.

மௌண்ட் பேட்டன் திட்டம்: ஆங்கிலேயரிடமிருந்து இந்தியர்களுக்கு ஆட்சி அதிகாரத்தை மாற்றித்தரும் பணியைச் சுமுகமாகச் செய்யும் பொருட்டு புதிய வைசிராயாக 1947ஆம் ஆண்டில் லூயிஸ் மௌண்ட் பேட்டன் பிரபு இந்தியாவிற்கு அனுப்பப்பட்டார் 1947 மார்ச் 22ஆம் நாள் அவர் இந்தியா வந்தடைந்தார். இடைக்கால அரசிலோ, அரசியல் நிர்ணய சபையிலோ காங்கிரசும் முஸ்லீம் லீகும் ஒன்றுபட்டுச் செயல்பட முடியாது என்பதைப் புரிந்து கொண்ட மௌண்ட் பேட்டன், வகுப்புக் கலவரங்கள் மேலும் மோசமாவதைத் தடுப்பதற்கு ஒரே வழி, கூடிய விரைவிலேயே இந்தியர்களுக்கு அதிகாரத்தை மாற்றித் தருவதுதான் என்று உணர்ந்தார். இதனிடையில், உள்நாட்டுப் போர் போன்ற பெருங்குழப்பமும் கலவரங்களும் ஏற்படாமல் தடுக்க ஒரு மாற்றுவழி பிரிவினைதான் என்பதைக் காங்கிரஸும் உணர்ந்து கொண்டது. எனவே அதிகார மாற்றத்திற்கு 1947 ஆகஸ்ட் 15ஆம் தேதி என மௌண்ட் பேட்டன் நாள் குறித்தார்.

இந்தியப் பிரிவினைக்கான திட்டம் ஒன்றை மௌண்ட் பேட்டன் தயாரித்தார். பிரிட்டிஷ் எதிர்க்கட்சித் தலைவர்களுடன் கலந்தாலோசித்த பின்னர் மௌண்ட் பேட்டன் திட்டத்தை உள்ளடக்கிய புதிய அறிக்கை ஒன்று 1947 ஜூன் மூன்றாம் தேதியன்று வெளியிடப்பட்டது. இவ்வறிக்கையின்படியான திட்டம் இந்தியா - பாகிஸ்தான் பிரிவினை தவிர்க்க முடியாததாகி விட்டதை விளக்கியது. ஏற்கெனவே இருந்த அரசியல் நிர்ணயசபை தயாரித்திருந்த அரசியலமைப்பை ஏற்காத பகுதிகளில் கட்டாயப்படுத்த முடியாது என அந்த அறிக்கை கூறியது. எனவே அப்படிப்பட்ட பகுதிகளைச் சேர்ந்த மக்கள் தனியான அரசியலமைப்பு அவை வேண்டுமா என்பது பற்றி அவர்களது விருப்பத்தை அறிந்து கொள்வதற்கான ஏற்பாடுகளை அது அறிவித்தது. ஆக இத்திட்டத்தின் விளைவாக இந்தியா - பாகிஸ்தான் என இரண்டாகப் பிரிப்பது என்பது தெளிவாயிற்று.

## இந்திய சுதந்திரச் சட்டம் 1947

மௌண்ட் பேட்டன் திட்டத்தின் அடிப்படையில் இந்திய சுதந்திர மசோதா 1947ஐ பிரிட்டிஷ் நாடாளுமன்றம் சட்டமாக்கியது.

1. இரண்டு டொமினியன்களையும், உருவாக்க 1947 ஆகஸ்ட் 15ஆம் தேதி என நாள் குறிக்கப்பட்டது.
2. இந்தியா - பாகிஸ்தான் என்ற இரண்டு நிலப்பகுதிகளுக்கான எல்லைகள் வரையறுக்கப்பட்டு வங்காளத்திலும் பஞ்சாபிலும் தலா இரண்டு மாகாணங்கள் உருவாக்கப்பட்டன. பாகிஸ்தானில் சேருகின்ற பகுதிகளைத் தவிர பிரிட்டிஷ் இந்தியாவில் இருந்த அனைத்து மாகாணங்களையும் கொண்டதாக இந்தியா விளங்கும்
3. கிழக்கு வங்காளம், மேற்கு பஞ்சாப், சிந்து, ஆகிய மாகாணங்கள் மற்றும் அசாமின் சில்ஹெட் மாவட்டம ஆகியவற்றைக் கொண்டதாக பாகிஸ்தான் விளங்கும்.
4. இந்தியாவில் இருந்த பிரிட்டிஷ் பேரரசியின பொறுப்புகளும, இந்திய சமஸ்தானங்களின் மீதான பிரிட்டிஷ் மேலாதிக்கமும 1947ஆகஸ்ட் 15ஆம் தேதியிலிருநது காலாவதியாகிவிடும்.
5. இரண்டு டொமினியனகளில் ஏதேனும் ஒன்றில இநதிய சமஸ தானஙகள சேர்ந்து கொள்ளலாம்
6. இரண்டு டொமினியன்களுக்கும் தனித்தனியாக இரணடு கவர்னர் ஜெனரல்களை பிரிட்டிஷ் பேரரசி நியமிப்பார். பேரரசியின பிரதி நிதியாக கவர்னர் ஜெனரல் டொமினியனை ஆட்சி புரிவார்.
7. இரண்டு டொமினியன்களுககும் தனித்தனியாக சடட மனறங்கள் இருக்கும்; பிரிட்டிஷ் நாடாளுமன்றத்தின் தலையீடு இன்றிச் சட்டமியற்றும் முழு அதிகாரமும் அவற்றுககு உண்டு.
8. டொமினியன்களை ஆட்சிபுரிவதற்கான தற்காலிக ஏற்பாடாக, இரண்டு டொமினியன்களின அரசியல நிர்ணய சபைகளுக்கும் டொமினியன நாடாளுமன்றத்திற்கான அந்தஸ்து அளிக்கப்பட்டு சட்டமியற்றும் அனைத்து அதிகாரங்களும் அளிககப்பட்டது
9. இந்திய சுதநதிரச் சட்டம் 1947ஐ முழுமையாக அமல்படுத்து வதற்குத் தேவையான விஷயங்கள குறித்துத் தறகாலிக ஆணைகள் பிறப்பிக்க கவர்னர் ஜெனரலுக்கு அச்சட்டம் அதிகாரம வழங்கியது
10. இறுதியாக, இந்திய விவகாரஙகளுககான அமைசசரின பணிகள், இந்தியாவின் முப்படைகள் ஆகியவற்றுக்கான நிபந்தனைகளையும், பிரிட்டிஷ் இராணுவம், கடற்படை, வானபடை ஆகியவற்றின் மீதான பிரிடடிஷ் பேரரசியின் அதிகார வரமபுகளையும் அச்சட்டம் வரையறுத்தது.

இந்திய சுதந்திரச சட்டத்தின்படி ஆகஸ்ட்14-15 நளளிரவில் இந்தியா பாகிஸ்தான் என்ற இரண்டு டொமினியன்கள் தோற்றுவிக்கப்பட்டன.

# 3

# நமது அரசியல் சட்ட உருவாக்கம்

## அரசியல் நிர்ணய சபை

பொதுவாக, ஓர் இறையாண்மை மக்களாட்சி நாட்டின் அரசியலமைப்பை உருவாக்கும் பணியை அந்நாட்டு மக்கள பிரதிநிதிகள் அடங்கிய ஓர் அமைப்பே மேற்கொள்ளும. அரசியலமைப்பை இயற்றி ஏற்றுக் கொளவதற்காக தேர்ந்தெடுக்கப்படும அத்தகைய அமைப்பிற்கு அரசியல் நிர்ணய சபை என்று பெயர்.

ஆரசியல் நிர்ணயசபை எனற க நத்து, இநதியாவின் தேசிய இயக்க வளர்ச்சியுடன நீண்ட தொடர்புடையதாக இருந்தது. இநதிய மக்கள் தமக்குத் தாமே ஓர் அரசியலமைப்பை இயற்றிக் கொளவதற்காக அரசியல் நிாணயசபை ஒன்றை உருவாக்க வேண்டுமெனற கருத்து, 1919ஆம் ஆண்டுச் சட்டத்தின் எதிர்ப்பிலேயே பொதிந்து கிடந்தது அரசியல் நிர்ணய சபைக்கான கோரிக்கை அதே பெயரில் இருக்கவில்லை எனினும் - இந்திய அரசாங்கச் சட்டம் 1919-ன் அமலாககததிற்குப் பின்னர் 1922ஆம் ஆண்டில் காந்திஜியால் விடுவிக்கப்பட்டது.

1922ஆம் ஆண்டிலேயே, அன்னி பெசன்ட் அமமையாரின் முயற்சியினால். மத்திய சட்டசபையின இரு அவை உறுப்பினர்களின் கூட்டுக் கூட்டம் ஒன்று சிம்லாவில் நடைபெற்றது. புதிய அரசியலமைப்பை இயற்றுவதற்காக மாநாடு ஒன்றை அழைப்பது என அப்போது தீர்மானிக்கப் பட்டது. மத்திய-மாகாண சட்டசபைகளின் உறுப்பினர்கள் மாநாடு ஒன்றும் 1923 பிப்ரவரியில் தில்லியில் நடைபெற்றது. பிரிட்டிஷ் பேரரசின் கீழ் இயங்கிய சுயாட்சி டொமினியன்களைப் போலவே இந்தியாவும் செயல் படுவதற்கு ஏற்றவாறு அரசியலமைப்பு அமைய வேண்டுமென அம்மாநாட்டில் கருத்துரைக்கப்பட்டது. பின்னர் சர் தேஜபகதூர் சப்ரு தலைமையில் 'தேசிய மாநாடு' ஒன்றும் 1923 ஏப்ரலில் நடைபெற்றது. அந்த மாநாட்டில் "இந்திய காமன்வெல்த் மசோதா" வரையப்பட்டது. பின்னர் அந்த மசோதா சில மாற்றங்களுடன், 1925 ஜனவரியில் தில்லியில் மகாத்மா காந்தியின் தலைமையில் நடைபெற்ற அனைத்துக் கட்சிகள் மாநாட்டுக் குழுவிடம் சமர்ப்பிக்கப்பட்டது. இறுதியாக வரைவுக்குழு ஒன்றிடம் அந்த வரைவு அளிக்கப்பட்டு, பின்னர் மசோதா வெளியிடப் பட்டது. பல்வேறு அரசியல் கட்சிகளைச் சேர்ந்த 43 தலைவர்கள் கையெழுத்திட்ட ஒரு குறிப்புடன் அந்த மசோதா லண்டனில் இருந்த

தொழிற்கட்சியின் செல்வாக்குமிக்க உறுப்பினர் ஒருவருக்கு அனுப்பப் பட்டது. அந்த மசோதாவுக்குத் தொழிற்கட்சி உறுப்பினர்களிடையே பரவலாக வரவேற்பு இருந்தது. சில திருத்தங்களுடன் அவர்கள் அதனை ஏற்றுக் கொண்டனர். பின்னர் அந்த மசோதா பிரிட்டிஷ் நாடாளுமன்றத்தின் பொதுமக்கள் சபையில் அறிமுகப்படுத்தப்பட்டது. தொழிற்கட்சி அரசு தோல்வியடைந்ததால் அந்த மசோதாவுக்கு முடிவு கட்டப்பட்டாலும், இந்தியாவுக்கு என்று ஓர் அரசியலமைப்பை உருவாக்க சாத்வீக முறையிலும் அரசியல் ரீதியாகவும் மேற்கொள்ளப்பட்ட பெரும் முயற்சி என்றே அதனைக் குறிப்பிட வேண்டும்.

1924, 1925 ஆம் ஆண்டுகளில் ஏற்கப்பட்ட புகழ்வாய்ந்த 'மோதிலால் நேரு தீர்மானம்' இந்த விஷயத்தில் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த நிகழ்வாகும். இந்தியாவின் வருங்கால அரசியலமைப்பை இந்தியர்கள் தமக்குத் தாமே இயற்றிக் கொள்ள வேண்டும் என்ற கோரிக்கைக்கு முதன்முறையாக மத்திய சட்டசபையும் தனது ஆதரவைத் தெரிவித்தது.

இந்தியர்கள் எவரும் உறுப்பினராகச் சேர்க்கப்படாமல் 1927 நவம்பரில் சைமன் கமிஷன் நியமிக்கப்பட்டபோது, அலகாபாத் நகரில் அனைத்துக் கட்சி மாநாடு ஒன்று நடைபெற்றது. தேசியக் கோரிக்கையைப் புறந்தள்ளியதுடன், இந்தியர்களைக் கீழ்த்தரமாக எண்ணி, அவர்களுடைய சொந்த நாட்டின் அரசியலமைப்பைத் தீர்மானிக்கின்ற உரிமையை மறுதலித்த சைமன் கமிஷன் இந்திய மக்களுக்கு வேண்டுமென்றே இழைக்கப்பட்ட அவமானம் என்று அம்மாநாடு கூறியது.

அதற்கும் முன்னதாக, 1927 நவம்பர் 17ஆம் தேதி பம்பாயில் நடைபெற்ற காங்கிரஸ் மாநாட்டில் மோதிலால் நேரு ஒரு தீர்மானத்தை முன்மொழிந்தார். மத்திய-மாகாண சட்டசபைகளின் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களையும், அரசியல் கட்சித் தலைவர்களையும் கலந்தாலோசித்து, இந்தியாவுக்கு என ஓர் அரசியலமைப்பை இயற்ற வேண்டுமென காங்கிரஸ் செயற்குழுவை வலியுறுத்தியது அத்தீர்மானம். மிகப் பெரும்பான்மை ஆதரவுடன், சில திருத்தங்களுடன் ஏற்றுக் கொள்ளப்பட்ட அந்த சுயராஜ்ய அரசியலமைப்புத் தீர்மானமே பின்னர் விரிவுபடுத்தப்பட்டு 1927 டிசம்பர் 28-ல் சென்னையில் நடைபெற்ற காங்கிரஸ் மாநாட்டில் ஜவகர்லால் நேருவால் முன்மொழியப்பட்டது. பின்னர் 1928 மே 19ஆம் தேதி பம்பாயில் நடைபெற்ற அனைத்துக் கட்சி மாநாடு, இந்திய அரசியலமைப்பின் கோட்பாடுகளை வரையறுப்பதற்காக மோதிலால் நேருவின் தலைமையில் ஒரு குழுவை நியமித்தது. 1928 ஆகஸ்ட் 10ஆம் தேதி அந்தக் குழு சமர்ப்பித்த அறிக்கையே பின்னாளில் நேரு அறிக்கை என்று பரவலாக அழைக்கப்பட்டது. நம் நாட்டுக்கென முழு நிறைவான அரசியலமைப்பு ஒன்றை இயற்ற இந்தியர்கள் மேற்கொண்ட முதல் முயற்சி அது. "இந்திய தேசியவாதம் என்பது ஆக்கப்பூர்வமற்றது என்ற சவாலுக்குப் பதில் அளிப்பதுடன், வகுப்புவாதப் பிரச்சினைகளை எதிர்கொள்வதற்கு இந்தியர்கள் மேற்கொண்ட முயற்சியாகவும் அது விளங்கியது" என அதனை கூப்லேண்ட் வர்ணித்திருக்கிறார். அப்போது மக்களிடையே பரவியிருந்த தேசிய அளவிலான கருத்தாக மட்டுமின்றி, இந்தியாவிற்கான வரைவு.

அரசியலமைப்பாகவும் அந்த அறிக்கை விளங்கியது. நாடாளுமன்ற மாதிரியான பொறுப்புள்ள அரசைக் கொண்ட டொமினியன் அந்தஸ்து என்ற கோட்பாட்டின்படி வரைவு அரசியலமைப்பு விளங்கியது. இறையாண்மை இந்திய மக்களுக்கே உரியது என்று வலியுறுத்திய அந்த வரைவு, சில அடிப்படை உரிமைகளைப் பட்டியலிட்டிருந்தது. கூட்டரசு அமைப்பில், அதன் உறுப்புகள் பெருமளவில் தன்னாட்சி கொண்டவை யாகவும், எஞ்சிய அதிகாரங்கள் மத்திய அரசிடம் இருப்பதாகவும், வரைவு கூறியது. மாகாண சட்டசபைகளுக்கும் மத்திய சட்டசபையின் கீழ் சபைக்கும் ஒரே வாக்காளர்கள் வாக்களிப்பதான ஏற்பாடும், சில குறிப்பிட்ட காலம் வரை சிறுபான்மையினருக்குச் சில தொகுதிகளை ஒதுக்கீடு செய்வதாகவும் அந்த வரைவு தயாரிக்கப்பட்டிருந்தது.

1928ஆம் ஆண்டின நேரு அறிக்கையில் குறிப்பிடப்பட்டிருந்த நாடாளுமன்றத்திற்குக் கட்டுப்பட்ட ஆட்சிமுறை, அடிப்படை உரிமைகள், சிறுபான்மையினர் உரிமைகள் போன்ற அம்சங்கள் அனைத்தும், 21 ஆண்டுகள் கழித்து 1949 நவம்பர் 26ஆம் தேதி ஏற்றுக்கொள்ளப்பட்ட சுதந்திர இந்தியாவின் அரசியலமைப்பில் இடம் பெற்றன என்பது குறிப்பிடத் தக்கது.

மூன்றாவது வட்டமேஜை மாநாட்டுக்குப் பின்னர் வெளியிடப்பட்ட வெள்ளை அறிக்கையில் இந்திய அரசியலமைப்புச் சீர்திருத்தங்கள் பற்றிய பிரிட்டிஷ் அரசின் பிரேரணைகள் இடம் பெற்றிருந்தன. அந்தப் பிரேரணை களைப் பரிசீலித்த பிரிட்டிஷ் நாடாளுமன்றத்தின் கூட்டுக்குழு "இந்தியாவில் உள்ளவர்களிடம் அரசியலமைப்பு அதிகாரத்தை வழங்குவது தற்போதைக்கு உகந்தது இல்லை" என்று கருத்துத் தெரிவித்திருந்தது.

வெள்ளை அறிக்கைக்கு ஒரே மாற்று ஏற்பாடு, வயதுற்றோர் வாக்குரிமை மூலம் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசியல் நிர்ணயசபையால் ஓர் அரசியலமைப்பை இயற்றுவதே, எனறு காங்கிரஸ் காரியக் கமிட்டி 1934 ஜூனில் அறிவித்தது. அரசியல் நிர்ணய சபை அமைக்கப்பட வேண்டு மென்னும் திட்டவட்டமான கோரிக்கை அப்போதுதான் முதல் முறையாக எழுந்தது. 1934 டிசம்பர் 5,6,7 தேதிகளில் பாட்னா நகரில் நடைபெற்ற காங்கிரஸ் செயற்குழுக் கூட்டத்தில், பிரிட்டிஷ் நாடாளுமன்ற கூட்டுக்குழு (1933-34) பரிந்துரைத்த இந்திய அரசியலமைப்புச் சீர்திருத்தங்களை நிராகரிக்கும் தீர்மானம் ஒன்று இயற்றப்பட்டதுடன், அரசியல் நிர்ணயசபை மூலம் அரசியலமைப்பை வரைவதே சரியான வழி என மீண்டும் வலியுறுத்தப் பட்டது.

சைமன் கமிஷனின் முயற்சியும், வட்டமேஜை மாநாட்டுப் பேச்சு வார்த்தைகளும் தோல்வி அடைந்ததை அடுத்து, இந்திய மக்களின் விருப்பத்தை நிறைவேற்றுவதற்காக இந்திய அரசாங்கச் சட்டம் 1935 இயற்றப்பட்டது. எனினும் இந்திய மக்களால் ஓர் அரசியல் நிர்ணயசபை அமைக்கப்பட வேண்டும் என்ற கோரிக்கையே வலுப்பெற்றது. 1936 ஏப்ரலில் லக்னோவில் நடைபெற்ற காங்கிரஸ் மாநாட்டில், வெளியிலிருந்து திணிக்கப்படும் எந்தவிதமான அரசியலமைப்பையும் ஏற்க முடியாது எனவும், வயதுற்றோர் வாக்குரிமை மூலம் தேர்ந்தெடுக்கப்படும் அரசியல் நிர்ணய

சபையால் உருவாக்கப்படும் அரசியலமைப்பையே ஏற்க முடியும் என்றும் தீர்மானம் இயற்றப்பட்டது.

1935ஆம் ஆண்டு சட்டத்தை முற்றிலும் நிராகரிப்பதாகவும், புதிய அரசியல் நிர்ணயசபை ஒன்று உருவாக்கப்பட வேண்டும் என்றும் கூறி மாகாணத் தேர்தல்களில் போட்டியிட்டு மாபெரும் வெற்றியை ஈட்டிய காங்கிரஸ், அரசியல் நிர்ணயசபை வேண்டும் என்பதற்கு மக்கள் அளித்த ஆதரவே தன்னுடைய பெரும் வெற்றிக்குக் காரணம் என்று 1937 மார்ச் 18ஆம் தேதி தில்லியில் ஒரு தீர்மானத்தை இயற்றியது. "வயதுற்றோர் வாக்குரிமை மூலம் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசியல் நிர்ணயசபையின் வாயிலாக, சுதந்திர இந்தியாவின் அடிப்படையில் ஓர் அரசியலமைப்பை உருவாக்கவேண்டும்" என அது விரும்பியது. இதே கோரிக்கையை 1937 மார்ச் மாதம் தில்லியில் நடைபெற்ற காங்கிரஸ் சட்டசபை உறுப்பினர்களின் அனைத்திந்திய மாநாடும் வலியுறுத்தியது. 1937ஆம் ஆண்டு ஆகஸ்ட் முதல் அக்டோபர் வரையிலான காலத்தில் மத்திய சட்டசபையிலும், காங்கிரஸ் ஆட்சியில் இருந்த மாகாண சட்டசபைகளிலும், சுதந்திர இந்தியாவிற்கான அரசியலமைப்பை வரைவதற்காக அரசியல் நிர்ணயசபை ஒன்றை அமைக்க வேண்டும் என்ற காங்கிரஸின் கோரிக்கையை வலியுறுதத்தித் தீர்மானங்கள் இயற்றப்பட்டன.

1939ஆம் ஆண்டு இரண்டாம் உலகப்போர் தொடங்கிய பின்னர், செப்டம்பர் மாதம் 16ஆம் தேதி காங்கிரஸ் காரியக் கமிட்டி வெளியிட்ட நீண்ட அறிக்கையில், அரசியல் நிர்ணயசபைக்கான கோரிக்கை மீண்டும் வலியுறுத்தப்பட்டது.

1939 நவம்பர் 19ஆம் தேதியிட்ட ஹரிஜன் இதழில் 'ஒரேவழி' எனற தலைப்பில் காந்திஜி ஒரு கட்டுரையை எழுதினார். இந்திய மக்களின் உண்மையான விருப்பத்தை முழுமையான வகையில் பிரதிபலிக்கும் அரசியலமைப்பை அரசியல் நிர்ணயசபையால் மட்டுமே வரைய முடியும் என்று அக்கட்டுரையில் அவர் கூறியிருந்தார். வகுப்புவாதம் மற்றும் ஏனைய பிரச்சினைகளை நியாயமாகத் தீர்ப்பதற்கான ஒரேவழி, அரசியல் நிர்ணயசபையை அமைப்பதுதான் என்று அவர் அறிவித்தார்.

1940 ஆம் ஆண்டில் 'ஆகஸ்ட் இசைவு' என்று பிரிட்டிஷ் அரசு அறிவித்ததில்தான் முதன்முறையாக அரசியல் நிர்ணயசபைக்கான கோரிக்கை ஏற்கப்பட்டது. அதுவும்கூட நேரடியாக ஏற்கப்படாததுடன் சில முக்கியமான விஷயங்கள் நிலுவையில் வைக்கப்பட்டன.

பின்னர் கிரிப்ஸ் பிரபு முன்மொழிந்தவை, 'ஆகஸ்ட் இசைவை'க் காட்டிலும் ஒருபடி மேலானவை. புதிய அரசியலமைப்பை உருவாக்கும் பணி முற்றிலுமாகவே இந்தியர்கள் வசம் விடப்படும் என்றும், அரசியல் நிர்ணயசபையால் வரையப்படும் அரசியலமைப்பை பிரிட்டிஷ் அரசு ஏற்றுக் கொள்ளும் என்றும் கிரிப்ஸ் அறிவித்திருந்தார். எனினும் கிரிப்ஸ் தூதுக்குழுவின் முயற்சி தோல்வி அடைந்ததால், 1945ஆம் ஆண்டு மே மாதம் இரண்டாம் உலகப் போர் முடிவுக்கு வரும்வரை, இந்திய அரசியலமைப்புச் சிக்கலைத் தீர்க்க எவ்வித நடவடிக்கையும் மேற்கொள்ளப் படவில்லை.

1945 ஜூலை மாதம் இங்கிலாந்தில் புதிதாக தொழிற்கட்சி அரசு அமைந்த பின்னர், அதன் இந்தியக் கொள்கை 1945 செப்டம்பர் 19ஆம் தேதியன்று அறிவிக்கப்பட்டது. லின்லித்கோ பிரபுவுக்குப் பின்னர் 1943 ஆம் ஆண்டில் புதிய வைசிராயாகப் பதவி ஏற்றிருந்த வேவல் பிரபு அக் கொள்கையை அறிவித்தார். அரசியலமைப்பை உருவாக்கும் அமைப்பினை விரைவிலேயே நியமிக்க பிரிட்டிஷ் அரசு எண்ணம் கொண்டுள்ளதாக அப்போது அறிவிக்கப்பட்டது

வயதுற்றோர் வாக்குரிமை மூலம் அரசியல் நிர்ணயசபையை உருவாக்குவதே மிக உத்தமமான வழி என்றாலும், அதனால் புதிய அரசிய லமைப்பை உருவாக்குவதில் பெருத்த காலவிரயம் ஏற்படும் என்பதை கேபினட் தூதுக்குழு உணர்ந்தது. எனவே அண்மையில் தேர்ந்தெடுக்கப்பட்ட மாகாண சட்டசபைகளையே அரசியல் நிர்ணயசபையைத் தேர்ந்தெடுக்கப் பயன்படுத்திக் கொள்வதே நடைமுறைச் சாத்தியமானது என்றும் கேபினட் தூதுக்குழு கருதியது. அப்போதிருந்த சூழ்நிலையில் மிகவும் நியாயமானதும் சாத்தியப்படுவதுமான திட்டத்தை அது அறிவித்தது. அதன்படி ஒவ்வொரு மாகாணத்தின் மக்கள் தொகையின் அடிப்படையில், அதாவது தோராயமாக பத்துலட்சம் மக்களுக்கு ஒரு பிரதிநிதி என்ற கணக்கில் மாகாண சட்ட சபைகளில இருந்து அரசியல் நிர்ணயசபைக்கு உறுப்பினர்கள தேர்ந் தெடுக்கப்படவேண்டும். அவ்வாறு தேர்ந்தெடுக்கபபடும் உறுப்பினர்கள், மாகாண சட்டசபையில் உள்ள பிரதான இனங்களான சீக்கியர்கள், முஸ்லீம்கள், பொது இனம் (சீக்கியர் மற்றும் முஸ்லீம் அல்லாதவர்) ஆகியவற்றைச் சேர்ந்த உறுப்பினர்களின் எண்ணிக்கைக்குத் தகுந்தவாறும் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். மாகாண சட்டசபைகளில் இருந்து தேர்ந் தெடுககப்படும் ஒவ்வொரு இனத்தைச் சேர்ந்தவர்களும் அந்தந்த இனத்தைச் சேர்ந்த உறுப்பினர்களாலேயே தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். அதற்கு விகிதாச்சார பிரதிநிதித்துவத்தின் அடிப்படையில் ஒற்றை மாற்று வாக்கு மூலம் தேர்தல் நடத்தப்பட வேண்டும். சுதேசி சமஸ்தானங்களில் இருந்து அரசியல் நிர்ணயசபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய உறுப்பினர்களின் எண்ணிக்கையும் இதே போன்று மக்கள் தொகை அடிப்படையிலேயே தீர்மானிக்கப்பட்டது. எனினும் தேர்தல் முறை மட்டும் பின்னர் கலந்தாலோ சித்து முடிவெடுக்கப்படுவதாக இருந்தது. அவ்வாறாக அரசியல் நிர்ணய சபையின் மொத்த உறுப்பினர்களின் எண்ணிக்கை 385 ஆக (கவர்னர் ஆட்சிப் பொறுப்பில் இருந்த பிரிட்டிஷ் இந்திய மாகாணங்களில் இருந்து 292 உறுப்பினர்களும், சுதேசி சமஸ்தானங்களில் இருந்து 93 உறுப்பினர்களும்) நிர்ணயிக்கப்பட்டது. இவை தவிர தில்லி, அஜ்மீர்- மெர்வாரா, கூர்க், பிரிட்டிஷ் பலுசிஸ்தான் ஆகிய முதன்மை கமிஷனர் மாகாணங்களில் இருந்து தலா ஓர் உறுப்பினர் வீதம் மேலும் நான்கு உறுப்பினர்கள் சேர்க்கப்பட்டனர்.

புதிய அரசியலமைப்பிற்கான அடிப்படைக் கட்டமைப்பினையும், அரசியல் நிர்ணயசபை பின்பற்ற வேண்டிய வழிமுறைகளைப் பற்றியும் ஓரளவுக்கு விரிவாகவே கேபினட் தூதுக்குழு பரிந்துரைத்திருந்தது.

அரசியல் நிர்ணயசபைக்கு பிரிட்டிஷ் இந்திய மாகாணங்களில் இருந்து

நிரப்பப்பட வேண்டிய 296 இடங்களுக்கும் 1946 ஜூலை-ஆகஸ்டில் தேர்தல்கள் முடிவடைந்தன. பொது இடங்களில் ஒன்பது இடங்கள் தவிர அனைத்திலும் காங்கிரஸ் வெற்றி பெற்று மொத்தமாக 208 இடங்களைக் கைப்பற்றியது. முஸ்லீம்களுக்காக ஒதுக்கப்பட்ட இடங்களில் ஐந்து இடங்கள் தவிர அனைத்து இடங்களிலும் வெற்றிபெற்ற முஸ்லீம்லீகிற்கு 73 இடங்கள் கிடைத்தன.

அரசியல் நிர்ணயசபைக்குக் கட்சிவாரியாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள் விவரம் வருமாறு:

| | |
|---|---|
| காங்கிரஸ் | 208 |
| முஸ்லீம்லீக் | 73 |
| யூனியனிஸ்ட் | 1 |
| யூனியனிஸ்ட் முஸ்லீம் | 1 |
| யூனியனிஸ்ட் ஷெட்யூல்ட் வகுப்பு | 1 |
| கிரிஷக் பிரஜா | 1 |
| ஷெட்யூல்ட் வகுப்புக் கூட்டமைப்பு | 1 |
| சீக்கியர் (காங்கிரஸ் அல்லாதது) | 1 |
| கம்யூனிஸ்ட் | 1 |
| சுயேச்சைகள் | 8 |
| மொத்தம் | 296 |

1947 ஆகஸ்ட் 15-ல் நாடு துண்டாடப்பட்டு சுதந்திரம அடைந்ததை அடுத்து இந்திய அரசியல நிர்ணயசபை, கேபினட் தூதுக்குழு திட்டத்தின் பிடியிலிருந்து விடுதலை பெற்றது எனலாம். பிரிட்டிஷ நாடாளுமன்ற அதிகாரம் முடிவுக்கு வந்த பின்னர் இந்தியாவில் அதிகாரம் பெற்ற, முற்றிலும் இறையாண்மை பெற்ற அமைப்பாக அரசியல் நிர்ணயசபை உருவெடுத்தது. மேலும் 'ஜூன் 3 திட்டத்தை' ஏற்று இந்திய டொமினியனில் இருந்த முஸ்லீம் லீக் கட்சி உறுப்பினர்களும் அரசியல் நிர்ணயசபையில் இடங்களைப் பெற்றனர். சில சுதேசி சமஸ்தானங்களின் பிரதிநிதிகளும் ஏற்கெனவே - 1947 ஏப்ரல் 28-லேயே-அரசியல் நிர்ணயசபையில் சேர்ந் திருந்தனர்; எஞ்சியிருந்த சமஸ்தானங்களின் பிரதிநிதிகளும் விரைவிலேயே சேரவிருந்தனர்.

இவ்வாறாக, இந்திய மாகாணங்கள்-சமஸ்தானங்களின் முழுமையான பிரதிநிதித்துவம் பெற்ற அமைப்பாகவும், எவ்விதமான அன்னிய ஆதிக்கமும் இல்லாத சுதந்திரமான அமைப்பாகவும், அரசியல் நிர்ணயசபை உருவெடுத்தது. இந்தியாவிற்காக பிரிட்டிஷ் நாடாளுமன்றம் இயற்றியிருந்த இந்திய சுதந்திர சட்டம் உட்பட எந்த சட்டத்தையும் ரத்து செய்யவோ, திருத்தவோ அரசியல் நிர்ணயசபை அதிகாரம் பெற்றது.

1946 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் ஒன்பதாம் தேதி, திங்கள் கிழமை முற்பகல் பதினொரு மணிக்கு அரசியல் நிர்ணயசபை முறையாகக் கூடியது.

சில நாட்களுக்குப் பின்னர் 1946 டிசம்பர் 13ஆம் தேதியன்று, வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த 'நோக்கங்கள் பற்றிய தீர்மானம்' (Objectives Resolution) நேருவால் முன்மொழியப்பட்டது. நயமான சொற்களைக் கொண்டு எழுதப்பட்ட அந்த வரைவு, இறையாண்மை மக்களாட்சிக்

குடியரசாக அமையவிருக்கும் இந்தியாவின் ஜாதகம் போல இருந்தது. கூட்டரசு அரசியலமைப்பாகவும், எஞ்சிய அதிகாரங்கள் சுயாட்சி பெற்ற மாகாணங்களிடம் இருப்பதாகவும், இறையாண்மை மக்களையே சார்ந்ததாகவும் அத்தீர்மானம் இயம்பிற்று. 'சமூக-பொருளாதார-அரசியல் நீதி, சமவாய்ப்பு, சம அந்தஸ்து, சட்டத்தின் முன் சமத்துவம்; எண்ணம், கருத்து வெளிப்பாடு, நம்பிக்கை, வழிபாடு, தொழில், கூட்டுச் சேருதல், செயல்பாடு ஆகியவற்றில் அனைத்து மக்களுக்கும் சுதந்திரம்; சிறுபான்மையினர், பின்தங்கியோர், பழங்குடி மக்கள், ஒடுக்கப்பட்ட மக்கள் ஆகியோருக்குப் போதிய பாதுகாப்பு' ஆகியவை அத்தீர்மானத்தில் இடம் பெற்ற சிறப்புக் கூறுகளாகும். இவ்வாறாக அத்தீர்மானம், அரசியலமைப்பை உருவாக்கும் போது வழிகாட்டி நெறியாக மேற்கொள்ளப்பட வேண்டிய கோட்பாடுகளை அரசியல் நிர்ணய சபைக்கு அறிவித்தது. அத்தீர்மானம் 1947 ஜனவரி 22ஆம் தேதி ஏற்றுக் கொள்ளப்பட்டது.

## அரசியல் சட்ட உருவாக்கம்

அரசியல் சட்ட உருவாக்கத்தில் தோன்றிய பல்வேறு சிக்கல்களைப பற்றி ஆராய அரசியல் நிர்ணயசபை பல குழுக்களை நியமித்தது. ஒன்றிய அரசியலமைப்புக் குழு, ஒன்றிய அதிகாரக்குழு, அடிப்படை உரிமைகள் குழு, சிறுபான்மையினர் குழு போன்ற குழுக்கள் அமைக்கப்பட்டன. இவற்றில் சில குழுக்களுக்கு நேரு அல்லது படேல் தலைவராயிருந்தனர்; அரசியல் நிர்ணயசபையின் தலைவர், அடிப்படைக் கட்டமைப்பை உருவாக்கும் பணியை இவ்விருவருக்கும் அளித்திருந்தார். குழுக்கள் யாவும் கடுமையாகச் செயல்பட்டு பயனுள்ள பல அறிக்கைகளைத் தயாரித்தன. அரசியல் நிர்ணயசபையின் மூன்றாவது கூட்டத்தில் இருந்து ஆறாவது கூட்டம் வரை, அடிப்படை உரிமைகள் குழு, ஒனறிய அரசியலமைப்புக் குழு, ஒன்றிய அதிகாரங்கள் குழு, மாகாண அரசியலமைப்புக் குழு, சிறுபான்மையினர் குழு, ஷெட்யூல்ட் பகுதிகள் மற்றும் ஷெட்யூல்ட் பழங்குடியினர் குழு ஆகியவற்றின் அறிக்கைகள் பரிசீலிக்கப்பட்டன. மற்ற குழுக்களின் பரிந்துரைகளை வரைவுக் குழு பின்னர் பரிசீலனை செய்தது.

அரசியல் நிர்ணயசபையின் ஆலோசனைப் பிரிவு, 1947 அக்டோபரில் இந்திய அரசியல் சட்டத்தின் முதலாவது வரைவைத் தயாரித்தது. இந்த வரைவைத் தயாரிப்பதற்கு முன்னர், அரசியல் நிர்ணய சபை உறுப்பினர்கள் அனைவருக்கும் பெருந்தொகுதிகளான பின்னணி விவரங்கள் தரப்பட்டன. 'அரசியலமைப்பு முன்னுதாரணங்கள்' என்ற தலைப்பில் மூன்று வரிசைகளில் தரப்பட்ட அந்தப் பின்னணி விவரங்களில் சுமார் அறுபது நாடுகளின் அரசியல் சட்டங்களின் சிறப்புக் கூறுகள் தொகுத்துத் தரப்பட்டிருந்தன. டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் தலைமையில் அரசியல் சட்ட வரைவுக்குழு ஒன்று 1947 ஆகஸ்ட் 29ஆம் தேதி நியமிக்கப்பட்டது. அரசியல் நிர்ணய சபையில் மேற்கொள்ளப்பட்ட முடிவுக்கு ஏற்ப சபையின் அரசியலமைப்பியல் ஆலோசகர் தயாரித்த வரைவைக் கூர்ந்தாய்வு செய்யுமாறு வரைவு குழு கேட்டுக் கொள்ளப்பட்டது.

வரைவு இந்திய அரசியல் சட்டம், அரசியல் நிர்ணய சபை

தலைவரிடம் 1948 பிப்ரவரி 21ஆம் நாளன்று சமர்ப்பிக்கப்பட்டது. வரைவு அரசியல் சட்டத்தை திருத்த வேண்டும் என்று பெரும் எண்ணிக்கை யிலான விமர்சனங்களும், ஆலோசனைகளும் வந்து சேர்ந்தன. அவற்றைப் பரிசீலிப்பதற்கான சிறப்புக் குழு ஒன்று நியமிக்கப்பட்டு, அவை மீதான பரிந்துரைகளை வரைவுக் குழுவிடம் அளிக்குமாறு கேட்டுக்கொள்ளப் பட்டது. சிறப்புக்குழு கூறிய ஆலோசனைகளை வரைவுக் குழு மீண்டும் பரிசீலித்து அவற்றில் சிலவற்றை அரசியலமைப்பில் சேர்த்துக்கொள்ள முடிவெடுத்தது. அவ்வாறு சேர்க்கப்பட்ட திருத்தங்களைப் பற்றிய குறிப்புகள் தருவதற்காக வரைவு மீண்டும் அச்சிடப்பட்டு, அதனை அரசியல் நிர்ணயசபையின் தலைவரிடம் 1948 அக்டோபர் 26ஆம் தேதி சமர்ப்பித்தனர்.

1948ஆம் ஆண்டு நவம்பர் 4ஆம் தேதியன்று வரைவு அரசியல் சட்டத்தை அரசியல் நிர்ணயசபையின் பரிசீலனைக்காக அறிமுகப்படுத்திப் பேசிய டாக்டர் அம்பேத்கர், வரைவு பற்றிய சில பொதுவான விமர்சனங் களுக்குப் பதிலளித்தார். அதிலும் குறிப்பாக, அந்த வரைவில் எதனுடைய தழுவலும் இல்லாமல் புதிதாகச் சேர்க்கப்பட்ட பகுதிகள் மிகச் சொற்பமானவையே என்ற விமர்சனத்திற்கு விடையளிக்கும்போது அவர் சொன்னார்:

> "உலக வரலாற்றில், உருவாக்கப்பட்ட ஓர் அரசியலமைப்பில் புதிய கருத்து ஏதேனும் இருக்கிறதா என்று எவரேனும் வினவலாம் எழுதப்பட்ட ஓர் அரசியலமைப்பு முதன்முதலாக உருவாகி நூறாண்டுகளுக்கும் மேலாகிவிட்டது. பெரும்பாலான நாடுகளும் அதைப் பின்பற்றி தமது அரசியலமைப்பை எழுதி வைத்துள்ளன. ஓர் அரசியலமைப்பின் நோக்கம் எதுவாக இருக்க வேண்டும் என்பதை வெகுகாலத்திற்கு முன்னரே திட்டவட்டமாகக் கூறிவிட்டனர். அதுபோலவே ஓர் அரசியலமைப்பின் அடிப்படைகள்எவ்வாறு இருக்க வேண்டும் என்பதையும் உலகநாடுகள் அனைத்துமே ஏற்றுக் கொண்டு விட்டன. இந்தப் பின்னணியில் பார்த்தால், எல்லா அரசியல் சட்டங்களின் பிரதானக் கூறுகள் யாவும் ஒரே மாதிரியாகவே தோற்றமளிக்கும். இது போன்று, பின்னாளில் உருவாக்கப்படுகின்ற அரசியலமைப்பினில் ஏதேனும் புதிய விஷயங்கள் இருக்குமானால், அவை மற்றவர்கள் செய்த தவறுகளை நீக்குவதாகவும், நாட்டின் தேவைகளை நிறைவு செய்வதாகவும்தான் இருக்க முடியும். மற்ற நாடுகளின் அரசியலமைப்புகளை அப்படியே கண்மூடித்தனமாகப் பின்பற்றி இது வரையப்பட்டுள்ளது என்று எவரேனும் சொல்வார் களானால், இந்த வரைவை அவர்கள் சரிவரப் படிக்கவில்லை என்று நான் உறுதிபடக் கூறுவேன்.
>
> இந்திய அரசாங்கச் சட்டம் 1935-ன் கணிசமான பகுதிகளை வரைவு அரசியல் சட்டம் அப்படியே எடுத்தாண்டுள்ளது என்ற குற்றச்சாட்டைப் பொறுத்தவரையில், நான் மன்னிப்பு ஏதும் கோர வில்லை. அவற்றை அப்படியே எடுத்தாண்டதில் வெட்கப்படுவதற்கு ஏதுமில்லை. அது ஒன்றும் எழுத்துத் திருட்டாகாது. எந்த ஓர் அரசிய லமைப்பின் அடிப்படைக் கருத்துக்களிலும் எவருக்குமே காப்புரிமை இல்லை."

வரைவு அரசியல் சட்டத்தின் ஒவ்வொரு பிரிவையும் தனித்தனியாக அலசி ஆராயும் பணி 1948 நவம்பர் 15லிருந்து 1949 அக்டோபர் 17வரை நடைபெற்றது. அரசியல் சட்ட முகப்புரை இறுதியாக ஏற்கப்பட்டது. அதற்குப் பின்னர் தோன்றிய திருத்தங்களையும், தேவையான பிற திருத்தங் களையும் சேர்த்து, வரைவுக்குழு இறுதி வரைவினைத் தயாரித்து, அரசியல் நிர்ணயசபையின் முன் வைத்தது.

வரைவு அரசியல் சட்டத்தின் இரண்டாவது வாசிப்பு 1949 நவம்பர் 16ஆம் தேதி முடிவடைந்தது. அடுத்த நாளே, "அரசியல் நிர்ணயசபையால் இறுதியாக்கப்பட்ட இந்த அரசியல் சட்டத்தை ஏற்றுக்கொள்ளலாம்" என்று டாக்டர் அம்பேத்கர் முன்மொழிந்த தீர்மானத்துடன் மூன்றாவது வாசிப்பு மேற்கொள்ளப்பட்டது. 1949 நவம்பர் 26ஆம் தேதி அத்தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. இவ்வாறாக, அன்றையதினத்தில், அரசியல் நிர்ணய சபை வாயிலாக இந்திய இறையாண்மை மக்களாட்சிக் குடியரசின் அரசிய லமைப்பை இந்திய மக்கள் இயற்றி ஏற்றுக் கொண்டு தமக்குத்தாமே அளித்துக் கொண்டனர். அரசியலமைப்பை உருவாக்கும் இமாலயப் பணியை மூன்று ஆண்டுகளுக்குள்ளாகவே அரசியல் நிர்ணயசபை வெற்றிகரமாக நிறைவேற்றி விட்டது.

அரசியலமைப்பை ஏற்றுக் கொள்வதுடன் பணி முடிவடைந்து விடுவதில்லை. வரைவுக்குழுவின் தலைவர் டாக்டர் அம்பேத்கரும், அரசியல் நிர்ணயசபையின் தலைவர் டாக்டர் இராஜேந்திர பிரசாத்தும் நவம்பர் 25, 26ஆம் தேதிகளில் பேசும்போது அறிவுப்பூர்வமான எச்சரிக்கை விடுத்தனர். டாக்டர் அம்பேத்கர் குறிப்பிட்டார்:

> "ஓர் அரசியலமைப்பு எவ்வளவு உயர்வானதாக இருந்தபோதிலும் அதைச் செயல்படுத்தும் மக்கள் மோசமானவர்களானால், அரசிய லமைப்பும் மோசமாகிவிடும என்று நான் நம்புகிறேன். அது போலவே, மிகவும் மோசமான அரசியலமைப்பைக்கூட அதனைச் செயல் படுத்துபவர்கள் மிக நல்லவர்களாக இருக்கும் பட்சத்தில் அரசிய லமைப்பும் நல்லதாகிவிடும். எனவே அரசியலமைப்பின் இயல்பைப் பொறுத்தே அதன் செயல்பாடு முற்றிலுமாக அமைவதில்லை. நாட்டின் அங்கங்களாகிய சட்டமியற்றும் அவை, நிர்வாகம், நீதித்துறை போன்ற வற்றை மட்டுமே அரசியலமைப்பு வழங்க முடியும். தமது விருப்பங் களையும், அரசியலையும் நடத்திச் செல்வதற்கு மக்கள் உருவாக்குகின்ற கட்சிகளும் அந்த மக்களுமே நாட்டின் அங்கங்கள் செயல்படுவதற்கான காரணிகளாகும். இந்திய மக்களும், அவர்கள் உருவாக்குகின்ற கட்சிகளும் எவ்வாறு அமையுமென்று யாரால் சொல்லமுடியும்?
>
> – சாதி, மத பேதங்கள் என்ற நம்முடைய பழைய எதிரிகளுடன், பலதிறப்பட்ட எதிரெதிர் நோக்கமுடைய அரசியல் கட்சிகள் பலவற்றையும் நாம் சந்திக்க வேண்டியுள்ளது. இந்தியர்கள் தமது நாட்டை மதத்திற்கு அப்பாற்பட்டதாகக் கருதுவார்களா, அல்லது நாட்டிற்கு மேலானதாக மதத்தைப் போற்றுவார்களா, என்று எனக்குத் தெரியவில்லை. ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம். நாட்டிற்கும் மேலானதாக மதத்தை அரசியல் கட்சிகள் போற்றுமேயானால் நமது சுதந்திரம் இரண்டாவது முறையாக இன்னலுக்கு ஆட்பட நேரிடும்; அதுவே கடைசியாகி அதிலிருந்து மீளவே முடியாத நிலை உருவாகி

விடும். அப்படிப்பட்ட நிலை உருவாகாமல் நாம் அனைவரும் ஒ பட்டுக் காக்கவேண்டும். கடைசிச் சொட்டு ரத்தம் இருக்கும் வ நமது சுதந்திரத்தைக் காப்போம் என்று நாம் உறுதி மேற்கொ வேண்டும்."

நிறைவுரை ஆற்றிய டாக்டர் இராஜேந்திரபிரசாத், மொத்தத்தி நல்லதோர் அரசியலமைப்பை அவர்களால் உருவாக்க முடிந்தது என்று நாட்டிற்கு நல்லவகையில் அது பயன்படும் என்று தான் நம்புவதாகவ குறிப்பிட்டார். அவர் மேலும் குறிப்பிட்டார்:

"மக்களால் தேர்ந்தெடுக்கப்படுகின்றவர்கள் திறமையானவர்களாகவ ஒழுக்கமுள்ளவர்களாகவும், நாணயமானவர்களாகவும் இருப்பார்கள யானால் குறைபாடுள்ள அரசியலமைப்பிலும்கூட நன்மை செய்ய முடியும். தேர்ந்தெடுக்கப்படுபவர்களிடையே இப்பண்பு இல்லை என்றால் அரசியலமைப்பால் நாட்டுக்கு எதுவும் செ முடியாது. ஏனெனில் அரசியலமைப்பு எனபது உயிரில்லாத எந்திரம் போன்றது. அதனை மனிதர்கள் இயக்கிக் கட்டுப்படுத்து போதுதான் அதற்கு உயிர் வருகிறது எனவே, நாட்டு நலனில் மட்டு அககறையுள்ள நேர்மையான மனிதர்கள்தான் இப்போது இந்தியாவ தேவை! இன்றைய வாழ்க்கை முறையில் உள்ள பல்வே காரணிகளால் ஒருவிதமான பிளவு மனப்பான்மை தோன்றியுள்ள வகுப்பு வேறுபாடு, சாதிவேறுபாடு, மொழிவேறுபாடு, மாகா வேறுபாடு போன்றவை நம்மிடையே உள்ளன. இந்த வேறுபா களினால் எழும் எண்ணங்களையும், முடிவுகளையும் மீறி, சிற பிரிவினரின் நலனுக்காகவும் சிறு பகுதிகளின் நலனுக்காகவும் நாட்டி ஒட்டுமொத்த நலனைப் பலி கொடுத்துவிடாத, தெளிந்த நோக்கு வலுவான எண்ணமும் கொண்டவர்களே நமக்குத் தேவை. அத்தகை பண்பாளர்கள் பெருமளவில் இம்மண்ணிலே தோன்றுவார்களென நாம் இப்போதைக்கு நம்பிக்கைதான கொள்ள முடியும்."

கடைசியாக, அரசியல் நிர்ணயசபையின் இறுதி நாளான 19 ஜனவரி 24ஆம் தேதி உறுப்பினர்கள் அனைவரும் அரசியல் சட்டத்தி கையெழுத்திட்டனர்.

நமது அரசியலமைப்பை உருவாக்கியவர்கள் அனைவருமே புகழ்பெ சான்றோர்களும் அறிஞர்களும் ஆவர். அவர்களில் நீதித்துறை வல்லுநர்களு தேசத்தலைவர்களும், சுதந்திரப் போராட்டவீரர்களும் இடம்பெற்றிருந்தன அந்த நேரத்தில் இந்தியாவில் இருந்த வயதுற்றோர் அனைவரும் நேரிடையா வாக்களித்து ஓர் அரசியல் நிர்ணயசபையை உருவாக்கியிருந்தாலும், இதைவி மேலான அல்லது பிரதிநிதித்துவம் மிக்க பயன்கள் உருவாகியிருக்கும என்பதைக் கற்பனை செய்து பார்ப்பதே சிரமமாகும்.

சுதந்திரத்திற்குப் பிறகு நாம் தொடர்ந்து செயல்படுத்திய அமைப களும், நமது அரசியலமைப்பில் சேர்க்கப்பட்டிருந்த அமைப்புகளும் இந்தி மண்ணிலேயே தோன்றி வளர்ந்தவைதான். குறைகளும் தளைகளும் இருந் போதிலும், நம் மக்கள் அறிந்திருந்த—அவர்களுக்குப் பரிச்சயமாகிவிட்ட அவர்கள் செயல்படுத்திய—அந்தப் பழைய அமைப்புகளின் அஸ்திவாரத்தி

மீதே புதிய கட்டுமானங்களை நமது அரசியலமைப்பினை வகுத்தவர்கள் உருவாக்கினார்கள்.

நமது அரசியலமைப்பு, பிரிட்டிஷ் ஆட்சியை நிராகரித்தபோதிலும், பிரிட்டிஷ் ஆட்சியின்போது உருவான அமைப்புகளை நிராகரிக்கவில்லை. அந்த வகையில், காலனியாதிக்க ஆட்சியில் இருந்து நமது அரசியலமைப்பு முற்றிலுமாக விலகிச் சென்றுவிடவில்லை.

அரசியலமைப்பை உருவாக்குதலும், நிறுவனங்களைக் கட்டமைத்தலும் உயிரோட்டமுள்ள, தொடர்ந்து வளர்கின்ற, இயக்கத்துடிப்புள்ள ஒரு பணியாதலால், 1949 நவம்பர் 26 ஆம் நாள் அரசியல் சட்டத்தை உருவாக்கி, இயற்றி, ஏற்றுக் கொண்டதுடன் அப்பணி முடிவுக்கு வந்துவிடவில்லை. 1950 ஜனவரி 26ஆம் தேதி முதற்கொண்டு இந்திய அரசியலமைப்பு நடைமுறைக்கு வந்த பின்னரும், அதன் செயல்பாட்டின் மூலமும், நீதிமன்ற விளக்கங்களினாலும, அரசியலமைப்புத் திருத்தச் சட்டங்களினாலும் அப்பணி தொடர்ந்து வருகிறது. அவ்வப்போது அரசியலமைப்பைச் செயல்படுத்துகின்றவர்களாலும். செயல்படுத்துகின்ற முறையினாலும் அரசியலமைப்பு வளர்ச்சியடைந்து புதிய புதிய அர்த்தங்களைத் தந்து வருகிறது. அது நல்லதற்கா கெட்டதறகா என்று நாம் சொல்வதற்கில்லை. வரலாறு தொடர்கிறது.

அரசியலமைப்பை உருவாக்கியதைத் தவிர, சில சட்டங்களை இயற்றியது, தேசியக்கொடி, தேசியகீதம் ஆகியவற்றை அறிவித்தது, காமன் வெல்த் அமைப்பில் இநதியா உறுப்பினரானதற்கு ஏற்பளிப்பு வழங்கியது, குடியரசின் முதலாவது தலைவரைத் தேர்ந்தெடுத்தது போன்ற பல முக்கியமான பணிகளையும் அரசியல் நிர்ணயசபை செய்தது.

# 4

# இந்திய அரசியலமைப்பின் சிறப்புக் கூறுகள்

இந்திய அரசியலமைப்பு பல்வேறு வகைகளில் தனிச் சிறப்பியல்பானது இது உலக நாடுகளின் மற்ற அரசியலமைப்புகளில் இருந்து வேறுபட்டதாக பல்வேறு சிறப்புக் கூறுகளைக் கொண்டது.

## அரசியல் சட்டத்தின் உருவளவு

வெறும் வார்த்தைகளினால் சொல்வதானால் எந்த நாட்டின் அரசியல் சட்டத்தையும்விட நம்முடையது மிகவும் நீளமானது. சாதாரண சட்ட மியற்றும் விவகாரம் ஆயினும், அல்லது நிர்வாகச் செயல் ஆயினும், எல்லா விஷயங்களையும் உள்ளடக்கிய விரிவான ஆவணமாக இது திகழுகிறது ஏனெனில், அரசியலமைப்புக்கு முன்மாதிரியாக அமைந்த இந்திய அரசாங்கச் சட்டம் 1935, அடிப்படையில் ஒரு சட்டம என்பதும் முதல்நிலை வரைவும் அதன் பெரும்பான்மையான பகுதிகளும் அந்த சட்டத்தைப் பின்பற்றியே தயாரிக்கப்பட்டன என்பதுமே காரணமாகும் மேலும், சில விஷயங்கள் ஐயத்திற்கிடமானவையாகவும், சிரமமானவை யாகவும், முரண்பாடுகள் கொண்டவையாகவும் மாறி, பின்னாளில் அவற்றுக்கென சட்டங்கள் இயற்ற வேண்டிய நிலை உருவாக வேண்டாம என அரசியலமைப்பை உருவாக்கியவர்கள் விரும்பினர். அமெரிக்க அரசிய லமைப்பில் உள்ளது போன்று, கூட்டரசுக்கும், அதன் அலகுகளான மாகாணங்களுக்கும் தனித்தனியாக அரசியலமைப்பு உடையதாக இல்லாமல் இந்திய அரசியலமைப்பில் ஒன்றிய அரசியலமைப்பு மட்டுமின்றி மாநிலங்களின் அரசியலமைப்பும் சேர்க்கப்பட்டுள்ளது. இந்தியாவின் நிலப்பரப்பளவு, வேறுபாடுகள், சிக்கல்கள் போன்றவற்றின் காரணமாக நாட்டின் சில பகுதிகளுக்கும், சில பிரிவு மக்களுக்கும் விசேஷமான மற்றும் தற்காலிகமான பல்வேறு வகையுரைகள் சேர்க்கப்பட்டதாலும் இந்திய அரசியல் சட்டம் அளவில் பெரியதாகிவிட்டது. நீதிமன்றங்களின் மூலம் நிலைநாட்டப்படக்கூடிய அடிப்படை உரிமைகள் பற்றிய விரிவான பட்டியல் நமது அரசியல் சட்டத்தில் சேர்க்கப்பட்டுள்ளது. அத்துடன், அமெரிக்காவில் இருப்பது போல் · உரிமைகளை நிலைநாட்டுவதற்கான வரம்புகளை நீதிமன்றத் தீர்ப்புகளின் மூலம் பெறுவது போல்-அல்லாமல்,

இந்திய அரசியலமைப்பில் அடிப்படை உரிமைகளைச் செயலுறுத்து வதற்கான வரம்புகளும் வரையறுத்துச் சேர்க்கப்பட்டுள்ளன. இவை தவிர, அரசின் நெறிமுறைக் கோட்பாடுகள் பற்றிய விரிவான பகுதியும், குடி மக்களின் அடிப்படைக் கடமைகளும் நமது அரசியல் சட்டத்தில் இடம் பெற்றுள்ளன. இவற்றை நீதிமன்றங்களின் மூலம் நிலைநாட்ட முடியாது என்றாலும் நெறிமுறைக் கோட்பாடுகள் அரசாங்கத்திற்கும், அடிப்படைக் கடமைகள் குடிமக்களுக்கும் வழிகாட்டி நெறிகளாக விளங்குகின்றன.

## அரசியலமைப்பின் வகைகள்

***எழுதப்பட்டது அல்லது எழுதப்படாதது:*** அமெரிக்க அரசியலமைப்பைப் போல் எழுதப்பட்டவையாகவும், மரபுகளை மட்டும் பின்பற்றும் பிரிட்டிஷ் அரசியலமைப்பைப் போன்று எழுதப்படாமலும், அரசியலமைப்புகள் உள்ளன. நமது அரசியலமைப்பு எழுதப்பட்டது என்றாலும், அரசிய லமைப்பின் வகையுரைகளுக்கு உட்பட்டு மரபுகளும் முக்கிய இடம் வகிக்கின்றன.

***நெகிழ்ச்சியற்றது அல்லது நெகிழ்ச்சியுடையது:*** அரசியல சட்டத்தை திருத்தும் முறை எளிதாகவோ சிரமமாகவோ இருப்பதைப் பொறுத்து அவற்றை நெகிழ்ச்சியுடையவை என்றோ நெகிழ்ச்சியற்றவை என்றோ கூறுவர். பொதுவாக கூட்டரசு அரசியல சட்டங்களைத் திருத்தும்முறை சிரமமானதாகையால் அவை நெகிழ்ச்சியற்ற அரசியலமைப்புகள் என வகைப்படுத்தப்படும். நமது அரசியலமைப்பினை நெகிழ்ச்சியற்ற கூறுகளும் நெகிழ்ச்சியுடைய கூறுகளும் சேர்ந்த கலவை அரசியலமைப்பு எனலாம். ஏனெனில் நமது அரசியலமைப்பின் சில பிரிவுகள்—உதாரணமாக பிரிவுகள் 2, 3, 4, 169 போன்றவற்றைச் சாதாரண சட்டங்களைப் போன்று நாடாளு மன்ற அவைகளின் பெரும்பான்மை வாக்குகளுடன் திருத்தி விடலாம். மற்ற வகையுரைகளை 368 ஆவது பிரிவின்படி நாடாளுமன்றத்தின் இரண்டு அவைகளிலும், வந்திருந்து வாக்களிக்கும் உறுப்பினர்களின் எண்ணிக் கையில் மூன்றில் இரு பங்குக்குக் குறையாத பெரும்பான்மை ஆதரவுடன் திருத்த முடியும். மிகச் சில பிரிவுகளைப் பொறுத்தவரையில் நாடாளு மன்றத்தின் இரண்டு அவைகளில் மூன்றில் இரண்டு பங்கு பெரும்பான்மை உறுப்பினர்கள் வாக்களிப்பதுடன் மட்டுமின்றி, நாட்டிலுள்ள பாதிக்குக் குறையாத மாநிலங்களின் ஏற்பளிப்புப் பெற்றே திருத்தம் செய்ய முடியும். கடந்த 43 ஆண்டுகளில் 74 முறை நமது அரசியலமைப்பு திருத்தப்பட்டிருப் பதிலிருந்தே இது நெகிழ்ச்சியற்றது என்ற கூற்று பொருந்தாததாகி விடுகின்றது.

***சமஷ்டி அல்லது ஓரடுக்கு முறை:*** அரசியலமைப்புகள் சமஷ்டி என்றும் ஓரடுக்கு முறை என்றும் பிரிக்கப்படுவதுண்டு. முன்னதற்கு அமெரிக்க அரசியலமைப்பும், பின்னதற்கு பிரிட்டிஷ் அரசியலமைப்பும் எடுத்துக்காட்டாகும். ஓரடுக்குமுறை அரசியலமைப்பில் அதிகாரங்கள் அனைத்தும் மைய அரசிடம் குவிந்திருக்கும். மாகாணங்கள் அல்லது அலகுகள் மைய அரசுக்குக் கீழ்ப்படிந்தவையாகவும், மைய அரசிடமிருந்து அதிகாரத்தைப் பெற்று அதன் பிரதிநிதிகளாகவும் செயல்படும். சமஷ்டி முறையில் பொதுவாக நெகிழ்ச்சியற்ற, எழுதப்பட்ட அரசியலமைப்பு

இருக்கும். அங்கு உச்ச நிலையில் இருக்கும் அரசியலமைப்பே சமஷ்டி அரசுக்கும் அதன் மாகாண அரசுகளுக்கும் அதிகாரங்களைப் பகிர்ந்தளித்து, இரண்டு அரசுகளும் தத்தமது உரிமைக்குட்பட்ட விஷயங்களில் சுதந்திரமாக அதிகாரங்களைச் செயல்படுத்த வகை செய்யும். சொல்லப்போனால் மாகாண அரசுகள் அனைத்தும் உடன்பட்டு சமஷ்டி அரசிடம் மனமொப்பிச் சமர்ப்பித்த அதிகாரங்களை மட்டுமே பண்டைய சமஷ்டி அரசுகள் பெற்றிருந்தன. மேலும் சமஷ்டி அரசுக்கும், மாகாண அரசுகளுக்கும் இடையே எழும் தகராறுகளைத் தீர்த்து வைப்பதற்காக சுயேச்சையான உச்சநீதிமன்றம் ஒன்றும் அந்த அமைப்பில் இடம்பெற்றிருக்கும்.

இந்திய அரசியலமைப்பினை, ஓரளவுக்கு சமஷ்டியானது என்றும், வலுவான ஓரடுக்கு அல்லது மைய அரசு சார்புடைய சமஷ்டி என்றும், அமைப்பில் சமஷ்டியாகவும உணர்வில ஓரடுக்காகவும இருப்பது என்றும், சாதாரண நேரத்தில் சமஷ்டியாகவும் அவசர நிலைகளின்போது முற்றிலுமாக ஓரடுக்காகவும் மாறக்கூடிய இயல்புடையது எனறும். பலவாறாக விமர்சிபபர். ஆனால் உண்மை எனனவெனறால, சமஷ்டி அமைப்பு அல்லது ஓரடுக்கு அமைப்பு எதிலுமே திட்டவட்டமாக நமது அரசியலமைப்பைப பொருத்திப் பார்க்க முடியாது. இரண்டு விதமான அமைபபுகளின் கூறுகளையும் கொண்டதாக நமது அரசியலமைபபு திகழ்கிறது இதனை ஓரடுக்கு அரசியலமைப்பு எனச் சொல்ல முடியாது. ஏனெனில் ஒன்றியத்துக்கும் மாநிலங்களுக்குமிடையே நிர்வாக அதிகாரங்களையும சட்டமியற்றும் அதிகாரங்களையும அது பகிர்ந்தளிக்கிறது. மேலும். மாநிலங்களின் அதிகாரங்களைப் பாதிக்கின்ற விஷயங்கள் அலலது ஒனறிய-மாநில உறவுகள் குறித்த பிரிவுகளை மாநிலங்களின் ஏற்பளிப்பு இல்லாமல் திருத்த முடியாது. நமது அரசியலமைப்பை சமஷ்டி அமைப்பு என்றும் கருத முடியாது. ஏனெனில், ஒன்றிய அரசுகோ, மாநில அரசுகளுக்கோ பகிர்ந்தளிக்கப்படாத எஞ்சிய அதிகாரங்கள அனைத்தும் ஒனறிய அரசிடமே குவிந்துள்ளன. டாக்டர் அம்பேத்கர் கூறியதைப் போல நெகிழ்ச்சியற்ற தன்மையும், கண்மூடித்தனமாக சட்டத்தைப பினபற்றும் போக்கும் சமஷ்டி அமைப்பின் இருபெரும் குறைபாடுகளாகும். ஆனால் இந்திய முறையோ ஒற்றைக் குடியுரிமையுடன் இருவிதமான அரசியலை உருவாக்கியிருக்கிறது. தேவைக்கும், சமயத்திற்கும், சூழ்நிலைகளுக்கும் ஏற்ப அது சமஷ்டியாகவும், ஓரடுக்கு முறையாகவும் திகழும். அரசியலமைப்பின் 249-ஆவது பிரிவின்படி நாடாளுமன்றம் மாநிலப்பட்டியலில் உள்ள விஷயங்களைக் குறித்து சட்டம் இயற்றலாம். 356 மற்றும் 357ஆவது பிரிவுகளின்படி எந்த ஒரு மாநிலத்திலும் அரசியலமைப்பு இயந்திரம் சரிவர செயல்படவில்லை என்ற காரணம் காட்டி அதன் நிர்வாக அதிகாரங்களையும், சட்டமியற்றும் அதிகாரங்களையும் ஒன்றிய அரசே எடுத்துக் கொள்ளலாம். 352 மற்றும் 354ஆவது பிரிவுகளின்படி அவசரநிலைப் பிரகடனத்தின்போது அரசியலமைப்பையே ஓரடுக்கு அமைப்பாக மாற்றிவிட முடிவதுடன், மைய அரசின் நிர்வாகம் மற்றும் சட்டமியற்றும் அதிகாரங்களை மாநிலப்பட்டியலில் உள்ள விஷயங்களுக்கும் நீட்டிக்கலாம். நமது அரசியலமைப்பின் 2, 3, 4 பிரிவுகளின் படி, சாதாரண பெரும்பான்மை வாக்குகளுடன் ஒரு சட்டத்தை

நாடாளுமன்றத்தில் இயற்றி, புதிய மாநிலங்களை உருவாக்கலாம்; ஏற்கெனவே உள்ள மாநிலங்களின் எல்லைகளையும் பெயர்களையும் மாற்றியமைக்கலாம்.

இதுபோன்ற சமஷ்டி-ஒரடுக்குக் கலவையாக நமது அரசியலமைப்பு தனிச் சிறப்புடையதாகத் திகழ்வதற்கான காரணங்களை நமது அரசியலமைப்பியல் வரலாற்றில் காணலாம். இந்தியாவில் நிலவிய பல்வேறு சமயங்கள், மொழிகள், பண்பாடுகள் போன்றவற்றின் காரணமாக அரசியல் சட்டம் அளவில் பெரியதாகிவிட்டது. அரசியல் நிர்ணயசபையில் வரைவு அரசியல் சட்டத்தை ஏற்றுக் கொள்வதற்காக அதனை முன்மொழிந்து பேசிய வரைவுக்குழுவின் தலைவர் டாக்டர் பி.ஆர் அம்பேத்கர், அரசியலமைப்பில் 'மாநிலங்களின் கூட்டரசு', என்ற சொல்லுக்குப் பதிலாக, 'மாநிலங்களின் ஒன்றியம்' என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளதன் முக்கியத்துவத்தைக் கீழ்க்கண்டவாறு விளக்கினார்:

> "இந்தியா ஒரு கூட்டரசு அமைப்பாக இருக்கவேண்டும் என்றாலும் கூட்டரசு அமைப்பில் ஓர் உடன்பாட்டின்படி மாநிலங்கள் சேர்ந்ததன் காரணமாக அத்தகைய அமைப்பு உருவாகவில்லை; மேலும் உடன்பாட்டின்படி கூட்டரசு அமைப்பு உருவாகாததன் காரணமாக எந்த ஒரு மாநிலத்திற்கும் அதிலிருந்து பிரிந்து போகும் உரிமை கிடையாது என்பதைத் தெளிவுபடுத்த வரைவுக்குழு விரும்பியது. கூட்டரசு அமைப்பு ஒரு ஒன்றியமாகும் ஏனெனில் அது அழிக்க முடியாதது. நிர்வாக வசதிக்காக இந்த நாடும் நாட்டு மக்களும் பல்வேறு மாநிலங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தாலும் அதன் மக்கள் அனைவரும் ஒரே ஆதாரத்தில் இருந்து பெறப்பட்ட ஒரே பேரரசின் கீழ் வரும் ஒரே மக்களாவர்."

இந்திய அரசியலமைப்பின் வாசகத்தில் எந்தவொரு இடத்திலும் 'கூட்டரசு முறை' அல்லது 'கூட்டரசு' என்ற சொல் பயன்படுத்தப்படவே இல்லை. இந்திய யூனியனை 'கூட்டரசு முறை', 'ஓரளவுக்கு கூட்டரசு முறை', 'சில வேளைகளில் கூட்டரசாகவும், சில வேளைகளில் ஒற்றையாட்சியாகவும் அமைவது' என்று உச்சநீதிமன்றம் குறிப்பிட்டுள்ளது. (ராஜஸ்தான் அரசு-எதிர்-இந்திய அரசு (Rajasthan Vs Union of India)* AIR 1977 SC 1361; ஒன்றியமும் அதன் ஆட்சிப் பகுதிகளும் என்ற ஆறாவது அத்தியாயத்தையும் காண்க)

## நாடாளுமன்ற ஆட்சிமுறை அல்லது குடியரசுத்தலைவர் ஆட்சிமுறை

இந்தியா ஒரு குடியரசு. அதன் தலைவரான குடியரசுத் தலைவரிடம்தான்

---

இந்திய அரசின் மீது வழக்குத் தொடரும் எவரும் Union of India என்பதையே பயன்படுத்த வேண்டும் என அரசியல் சட்டம் கூறுகிறது. எனவே இந்நூலில் வழக்குகள் தொடர்பான இடங்களில் எளிமை கருதி 'இந்திய அரசு' எனும் சொற்றொடர் பயன்படுத்தப்பட்டுள்ளது.

நிர்வாக அதிகாரங்கள் அனைத்தும் உள்ளன. அவருடைய பெயரால் தான் அந்த அதிகாரங்கள் செயல்படுத்தப்படுகின்றன. குடியரசுத்தலைவரே முப்படைகளின் தலைமைத் தளபதியாவார். எனினும் அமெரிக்கக் குடியரசுத்தலைவரைப் போல் அல்லாது, நமது குடியரசுத்தலைவர் நிர்வாக அமைப்பின் பெயரளவுக்கு மட்டுமே, அதாவது அரசியலமைப்புப்படி மட்டுமே தலைவர். அமைச்சரவை என்ற உண்மையான நிர்வாக அமைப்பின் உதவியுடனும், ஆலோசனையின் பேரிலும்தான் அவர் செயல்படுகிறார். மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட நாடாளுமன்றத்திற்கு, அதாவது மக்களவைக்கு அமைச்சர்கள் அனைவரும் கட்டுப்பட்டவர்கள். இவ்வாறாக, பிரிட்டிஷ் அமைப்பைப் பின்பற்றி ஒன்றியத்திலும் மாநிலங்களிலும், மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அவைக்கு அமைச்சர்கள் கட்டுப்பட்ட நாடாளுமன்ற ஆட்சிமுறையை இந்திய அரசியலமைப்பு பின்பற்றுகிறது. ஆனால் அமெரிக்காவிலோ தலைமை நிர்வாகியான குடியரசுத்தலைவரை ஒரு குறிப்பிட்ட காலம் வரை பதவியில் இருந்து நீக்க முடியாதபடி அதிகாரப் பிரிவினையுடன்கூடிய குடியரசுத்தலைவர் ஆட்சிமுறை உள்ளது. அமெரிக்க ஆட்சிமுறையில் குடியரசுத்தலைவர் தனது அமைச்சர்களைப் பெரும்பாலும் குடிமக்களிடமிருந்தே தெரிவு செய்கிறார். அவர்கள நாடாளுமன்றத்தில் உறுப்பினர்களாக இருப்பதில்லை. ஆனால் நாடாளுமன்ற ஆட்சிமுறையில் நாடாளுமன்றத்தில் இருந்தே அமைச்சர்கள தெரிவு செய்யப்படுகின்றனர்; அவர்கள் நாடாளுமன்றத்தின் அங்கமாகத் தொடர்ந்து நீடிப்பதுடன், அதன் மக்களவைக்குக் கட்டுப்பட்டவர்களாகவும் திகழ்கிறார்கள். நாடாளுமன்ற ஆட்சிமுறை, நிர்வாக அமைப்பின பொறுப்பினைப் பெரிதும் வலியுறுத்துகின்றது எனலாம்; குடியரசுத்தலைவர் ஆட்சிமுறையோ நிர்வாக அமைப்பின் ஸ்திரத்தன்மைக்கு முக்கியத்துவம் அளிக்கிறது.

எனினும், பிரிட்டிஷ் நாடாளுமன்ற முறையை நாம் அப்படியே ஏற்றுக் கொண்டுள்ளோம் என்று கருதுவதும் தவறாகும். இரண்டு அமைப்பு களுக்கும் இடையே அடிப்படையான வேறுபாடுகள் பல இருக்கின்றன. அவற்றில் சில: பிரிட்டிஷ் அரசியலமைப்பு ஒருடுக்கானது, நம்முடையதோ பெரும்பாலும் கூட்டரசு அமைப்பானது. அங்கே பரம்பரையாக வரும அரசனின் முடியாட்சி நடைபெறுகிறது; ஆனால் நம்முடையது குடியரசு ஆகையால் தேர்ந்தெடுக்கப்பட்ட குடியரசுத்தலைவர் இருக்கிறார். பிரிட்டனில் உள்ளதைப்போல் அல்லாமல் நம்முடைய அரசியலமைப்பு எழுதப்பட்டது; ஆகையால், நமது நாடாளுமன்றம் இறையாண்மை உடைய தன்று; அதில் இயற்றப்படும் சட்டங்கள் நீதிமன்றங்களின் பரிசீலனைக்கு உட்பட்டவை. நமது அரசியலமைப்பில், நீதிமன்றங்களின் மூலம் நிலை நாட்டப்படக்கூடிய அடிப்படை உரிமைகளின் பட்டியல் ஒன்று இடம் பெற்றுள்ளது. நிர்வாக அமைப்புக்கு எதிராக மட்டுமன்றி, சட்டமியற்றும் அவைகளுக்கு எதிராகவும் அந்த உரிமைகளை நிலைநாட்டலாம். இந்த அம்சம் பிரிட்டிஷ் அரசியலமைப்பில் இடம் பெறவில்லை.

நமது அரசியலமைப்பைக் குடியரசுத்தலைவர் ஆட்சிமுறைக்கு மாற்றி யமைக்கலாமா என்பதுபற்றி நம்நாட்டில் சிலசமயங்களில் விவாதங்கள்

நடைபெற்றதுண்டு. எனினும் நமது அரசியலமைப்பை உருவாக்கியவர்கள் நாடாளுமன்ற ஆட்சிமுறையையே விரும்பினர். ஏனெனில் அம்முறையைச் செயல்படுத்துவதில் சிறிது காலம் அவர்களுக்கு அனுபவம் இருந்ததுடன், அந்த ஆட்சிமுறையின்படி ஏற்கெனவே உருவாகியிருந்த அமைப்புகளைத் தொடர்ந்து செயல்படுத்துவதில் சில அனுகூலங்களும் இருந்தன. பொறுப்புள்ள ஓர் அரசு வேண்டுமென்றும் தன்னிச்சையான நிர்வாக அதிகாரங்களை எதிர்த்தும் நீண்ட போராட்டம் நடத்திய நம்நாட்டில், ஒரு குறிப்பிட்ட காலத்திற்குப் பதவியிலிருந்து நீக்கமுடியாத நிர்வாக அமைப்பைப் பின்பற்றுவதற்கு இயல்பாகவே விருப்பம் இல்லாமல் போனது. அளவில் பெரியதும், வேறுபாடுகள் நிறைந்ததும், பலதரப்பட்ட நிர்ப்பந்தங்களும் கொண்ட இந்தியாவில், பல்வேறு பிரிவு மக்களின் நலனைப் பேணவும், ஒன்றுபட்ட இந்தியாவை உருவாக்கவும் நாடாளுமன்ற ஆட்சி முறையே மிகவும் ஏற்புடையது என்று அவர்கள் எண்ணினார்கள்.

## நாடாளுமன்ற இறையாண்மையும் நீதித்துறை மேலாண்மையும்

பிரிட்டிஷ் நாடாளுமன்ற முறையில் நாடாளுமன்றமே இறையாண்மையுடைய மேலாண்மை அமைப்பாகும். அங்கே எழுதப்படாத அரசியலமைப்பு வழக்கத்தில் இருப்பதால், நாடாளுமன்றத்தின் அதிகாரங்களுக்குக் கொள்கை அளவிலேனும் எவ்விதமான வரம்புகளும் இல்லை. அதனால் நாடாளுமன்றம் இயற்றும் எந்தச் சட்டத்தையும் புனராய்வு செய்யும் அதிகாரம் நீதித்துறைக்கு இல்லை.

அமெரிக்க அரசியலமைப்பில், உச்சநீதிமன்றத்திற்கு நீதிப்புனராய்வு அதிகாரமும் அரசியலமைப்புக்கு விளக்கமுரைக்கும் அதிகாரமும் இருப்பதால் நீதித்துறை மேலாண்மை பெற்றதாகத் திகழ்கிறது.

இந்திய அரசியலமைப்பு இவ்விரண்டு முறைகளும் சாராத—நாடாளுமன்றம் இறையாண்மையுடையதான பிரிட்டிஷ் அமைப்பும், நீதித்துறை மேலாண்மையுடையதான அமெரிக்க அமைப்பும் சாராத—நடுவழி ஒன்றைப் பின்பற்றுகிறது. நம்முடையது எழுதப்பட்ட அரசியலமைப்பு ஆதலாலும், நாட்டின் ஒவ்வோர் அங்கமும் தனித்தனியாகப் பிரிக்கப்பட்டு அவற்றின் அதிகாரங்கள் வரையறுக்கப்பட்டுள்ளதாலும் எந்தவோர் அங்கமும்—நாடாளுமன்றம் உட்பட எதுவுமே—இறையாண்மை கொண்டதாகத் திகழுகின்ற கேள்வியே எழாது. நாடாளுமன்றமும், உச்சநீதிமன்றமும் அதனதன் செயல்பாட்டு வரம்புக்குட்பட்டு மேலாண்மை பெற்றவை. நாடாளுமன்றம் இயற்றிய ஏதேனும் ஒரு சட்டம் அரசியலமைப்புக்குப் புறம்பானது என்று தீர்ப்பளிக்கும் அதிகாரம் உச்சநீதிமன்றத்திற்கு உள்ளது. அது போலவே நாடாளுமன்றம் தனது அதிகார வரம்பிற்கும் சில கட்டுப்பாடுகளுக்கும் உட்பட்டு அரசியல் சட்டத்தின் பெரும்பாலான பகுதிகளைத் திருத்தியமைக்கலாம்.

## வயதுற்றோர் வாக்குரிமை

"நாடாளுமன்ற மக்களாட்சி என்று சொல்லும்போது, 'ஒருவருக்கு ஒரு

வாக்கு' என்பதையே நாம் குறிப்பிடுகிறோம்" என்று அரசியல் நிர்ணயசபையில் டாக்டர் அம்பேத்கர் கூறினார். வயதுற்ற இந்தியக் குடிமக்கள் அனைவருக்கும், எவ்வித பாரபட்சமும் இன்றி, சம வாக்குரிமை அளிப்பது என்று நமது அரசியலமைப்பை உருவாக்கியவர்கள் நல்ல எண்ணத்துடன் தீர்மானித்தனர். இந்திய மக்களில் பெரும்பான்மையோர் வறுமையிலும், எழுத்தறிவின்மையிலும் உழன்று கொண்டிருந்தபோது இம்முடிவு மேற்கொள்ளப்பட்டது மிகவும் குறிப்பிடத்தக்கதாகும். மேலைநாடுகளின் முன்னேறிய மக்களாட்சி அமைப்புகளில்கூட படிப்படியாகத்தான் அனைவருக்கும் வாக்குரிமை அளிக்கப்பட்டது.

## அடிப்படை உரிமைகள்

நம் மக்கள் அனைவருக்கும் சுதந்திரம், சமத்துவம் போன்ற அடிப்படையான சில மனித உரிமைகளைப் பெறுவதே, சுதந்திரத்திற்காகப் போராடிய தேசத் தலைவர்களின் கோரிக்கைகளில் ஒன்றாக இருநதது. சிறுபான்மையினர் பிரச்சினைகள் பெருகியதன் காரணமாக, அரசியல் சட்டத்திலேயே சில அடிப்படை உரிமைகளைச் சேர்க்க வேண்டிய தேவை உருவாகியது. நமது அரசியல் சட்டத்தின் மூன்றாவது பகுதியில் இடம்பெற்றுள்ள அடிப்படை உரிமைகள் யாவும் அரசுக்கு எதிராகத் தனிநபர்கள் நிலைநாட்டக்கூடிய உரிமைகளாகும். எந்த ஒரு குடிமகனின் உரிமையை மீறுவதாக ஏதேனும் சட்டமோ, நிர்வாகச் செயல்பாடோ அமையுமானால் அதனை எதிர்த்து உச்ச நீதிமன்றம் அல்லது உயர்நீதிமன்றத்தில் வழக்குத் தொடரலாம். அத்தகைய சட்டமோ, நிர்வாகச் செயலோ அரசியல் சட்டத்தில் சொல்லப் பட்டிருக்கும் வரம்புகளுக்கு உட்பட்டு அமையாதபோது அவை செல்லாதவை என்றும், அரசியலமைப்புக்கு முரணானவை என்றும் தீர்ப் பளிக்கப்படும். இவ்வாறு, அடிப்படை உரிமைகளை நிலைநாட்டுவதற்கான வழிமுறைகளும் அரசியல் சட்டத்திலேயே இடம்பெற்றுள்ளன. அமெரிக்க அரசியலமைப்பில் அடிப்படை உரிமைகள் வரம்பற்றதாகக் கூறப்பட் டுள்ளன. ஆனால் தனிநபர் எவருக்கும் வரம்பற்ற உரிமைகள் இருக்க முடியாது. ஏனெனில், தனிநபர் உரிமைகள், பிற நபர்களின் அதேபோன்ற உரிமைகளால் வரம்புக்கு உட்பட்டவை. அடிப்படை உரிமைகள் மீதான சட்டப்பூர்வமான கட்டுப்பாடுகள் எவை என அமெரிக்க உச்சநீதிமன்றம் தான் கண்டறிய வேண்டும். ஆனால் நம்முடைய அரசியலமைப்பை உருவாக்கியவர்களோ, அத்தகைய கட்டுப்பாடுகள் குறித்த விதிகளையும் அரசியல் சட்டத்திலேயே சேர்த்துவிட்டனர். இவ்வாறாக ஒருபுறத்தில் தனிநபர் உரிமைகளுக்கும், மறுபுறத்தில் சமுதாய நலனுக்கும் நாட்டின் பாதுகாப்புத் தேவைகளுக்கும் ஏற்ப சமச்சீரான வகையில் நமது அரசியல் சட்டம் திகழ்கிறது.

## நெறிமுறைக் கோட்பாடுகள்

ஐரிஷ் அரசியலமைப்பைப் பின்பற்றி நமது அரசியல் சட்டத்தில் இடம் பெற்ற நெறிமுறைக்கோட்பாடுகள், தனிச்சிறப்பு வாய்ந்த கூறாகும். மக்களின் சமூக-பொருளாதார உரிமைகள் பெரும்பாலும் இந்தக் கோட்பாடுகளில்

சேர்க்கப்பட்டுள்ளன. இதில் சொல்லப்பட்டுள்ளவற்றை நீதிமன்றங்களின் மூலம் நிலைநாட்ட முடியாது என்றாலும், நாட்டின் அரசாட்சியை நடத்து வோருக்கு அவை வழிகாட்டி நெறிகளாகத் திகழ்கின்றன. அரசும் அதன் அங்கங்களும் அடைய வேண்டிய இலக்குகளாக அரசியலமைப்பை உருவாக்கியவர்கள் இக்கோட்பாடுகளைச் சேர்த்துள்ளனர். தற்போது சட்ட மன்றங்களில் மட்டுமின்றி, நீதிமன்றங்களிலும்கூட அரசின் நெறிமுறைக் கோட்பாடுகளின் பொருத்தமுடைமை முக்கியத்துவம் பெற்று வருகிறது.

## குடியுரிமை

சகோதரத்துவத்தையும் ஒன்றுபட்ட இந்தியாவையும் உருவாக்கவேண்டும் என்ற நோக்கத்தில் நமது அரசியலமைப்பை உருவாக்கியவர்கள், கூட்டரசு அமைப்பு இருந்தபோதிலும் ஒரே குடியுரிமை முறையை வழங்கினர். அமெரிக்காவில் உள்ளது போன்று ஒன்றியத்துக்கு என்றும், மாநிலங்களுக்கு என்றும் இங்கே தனித்தனி குடியுரிமைகள் கிடையாது. கஷ்மீர் மற்றும் சில பழங்குடி பகுதிகளைத் தவிர, இந்தியா முழுவதிலும் இந்தியக் குடிமக்கள் அனைவருக்கும் பாரபட்சம் ஏதுமின்றி ஒரே மாதிரியான உரிமைகளே உண்டு.

## அடிப்படைக் கடமைகள்

நமது அரசியல் சட்டத்தில் 42ஆவது திருத்தத்தின் மூலம், அடிப்படைக் கடமைகள் என்ற தலைப்பில் ஒரு புதிய பகுதி சேர்க்கப்பட்டது. இந்தியக் குடிமக்கள் அனைவருக்கும் பத்துக் கடமைகளை அது விதித்தது. கடமைகள் இல்லாமல் உரிமைகள் இல்லை என்பதாலும், குடிமக்கள் நாட்டுக்கு ஆற்ற வேண்டிய பொறுப்புகளை நிறைவேற்றாமல் உரிமைகளைக் கோருவதில் பொருளில்லை என்பதாலும், அடிப்படைக் கடமைகளுக்கு நாம் முக்கியத் துவம் அளிக்க வேண்டும். ஆனால் குடிமக்களின் அடிப்படைக் கடமை களுக்கு நாம் இதுவரை தேவையான முக்கியத்துவம் அளிக்காதது பெரிதும் துரதிர்ஷ்டமானதாகும்.

## சுயேச்சையான நீதித்துறை

நீதிப் புனராய்வு அதிகாரங்களைக் கொண்ட சுயேச்சையான நீதித்துறையை நமது அரசியலமைப்பு ஏற்படுத்தி இருக்கிறது. ஒன்றியம், மாநிலம், உரிமையியல், குற்றவியல், அரசியல் சட்டம் உள்பட எல்லாச் சட்டங்களைப் பற்றியும் விசாரிக்கும் அதிகாரம் பெற்றதாக உயர்நீதி மன்றங்களும், உச்ச நீதிமன்றமும் கொண்ட ஒருங்கிணைந்த ஒரு நீதித்துறை அமைப்பு நம்நாட்டில் உள்ளது. அமெரிக்காவில் கூட்டரசுக்கும் மாகாணத்திற்கும் தனித்தனியாக நீதிமன்றங்கள் இருப்பது போன்று இங்கே இல்லை. நமது நீதித்துறை முழுவதும் படிப்படியாக அமைந்த ஒரே நீதிமன்றத் தொகுப்பாகும். நீதி மன்றங்கள் தகராறுகளைத் தீர்த்து வைத்து, தனி நபர்களின் உரிமைப் பாதுகாவலனாகத் திகழ்வதுடன், அவ்வப்போது அரசியல் சட்ட விதிகளை அலசி ஆராய்ந்தும், ஏனைய சட்டங்களைப் புனராய்வு செய்தும், அவை அரசியலமைப்புக்குப் புறம்பானவையா என்று தீர்ப்பளிக்கும் பணியையும்

செய்கின்றன. உச்சநீதிமன்றத்தின் தீர்ப்பே இறுதியானது. மேலும், மாநிலங்களுக்கு இடையேயும் அல்லது மைய அரசுக்கும் மாநிலங்களுக்கும் இடையேயும் அதிகாரவரம்புகள், பகிர்வுகள் பற்றி எழும் தகராறுகளைத் தீர்த்துவைக்கும் அமைப்பாகவும் உச்சநீதிமன்றம் செயல்படுகிறது.

## முடிவுரை

இந்திய அரசியல் சட்டம் எல்லாவற்றையும் உள்ளடக்கிய விரிவானதோர் ஆவணமாகும். பலவகைகளில் அது தனிச்சிறப்பு வாய்ந்தது. எந்த ஒரு வார்ப்பில் அல்லது மாதிரியில் அதனைப் பொருத்திப் பார்க்க முடியாது. நெகிழ்ச்சியற்ற கூறுகள் மற்றும் நெகிழ்ச்சியுடைய கூறுகள் ஆகியவற்றின் கலவையாகவும், ஒன்றியம் மற்றும் ஓரடுக்கு அமைப்பின் கூட்டாகவும், நாடாளுமன்ற ஆட்சிமுறை மற்றும் குடியரசுத்தலைவர் ஆட்சிமுறை ஆகிய இரண்டின் கலப்பாகவும் அது திகழ்கிறது. ஒருபுறத்தில் தனிநபரின் அடிப் படைக் கடமைகளுக்கும், மறுபுறத்தில் நாட்டு மக்களின் சமூகபொருளாதார நலன் மற்றும் நாட்டின் பாதுகாப்பிற்கும் இடையே சமச்சீர்மையை அது தோற்றுவிக்கிறது. அத்துடன் நாடாளுமன்ற இறையாண்மைக்கும் நீதித்துறை மேலாட்சிக்கும் இடையே புது வழி ஒன்றையும் அது காட்டியுள்ளது.

இரண்டாம் உலகப் போருக்குப் பின்னர் உருவான பல நாடுகளின் அரசியலமைப்புகள் தட்டுத் தடுமாறி செயல்பட்டு வழக்கொழிந்து போய் விட்ட நிலையில், நமது அரசியல் சட்டம், பல இக்கட்டுக்களையும் வெற்றி கரமாக எதிர்கொண்டு இன்றும் நிலை பெற்றிருக்கிறது. இது ஒன்றே நமது அரசியலமைப்பின் நிலைபேறுக்கும், இயக்கத் துடிப்புக்கும், வளர்ச்சி வாய்ப்புக்கும் சான்றாகும்.

# 5

# அரசியலமைப்புச் சட்ட முகப்புரை

## (அரசியலமைப்பின் அடிப்படைகளும் சித்தாந்தமும்)

ஓர் அரசியலமைப்பு சார்ந்துள்ள அடிப்படையான மாண்புகளையும் சித்தாந்தத்தையும், எதை அடைய அரசு பாடுபட வேண்டுமென்று உருவாக்கியவர்கள் விரும்பினார்களோ, அந்த நோக்கங்களையும் உள்ளடக்கியதாக அரசியல் சட்ட முகப்புரை திகழ வேண்டும்.

அரசியல் நிர்ணயசபையில் ஏற்றுக்கொள்ளப்பட்ட நமது அரசியல் சட்ட முகப்புரை, 'இந்திய மக்களாகிய நாம்' இந்தியாவை ஓர், 'இறையாண்மை மக்களாட்சிக் குடியரசாக' உருவாக்கி, அதன் குடிமக்கள் அனைவருக்கும் நீதியும் சுதந்திரமும் சமத்துவமும் கிடைக்கச் செய்வதுடன், அவர்களிடையே சகோதரத்துவம் தழைக்க உறுதியான முடிவை மேற்கொள்கிறோம் என்று கூறுகிறது. மேலும் நீதி என்பது - சமூக, பொருளாதார, அரசியல் நீதி என்று விளக்கப்பட்டுள்ளது. சுதந்திரம் என்பதில் - சிந்தனை, கருத்து வெளிப்பாடு, கடவுள் நம்பிக்கை, வழிபாடு ஆகியவை அடங்கும். சமத்துவம் எனில் வாய்ப்புகளிலும் அந்தஸ்திலும் சமத்துவமாகும்.

நீதி, சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் ஆகியவை, உண்மையான மக்களாட்சி அமைப்பின் பிரிக்க முடியாத அத்தியாவசியக் கூறுகளாதலால், மக்களாட்சிக் குடியரசு என்ற கருத்தையே அவை தெளிவாக்குகின்றன. 'தனி மனிதனின் மாண்பையும், நாட்டின் ஒற்றுமையையும்' அடைவதே இறுதி நோக்கம். இவ்வாறாக, இந்திய மக்களே அரசியலமைப்புக்கு ஆதாரம் என்றும், அவர்களிடையேதான் இறையாண்மை பொதிந்திருக்கிறது என்றும், மக்களுக்கு உறுதியளிக்கப்பட்ட அடிப்படை உரிமைகளும் சுதந்திரங்களும் கொண்ட மக்களாட்சி அமைப்பாக இந்திய அரசியல் திகழ்கிறது என்றும், நாட்டின் ஒற்றுமைக்கு உறுதியளிக்கப்பட்டுள்ளது என்றும், முகப்புரை பிரகடனம் செய்கிறது.

நமது அரசியல் சட்ட முகப்புரையில் பயன்படுத்தப்பட்டுள்ள சொற்கள் யாவும் மிக உன்னதமானவை. மானுட அறிவும் அனுபவமும் இணைந்து உருவாக்கிய மிகவும் உன்னதமான மாண்புகளை அவை உள்ளடக்கியுள்ளன. முகப்புரையின் வாசகங்களால் பெரிதும் ஈர்க்கப்பட்ட ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகத்தின் அரசியல் துறை பேராசிரியர் சர்.ஏர்னஸ்ட் பார்கர், தம்முடைய ஆய்வுக்கட்டுரைத் தொகுதியின் முன்னுரையாக, நமது அரசியல்

சட்ட முகப்புரையை அப்படியே மேற்கோளாக எடுத்தாண்டிருக்கிறார்; அவருடைய கட்டுரைத் தொகுதியின் சாரமாக நமது அரசியல் சட்ட முகப்புரை திகழ்வதாக அவர் எண்ணினார். இதுபற்றி அவர் குறிப்பிடுகையில், "நான் அதைப் படித்தபோது, இந்நூலின் பெரும்பான்மையான வாதங்களை மணிச்சுருக்கமாகக் கூறுவதைப்போல் எனக்குத் தோன்றியது; எனவே அது மூலத்திறவுகோல் கருத்தாகத் திகழும்" என்றார்.

அரசியலமைப்பை உருவாக்கியவர்களின் மனத்திறவுகோலாக முகப்புரை திகழ்கிறது என்று பேருபாரி வழக்கில் உச்சநீதிமன்றம் ஏற்றுக் கொண்டது. அரசியல் சட்டத்தில் உள்ள சொற்கள் தெளிவற்றவையாகவோ, பொருள் விளங்காமலோ இருந்தால், அதை உருவாக்கியவர்களின் உட்கருத்தைப் புரிந்து கொள்ளவும், ஒரு சொல் குறுகிய நோக்கில் பயன் படுத்தப்பட்டுள்ளதா அல்லது பரந்த நோக்கில் பயன்படுத்தப்பட்டுள்ளதா என்று தெரிந்து கொள்ளவும், முகப்புரையின் உதவியை நாடலாம். இருந்த போதிலும் முகப்புரை அரசியலமைப்பின் ஓர் அங்கமாகாது என்று நீதிபதி கஜேந்திரகட்கர் கூறினார். மேலும், சட்டமியற்றும் அவைகளுக்கோ, நாட்டின் மற்ற அங்கங்களுக்கோ முகப்புரை எவ்வித அதிகாரத்தையும் அளிக்க வில்லை. அவற்றுக்கான அதிகாரங்கள், அரசியலமைப்பின் வகையுரைகளில் இருந்துதான் வெளிப்படையாகவோ, உட்கிடக்கையாகவோ பெறப்படு கின்றன.

'ஆழ்ந்த கலந்தாய்வு' என்ற முத்திரையைப் பெற்றுள்ள முகப்புரை, துல்லியமாக வரையப்பட்டு, அரசியலமைப்பை உருவாக்கியவர்களால் முக்கிய கவனம் அளிக்கப்பட்டது என்று, சஜ்ஜன்சிங் எதிர் ராஜஸ்தான் அரசு என்ற வழக்கில் நீதிபதி மடோல்கர் கூறினார். அரசியல் சட்ட விரிவான கூறுகளின் பொழிப்பாக முகப்புரை அமைந்துள்ளது; அல்லது முகப்புரையில் சொல்லப்பட்டுள்ள கருத்துக்களின் விரிவாகவும், கட்டமைப் பாகவும் அரசியல் சட்டம் திகழ்கிறது. முகப்புரை, அரசியல் சட்டத்தின் ஓர் அங்கம் அன்று என்ற உச்சநீதிமன்றத்தின் முந்தைய கருத்தை மறுபரிசீலனை செய்ய வேண்டிய அவசியம் எழுந்தது. அரசியல் சட்ட வகையுரைகளுக்குப் பொருள் கொள்வதற்காக நீதிபதி ஹிதாயத்துல்லாவும் முகப்புரையின் வாசகங்களைப் பயன்படுத்தினார். அரசியலமைப்பை உருவாக்கியவர்கள், முகப்புரையில் வெளிப்படுத்தியுள்ள அவர்களின் உள்ளக்கிடக்கையைக் கவனத்தில் கொள்ள வேண்டும் என்றும் உணரப்பட்டது. அரசு எவ்வாறு செயல்பட வேண்டும் என்ற கோட்பாடுகளின் பொழிப்பாக அரசியல்சட்ட முகப்புரை அமைந்துள்ளது என்று கோலக்நாத் எதிர் பஞ்சாப் அரசு என்ற வழக்கில் நீதிபதி ஹிதாயதுல்லா கூறினார். முகப்புரையானது, "அரசிய லமைப்பின் ஆன்மா. அது அழிவில்லாதது; மாற்றமுடியாதது. நம்முடைய நாட்டின் சில அடிப்படைகள் பற்றிய நமது நம்பிக்கையின் பிரகடனமே முகப்புரை; நாம் விலகிச் செல்லக்கூடாத நிலைப்பாடு அது; அதனை நாம் அசைக்கலாகாது" என்று அவர் கூறினார்.

பின்னர் பாரதி சந்திரபவன் எதிர் மைசூர் அரசு என்ற வழக்கில் (AIR 1970 SC 2042) உச்சநீதிமன்றம் தீர்ப்பளிக்கும்போது நெறிமுறைக் கோட்பாடுகள் மற்றும் அடிப்படை உரிமைகளின் உட்பொருளை

முகப்புரையில் இடம்பெற்றுள்ள கோட்பாடுகளுடன் சேர்த்து ஆராயும்போது இன்னும் தெளிவாகப் புரிந்து கொள்ள முடியும் என்று கூறியது.

ஒரு சட்டம் இயற்றப்படுவதற்கு முன்னர். அதைப்பற்றி சட்டமியற்றும் அவைகளில் விவாதித்து வாக்கெடுப்பு நடத்தி ஏற்றுக் கொள்வதைப் போல் அல்லாமல் சில முகப்புரைகள் அப்படியே ஏற்றுக் கொள்ளப்படுவது உண்டு ஆனால் நமது அரசியல் சட்ட முகப்புரையோ, அரசியல் நிரணய சபையில் மற்ற வகையுரைகளைப் போலவே முற்றிலுமாக விவாதிக்கப்பட்டு ஏற்றுக்கொள்ளப்பட்டதாகும். இந்த வேறுபாட்டினை பேருபாரி வழக்கில் உச்சநீதிமன்றம் உணரவில்லை என்றே தோன்றுகிறது. அரசியல் நிர்ணய சபையில் முகப்புரையை வாக்கெடுப்புக்கு விடும்போது "அரசியல் சட்டத்தின் ஓர் அங்கமாக முகப்புரை திகழ்கிறதா என்பதே கேளவி" என்றுதான் சபையின் தலைவர் குறிப்பிட்டார். எனவே இதற்கு இயைவதாக, உச்சநீதி மன்றமும் தனது நிலையைப் பின்னர் மாற்றிக் கொண்டது.

கேசவானந்தபாரதி எதிர் கேரள அரசு என்ற வழக்கில்கூட பெரும் பான்மையான நீதிபதிகள், அரசியல் நிர்ணயசபையில் இடம்பெற்ற வாதப்பிரதிவாதங்களைச் சுட்டிக்காட்டி, முகப்புரை அரசியல சட்டத்தின் ஓர் அங்கம் என்றே தீர்ப்பளித்தனர். முகப்புரை சட்டமாக இயற்றப்பட்ட வரலாறே அதன் முக்கியத்துவத்தை உறுதிப்படுத்துகிறது என்று நீதிபதி சிக்ரி குறிப்பிட்டார். முகபபுரையானது அரசியலமைப்பின் பிரிக்கமுடியாத ஓர் அங்கம் மட்டுமன்று முகப்புரையில் இடம்பெற்றுள்ள உன்னதமான நோக்கங்களின் பின்னணியில் அரசியலமைப்பை ஆராயந்து விளகக மளிப்பது மிகவும் முக்கியமானதாகும். அரசியல் சட்டத்தின 368ஆவது பிரிவின்படி எந்த விதியை திருத்த வேண்டுமானாலும் முகப்புரை மறறும் அரசியலமைப்பின விரிவான அடிப்படைகளுக்கு உட்பட்டே அதனைச் செய்ய வேண்டும். இன்னும் சொல்லப்போனால், அரசியலமைப்பின் பிரிக்கமுடியாத அடிப்படைக் கூறுகளை முகப்புரையின வாசகத்தில் இருந்தே பெறுகிறோம. எனவே, அடிப்படைக் கூறுகளையே மாற்றிவிடுகின்ற வகையில் அரசியல் சட்டத்தில் திருத்தங்களைச் செய்ய முடியாது என்று தீர்ப்பளிக்கப்பட்டது. இந்த அடிப்படைக் கூறுகள எவையெவை எனத் திட்டவட்டமாக வரையறுக்கப்படாவிட்டாலும், முகப்புரையில் இடம் பெற்றுள்ளவை மட்டும் அடிப்படைக் கூறுகளாக ஏற்கப்பட்டுள்ளன.

"நமது அரசியலமைப்பு எனும் அணிமாளிகை. முகப்புரையில் குறிப்பிட்டுள்ள அடிப்படைக் கூறுகள என்ற அஸ்திவாரத்தின் மீது எழுப்பப்பட்டது. இந்த அடிப்படைக் கூறுகளில் எவற்றையேனும் நீக்கிவிட்டால், மேற்கட்டுமானம் நிலைத்திருக்க முடியாதாகையால், அரசிய லமைப்பும் அதே அரசியலமைப்பாக இருக்க முடியாது; அல்லது அது தனது தனித்துவத்தை இழந்துவிடும்" என்று மாண்பமை நீதிமன்றம் கருத்து வெளியிட்டது. எனவே முகப்புரையில் இடம்பெற்றுள்ள அரசியலமைப்பின் அடிப்படைக் கூறுகள் அல்லது கட்டமைப்பினை, 368ஆவது பிரிவின்படி திருத்தம் செய்து மாற்றிவிடமுடியாது.

சமீபத்தில் மத்தியப்பிரதேசம், ராஜஸ்தான், ஹிமாச்சலப் பிரதேசம் ஆகிய மூன்று மாநிலங்களிலும் இருந்த பி.ஜே.பி. அரசுகளை நீக்கியது குறித்த

எஸ்.ஆர். பொம்மை வழக்கில் நீதிபதி ராமசாமி கூறினார்:

> முகப்புரையானது அரசியல் சட்டத்தின் ஓர் அங்கமாகும். மக்களாட்சி அரசாங்கம், கூட்டரசு அமைப்பு, நாட்டின் ஒற்றுமை - ஒருமைப்பாடு, மதச்சார்பின்மை, சோஷலிசம், சமூகநீதி, நீதிப்புனராய்வு ஆகியவை அரசியல் சட்டத்தின் அடிப்படைக் கூறுகளாகும்.

அரசியலமைப்பிலிருந்து மீறிச் செயல்பட முடியாத ஓர் அங்கமாக முகப்புரை ஏற்றுக் கொள்ளப்பட்டாலும், அது எந்தவிதமான அதிகாரத்திற்கும் ஆதாரமாகவோ, வரம்பாகவோ இல்லை என்பதும் உண்மையாகும். முதலில் பேருபாரி வழக்கில் வலியுறுத்தப்பட்ட இந்தக் கருத்தை, பின்னர் இந்திரா நேரு காந்தி எதிர் ராஜ்நாராயணன் (AIR 1975 SC 2291) என்ற வழக்கிலும் நீதிபதி மாத்யு வலியுறுத்தினார்.

அவசர நிலை பிரகடனப்பட்டிருந்தபோது, நாற்பத்திரண்டாவது அரசியலமைப்புத் திருத்தச் சட்டம் 1976-ன் மூலம், 'சோஷலிச', 'சமயச்சார்பற்ற' ஆகிய இரண்டு சொற்கள் முகப்புரையில் சேர்க்கப்பட்டன. மேலும், 'நாட்டின் ஒற்றுமை' என்ற சொற்றொடர் 'நாட்டின் ஒற்றுமையும் ஒருமைப் பாடும்' எனத் திருத்தப்பட்டது. இந்த உரிச்சொற்கள் யாவும் விளக்கம்தரும் முகத்தான் அமைந்தவையே என்றும், நாட்டின் அரசமைப்பில் குறிப்பிடத் தக்க மாற்றம் எதனையும் உருவாக்கவில்லை என்றும் அப்போது கூறப்பட்டது. ஏனெனில், சோஷலிசம், சமயச்சார்பின்மை, தேசிய ஒருமைப்பாடு ஆகியவை ஏற்கெனவே முகப்புரையிலும் அரசியலமைப்பின் பிற பிரிவுகளிலும் உட்கிடக்கையாகப் பொதிந்து கிடக்கின்றன என்றும் கருதப்பட்டது.

நாற்பத்திரண்டாவது திருத்தத்திற்குப் பின்னர், இன்றைக்கு உள்ள முகப்புரையின் வாசகத்தின்படி, நமது அரசியலமைப்பை உருவாக்கியவர்கள் நம்பிக்கை கொண்டிருந்த உன்னதமான அரசியலமைப்பு மாண்புகள், குடியரசின் மக்களிடையே பரப்பவேண்டுமென அவர்கள் விழைந்த கருத்துக்கள், தலைமுறை தலைமுறையாக அனைவரையும் வழிகாட்டிச் செல்லும் என்று அவர்கள் நம்பிக்கை கொண்ட நெறிமுறைகள் என்று பட்டியலிட்டால் அவை:

- இறையாண்மை
- சோஷலிசம்
- சமயச்சார்பின்மை
- மக்களாட்சி
- குடியரசு முறை
- சுதந்திரம்
- சமத்துவம்
- சகோதரத்துவம்
- தனிமனித மாண்பு
- நாட்டின் ஒற்றுமையும் ஒருமைப்பாடும்

## இறையாண்மை

அரசியலறிவியல் மற்றும் சட்டவியல்களில், இறையாண்மை என்பது ஒரு நாட்டின் அத்தியாவசியமான பண்பு என்றும், நாட்டுக்கு உள்ளேயும் வெளியேயும் உள்ள எந்த அதிகார அமைப்புக்கும் கீழ்ப்படியாத முழு நிறைவான உயரதிகாரம் என்றும் பொருள்படும். "வேறு உயர் அதிகாரம் எதையும் ஏற்காத, முழு நிறைவான உச்சநிலை அதிகாரம் செயல்படுகிற அமைப்பே" இறையாண்மையுடைய நாடு என்று கூலே என்பவர் வரையறை செய்கிறார்.

மரபு வழிவந்த இத்தகைய இறையாண்மை என்ற பொருளில் இன்றைக்கு எந்த ஒரு நாடுமே இறையாண்மையுடைய நாடு என்று சொல்லமுடியாது. சர்வதேச அமைப்புகளான ஐக்கியநாடுகள் சபை, ஐரோப்பிய பொருளாதார சமூகம் போன்றவற்றில் உறுப்பினராக இருப்பதாலும், சர்வதேச உடன் படிக்கைகள், ஒப்பந்தங்கள் போன்றவற்றில் கையெழுத்திடுவதாலும் நாடுகளுக்குப் பலவிதமான கட்டுப்பாடுகளும் பொறுப்புகளும் சுமத்தப்படு கின்றன; இறையாண்மையும் அரிக்கப்பட்டுவிடுகிறது.

இறையாண்மை அதிகாரங்கள் எங்கு இருக்க வேண்டும் என்று இந்திய அரசியல் சட்டத்தின் எந்த வகையுரையும் குறிப்பிட்டுச் சொல்ல வில்லை. இறையாண்மை எங்கிருக்கிறது என்றும், அரசியலமைப்பின் ஆதாரம் எதுவென்றும் நாம் உறுதிப்படுத்திக் கொள்ள உதவும் ஒரேவழி-முகப்புரை தான். முகப்புரையில் உள்ள 'மக்களாகிய நாம்' என்ற சொற்கள், அமெரிக்க அரசியல் சட்ட முகப்புரையின் தொடக்கச் சொற்களை நமக்கு நினைவு படுத்தலாம். ஆனால் அமெரிக்க அரசியல் சட்ட முகப்புரை. 'அமெரிக்க ஐக்கிய நாடுகளின் மக்களாகிய நாம்' என்று குறிப்பிட்டுச் சொல்லுவதைக் கவனிக்க வேண்டும். அமெரிக்க அரசியல் சட்டத்தின் முந்தைய வரைவு களையும், அதன் அரசியலமைப்பு வரலாற்றையும் கவனிக்கும்போது, அந்த அரசியலமைப்பை உருவாக்கியவர்கள் தனியொரு நாட்டு மக்களுக்கு என்றில்லாமல், சுதந்திரமான பல்வேறு நாடுகளின் (13 நாடுகள்) மக்களுக்காக 'மிக நிறைவான ஐக்கிய' அமைப்பையே உருவாக்கியிருப்பது நமக்குத் தெளிவாகப் புலப்படும். ஆனால் இந்திய அரசியலமைப்பின் முகப்புரையோ, இந்திய யூனியனில் உள்ள மாநிலங்களின் மக்கள் என்று குறிப்பிடவில்லை. அமெரிக்க அரசியலமைப்பைப் போன்று இந்திய அரசியலமைப்புக்கு மாநிலங்களிடம் இருந்து ஏற்பளிப்புப் பெற வேண்டிய அவசியமும் இருக்கவில்லை. "இந்திய மக்களாகிய நாம் ஓர் அரசியலமைப்பை இயற்றி ஏற்றுக்கொண்டு நமக்கு நாமே அளித்துக் கொள்கிறோம்" என்று கூறியதன் மூலம், நாம் அனைவரும் ஒரே மக்கள், இந்திய மக்கள், பல்வேறு மாநிலங்களின் மக்கள் அல்லர் என்றும்; இறையாண்மை இந்திய மக்கள் அனைவரையும் சார்ந்தது, தனித்தனி மாநிலங்களைச் சேர்ந்தது அன்று என்றும்; இந்திய அரசியலமைப்பு தனித்தனி மாநிலங்களைச் சேர்ந்த மக்களால் உருவாக்கப்பட்டு ஏற்றுக் கொள்ளப்பட்டதன்று என்றும்; இந்திய மக்கள் அனைவரும் சேர்ந்த, தனித்துப் பிரிக்கவியலாத இறையாண்மை கொண்ட ஓர் அலகினால் அது இயற்றப்பட்டு ஏற்கப்பட்டுள்ளது என்றும் நமது அரசியலமைப்பை உருவாக்கியவர்கள் உறுதிபடத் தெளிவு

படுத்தியிருக்கின்றனர். நாம் அனைவரும் ஒரு நாட்டினர்; நமது அரசியலமைப்பும் ஒன்றே; ஆட்சிமுறையும் ஒன்றே என்பதையே அது வலியுறுத்துகிறது.

அமெரிக்கா, ஆஸ்திரேலியாவில், ஒன்றியம் அல்லது காமன்வெல்த்துக்கும்-மாநிலங்களுக்கும் இடையே இறையாண்மை பகுக்கப்பட்டு, அரசியலமைப்பு வகுத்துள்ளபடி அதனதன் செயல்பாட்டு எல்லைக்குள் இறையாண்மை கொண்டு விளங்குகின்றன. ஆனால் இந்தியாவில் ஒன்றியத்துக்கும் மாநிலங்களுக்கும் அதிகாரங்கள் பிரிக்கப்பட்டிருந்தபோதிலும் இறையாண்மை பிரிக்கப்படவில்லை. அவசர நிலைகளின்போது நாட்டு நலன் கருதி மாநிலங்களின் அதிகாரங்களை ஒன்றியம் எடுத்துக் கொள்ளலாம். சாதாரண சமயங்களில்கூட மாநிலப்பட்டியலில் உள்ள விஷயங்கள் குறித்தும், அரசியல் சட்டத்தின் 249ஆவது பிரிவின்படி ஒன்றியம் சட்டமியற்றலாம். நம்முடைய தேசிய இறையாண்மை என்பது பிரிக்க முடியாத ஒன்று. எந்த ஒரு மாநிலமோ அல்லது மாநிலங்கள் ஒரு குழுவாக சேர்ந்தோ நமது அரசியலமைப்பைச் செல்லாததாக்கவும் முடியாது; அரசியலமைப்பால் உருவாக்கப்பட்ட ஒன்றியத்தில் இருந்து பிரிந்து செல்லவும் முடியாது. ஆனால் அமெரிக்காவிலோ ஒன்றியத்தின் அழியாத தன்மையை நிலைநிறுதத வேண்டுமானால், பிரிவினை எண்ணங்கொண்ட மாநிலத்தின் மீது உள்நாட்டுப்போர் தொடுத்து வெற்றிகாண வேண்டும். நமது அரசியலமைப்பை உருவாக்கியவர்கள் ஒன்றியத்தின் அழியாத் தன்மையை நிலைநிறுத்தி, எந்த ஒரு மாநிலத்திற்கும் பிரிந்துபோகும் உரிமை இல்லை எனத் தெளிவுபடுத்தியிருக்கின்றனர்.

இந்திய ஒன்றியம் அனனிய நிலப்பகுதியை கையகப்படுத்தலாம் என்று நமது அரசியல் சட்டப் பிரிவு 1(3) (C) தெளிவுபடுத்துகிறது. சில அரசியலமைப்பு நிபந்தனைகளுக்கு உட்பட்டு அந்நிலப்பகுதியைத் தன்னுடன் சேர்த்துக் கொளளலாம் (மக்கன்பாய் ஈஸ்வர்பாய் படேல் எதிர் இந்திய அரசு (1970) 3 SCC 100). அரசியலமைப்பின் 2, 3, 4ஆவது பிரிவுகளின்படி, நாடாளுமன்றம் சாதாரண சட்டம் ஒன்றை இயற்றுவதன் மூலம், புதிய மாநிலங்களைச் சேர்த்துக் கொள்ளலாம்; அல்லது உருவாக்கலாம். ஏற்கெனவே உள்ள மாநிலங்களின் எல்லைகளையோ, பெயர்களையோ மாற்றியமைக்கலாம். குடியுரிமை வரையுரைப்படி, இந்தியக் குடிமக்கள் அனைவருக்கும் ஒரே ஒரு குடியுரிமைதான் உண்டு. அமெரிக்காவில் இருப்பது போன்று ஒன்றியத்துக்கு, மாநிலங்களுக்கு என தனித்தனிக் குடியுரிமைகள் இந்தியாவில் கிடையாது.

இவ்வாறு, பழமையான சமஷ்டி முறை, பிரிக்கப்பட்ட இறையாண்மை, மாநிலங்களின் சுயாட்சி போன்ற கருத்துக்களுக்கு நமது அரசியல் சட்ட முகப்புரை முற்றுப்புள்ளி வைத்துவிட்டது. அத்துடன், நமது அமைப்பில் இறையாண்மை மக்களிடையேதான் இருக்கிறது என்பதையும், ஒன்றிய-மாநில அரசுகளின் நிறுவனங்களும், ஏனைய அங்கங்களும் மக்களிடமிருந்தே தமது அதிகாரத்தைப் பெறுகின்றன என்பதையும் நமது அரசியலமைப்பை உருவாக்கியவர்கள் தெளிவுபடுத்தியிருக்கின்றனர்.

## சோஷலிசம்

நமது அரசியலமைப்பு எந்தக் குறிப்பிட்டதோர் இசம் அல்லது அரசியல் கொள்கையைப் பின்பற்ற வேண்டும் என்றோ, ஏதேனும் பொருளாதாரக் கோட்பாட்டினால் வரையறுக்கப்பட வேண்டும் என்றோ, அதனை உருவாக்கியவர்கள் விரும்பவில்லை. எனவே அவர்கள் சோஷலிசம் உள்பட எந்த ஒரு குறிப்பினையும் அரசியல் சட்டத்தில் சேர்க்கவில்லை; முகப் புரையில், குடிமக்கள் அனைவருக்கும் பொருளாதார சுதந்திரம், சம அந்தஸ்து, சம வாய்ப்புகள் ஆகியவற்றைக் கிடைக்கச் செய்ய உறுதி பூண்டுள்ளதாகக் குறிப்பிடப்படுகிறது. 42ஆவது அரசியலமைப்புத் திருத்தச் சட்டம் 1976, நமது 'குடியரசு' என்பதற்கு அடைமொழியாக 'சோஷலிச' என்ற சொல்லைச் சேர்த்தது. திருத்தப்பட்ட முகப்புரை வாசகத்தின்படி, 'சோஷலிசம்' என்ற நோக்கத்திற்கு மிக உயர்வான இடம் அளிக்கப் பட்டுள்ளது. 'இறையாண்மைக்கு' அடுத்ததாக 'சோஷலிசம்' சேர்க்கப் பட்டுள்ளது. எனினும் 'சோஷலிசம்' என்பதை நமது அரசியலமைப்பு வரையறை செய்யவில்லை.

'சோஷலிசம்' என்பது சமூக, பொருளாதார, அரசியல் சுரண்டல்களில் இருந்து விடுபடுவதைக் குறிக்கும் என்று அரசியலமைப்பின் 45ஆவது திருத்த மசோதா வரையறுக்க முனைந்தது. ஆனால் அந்த வரையறை இல்லாமலேயே அம்மசோதா, பின்னர் அரசியலமைப்பின் 44ஆவது திருத்தமாக ஏற்கப்பட்டது. சோஷலிசம் என்பதை வரையறுப்பது சிரமம். பலரும் அதற்குப் பலவிதமாகப் பொருள் கூறினாலும் திட்டவட்டமான பொருள் உருவாகவில்லை. அகராதிப்படி பார்த்தால், உற்பத்திக் காரணி களையும் பகிர்மானத்தையும் மக்களின் கைகளில், அதாவது மக்களின் (அரசின்) பொறுப்பில் அல்லது கட்டுப்பாட்டில் வைத்திருப்பது என்று இதற்குப் பொருள். தனியார் உடைமைக்கும் கட்டுப்பாடற்ற நிறுவனங் களுக்கும் எதிர்மறையானது இது.

வருமானத்திலும், அந்தஸ்திலும், வாழ்க்கைத்தரத்திலும் ஏற்றத் தாழ்வுகளைக் களைவதே சோஷலிசமாகும். எனவே முகப்புரையில் 'சோஷலிச' என்ற சொல் சேர்க்கப்பட்டதற்குப் பின்னர், நீதிமன்றங்களில் நமது அரசியலமைப்புக்கு விளக்கமுரைக்கும் சந்தர்ப்பங்கள் தோன்றும்போது நாட்டுடைமையாக்கல், தனியார் சொத்துக்களையும் தொழிற்சாலைகளையும் அரசு ஏற்பது, சமவேலைக்குச் சம ஊதியம் வழங்குவது போனற கோட்பாடு களுக்கு முக்கியத்துவம் அளிக்கபபட்டு வருகின்றது.

## சமயச்சார்பின்மை

சமயச்சார்பின்மை என்பதை 'ஆன்மீகம் சாராதது', 'சமயத்துடன் தொடர்பு இல்லாதது', 'எல்லாவிதமான சமய நமபிக்கைகளையும் வழிபாட்டையும் மறுதலிக்கின்ற முறை', 'சமயம் சாராதது', 'இகவாழ்வு பற்றியது' என்று பலவிதமாக அகராதிகள் வரையறை செய்கின்றன. என்சைக்ளோபீடியா பிரிட்டானிகா, சமயச்சார்பின்மை என்பதை, மனிதகுலத்தின் இயல்பியல், ஆன்மீகம், நேர்மையுணர்வு ஆகியவற்றின் மேன்மைக்காக வரையப்பட்ட பயன்பாட்டு நெறி என்றும், அது சமயங்களின் இறைமைக் கொள்கைகளை

மறுதலிப்பதோ, ஏற்பதோ இல்லை என்றும் வரையறுக்கிறது. சமூக அறிவியல் என்சைக்ளோபீடியா, சமயச்சார்பின்மையை "இயற்கையை மீறிய முற்கோள்கள் பற்றிய கருத்துக்கள் ஏதுமற்ற சுயேட்சையான அறிவுநிலையை ஏற்படுத்தும் முயற்சி" என வரையறுக்கிறது.

மேலைநாடுகளில், சமயச்சார்பின்மை என்பதற்கான கருதுகோளையும் அளவுகோலையும் நிர்ணயிக்க முயன்ற ஏ ஆர் பிளாக்ஷீல்டு என்ற அறிஞரால் கூட, அச்சொல்லுக்கு முழுதும் உகந்ததான, அனைவரும் ஏற்றுக் கொள்ளக் கூடிய வரையறையை எட்ட முடியவில்லை. சமயம் என்பதற்கு நேர் எதிரானது அல்ல என்று அவர் ஒரு முடிவுக்கு வந்தாலும், சமயம் என்பதை வரையறுப்பதும் எளிதாக இருக்கவில்லை! சமயச் சார்பின்மை என்பதை சமயச் சுதந்திரத்தையும், சகிப்புத் தன்மையையும் உணர்த்துவதாகவும், பகுத்தறிவு, பொருண்மைவாதம், மனிதாபிமானம் ஆகியவற்றை மதித்துப் போற்றுவதாகவும் கொள்ள வேண்டும் என்று அவர் கூறுகிறார்.

இந்தியச் சூழ்நிலையில் சமயச்சார்பின்மை என்பதற்கு, டொனால்ட் ஈஜின் ஸ்மித் என்பவர் கீழ்க்கண்டவாறு விளக்கம் அளிக்க முயலுகிறார்:

> "சமயச் சார்பற்ற நாடு எனபது தனிநபர்களுக்கும் அமைப்புகளுக்கும் சமயச்சுதந்திரம் அளிக்கின்ற நாடாகும்; அரசியலமைப்பு ரீதியாக அது, குறிப்பிட்ட எந்த ஒரு சமயத்துடனும் தொடர்பற்றது, எந்த ஒரு சமயத்தையும்போற்றி வளர்க்கவோ, தலையிடவோ செய்யாதது."

நீதிபதி தேசாய் குறிப்பிட்டபடி, சமயச்சார்பற்ற நாடு, தனிமனிதனை, அவன் எந்தச் சமயத்தைச் சார்ந்தவனாய் இருந்தாலும் ஒரு குடிமகன் என்றே கருதுகிறது; அது எந்த ஒரு சமயத்துடனும் தொடர்பில்லாததாய் இருப்பதுடன், சமயத்தை வளர்க்கவோ, அதில் தலையிடுவதோ இல்லை. குற்றம், மோசடி போன்றவை சம்பந்தப்பட்டதாக சமயத்துறை நிர்வாகம் அமையும்போது, அல்லது நாட்டின் ஒற்றுமைக்கும் ஒருமைப்பாட்டுக்கும் அச்சுறுத்தல் நேரும்போது தவிர மற்ற நேரங்களில் சமயத்துறை விவகாரங்களில் சமயச்சார்பற்ற நாட்டுக்கு வேலையே இல்லை.

ஜியாவுதீன் பர்ஹாமுதீன் புஹாரி என்பவருக்கும் பிரிஜ் மோகன் ராம்தாஸ் மேஹ்ரா சகோதரர்களுக்குமான வழக்கில் (1975 Supplementary SCR 281) தீர்ப்பளிக்கும்போது நீதிபதி எம்.எச்.பெக் இவ்வாறு குறிப்பிட்டார்:

> "சமயச்சார்பற்ற நாடு, எல்லாவிதமான சமய வேறுபாடுகளுக்கும் அப்பாற்பட்டு, அதன் குடிமக்களின் சமய நம்பிக்கைகள் - பழக்க வழக்கங்கள் எப்படிப்பட்டவையாய் இருந்தாலும் அனைவருக்கும் நன்மையே விளைய முயலுகிறது. எல்லா சாதிகளையும் மதங்களையும் சார்ந்த குடிமக்களுக்கு நன்மைகள் கிடைக்கச் செய்வதில் அந்த நாடு பாரபட்சமின்றி நடுநிலைமையுடன் செயல்படுகிறது. குடிமககள் அனைவருக்கும் அரசியல் அல்லது சிவில் உரிமைகளை வழங்குவதானாலும், செயல்படுத்துவதானாலும், ஏதேனும் ஒரு பதவியை வகிப்பதற்கான உரிமையானாலும், திறமையானாலும் அல்லது அப்பதவியுடன் தொடர்புடைய பொதுப்பணியைச் செய்வதானாலும் அவை யாவுமே எந்த ஒரு சமயத்தையும் பின்பற்றுகின்றவர் என்ற முறையில் பாரபட்சம் காட்டாத வகையில் சட்டமியற்றுவதன் மூலம்

> உத்தரவாதம் அளிக்கப்பட வேண்டும் என மெய்ட்லேண்ட் குறிப்பிடுகிறார்.
>
> நமது அரசியலமைப்பும், அதன்படி இயற்றப்பட்ட சட்டங்களும், சட்டம், அரசியல் என்ற சமயம் சாராத இரு துறைகளுடனும், குடிமக்கள் அவரவர் சமயநெறிகளுக்கு மகிழ்வும், இசைவுமான நல்லுறவை அமைத்துக் கொள்ள வகை செய்கின்றன. ஆனால் ஒரு துறைக்கு உரியதான விஷயங்களின்மீது, இன்னொரு துறைக்கு உண்மையிலேயே உரியதுபோல் தோன்றும் விஷயங்கள் அநியாயமாக ஆக்கிரமிப்புச் செய்வதை அவை அனுமதிக்கவில்லை. எனவே தகராறு என்று வரும்போது ஏதேனும் ஒரு துறை தலையிடப்பட்டதா அல்லது சரிவரத் தலையிடப்படவில்லையா என்பதை அரசியலமைப்புக்கும் அதன் பொருளபடும் சட்டத்திற்கும் உட்பட்டு நீதிமன்றங்கள் தீர்மானிக்க வேண்டும்."

பெருந்தீங்கு பயப்பதும், சுரண்டும் தன்மையுடையதுமான எதுவுமே, சமயம் என்ற திரைமூடி அணிவகுத்து வருவதன் காரணமாக சட்டத்தின் கட்டுப்பாட்டுக்கு அப்பாற்பட்டு இருக்க அனுமதிக்க முடியாது.

பண்டைய இந்து சமூகத்தில் வழக்கத்தில் இருந்த சமயச்சார்பற்ற தன்மையை இஸ்லாமியச் சட்டவியலிலும் காணலாம் என்று நீதிபதிகள் கஜேந்திரகட்கர், தவான, பெக் ஆகியோர் கூறியுள்ளனர். சமயச் சார்பின்மை யிலும் சமயத்திலும் சிறந்த கூறுகளை ஒன்றிணைத்து மகிழ்ச்சியான நல்லிணக்கத்தை உருவாக்குவது சாத்தியமே என்று நீதிபதி பெக் கூறினார். பண்டைய சட்டவியலின் மீதே சமயச் சார்பின்மைக் கோட்பாட்டை எழுப்ப முடியும். கேசவானந்த பாரதி வழக்கில் மனு, பராசரர் ஆகியோரை மேற்கோளகாட்டி நீதிபதி இப்படிக் கூறினார்:

> "அடிபபடையான விஷயங்களில்கூட ஒரு தலைமுறை, தன்னுடைய நோக்கஙகளுக்கும், சட்டங்களுக்கும் கட்டுப்பட்டு வருங்காலத் தலைமுறைகள் நடக்க வேண்டும் எனறு எதிர்பார்க்க உரிமையில்லை எனபதை நம்முடைய பண்டைய நீதித்துறை வல்லுநர்கள் ஏற்றுக் கொண்டிருக்கின்றனர். ஒரு சமுதாயத்திற்கும் இன்னொரு சமுதாயத் திற்கும் இடையே மட்டுமின்றி, ஒரே சமுதாயத்தின் அல்லது நாட்டின் ஒரு தலைமுறைக்கும் இன்னொரு தலைமுறைக்கும் இடையேகூட அவை வேறுபடுகின்றன".

சமயச்சார்பின்மை என்பதற்கு இந்திய அரசியலமைப்பில் திட்ட வட்டமான முறையான வரையறை இல்லாத சூழலில், பல்வேறு வகையான விளக்கங்கள் சொல்வதற்கு வாய்ப்புகள் உள்ளன.

மேலைநாடுகளில் சமயத்துறைக்கும் அரசாங்கத்திற்கும் ஏற்பட்ட முரண்பாட்டினால் சமயச்சார்பின்மை தோன்றியது; இந்தியாவில் அப்படி யில்லை. இந்தியாவின் பன்முக இயல்புக்கு ஏற்றவாறு, அதன் பழைய வரலாற்றிலும் பண்பாட்டிலுமே சமயச்சார்பின்மை வேரூன்றி இருக்கிறது; பல்வேறு சமூகப்பிரிவினரின் எண்ணிக்கையைப் பற்றி அக்கறை கொள்ளாமல் அனைவருக்கும் நியாயமான முறையை உருவாக்க வேண்டும் என்றே நமது அரசியலமைப்பை உருவாக்கியவர்கள் விருப்பம் கொண்டிருந்

தனர். எனவே நம் நாட்டில் நடைமுறையில் 'வகுப்புவாதம்' என்பதற்கு எதிர்மறையாகவே 'சமயச்சார்பின்மை' பயன்படுத்தப்பட்டு வருகிறது.

அரசியல் நிர்ணயசபையில் முதலில் ஏற்றுக்கொள்ளப்பட்டபோது முகப்புரையின் வாசகத்தில் 'சமயச்சார்பற்ற' என்ற சொல் இடம்பெற்றிருக்க வில்லை (சோஷலிச என்ற சொல்லைப் போலவே). அவசரநிலையின்போது 42ஆவது அரசியலமைப்புத் திருத்தச் சட்டத்தின் மூலமாக 'குடியரசு' என்பதற்கு அடைமொழியாக 'சோஷலிச' என்ற சொல்லும் 'சமயச்சார்பற்ற' என்ற சொல்லும் சேர்க்கப்பட்டன. அந்தச் சொல்லுக்கு, 'தர்ம நிரபேக்ஷா' அல்லது 'பந்த் நிரபேக்ஷா'—அதாவது, சமயம் தொடர்பான விஷயங்களில் விலகலான நடுநிலைமை வகிப்பது என்பதற்குப் பதிலாக, 'சர்வ தர்ம சம்பவா'—அதாவது எல்லாச் சமயங்களையும் சமமாக பாவிப்பது அல்லது சமமான மரியாதை அளிப்பது என்று பொருள் சொல்லப்பட்டது.

சமயச்சார்பின்மை என்பதற்கு இயல்பான, சாத்தியமான ஒரே விளக்கம் இதுவாகத்தான் இருக்க முடியும். ஏனெனில் இந்தியாவில் நிலவு கின்ற மறுக்க முடியாத உண்மைகளுக்குப் பின்னணியில், சமயச்சார்பின் மைக்கு மேலைநாடுகளில் வழங்கப்படும் பொருள் முற்றிலும் பொருத்த மற்றதாகிவிட்டது. நம்நாட்டுச் சூழலில் சமயச்சார்பின்மை என்பதற்கு இறையியல் கட்டுப்படுத்தல்கள் இல்லாத அரசு என்பதே பொருள்; அதாவது நாட்டுக்கு என்று சொந்தமான சமயம் எதுவும் கிடையாது; எல்லாச் சமயங்களும் சமமானவை; எனவே சமயத்தின் அடிப்படையில் குடிமக்களுக்கு இடையே எந்தவிதமான பேதமும் கிடையாது.

இந்திய அரசியலமைப்பில் கூறப்படும் சமயச்சார்பின்மை என்பது, குடிமக்கள் எந்த மதத்தவராயினும், சமயத்திற்கு எவ்வித முக்கியத்துவமும் அளிக்காமல் அனைவருக்கும் சமஉரிமை அளிப்பதே என்று நீதிபதி கஜேந்திரகட்கர் வரையறை செய்திருக்கிறார். "எந்த ஒரு குறிப்பிட்ட சமயத் திற்கும் நாடு கட்டுப்பட்டதல்ல; அது சமயமற்றதும் அன்று; சமயத்திற்கு எதிரானதும் அன்று. எல்லாச் சமயங்களுக்கும் அது சமஉரிமை அளிக்கிறது" என்று அவர் கூறினார். சமயத்தின் சட்டப்பூர்வமான செயல்பாடுகளுக்கும், அரசின் சட்டப்பூர்வமான வளர்ந்து வரும் செயல்பாடுகளுக்கும் இடையே பகுத்தறிவான இணக்கமுறை ஒன்றை உருவாக்குவதே இந்திய சமயச் சார்பின்மையாகும். சமயச்சார்பற்ற நாட்டிலே குடிமக்கள் அனைவரும் ஒரே மாதிரியாகவே நடத்தப்பட வேண்டும்; அவர்களுடைய சமயத்தின் அடிப்படையில் பேதம் காட்டக்கூடாது என்று எம்சி. சேதல்வால்டும் கூறுகிறார்.

42ஆவது திருத்தத்திற்கு முன்னர் நமது அரசியல் சட்டத்தின் பிரிவு 25(2)-ல் மட்டுமே 'சமயச்சார்பற்ற' என்ற சொல் இடம் பெற்றிருந்தது. சமய நடைமுறைகளுடன் சம்பந்தப்பட்ட 'சமயச்சார்பற்ற செயல்பாடுகளை' முறைப்படுத்தவும் கட்டுப்படுத்தவும் அந்தப் பிரிவு அரசுக்கு அதிகாரம் அளித்தது. இங்கே சமயச்சார்பின்மை என்பதற்கு சமயம் சம்பந்தப்படாதது அல்லது முழுக்க முழுக்க சமயத்தொடர்பில்லா பிற விஷயங்கள் என்ற பொருள் தெற்றென விளங்கும். சமயச்சார்பின்மை என்ற சொல்லைச் சேர்த்த 42ஆவது அரசியலமைப்புத் திருத்தச்சட்டம் அதை வரையறை

செய்ய முனையவில்லை இருந்தபோதிலும் அரசியலமைப்பின் அடிப்படைக் கூறாக ஏற்கெனவே இருந்து வந்ததையே, தெளிவுபடுத்தி வலியுறுத்தும் நோக்கில் அந்தச் சொல் சேர்க்கப்பட்டதாகக் கருதப்பட்டது. கேசவானந்த பாரதி வழக்கிலும் மினர்வா மில்ஸ் வழக்கிலும் சமயச்சார்பின்மையானது அரசியலமைப்பின் அடிப்படைக்கூறு என்றே சொல்லப்பட்டது. மேலும், அடிப்படைச் சுதந்திரங்களில் சமயச்சுதந்திரம் வாயிலாகவும் இது உட்கிடக்கையாக உள்ளது. செயிண்ட் சேவியர் கல்லூரிச்சங்கம் எதிர் குஜராத் அரசு என்ற வழக்கில் 1974ஆம் ஆண்டு தீர்ப்பளிக்கும்போது, சமயச் சார்பற்ற நாடு என்று நமது அரசியல் சட்டம் எவ்விடத்திலும் குறிப்பிடவில்லை என்றாலும், அத்தகைய நாட்டை உருவாக்க வேண்டு மென்றே அரசியலமைப்பை உருவாக்கியவர்கள் விரும்பினர் என்பதில் ஐயமேதுமில்லை என்று உச்சநீதிமன்றம் கூறியது.

அரசியலமைப்பின் சமயச்சார்பற்ற தன்மையும் மக்களாட்சிப் பண்பும் அதன் அடிப்படைக் கூறுகளில் விரவியிருக்கின்றன என்பதை வலியுறுத்து வதற்காக 45ஆவது அரசியலமைப்புத் திருத்த மசோதா கொண்டு வரப்பட்டது. எனினும் அந்த மசோதா 44ஆவது திருத்தச் சட்டமாக ஏற்றுக்கொள்ளப்படுவதற்கு முன்னரே அரசியலமைப்பின் அடிப்படைக் கூறுகள் பற்றிய பட்டியல் நீக்கப்பட்டுவிட்டது. முகப்புரையில் சமயச் சார்பினமை என்ற சொல்லைப் பயன்படுத்தியுள்ளதைத் தவிர, அரசியல் சட்டத்தின் வேறு எந்த இடத்திலும், சமயமும் அரசியலும் கலக்க அனுமதிக்கக கூடாது எனறோ, அரசியல் நோக்கங்களுக்காக சமயப் பிரச்சினைகளையும், சமய நிதியையும், வழிபாட்டு இடங்களையும் பயன் படுத்த அனுமதிக்கக கூடாது என்றோ திட்டவட்டமாகச சொல்லப்பட வில்லை.

ஷாபானு வழக்கில், நமது சட்டமியற்றுவோர், முஸ்லீம் பழமைவாதி களின் நெருக்குதல்களுக்குப் பணிந்துவிட்டனர். சமயச்சார்பின்மை அல்லது அனைவருக்கும் சமநீதி என்றஅரசியலமைப்பின் அடிப்படையான ஆதார உணர்வுகளுக்கு எதிராக முஸ்லீம் பெண்கள் (விவாகரத்து உரிமைப் பாதுகாப்பு) சட்டம் 1986 இயற்றப்பட்டு, உச்சநீதிமன்றத்தின் தீர்ப்பு செல்லாததாக்கப்பட்டது.

இந்த விஷயங்களுக்கு எல்லாம் அப்பாற்பட்டு, இந்திய அரசிய லமைப்புச் சட்டத்தில் 'சமயச்சார்பற்ற' என்ற சொல்லுக்குச் செயல்படும் விளக்கம் அளிக்க வேண்டுமானால், 14, 15, 16, 19, 25, 26, 27, 28, 44 போன்ற பிரிவுகளில் இருந்துதான் அவற்றைப் பெறவேண்டும். முகப்புரையின் திருத்தப்படாத மூலவாசகத்தில்கூட மற்ற உரிமைகளுடன் சமய நம்பிக்கை மற்றும் வழிபாட்டுரிமை சேர்க்கப்பட்டிருந்தது. வேறுவிதமாகச் சொல்வ தானால், எல்லாருக்கும் சமயச்சுதந்திரம் அளிப்பதென்ற திட்டவட்டமான உறுதிப்பாடாக அது திகழ்ந்தது. மேலும், சம அந்தஸ்து, சம வாய்ப்புகள், இந்திய மக்கள் அனைவரிடையேயும் சகோதரத்துவ மனப்பான்மை ஆகிய கோட்பாடுகளாலும் அது வலியுறுத்தப்பட்டது.

சமயம், சாதி, இனம் என்னும் எல்லாவிதமான வேறுபாடுகளையும் கடந்த ஒரு நாட்டை உருவாக்க வேண்டுமென்பதே நமது அரசியலமைப்பை

உருவாக்கியவர்களின் நோக்கமாக இருந்தது. அவர்கள் சமயத்திற்கு எதிரானவர்கள் அல்லர்; இந்திய மக்களிடையே அரசியல் ஒற்றுமையை உருவாக்க முடியும், தேசிய நிர்மாணத்தில் சமய பேதங்கள் இடையூறாக இருக்காது என்று அவர்கள் நம்பினர். வகுப்புச் சண்டைகள் இல்லாத, சமூக, பொருளாதார, அரசியல் நீதி அடிப்படையிலான புதிய சமுதாய அமைப்பினை உருவாக்க நமது அரசியலமைப்பு விழைந்தது. சாதி, சமயம் போன்ற காரணங்களினால் குடிமக்களிடையே பாரபட்சம் காட்டாத அரசாங்கம் உருவாகவேண்டும் என அது விரும்பியது அரசிடமிருந்து, பெரும்பான்மையினர் விசேஷ சலுகைகளையோ, முன்னுரிமைகளையோ அனுபவிக்காததாகவும், சிறுபான்மையினரின் சமய உரிமைகள் பல வழிகளிலும் பாதுகாக்கப்படுவதாகவும் சமயச்சார்பற்ற ஓர் அமைப்பை உருவாக்கவே அரசியலமைப்பு விரும்பியது.

சமயச்சார்பின்மை என்ற சொல் தெளிவுபட அரசியலமைப்பிலேயே வரையறுக்கப்பட வேண்டும் என்பதும், தனிநபரோ, கட்சியோ, அரசியல் காரணங்களுக்காக சமயத்தைத் தவறாகப் பயன்படுத்துவதைத் தடுக்கக் கடுமையான சட்டங்கள் இயற்றப்படுவதுடன் ஏற்கெனவே இருக்கும் சட்டங்களும் கடுமையாக அமல்படுத்தப்பட வேண்டும் என்பதும் அவசியமெனத் தெளிவாகப் புலனாகிறது. (80ஆவது அரசியலமைபபுத் திருத்த மசோதா 1993 மூலமாக அரசியல் சட்டத்தை திருத்துவதற்கு மேற்கொண்ட முயற்சி தோற்றுப்போனது பற்றியும், இநத விஷயம் குறித்த விரிவான விவாதத்திற்கும் 'அரசியலையும் சமயத்தையும் பிரித்தல்' என்ற என்னுடைய இன்னொரு நூலைக் காண்க)

## மக்களாட்சி

'சோஷலிசம்' அல்லது 'சமயச்சார்பின்மை' போலவே 'மக்களாட்சி' எனப தற்கும் பல்வேறு பிரிவு மக்களும் பல்வேறு வகையாகப் பொருளுரைக கின்றனர். கிரேக்க மொழியில் 'டெமோஸ்' என்றால் மக்கள் என்றும், 'க்ரடோஸ்' என்றால் அரசு என்றும் பொருள். எனவே 'டெமாக்ரஸி' என்ற சொல்லுக்கு மக்களால் நடத்தப்படும் அரசு என்று பொருள். இதையே தமிழில் மக்களாட்சி என்கிறோம். தனி மனிதனின் எதேச்சாதிகார ஆட்சிமுறைகளான முடியாட்சி, சர்வாதிகார ஆட்சி, ஒரு சிலரின் கூட்டு ஆட்சிமுறைகளான, ஆலிகார்கி, அரிஸ்டோகிரஸி ஆகியவற்றுக்கு நேர் எதிரானது மக்களாட்சி. சாதி, சமய, இன, நிற, பால் வேறுபாடுகளுக்கு அப்பாற்பட்டும், பொருளாதார, கல்வி, தொழில் பின்னணி நிலைகளுக்கு அப்பாற்பட்டும் மக்களிடமே இறையாண்மை இருக்கிறது; சட்டத்தின் முன் அனைவரும் சமம்; ஒவ்வொருவரும் தம்மையும் தன்னுடைய விவாகரங் களையும் தான் சரியென்று நம்புகின்ற விதமாக நிர்வகித்துக் கொள்ளமுடியும் என்பது போன்றவையே மக்களாட்சியின் அடிப்படைக் கூறுகளாகும். மக்களாட்சியில் அவரவருக்கு அவரவரே தலைவர். அவர்களை அவர்களே ஆட்சிசெய்து கொள்ளவோ, அவர்கள் விரும்புகின்ற வகையில், தேர்ந்தெடுப் பவர்கள் மூலமாக ஆளப்படவோ அவர்களுக்கு முழுமையான உரிமை உள்ளது.

மிகப் பழங்காலம் தொட்டே அதிகாரத்திற்காகவும், மேலாண்மைக் காக்வும் மனித இனம் தனக்குள்ளே சண்டையிட்டுவந்த உண்மையையும் மக்களாட்சி நெறி ஒப்புக் கொள்கிறது. இந்தப் போட்டியை மிகவும் நாகரிகமாகச் செய்வதற்கு மக்களாட்சி முயலுகிறது. ஆயுதப் போராட்ட முறைகளுக்குப் பதிலாக விவாதம், இணக்குவித்தல் போன்ற முறைகளைப் பின்பற்றுவதே அது. துப்பாக்கிக் குண்டுக்குப் பதிலாக வாக்குச் சீட்டு. இங்கே நாம் அனைவரும் ஒருசேர அமர்ந்து, பேசி,விவாதிக்கிறோம்; நாம் ஒவ்வொருவரும் நமது கருத்துக்களாலும், வாதங்களாலும், இணக்குவிக்கும் போக்காலும் மற்றவரை நம் கருத்தினை ஏற்கச் செய்ய முயலுகிறோம்.

பண்டைய இந்திய கிராமக் குடியரசுகளிலும், கிரேக்க நகர அரசுகளிலும் குடிமக்கள் அனைவரும் ஓரிடத்தில் கூடி ஆட்சி பற்றிய விஷயங்களைத் தீர்மானித்தனர். நாட்டின விஷயங்கள் குறித்துத் தீர்மானிக்க இப்படி மக்கள் நேரிடையாக தமது அதிகாரத்தைப் பயன்படுத்திய முறையை நேரிடையான வெகுஜன மக்களாட்சி என்று அழைக்கலாம். இதில் சட்டம் மற்றும் அரசியல் இறையாண்மை மக்களிடமே இருந்தது எனலாம். ஆனால், மக்கள் தொகை பெருகி, அரசியல் அலகுகளின் அளவுகள் பெரியதாகி, தற்கால நாடு-அரசு என்ற அமைப்புகள் தோன்றிவிட்டதால், குடிமக்கள அனைவரையும் ஓரிடத்தில் கூட்டி, நாட்டு விவகாரங்களை விவாதித்து சுமுகமான முடிவெடுப்பது இயலாததாகி விட்டது. அத்துடன் சட்டமியற்றும் விஷயங்களும், நாட்டு நிர்வாகமும் மேலும் மேலும் சிக்கல் நிறைந்ததாகி விட்டன. எனவே உலகம் முழுவதிலும் அனைத்து விதமான நேரடி மக்களாட்சி முறைகளும் படிப்படியாக மறைந்து விட்டன. ஒரு சில சுவிஸ் முறை மண்டலங்களில் மட்டுமே வழக்கில் உள்ளன. வியாழக்கிழமைகளில் பள்ளிகள் மூடப்பட வேண்டுமா, ரொட்டியின் விலை உயர்த்தப்பட வேண்டுமா என்பது போன்ற விஷயங்கள் கூட அந்த மண்டலங்களில் மக்களால் நேரிடையாகத் தீர்மானிக்கப் படுகின்றன. சில நாடுகளில், சர்வதேச முக்கியத்துவம் வாய்ந்த சில விஷயங்கள் குறித்து மக்கள் அனைவரும் பங்கேற்கும் கருத்துக் கணிப்புகள் நடைபெறுவதுண்டு. சில நாடுகளின் அரசியலமைப்புகளில் (எ.கா. பிரான்ஸ், அயர்லாந்து, ஜப்பான், சுவிட்சர்லாந்து) அரசியலமைப்புத் திருத்தம் நிறைவேற்றப்பட வேண்டு மானால், மக்கள் அனைவரும் நேரிடையாகப் பங்கேற்கும் கருத்துக் கணிப்புகள் நடத்தப்பட வேண்டுமென வகை செய்யப்பட்டுள்ளது. ஆனால் பொதுவாக பல்வேறு நாடுகளிலும், தமது பிரதிநிதிகளைத் தேர்ந் தெடுப்பதற்காகத்தான் குறிப்பிட்ட கால இடைவெளியில் மக்கள் வாக்களிக்கின்றனர். எனவே இன்றைய மக்களாட்சி முறையில் மறைமுக பிரதிநிதித்துவ மக்களாட்சியே அத்தியாவசியமாகி விட்டது. அங்கே மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளே அரசாங்கத்தை நடத்திச் செல்வதுடன், சட்டமியற்றும் பணிகளையும் செய்கின்றனர்.

இவ்வாறாக, மக்களாட்சி அரசியல் என்பது நமது அரசியலமைப்பின் எந்தத் திருத்தங்களாலும் மாற்றமுடியாத, அடிப்படைக் கூறுகளில் ஒன்றாகி விட்டது. அத்துடன் இதேபோல் பிரதிநிதித்துவம் கொண்டதும் சட்டப் பூர்வமானதுமான வேறு பல மக்களாட்சி அமைப்புகளும் உள்ளன.

பிரதிநிதித்துவ நாடாளுமன்ற மக்களாட்சி முறையையே நாம் ஏற்றுக் கொண்டிருக்கிறோம். எழுத்தறிவு, சொத்துடைமை, வருமான வரி, பால் வேறுபாடு என்று எந்தவித அளவுகோலும் இல்லாமல், பரந்துபட்ட இந்த நாட்டின் வயதுற்றோர் அனைவருக்கும் வாக்குரிமை அளித்து அதன் மூலம் முழுமையான பிரதிநிதித்துவத்தை வழங்க அரசியலமைப்பை உருவாக்கியவர்கள் முயன்றுள்ளனர். 18வயதுக்கு மேற்பட்ட ஆண்-பெண் இருபாலாருக்கும் வாக்குரிமை (பிரிவு 326), மக்களால் தேர்ந்தெடுக்கப்படும் சட்டமியற்றும் அவைக்கு நிர்வாகம் பதில் அளிக்கும் பொறுப்புடையதா யிருப்பது (பிரிவுகள் 75(3) மற்றும் 164(2)) ஆகிய விதிகள் இதற்குச் சான்றாக அமைந்துள்ளன.

## குடியரசுப் பண்பு

குடியரசு என்றால் அந்த நாட்டிலே மக்களே மேலாண்மை பெற்றவர்கள்; சிறப்புரிமை பெற்றவர்கள் என்று அங்கு யாருமில்லை; அங்கே எந்தவிதமான பேதமும்இன்றி குடிமக்கள்அனைவருக்கும் அரசாங்க அலுவலகங்கள் அனைத்தும் பொதுவானதாகும். பரம்பரையான ஆட்சியாளர் யாருமில்லை; நாட்டின் தலைவர் பதவிக்கு ஒருவரை ஒரு குறிப்பிட்ட காலத்திறகு மக்களே தேர்ந்தெடுக்கின்றனர். "மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதி நிதிகளால் ஆன அரசு" என்று குடியரசு முறையை கூலே என்பவர் வரையறை செய்கிறார் "குடியரசு என்பது, அரசன்போன்ற தனியொரு மனிதனிடம் உச்சநிலை அதிகாரம் இல்லாமல், மக்களிடம் அதிகாரம் இருககின்ற நாடு" எனறு நீதிபதி ஹிதாயத்துலலா கூறியுள்ளார். எனவே மக்களாட்சிக் குடியரசு எனும்போது, தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவரும். மக்கள் பிரதிநிதிகளால் ஆன அரசும் கொண்ட அமைப்பு என நாம் பொருள் கொள்ளலாம். பெடரலிஸ்ட் என்னும் நூலில் மடிசன இவ்வாறு கூறுகிறார்:

> "மக்களிடமிருந்து நேரிடையாகவோ, மறைமுகமாகவோ அதிகாரத்தைப் பெறகின்ற அரசே குடியரசு: குடியரசினை நிர்வகிக்கின்றவர்கள், மக்கள் விரும்புகின்ற வரையில் ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு, அல்லது அவர்கள் நன்னடத்தை உடையவர்களாய் இருக்கின்றவரை பதவிகளை வகிக்கலாம்."

பரந்துபட்ட இந்தப் பொருளில்தான், இந்தியா ஒரு குடியரசாகத் திகழ்கிறது என முகப்புரை கூறகிறது. 1950 ஜனவரி 26-ல் அரசியலமைப்பு அமலுக்கு வந்தவுடனேயே இந்தியா 'டொமினியன்' என்ற நிலையிலிருந்து மாறியதுடன், பிரிட்டிஷ் பேரரசிக்கு விசுவாசமாக இருக்க வேண்டிய கடப் பாட்டிலிருந்தும் விடுபெற்றது. மக்கள் பிரதிநிதிகள்அடங்கிய வாக்காளர் தொகுதியில் இருந்து ஒரு குறிப்பிட்டகாலத்திற்கு ஒன்றியத்தின் தலைவராகிய குடியரசுத் தலைவர் தேர்ந்தெடுக்கப்படுகிறார். குடிமக்கள் அனைவரும் சட்டத்தின்முன் சமம்; சிறப்பு உரிமையுள்ளவர்கள் என்று எந்தப் பிரிவும் கிடையாது; சாதி, சமயம், இனம், பால்வேறுபாடு இன்றி எல்லாக் குடி மக்களுமே அரசாங்கத்தின் எந்தப் பொறுப்பை வேண்டுமானாலும் வகிக்கலாம்.

**காமன்வெல்த் அமைப்பில் உறுப்பினர்:** சுதந்திரத்திற்குப் பின்னரும் காமன்வெல்த் அமைப்பில் உறுப்பினராகத் தொடர்ந்து நீடிப்பதென்று இந்தியா தீர்மானித்தபோதும், இறையாண்மையுடைய நாடு என்ற நிலையில் இருந்தோ, குடியரசு என்ற நிலையில் இருந்தோ தன்னுடைய தகுதியைக் குறைத்துக் கொள்ளவில்லை; அதுபோன்ற சமரச எண்ணம்கூட எந்தச் சூழ்நிலையிலும் உருவாகவில்லை. சொல்லப்போனால் காமன்வெல்த் அமைப்புதான் மாறிப்போனது. 'பிரிட்டிஷ் காமன்வெல்த்' என்றிருந்தது, 'நாடுகளின் காமன்வெல்த்' என்றானது. முற்றிலும் இறையாண்மை கொண்ட சம அந்தஸ்துடைய நாடுகளின் தன்னிச்சையான கூட்டமைப்பான அதில், தன்னிச்சையான கூட்டமைப்பு என்பதற்கு அடையாளமாக பிரிட்டிஷ் பேரரசி ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறார். இறையாண்மையுடைய சுதந்திரக் குடியரசு என்ற இந்தியாவின் நிலையை சிறப்பாக காமன்வெல்த் அங்கீகரித் திருக்கிறது. புதிய காமன்வெல்த் அமைப்பு 'சுதந்திரமான விருப்பத்துடன் உருவான உடன்படிக்கை' என்றும், எந்த நேரத்திலும் அந்த உடன் படிக்கையைச் சுதந்திரமான விருப்பத்துடன முடித்துக் கொள்ளலாம் என்றும் நேரு குறிப்பிட்டார் எனவே அது நம்நாட்டின் இறையாண்மை, மக்களாட்சி, குடியரசு ஆகிய இயல்புகளைப் பாதிக்கவில்லை.

*சமூக-பொருளாதார மக்களாட்சி:* அரசியல் காரணிகளில் மட்டுமே உருவாகும மக்களாட்சி, குறிப்பிட்ட கால இடைவெளியில் நடைபெறும் தேர்தல்களில் வாக்களிக்கும் உரிமையை மட்டுமே குடிமக்கள் அனை வருக்கும் வழங்குகிறது. மக்களாட்சிமுறைத் தேர்தல்கள் அனைத்திலும் பின்பற்றப்படும் 'ஒருவருக்கு ஒரு வாக்கு' என்ற கோட்பாடு அனைவருக்கும் சம உரிமை என்ற அடிப்படையில் தோன்றியது. படித்தவராயினும், பாமரராயினும், நிபுணர்களானாலும், தொழில்நுட்ப வல்லுநர்களானாலும், தொழிலதிபர்களானாலும், தொழிலாளர்களானாலும் அனைவருக்கும் சமஉரிமை. ஆனால், அவ்வப்போது நடைபெறும் தேர்தல்களில் தங்கள் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுப்பதற்காக வாக்களிக்கும் உரிமை மட்டுமே உள்ள அரசியல் மக்களாட்சியை நமது அரசியலமைப்பை உருவாக்கியவர்கள் கருத்தில் கொண்டிருக்கவில்லை. இந்தியாவைபபோன்ற ஏழைநாடுகளில் சமூக-பொருளாதார மக்களாட்சி இல்லாமல் அரசியல் மக்களாட்சி என்பது பொருளற்றது. சமூக-பொருளாதார மக்களாட்சியை அடைவதே டாக்டர் அம்பேத்கருக்கு உண்மையான, உறுதியான இலட்சியமாக இருந்தது. உண்மையான இலட்சியமாகிய பொருளாதார மக்களாட்சியை அடைகின்றவாறு நாடாளுமன்ற மக்களாட்சியை முடுக்கிவிடாதவரை அதற்கு பொருளே இல்லை என்று அவர் கூறினார். மக்களாட்சி என்பது, இலட்சியத்தை அடைவதற்கான ஒரு வழி மட்டுமே என்று பின்னொரு முறை ஜவாகர்லால் நேரு கூறினார். அத்தியாவசியமான சில பொருளாதாரத் தேவைகளை நிறைவு செய்கின்றவாறு மக்கள் அனைவருக்கும் நல்ல வாழ்க்கையை அமைத்துக் கொடுப்பதே அந்த இலட்சியம். அரசியல் துறையில் ஒரு மக்களாட்சி வெற்றி பெற்றாலும்கூட, பொருளாதாரச் சிக்கல்களைத் தீர்க்கும்போதுதான் உண்மையிலே அது வெற்றி பெற்றதாகிறது. பொருளாதாரச் சிக்கல்கள் தீர்க்கப்படாதபோது, அரசியல் கட்டுக்கோப்பு

நலிவுற்று விரிசலடையத் தொடங்கிவிடும். எனவே அரசியல் மக்களாட்சி என்ற நிலையில் இருந்து, எல்லாருக்கும் ஓரளவு நன்மை கிடைக்குமாறு செயல்படுகின்ற பொருளாதார மக்களாட்சியை நோக்கி நாம் முன்னேற வேண்டும். அத்தகைய நாடு 'நலம் பேணும் நாடு' எனப்படும். அதேசமயத்தில், பொருளாதாரத்தில் அனைவருக்கும் சமவாய்ப்புக் கிடைப்பதற்குப் பாடுபடுவதற்கான வழியையும் அது உருவாக்க வேண்டும். இந்தக் கருத்தையே, குடியரசின் குடிமக்கள் அனைவருக்கும் 'சமூக, பொருளாதார, அரசியல் நீதி உத்தரவாதமளிக்கப்பட வேண்டுமென' முகப்புரை தெள்ளத்தெளிவாகக் கூறுகிறது.

## நீதி

குடிமக்கள் அனைவருக்கும் நீதி கிடைக்கும் என்று முகப்புரை உறுதியளிக்கிறது. ஒருபுறத்தில் தனிநபர்களுக்கு இடையேயும், மக்கள் பிரிவுகளுக்கு இடையேயும், தனிநபர்களுக்கும் மக்கள் பிரிவுகளுக்கும் இடையேயும் நலன் பேணுவதுடன், மற்றொரு புறத்தில் சமுதாயத்தின் நலனையும் பேணுவதே நீதியாகும். ஏனைய கோட்பாடுகளான சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் ஆகியவற்றைவிட மேலான இடத்தை நீதிக்கு வழங்கியுள்ளது முகப்புரை. சொல்லப்போனால் முகப்புரையில் இடம்பெற்றுள்ள நீதி, விரிவான பொருளுடையது. நீதிமன்றங்களில வழங்கப்படும் சட்டப்பூர்வமான நீதி என்ற குறுகிய பொருளை மட்டும் அது கொண்டதன்று. நமது நீதிமன்றங்கள், சட்டரீதியாக மட்டுமே தீர்ப்புரைக்கும் மன்றங்கள். நீதி என்பதை சமூக, பொருளாதார, அரசியல் நீதி என்று முகப்புரை வரையறை செய்கிறது. இங்கும்கூட அரசியல் நீதியைவிட சமூக நீதிக்கும், பொருளாதார நீதிக்கும்தான் முதலிடம் தரப்பட்டுள்ளது.

சமூகநீதி என்றால், குடிமக்கள் அனைவரும்—அவர்களுடைய பிறப்பு, சாதி, சமயம், இனம், பால் போன்ற வேறுபாடுகளுக்காகப் பாரபட்சம் ஏதுமின்றி—சமமாக நடத்தப்படுவதே ஆகும். பொது இடங்களை அணுகுவது குறித்த விஷயங்களில் பாரபட்சம் காட்டுவதை அரசியல் சட்டத்தின் 15ஆவது பிரிவு தடைசெய்கிறது. தேசிய வாழ்க்கையின் அனைத்து அமைப்புக்களிலும் சமூக, பொருளாதார, அரசியல் நீதி கிடைக்குமாறு ஒரு சமுதாய அமைப்பை உருவாக்கிப் பேணிக்காப்பதற்கு இயன்ற அளவு முயன்று, மக்கள் அனைவருக்கும் நன்மை கிடைக்க அரசு பாடுபடவேண்டும் என்று அரசியல் சட்டத்தின் 38ஆவது பிரிவு கூறுகிறது. "உணர்ச்சிப்பூர்வமான மக்களைச் சமூக நீதிக்கோட்பாடு எப்போதுமே ஈர்த்திருக்கிறது. மார்க்சியக் கோட்பாடு பல லட்சக்கணக்கான மக்களை ஈர்த்ததற்கு, அது அறிவியல் ரீதியான கொள்கையை உருவாக்க முயன்றது காரணமில்லை; மாறாக, சமூக நீதியின்பால் அது கொண்டிருந்த பெருவிருப்பமே அதற்குக் காரணம்" என்று நேரு கருதுகிறார்.

மனிதாபிமானமிக்க பணிச்சூழ்நிலை, மகப்பேறு சலுகை, ஓய்வு, பொருளாதார ரீதியாகப் பின்தங்கிய பிரிவினரின் நலனை மேம்படுத்துதல், குறைந்தபட்சக் கூலி, நிர்ப்பந்தமாக வேலைசெய்யும் முறையைத் தடுத்தல் போன்ற வகையுரைகள் (பிரிவு 23 & 43) அனைத்துமே சமூக நீதியை

நிலை நாட்டும் எண்ணத்தில் உருவாக்கப்பட்டவையாகும்.

பொருளாதார நீதி என்பது ஏழையும் செல்வந்தரும் ஒரேமாதிரியாக நடத்தப்படுவதுடன், இரு பிரிவினருக்கும் உள்ள இடைவெளியை நிரப்புவதற்கு முயற்சி மேற்கொள்வதும் ஆகும். பொருளாதார நீதி கிடைக்கச் செய்ய வேண்டும் என்ற இலக்கினை எட்ட, குடிமக்கள் அனைவருக்கும் அவர்கள் வாழ்க்கையை நடத்திச் செல்ல போதிய வழிவகைகளை ஏற்படுத்தித்தருவது; பொதுநலனை மேம்படுத்துகின்றவாறு சமுதாயச் சொத்துக்களின் உரிமையும் கட்டுப்பாடும் பகிர்ந்தளிக்கப்படுவது; பொது நலனுக்கு ஊறு விளைவிக்கின்றவாறு சொத்துடைமையும் உற்பத்திக் காரணிகளும் குவிந்து விடாமல் பொருளாதாரத்தின் செயல்பாடு அமைவது; ஆண்களுக்கும் பெண்களுக்கும் சமவேலைக்கு சம ஊதியம்; பெண்களும் சிறார்களும் தவறாகப் பயன்படுத்தப்படாமை; பொருளாதாரத் தேவைகளுக்காக மக்கள் தமது வயதிற்கும் வலுவுக்கும், பொருத்தமில்லாத வேலையைச் செய்யுமாறு நிர்பந்திக்கப்படாமை; குழந்தைகள் சுதந்திரமாகவும், கண்ணியமாகவும் ஆரோக்கியமான சூழலிலும் வளருவதற்குத் தேவையான வாய்ப்புகளையும் வசதிகளையும் உருவாக்கித்தருவது; சிறார் பருவமும் இளமைப்பருவமும் சுரண்டலில் இருந்து பாதுகாக்கப்படல்; ஆகியவற்றுக்காக உரிய நடவடிக்கைகளை அரசு மேற்கொள்ள வேண்டும் என 39ஆவது பிரிவு நெறிப்படுத்துகிறது.

சொல்லப்போனால், அரசியல் சட்டத்தின் நான்காவது பகுதியில் உள்ள பல பிரிவுகளும் (36-51) நீதி தோய்ந்த, புதிய சமூக-பொருளாதார அமைப்பை உருவாக்க வேண்டுமென நெறிப்படுத்துகின்றன. இவ்வாறு, வேலைசெய்யும் உரிமை, கல்வி பெறும் உரிமை, சில விஷயங்களில் அரசின் உதவிபெறும் உரிமை, மனிதாபிமான வேலைச் சூழ்நிலை, பேறுகாலச் சலுகை, வாழ்க்கைத்தரக் கூலி, சிறாருக்கு இலவச-கட்டாயக்கல்வி, நலிவடைந்த பிரிவினரின் பொருளாதார-கல்வி மேம்பாடு, நிர்வாகத் துறையிலிருந்து நீதித்துறையைப் பிரித்தல் போன்றவற்றுக்கு அரசியலமைப்பு வகை செய்கிறது.

அரசியல் நீதி என்றால், குடிமக்கள் அனைவரும் சாதி, சமய, இன வேறுபாடுகள் அல்லது பிறந்த இட வேறுபாடு எதுவுமின்றி அரசியல் நடவடிக்கைகளில் கலந்து கொள்ளும் உரிமையாகும். 16ஆவது பிரிவு அரசு வேலை வாய்ப்புகளில் சமவாய்ப்புகளுக்கு உத்தரவாதம் அளிக்கிறது; வயதுற்றோர் அனைவரும் தேர்தல்களில் பங்கு பெறுவதற்குச் சம வாய்ப்பு அளிக்க 325, 326ஆவது பிரிவுகள் வகை செய்கின்றன.

நமது அரசியலமைப்பை உருவாக்கியவர்களான நேரு, அம்பேத்கர் போன்றவர்கள், பொருளாதார நீதியில்லாத அரசியல் நீதி பொருளற்றது என்பதில் தெளிவாகவே இருந்தனர். சாதி, சமய, இன வேறுபாடுகள் நிறைந்த நமது சமுதாயத்தில், சமூக நீதி இல்லாமல் பொருளாதார நீதி மட்டும் போதுமானது அன்று. இதுபற்றி டாக்டர் அம்பேத்கர் அவர்கள்—

> "1950 ஜனவரி 26ஆம் தேதியன்று, முரண்பாடுகள் நிறைந்த ஒரு வாழ்க்கை முறைக்குள் நாம் அடியெடுத்து வைக்கப் போகிறோம். அரசியலில் சமத்துவம் இருக்கும்; ஆனால் சமுதாய வாழ்விலும்

பொருளாதார வாழ்விலும் ஏற்றத்தாழ்வுகள் இருக்கும். அரசியலில் ஆளுக்கு ஒரு வாக்கு என்றும் வாக்குக்கு ஒரு மதிப்பு என்றும் நமது கொள்கை இருக்கும். ஆனால் நமது சமூக-பொருளாதார வாழ்விலோ, அவற்றின் அமைப்புக் காரணமாக, ஒரு மனிதன்-ஒரு மதிப்பு என்ற கோட்பாட்டினை மறுதலித்துக் கொண்டே இருக்கப் போகிறோம்" என்று குறிப்பிட்டார்.

## சுதந்திரம்

'லிபர்' என்ற லத்தீன் சொல்லில் இருந்து உருவான 'லிபர்டி' என்ற சொல்லுக்கு சிறையிலிருந்தும், கைதி நிலையில் இருந்தும், அடிமைத்தனத்தில் இருந்தும், அடக்குமுறையில் இருந்தும் விடுபெறுவது என்று பொருள். தமிழில் சுதந்திரம் என்று சொல்லலாம். ஆனால் மேற்கத்திய தாராள மரபுகள், மற்றும் தலையிடா வாணிபக் கொள்கை போன்றவற்றில் இதற்குப் பெரும்பாலும் எதிர்மறையான பொருளே வழக்கத்தில் உள்ளது. தொழில், வாணிகச் சுதந்திரங்களில் கட்டுப்பாடு இல்லாதிருப்பது, தொழில்-வாணிகங் களில் சமவாய்ப்புகள், ஒப்பந்தம் மற்றும் போட்டிகளில் சுதந்திரம் என்று பலவாறாகப் பொருள் கொள்ளப்படுகிறது. தனி மனிதனின் செயல்பாட்டு உரிமைகளில் அரசு தலையிடாமல் இருப்பதே சதந்திரம் என ஏற்றுக் கொள்ளப்படுகிறது. ஆனால் நமது அரசியல் சட்ட முகப்புரையில் இடம் பெற்றுள்ள 'சுதந்திரம்' என்பது, ஆதிக்கமோ, கட்டுப்பாடோ இல்லாததை மட்டும் குறிக்கவில்லை. எண்ணம், கருத்து வெளிப்பாடு, சமய நம்பிக்கை, வழிபாடு ஆகியவற்றில் சுதந்திரமாகச் செயல்படுவது என்ற உடன்பாட்டுப் பொருளையே அது குறிக்கிறது. அடிப்படை உரிமைகள் பகுதியில் இடம் பெற்றுள்ள சுதந்திரங்களையும், தனிமனிதனின் மேம்பாட்டுக்கும் நாட்டின் மேம்பாட்டுக்கும் அத்தியாவசியமானவை எனக் கருதப்படும் சுதந்திரங் களையும் உள்ளடக்கியதாக அது திகழ்கிறது. எடுத்துக்காட்டாக, 19ஆவது பிரிவு, பேச்சுரிமை, கருத்து வெளிப்பாட்டு உரிமை போன்றவற்றைப் பாதுகாக்க உத்தரவாதமளிக்கிறது. இதைப்போலவே 25லிருந்து 28வரையுள்ள பிரிவுகள் சமய நம்பிக்கை, வழிபாடு உள்ளிட்ட அனைத்து விதமான சமய உரிமைகளையும் உள்ளடக்கியுள்ளன. பரந்துபட்ட இந்தப் பொருளில் பார்த்தோமானால், சுதந்திரம் என்பது, தனிமனிதன் விரும்புகின்ற எதையும் செய்கின்ற உரிமையைக் குறிக்கிறது. எனினும், சுதந்திரம் என்பதை உரிமம் என்பதில் இருந்து வேறுபடுத்திப் புரிந்து கொள்ளவும் வேண்டும். அரசிய லமைப்பின் அடிப்படை உரிமைகளில் விரிவாகச் சொல்லப்பட்டுள்ள சிந்தனை, கருத்து வெளிப்பாடு, சமய நம்பிக்கை, வழிபாடு போன்ற வற்றுக்கான சுதந்திரம், நாட்டின் பாதுகாப்பையும், பொதுநலனையும் பாதிக்காதவாறு கட்டுப்படுத்தப்படவும் வேண்டும்.

## சமத்துவம்

சட்டத்திற்கு முன் அனைவரும் சமம் என்று பிரெஞ்சுப் புரட்சியை நடத்திய தலைவர்கள் கூறினார்கள். சட்டம் தண்டனை அளித்தாலும் அல்லது பாதுகாப்பு அளித்தாலும், பிறப்புப் போன்ற காரணங்களுக்காக

பேதமின்றி அனைவரையும் ஒரே மாதிரியாக நடத்த வேண்டும். அத்துடன், குடிமக்கள் அனைவரையும், அவர்களுடைய திறமையையும், பண்பினையும், ஆற்றலையும் பொறுத்துத்தான், அரசுப் பதவிகளையோ, பிற பொறுப்புகளையோ, கௌரவங்களையோ பெறுவதற்குத் தகுதி பெற்றவர்களாகக் கருத வேண்டும்.

அரசியல் அறிவியல் துறையில் 'சமத்துவம்' என்றால் எல்லா மனிதர்களும் எல்லாச் சூழ்நிலைகளிலும் சமமானவர்கள் என்று பொருள் இல்லை. உடல் ரீதியாகவும், மனோரீதியாகவும், பொருளாதார ரீதியாகவும் வேறுபாடுகள் இருக்கத்தான் செய்யும். அரசியல் சட்ட முகப்புரையில் இடம் பெற்றுள்ள சமத்துவம் என்பது, அந்தஸ்திலும் வாய்ப்புகளிலும் சமத்துவம் அளிப்பதையே குறிக்கிறது. இந்தச் சட்டம், சமூகம், அரசியல் பொருளாதாரம் ஆகியவற்றின் பரிமாணங்களும் உண்டு. சட்டத்திற்கு முன் குடிமக்கள் அனைவரும் சமம்; நாட்டின் சட்டங்களின் மூலம் அனைவருக்கும் சமமான பாதுகாப்பு உண்டு. பொது இடங்களை அணுகுவது பற்றிய விஷயத்திலோ, அரசு வேலைவாய்ப்புகளிலோ சாதி, சமய, இன, பால் வேறுபாடுகளினாலோ, பிறப்பிடம் பற்றிய வேறுபாட்டினாலோ குடிமக்களுக்கு இடையே எவ்விதமான வேறுபாடும் இருத்தலாகாது. குடிமக்கள் அனைவரும் எவ்வித வேறுபாடும் இன்றி அரசியல் உரிமைகளை அனுபவிக்கவும் அரசாங்க நடைமுறைகளில் பங்கேற்கவும் சம உரிமை உண்டு. பொருளாதாரத் துறையில் சமத்துவம் என்பது, ஒரே மாதிரியான திறமைக்கும் உழைப்புக்கும் ஒரே மாதிரியாக ஊதியம் வழங்கப்பட வேண்டும் என்பதைக் குறிக்கும். அத்துடன் தனியொரு மனிதனோ, வர்க்கமோ மற்ற மனிதர்களையோ, வர்க்கங்களையோ சுரண்டக் கூடாது. அந்தஸ்திலும் வாய்ப்புகளிலும் சமத்துவம் என்ற கோட்பாட்டிற்கு அரசியல் சட்டத்தின் 14ஆவது பிரிவிலிருந்து 18ஆவது பிரிவுவரை திட்டவட்டமான உருவமளிக்கப்பட்டுள்ளது.

## சகோதரத்துவம்

நீதி, சுதந்திரம், சமத்துவம், ஆகிய நெறிகள் இந்திய மக்களிடையே சகோதர மனப்பான்மையை உருவாக்கினால்தான் அவற்றுக்குப் பொருள் உண்டு. இந்தியாவில் பல இன, மொழி, சமய வேறுபாடுகள் நிலவிய போதும், மக்கள் அனைவரும் இந்தியத் தாயின் புதல்வர்கள் என்ற எண்ணம் உருவாக வேண்டும். இந்திய மக்களிடையே சகோதர உணர்வை உருவாக்கவும், அனைவரும் இந்தியர் என்ற எண்ணத்தை வலுப்படுத்தவும்தான் பொதுவான குடியுரிமை வகையுரைகள் அரசியலமைப்பில் சேர்க்கப்பட்டுள்ளன. குடிமக்கள் அனைவருக்கும் பாரபட்சம் ஏதுமின்றி உத்தரவாதமளிக்கப் பட்டுள்ள அடிப்படை உரிமைகளும், சமூக-பொருளாதார சமத்துவத்தை அடையும் நோக்கில் சேர்க்கப்பட்டுள்ள அரசின் நெறிமுறைக் கோட்பாடுகளும், சகோதரத்துவத்தை வளர்க்கின்ற நோக்கிலேயே அமைந் துள்ளன. குடிமக்கள் அனைவருக்கும் அடிப்படைக் கடமைகளை விதிக்கின்ற அரசியல் சட்டத்தின் புதிய பகுதியான பகுதி IV-A வில் சகோதரத்துவம் என்ற கருத்து இன்னும் விரிவாக விவரிக்கப்பட்டுள்ளது. இந்திய

மக்களிடையே நல்லிணக்கத்தையும், சகோதர மனப்பான்மையையும் வளர்ப்பதுடன், எல்லாவிதமான சமய, மொழி, வட்டார, பிரிவினை வேறுபாடுகளையும் கடந்து அனைவரும் இந்தியக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் என்ற உணர்வை வளர்ப்பதும் ஒவ்வொரு குடிமகனின் அடிப்படைக் கடமையாகக் கூறப்பட்டுள்ளது. இன்னும் சொல்லப்போனால், சகோதரத்துவம் என்பது சமயச் சார்பின்மையைக் காட்டிலும் மிகவும் பரந்துபட்டதாகும். அரசியலில் இருந்து சமயத்தைப் பிரிப்பது, சமயச் சுதந்திரம், அனைத்துச் சமயங்களுக்கும் சம மரியாதை போன்றவற்றையெல்லாம் கடந்தது சகோதரத் துவம். ஆனால் நீதித்துறை வல்லுநர்களும், நீதிபதிகளும் இக்கருத்திற்குப் போதிய முக்கியத்துவம் அளிக்காதது பெருங்குறையாகும். சகோதரத்துவக் கோட்பாட்டின் இன்றியமையாமையை வலியுறுத்தி, அரசியல் நிர்ணய சபையில் பேசும்போது டாக்டர் அம்பேத்கர் இவ்வாறு குறிப்பிட்டார்:

> "சகோதரத்துவம் என்றால் என்ன? இந்திய மக்கள் அனைவரிடையேயும் சகோதர மனப்பான்மையை - அனைவரும் இந்தியக் குடிமக்கள் என்ற எண்ணத்தை வளர்ப்பதுதான் சகோதரத்துவம். அந்த உணர்வுதான் சமுதாய வாழ்க்கைக்கு ஒற்றுமையையும் வலிமையையும் தருகிறது; அதை அடைவது சிரமமானது."

சகோதரத்துவம் என்பதற்கு சர்வதேசப் பரிமாணம் ஒன்றும் உண்டு. உலகமக்கள் அனைவரையும் ஒரே குடும்பமாகப் பாவிக்கும் பண்டைய இந்திய நெறியான 'வசுதைவ குடும்பம்'—உலகோர் அனைவரையும் உடன் பிறப்பாளராய்க் கருதும் மனப்பாங்கு அது. 51ஆவது பிரிவில் அரசின நெறிமுறைக் கோட்பாடுகளில் இதுபற்றி விரித்துரைக்கப்பட்டுள்ளது.

## தனிமனிதனின் கண்ணியம்

சகோதரத்துவ உணர்வு தனிமனிதனின் கண்ணியத்தைப் போற்றிக் காத்து வளர்க்கும் என்று எதிர்பார்க்கப்பட்டது. தனிமனிதனின் கண்ணியத்திற்கே நமது அரசியலமைப்பை உருவாக்கியவர்கள் பெரிதும் முக்கியத்துவம் அளித்தனர். சுதந்திரம், சமத்துவம் போன்ற அடிப்படை உரிமைகளைத் தனிமனிதர்களுக்கு வழங்கியும், குடிமக்கள் அனைவருக்கும் வாழ்க்கையை நடத்திச் செல்லப் போதுமான வசதிகள், நியாயமான, மனிதாபிமான வேலைச்சூழல், கண்ணியமான வாழ்க்கைத் தரம் போன்றவற்றை வழங்க வேண்டுமென அரசிற்கு நெறிமுறைக்கோட்பாடுகளை அமைத்தும் வாழ்க்கைத் தரத்தை மேம்படுத்துவதே அரசியலமைப்பை உருவாக்கியவர்களின் நோக்கமாகும். மனித கண்ணியத்தை அவமதிக்கும் தீண்டாமைக் கொடுமையை ஒழிப்பதற்காக 17அவது பிரிவில் ஓர் அடிப்படை உரிமை சேர்க்கப்பட்டுள்ளது. தனிமனிதன் தன்னுடைய அடிப்படை உரிமைகளில் எவற்றையேனும் நிலைநிறுத்த வேண்டுமானாலும் அல்லது தன்னுடைய கண்ணியத்தைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமானாலும் நேரிடையாக அவன் உச்சநீதிமன்றத்தையே அணுகலாம்.

## நாட்டின் ஒற்றுமையும் ஒருமைப்பாடும்

தனிமனிதனின் கண்ணியத்தைப் பாதுகாக்க வேண்டுமானால் நாட்டின் ஒற்றுமையையும் ஒருமைப்பாட்டையும் நாம் பேணிக்காத்தாக வேண்டும். பல்வேறு வேற்றுமைகளையும், கதம்பப் பண்புகளையும் கொண்ட சமுதாயத்தில் சகோதர மனப்பான்மை மூலமே அது இயலும். மேலும், நாட்டில் ஒற்றுமையும் ஒருமைப்பாடும் இல்லாவிட்டால், பொருளாதார முன்னேறத்திற்கான நமது முயற்சிகளில் வெற்றி பெற முடியாது; மக்களின் கண்ணியத்தையோ, மக்களாட்சியையோ, சுதந்திரத்தையோ நாம் பேணிக் காக்கவும் முடியாது. எனவே, நாட்டின் இறையாண்மையையும் ஒற்றுமை யையும் ஒருமைப்பாட்டையும் பேணிக்காத்து உயர்த்துவது குடிமக்கள் ஒவ்வொருவரின் அடிப்படைக் கடமையாகும் என்று பிரிவு 51A கூறுகிறது. நாட்டின ஒற்றுமைக்கும் ஒருமைப்பாட்டுக்கும் அச்சுறுத்தல் ஏற்படுத்துகின்ற விஷயங்களிலாவது குடிமக்கள் ஒவ்வொருவரும் வேறுபாடுகளை மறந்து, தன்னலத்தை விடுத்து நாட்டின் ஐக்கியத்திறகாகப் பாடுபட வேண்டும். இவ்வாறு நடைபெறவில்லை என்றால் தேசிய நிர்மாணம் என்பது கானல் நீராகிவிடும்.

### முடிவுரை

முகப்புரையில் இடம்பெற்றுள்ள பல்வேறு சொற்களையும் வாசகங்களையும் இவ்வாறு பகுத்தாயும்போது, இந்திய அரசியலமைப்பின் பொழிப்பாக, சாரமாக, அதன் சித்தாந்தமாக, அதன் ஆன்மாவாக முகப்புரை திகழ்வது புலனாகிறது. முகப்புரையின் வாசகங்களுக்குத் திட்டவட்டமான உருவம் கொடுப்பதாகவும் விரித்துரைப்பதாகவுமே அரசியலமைப்பின் மற்ற பகுதி களும் வகையுரைகளும் அமைந்துள்ளன. அரசியலமைப்பின் சில அடிப் படைக் கூறுகள் அதன் முகப்புரையில் இடம்பெற்றுள்ளன என்றும், 368ஆவது பிரிவின்படி அரசியலமைப்புத் திருத்தச் சட்டத்தின் மூலமாகக் கூட அதனை மாற்றியமைக்க முடியாது என்றும் உச்சநீதிமன்றம் தீர்ப் புரைத்ததில் வியப்பேதுமில்லை.

எனினும், முகப்புரையில் பயன்படுத்தப்பட்டுள்ள 'சோஷலிச', 'சமயச் சார்பற்ற' போன்ற சொற்கள் தெளிவில்லாமல் இருப்பதாகவும், அவை திட்டவட்டமாக வரையறுக்கப்படாததால் நமது ஆட்சிமுறை வெகுவாகப் பாதிக்கப்பட்டதாகவும் கருத்துக்கள் நிலவுகின்றன. எனவே அரசிய லமைப்புத் திருத்தச் சட்டம் ஒன்றின் மூலம் அச்சொற்களை வரையறை செய்வது மிகவும் அவசியமானதாகும்.

# 6

# ஒன்றியமும் அதன் ஆட்சிப் பகுதிகளும்

## (பகுதி I, பிரிவுகள் 1-4)

இந்தியா, அதாவது பாரதம், மாநிலங்களின் ஒரு ஒன்றியம் என்று பிரிவு 1 கூறுகிறது. (1) மாநிலங்களின் ஆட்சிப் பகுதி, (2) ஒனறியததின நேரடி ஆட்சிப் பகுதிகள் (3) கையகப்படுத்தப்படும் பிற ஆட்சிப் பகுதிகள, (எ.கா. இந்தியாவில் பிரான்ஸ் மற்றும் போர்ச்சுகல் வசமிருந்த புதுச்சேரி, காரைக்கால், மாஹே, ஏனாம் (பிரெஞ்சு). கோவா, டாமன். டையூ, தத்ரா நாகர் ஹவேலி (போர்ச்சுகல்) ஆகிய பகுதிகள்); சட்டப்படி இவை இந்தியாவின் வசம் மாற்றப்பட்ட பின்னர் அரசியலமைப்பின 14ஆவது, 12ஆவது, 10ஆவது திருத்தங்களின் மூலம் 1962ஆம் ஆண்டில் இந்திய ஒன்றியத்தில் சேர்க்கப்பட்டன. இந்த மூன்று பெரும் பிரிவுகளே இந்தியாவின் ஆட்சிப் பகுதியாகும். (அமர்சிங் எதிர் ராஜஸ்தான் அரசு AIR 1955 SC 504; மஸ்தான்சிங் எதிர் முதனமை ஆணையாளர் AIR 1962 SC 797; ஹரிவன்ஷ் எதிர் மகாராஷ்டிர அரசு (1971) 2SCC 54 ஆகியவற்றைக் காண்க)

மாநிலங்கள் மற்றும் ஒன்றிய ஆட்சிப் பகுதிகளின் பெயர்களும், அவற்றின் ஆட்சிப் பரப்பும் முதலாவது அட்டவணையில் விவரிக்கப்பட்டுள்ளன. இந்தியாவின ஆட்சிப்பகுதி என்பது, அரசியலமைப்பின் முதலாவது பிரிவின்படி முதலாவது அட்டவணையில் குறிப்பிடப்பட்டுள்ள பகுதியே என்று உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்திருக்கிறது. (அமர்சிங் எதிர் ராஜஸ்தான் அரசு AIR 1955 SC 504; மஸ்தான் சாஹிப் எதிர் முதன்மை ஆணையாளர் AIR 1955 SC 797).

அரசியல் நிர்ணயசபையால் ஏற்றுக்கொள்ளப்பட்டு அரசியல் சட்டத்தில் சேர்க்கப்பட்டுள்ள முதலாவது அட்டவணை, நான்கு வகையான மாநிலங்களையும் ஆட்சிப் பகுதிகளையும் குறிப்பிடுகிறது. பகுதி 'அ'வில் பிரிட்டிஷ் இந்தியாவில் இருந்த பழைய ஒன்பது மாகாணங்களும் அடங்கும். சட்டசபைகள் இருந்த ஐந்து சுதேசி சமஸ்தானங்கள் பகுதி 'ஆ'வில் சேர்க்கப்பட்டன. மத்தியில் இருந்து நிர்வகிக்கப்பட்ட ஐந்து மாகாணங்கள் பகுதி 'இ'யில் சேர்க்கப்பட்டன. அந்தமான் - நிகோபார் தீவுப் பகுதிகள் பகுதி 'ஈ'யில் சேர்க்கப்பட்டன. அரசியலமைப்பு அமலுக்கு வந்த பின்னர் தேசப்படம் பல்வேறு மாற்றங்களைக் கண்டது. 1953ஆம் ஆண்டு ஆந்திரா

சட்டத்தின்படி மொழியின் அடிப்படையில் ஆந்திரப்பிரதேசம் தனியொரு மாநிலமாக உருவாக்கப்பட்டது. இறுதியாக, அரசியலமைப்பின் ஏழாவது திருத்தச் சட்டம் 1956-ன்படி மாநிலங்கள் மறுவரையறை செய்யப்பட்ட பின்னர் பகுதி 'அ' மற்றும் பகுதி 'ஆ' மாநிலங்களுக்கு இடையேயான வேறுபாடுகள் ஒழிக்கப்பட்டன. பின்னர் ஹரியானா, ஹிமாசலப்பிரதேசம், நாகாலாந்து, மணிப்பூர், மிஜோரம், அருணாசலப்பிரதேசம், கோவா ஆகிய புதிய மாநிலங்கள் உருவாக்கப்பட்டன. தற்சமயம் முதலாவது அட்டவணையில் கீழ்க்கண்ட 25 மாநிலங்களும் ஏழு நேரடி ஆட்சிப் பகுதிகளும் உள்ளன.

*மாநிலங்கள்:* (1) ஆந்திரப்பிரதேசம், (2) அருணாசலப்பிரதேசம், (3) அசாம், (4) பீகார், (5) கோவா, (6) குஜராத், (7) ஹரியானா, (8) ஹிமாசலப்பிரதேசம், (9) ஜம்மு & கஷ்மீர், (10) கர்நாடகா, (11) கேரளா, (12) மகாராஷ்டிரா, (13) மத்தியப்பிரதேசம், (14) மணிப்பூர், (15) மேகாலயா, (16) மிஜோரம், (17) நாகாலாந்து, (18) ஒரிசா, (19) பஞ்சாப், (20) ராஜஸ்தான், (21) சிக்கிம், (22) தமிழ்நாடு, (23) திரிபுரா (24) உத்தரப்பிரதேசம், (25) மேற்குவங்கம்.

*நேரடி ஆட்சிப் பகுதிகள்:* (1) அந்தமான்-நிகோபார் தீவுகள், (2) சண்டிகர், (3) தத்ரா நாகர் ஹவேலி, (4) டாமன், டையூ, (5) தில்லி (தற்போது தேசிய தலைநகர்ப் பகுதி எனப் பெயர் மாற்றப்பட்டுள்ளது), (6) லட்சத்தீவுகள், (7) புதுச்சேரி.

நமது நாட்டின் பெயர் குறித்து அரசியல் நிர்ணயசபையில் நீண்ட விவாதமே நடைபெற்றது. 'பாரதம்' என்பது இந்தியாவின் பழமையான பெயராக மட்டுமின்றி, அப்படிச் சொல்லும்போதே ஒற்றுமை உணர்வையும், நாட்டிற்கு ஓர் அடையாளத்தையும் தருவதாகவும் சொல்லப்பட்டது. 'இந்தியா' என்ற புதிய பெயரில் இன்று உலகம் முழுவதும் நமது நாடு அறியப்பட்டுள்ளது. ஐக்கிய நாடுகள் சபையில் இந்தியா என்ற பெயரிலேயே நம்நாடு உறுப்பினராக உள்ளது. சர்வதேச ஒப்பந்தங்கள் பலவும் இந்தியா என்ற பெயரிலேயே கையெழுத்திடப்பட்டுள்ளன. எனவே இரண்டு பெயர்களுக்குமே பலத்த ஆதரவு இருந்தது. இறுதியில், "இந்தியா, அதாவது பாரதம்" என்ற பெயர் மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

இந்தியா ஒரு 'ஒன்றியம்' ஆகத் திகழ்கிறது என்று வலியுறுத்துவதற்குக் காரணம், இதில் இடம்பெற்றுள்ள மாநிலங்கள் ஓர் உடன்படிக்கையின் பேரிலோ, ஒப்பந்தத்தின் பேரிலோ ஒன்றியமாகச் சேராமல், இறையாண்மையுடைய இந்திய மக்களிடமிருந்து அதிகாரத்தைப் பெற்ற அரசியல் நிர்ணய சபையால் நேரடியாகவே ஒன்றியம் என்று அறிவிக்கப்பட்டவை என்ற உண்மையை நிலைநிறுத்துவதற்கே ஆகும். எனவே எந்த ஒரு மாநிலமும் ஒன்றியத்தில் இருந்து பிரிந்து செல்ல முடியாது; முதலாவது அட்டவணையில் உள்ளதற்கு மாறாக தன்னிச்சையாக எல்லையை மாற்றியமைத்துக் கொள்ளவும் முடியாது. அரசியல் நிர்ணயசபையில் டாக்டர் அம்பேத்கர் இதுபற்றிக் கூறும்போது,

> "அமெரிக்க சமஷ்டி அமைப்பு அழிக்க முடியாதது என்பதையும், மாநிலங்களுக்குப் பிரிந்து செல்லும் உரிமை இல்லை என்பதையும்

> நிரூபிக்க அமெரிக்கர்கள் உள்நாட்டுப்போர் ஒன்றை நடத்த வேண்டியிருந்தது. இந்த விஷயத்தை ஊகத்திற்கோ, தகராறுக்கோ விட்டுவிடாமல் தெளிவுபடுத்திவிடுவதே சிறந்தது என்று வரைவுக் குழு தீர்மானித்தது."

என்று குறிப்பிட்டார்.

நம்முடையது ஒரு கூட்டரசு அமைப்பா இல்லையா என்பது பற்றி பெரும் விவாதமே நடைபெற்றது. (அரசியலமைப்பின் சிறப்புக் கூறுகள் என்ற நான்காவது அத்தியாயத்தைக் காண்க).

நாடாளுமன்றத்தில் சட்டம் இயற்றுவதன் மூலம் இந்திய ஒன்றியத்தில் புதிய மாநிலங்களைச் சேர்க்கலாம்; அல்லது ஏற்புடைய நிபந்தனைகளுக்கும் சட்ட திட்டங்களுக்கும் உட்பட்டுப் புதிய மாநிலங்களை உருவாக்கலாம் என்று பிரிவு 2 கூறுகிறது. கடைசியாக 1974 மற்றும் 1975ஆம் ஆண்டு களில் இயற்றப்பட்ட அரசியலமைப்பின் 35ஆவது மற்றும் 36ஆவது திருத்தச் சட்டங்களின் மூலம் சிக்கிம் இந்தியாவுடன் இணைந்தது. சிக்கிம் மக்களிடையே நடந்த பொதுவாக்கெடுப்பு மூலமான கருத்துக்கணிப்பின் பேரில் சிக்கிம் சட்டசபையின் வேண்டுகோளுக்கு இணங்க அம்மாநிலம் சேர்த்துக் கொள்ளப்பட்டது.

ஒரு மாநிலத்தின் ஒரு பகுதியைத் தனியாக பிரித்தும், அல்லது இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மாநிலங்களையோ அவற்றின் பகுதி களையோ சேர்த்தும், அல்லது ஒரு மாநிலத்தின் ஏதேனும் ஒரு பகுதியுடன் வேறு ஏதேனும் பகுதியைச் சேர்த்தும் புதிய மாநிலங்களை உருவாக்க பிரிவு 3, நாடாளுமன்றத்திற்கு அதிகாரம் அளிக்கிறது. எந்த ஒரு மாநிலத்தின் பரப்பளவையும் கூட்டவோ குறைக்கவோ மட்டுமின்றி, எல்லைகளை மாற்றியமைக்கவும் மாநிலத்தின் பெயரை திருத்தியமைக்கவும் அப்பிரிவு நாடாளுமன்றத்திற்கு அதிகாரம் அளிக்கிறது. எனவே, ஒரு மாநிலத்தின் ஆட்சிப்பகுதி அப்படியே நீடிப்பதற்கும், எந்த ஒரு மாநிலமும் தொடர்ந்து அப்படியே இருப்பதற்கும் எந்தவித உத்தரவாதமும் இல்லை. எனினும ஒரு மாநிலத்தின் பரப்பளவைக் குறைக்கக் கூடிய நாடாளுமனறத்தின் அதிகாரத்தினால் ஏதேனும் அன்னிய நாட்டுக்கு இந்தியாவின் ஆட்சிப் பகுதியைத் தாரைவார்த்துக் கொடுத்துவிட முடியாது (பேருபாரி எதிர் ஒன்றியம் மற்றும் என்கிளேவ் எக்ஸ்சேஞ்ச் AIR 1950 SC 845, 857). எனவே, மாற்றப்படிக்கூடிய மாநிலங்களால் ஆன, மாற்றப்பட முடியாத ஒன்றியம் என்று இந்தியாவைக் கூறலாம்.

இருந்தபோதிலும், பிரிவு 3-ன் கீழ் சொல்லப்பட்டுள்ள மாற்றங்களைப் பொறுத்தவரையில், மாநிலங்கள் தமது கருத்தினைக் கூறும் உரிமைக்குப் பாதுகாப்பு அளிக்கும் விதிவிலக்கு வகையுரையும் அரசியலமைப்பில் சேர்க்கப்பட்டுள்ளது. முதலாவது நிபந்தனை, குடியரசுத் தலைவரின் பரிந்துரை எதுவும் இல்லாமல் நாடாளுமன்றத்தின் எந்த அவையிலும் இது விஷயமாக எந்த மசோதாவையும் தாக்கல் செய்ய முடியாது. இரண்டாவதாக, மாநிலங்களின் பரப்பினை அல்லது எல்லைகளை அல்லது பெயரை மாற்றி யமைப்பதான பிரேரணைகள் அடங்கிய மசோதாவை, சம்பந்தப்பட்ட மாநிலங்களின் சட்டசபைகளுக்குக் குடியரசுத் தலைவர் அனுப்பி, அவற்றின்

கருத்துக்களைக் கேட்டறிய வேண்டும். குடியரசுத் தலைவர் குறிப்பிடுகின்ற கால அவகாசத்திற்குள் சட்டசபைகள் தமது கருத்தினை வெளிப்படுத்த வேண்டும். எனினும், அவ்வாறு சட்டசபைகள் வெளியிடும் கருத்துக்கள் குடியரசுத் தலைவரையோ, நாடாளுமன்றத்தையோ கட்டுப்படுத்தாது (பாபுலால் எதிர் பம்பாய் அரசு, AIR 1960 SC 51).

பிரிவுகள், 2 மற்றும் 3-ன்படி புதிய மாநிலங்களை ஒன்றியத்துடன் சேர்த்துக் கொள்வதற்கும், புதியதாக மாநிலங்களை உருவாக்குவதற்கும், ஏற்கெனவே உள்ள மாநிலங்களின் பரப்பு, எல்லை பெயர் போன்றவற்றை மாற்றியமைப்பதற்கும இயற்றப்படும் சட்டங்கள் 368ஆவது பிரிவின் கீழ் மேற்கொள்ளப்படும் அரசியலமைப்புத் திருத்தச் சட்டங்கள் ஆகாது என்று பிரிவு 4 தெளிவுபடுத்துகிறது. அதாவது, இந்தச் சட்டங்களை விசேஷ நடைமுறைகள் எதுவுமின்றி சாதாரண பெரும்பான்மையுடன் மற்ற சட்டங்களைப் போலவே நிறைவேற்றிவிடலாம்.

புதியதாக ஓர் ஆட்சிப் பகுதியைக் கையகப்படுத்திக் கொள்ளவும், புதிய மாநிலங்களை உருவாக்கவும், சேர்த்துக் கொள்ளவும் அரசியலமைப்பு வகை செய்த போதிலும், இந்தியாவின் ஆட்சிப் பகுதியை விட்டுக் கொடுக்கவோ, உரிமை மாற்றம் செய்யவோ வகை செய்யப்படவில்லை.

பேருபாரி வழக்கில் (பேருபாரி எதிர் ஒன்றியம் AIR 1960 SC 845) குடியரசுத் தலைவர் கேட்டுக் கொண்டதன் பேரில் உச்சநீதிமன்றம் கருத் துரைக்கும்போது, அரசியலமைப்புத திருத்தச் சட்டமின்றி எந்த ஓர் ஆட்சிப் பகுதியையும் விட்டுக்கொடுக்க முடியாது என்று தெளிவுபடுத்தியது. எனவே பேருபாரி ஆட்சிப்பகுதியின ஒரு பகுதியை பாகிஸ்தானுக்கு உரிமை மாற்றம் செய்வதென்ற உடன்படிக்கையைச் செயல்படுத்துவதற்காக அரசிய லமைப்பின் ஒன்பதாவது திருத்தச் சட்டம் இயற்றப்பட்டது.

கடந்த நாற்பதாண்டுகளில் இந்திய வரைபடம் திருத்தி வரையப் பட்டதும், மாநிலங்களின் எல்லைகள் திருத்தியமைக்கப்பட்டதும் மிக எளிதாக நடைபெற்றிருப்பதே, நமது அரசியலமைப்பின் மீட்டெழுச்சிக்கும் நெகிழ்ச்சிக்குத் தன்மைக்கும் சான்றாக இருப்பதுடன், பிரிவுகள் 2, 3, 4 ஆகியவற்றின் தேவைக்கும், அவசியத்திற்கும் நிரூபணமாகவும் உள்ளது. இன்னொரு புறத்தில், மொழிவாரியாக மாநிலங்களைத் திருத்தியமைத்தது எந்த அளவிற்குப் புத்திசாலித்தனமானது என்று வாதப்பிரதிவாதங்கள் நடைபெற்றும் வருகின்றன. மாநிலங்களை மேலும் திருத்தியமைக்க வேண்டும் என்ற முடிவேயில்லாத கோரிக்கைகள் பெருகியிருப்பதுடன், அளவில் சிறியதான மாநிலங்கள் பெரும் எண்ணிக்கையில் இருக்கலாம் என்ற கருத்துக்கும் ஆதரவு பெருகி வருகிறது.

# 7

# குடியுரிமை

## (பகுதி II, பிரிவுகள் 5-11)

மக்களாட்சி அரசியலின் பிரிக்க முடியாத ஆதாரக் கோட்பாடாக குடியுரிமை திகழ்கிறது. நாட்டின் அரசியலில் தனிநபர் முழுமையான உறுப்பினராக இருப்பதையும், நாட்டின் நிரந்தர விசுவாசியாக அவர் இருப்பதையும், அரசியல் முறையில் அவர் இரண்டறக் கலந்துவிட்டதை அதிகாரபூர்வமாக அரசு அங்கீகரிக்கப்பதையும் குடியுரிமை குறிக்கிறது. அன்னியர்களுக்கு இல்லாத சில உரிமைகளும் கடமைகளும் சலுகைகளும் பொறுப்புகளும் குடியுரிமை பெற்றவர்களுக்கு உண்டு. அரசு அலுவலகங்கள் அனைத்தும் குடிமக்களுக்காக அகலத் திறந்திருப்பதுடன், அரசுப் பணிகளில் நியமனம் பெறுவதற்கும் அவர்களுக்கு உரிமை உண்டு. அதுபோலவே வரி செலுத்துவது நாட்டைப் பாதுகாப்பது போன்ற பொறுப்புகளும் குடிமக்களுக்கு உண்டு. தனிமனிதன் நாட்டுக்கு விசுவாசமாக இருக்க உறுதிபூணுவதாகவும், அதுபோல் நாடும் அவனுக்குப் பாதுகாப்பு அளிக்க உறுதி கொள்வதுமான சட்டப்பூர்வமான உறவை தனிமனிதனுக்கும் நாட்டுக்கும் இடையே ஏற்படுத்துவதுதான் குடியுரிமை என்று கொள்ளலாம். இந்த உறவை தேசியச் சட்டம் முறைப்படுத்துகிறது; சர்வதேச சட்டம் அங்கீகரிக்கிறது.

அரசியல் நிர்ணயசபையில் அரசியலமைப்பு ஏற்றுக் கொள்ளப்பட்ட நாளான 1949 நவம்பர் 26ஆம் தேதிக்கு முன்னர் இந்தியக் குடியுரிமை என்று எதுவுமே இருக்கவில்லை. அரசியலமைப்பு ஏற்கப்பட்ட உடனேயே, குடியுரிமை சம்பந்தப்பட்ட 5முதல் 9 வரையான பிரிவுகள் நடைமுறைக்குக் கொண்டு வரப்பட்டன. அதுவரையிலும் பிரிட்டிஷ் இந்தியாவில் வசித்தவர்கள் பிரிட்டிஷ் நாட்டுரிமை சட்டத்தின்படி, பிரிட்டிஷ் குடிமக்களாகவும் சுதேசி சமஸ்தானங்களில் வசித்தவர்கள் பிரிட்டிஷ் அரசால் பாதுகாப்புப் பெற்ற மக்களாகவும் கருதப்பட்டனர்.

இந்தியப் பிரிவினையும், அதனையடுத்துத் தோன்றிய பெருமளவிலான இடப்பெயர்ச்சிகளும் குடியுரிமையைத் தீர்மானிப்பதில் பெரும் சிக்கல்களைத் தோற்றுவித்தன. அரசியலமைப்பில் குடியுரிமை பற்றிய பிரிவுகளான 5 முதல் 11 வரையுள்ள பிரிவுகளே வரைவுக் குழுவுக்குப் பெருத்த தலை வலியை உண்டாக்கின. பல வரைவுகள் எழுதப்பட்டு, அவற்றை இறுதியாக்க இரண்டாண்டுகளுக்கும் மேல் ஆனது. அப்படி இருந்தும், அரசியலமைப்பு

அமலுக்கு வரும்போது யார் யார் இந்தியக் குடிமக்களாக இருப்பர் எனபதை மட்டுமே அரசியலமைப்புக் கூறுகிறது. குடியுரிமையைப் பெறுவதற்கோ, குடியுரிமைக்கு முடிவுகட்டுவதற்கோ உரிய வழிமுறைகள் பற்றி அதில் எதுவும் சொல்லப்படவில்லை. குடியுரிமை பெறும் உரிமையை சட்டத்தின் மூலம் நாடாளுமன்றம் கட்டுப்படுத்தலாம் என்று பிரிவு 11 கூறுகிறது. 1955ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட இந்தியக் குடியுரிமைச் சட்டம், குடியுரிமையைப் பெறுவதற்கும், விட்டுவிடுவதற்கும் உரிய வழிமுறைகள் பற்றிக் கூறுகிறது.

அரசியலமைப்பு அமலுக்கு வந்த நேரத்தில், கீழ்க்காணும் ஏதேனும் ஒருவகையில் அடங்குகின்ற 'ஒவ்வொருநபருக்கும்' அரசியல் சட்டத்தின் 5 முதல் 8 வரையிலான பிரிவுகள் குடியுரிமையை அளிக்கின்றன.

1. இந்தியாவில பிறந்து இந்தியாவிலேயே வசிக்கிறவர்கள். இந்த வகையினரே இந்திய மக்கள் தொகையில் பெரும்பான்மையினராவர்.
2. இந்தியாவில பிறக்காமல் இந்தியாவில் வாழ்பவர்கள்; ஆனால் அவர் களின் பெற்றோரில எவரேனும ஒருவர் இந்தியாவில் பிறந்திருக்க வேண்டும்.
3. இந்தியாவில் பிறக்காமல் இந்தியாவில் ஐந்தாண்டுகளுக்கும மேலாக வசிப்பவர்கள்.
4. இந்தியாவில வசித்து 1947 மார்ச் முதல் தேதிக்குப் பின்னர் பாகிஸ்தானுக்குக் குடிபெயர்ந்து, பின்னர் குடியேற்ற அனுமதி மூலம் மீண்டும் இந்தியாவுக்கே திரும்பி வந்தவர்கள்.
5. பாகிஸ்தானில் வசித்து 1948 ஜூலை 19ஆம் தேதிக்கு முன்னர் இந்தியாவுக்குக் குடிபெயர்ந்தவர்கள்; அல்லது அந்தத் தேதிக்குப் பின்னர் இந்தியாவுக்கு வந்து, இங்கு ஆறுமாதங்களுக்கும மேல் வசித்து முறைப்படி பதிவு செய்து கொண்டவர்கள்.
6. இந்தியாவிற்கு வெளியே வசிக்கின்றவர்கள்; அப்படிப்பட்டவர்கள் அவர்களே இந்தியாவில் பிறந்திருக்க வேண்டும்; அல்லது அவர் களுடைய பெற்றோரில் ஒருவரோ பெற்றோரைப் பெற்றோரில் ஒருவரோ இந்தியாவில் பிறந்தவர்களாய் இருக்க வேண்டும.

இவ்வாறாக. அரசியலமைப்பு அமலுக்கு வந்தபோது (1) இந்தியாவில் வசித்தவர்கள (2) பாகிஸ்தானில் இருந்து குடிபெயர்ந்தவர்கள் மற்றும் பாகிஸ்தானுக்குக் குடியேறியவர்கள் (3) வெளிநாடுகளில் வசிக்கும் இந்தியர்கள், ஆகியோருக்கும் குடியுரிமை வழங்கும் வகையுரைகள் சேர்க்கப் பட்டிருந்தன.

வசிப்பிடம்: எந்த ஒரு நாடானாலும் குடியுரிமையைத் தீர்மானிக்கும் முக்கியக் காரணியாக வசிப்பிடம் அமைகிறது. இந்திய அரசியலமைப்பில் இச்சொல் வரையறுக்கப்படா விட்டாலும் ஒருநபர் நிரந்தரமாகக் குடியிருக்க விரும்புகின்ற இடமே வசிப்பிடம் ஆகும். எனவே நிரந்தரமான குடியிருப்பும், அங்கே வசிக்க வேண்டும் என்ற விருப்பமுமே வசிப்பிடத்தைத் தீர்மானிக் கின்ற இரண்டு முக்கியக் காரணிகளாகும். (முகமது ரஜா எதிர் பம்பாய் அரசு AIR 1966 SC 1436). அரசியலமைப்பு அமலுக்கு வந்தபோது, இந்திய

ஆட்சிப் பகுதிக்குள் வசிப்பிடம் கொண்டவராகவோ, பெற்றோரில் எவரேனும் ஒருவர் இந்தியாவில் பிறந்தவராகவோ, அரசியலமைப்பு அமலுக்கு வருவதற்கு முன் ஐந்தாண்டுகளுக்குக் குறையாமல் இந்திய ஆட்சிப் பகுதிக்குள் வசித்திருந்தவராகவோ இருப்பவர் அனைவருக்கும் இந்தியக் குடியுரிமையைப் பெறத் தகுதி உண்டு என்று பிரிவு 5 கூறுகிறது.

பிறப்பாலோ குடியிருப்பாலோ பெறப்படும் வசிப்பிடத்தை மாற்றி, தன் விருப்பத்திற்கு ஏற்ப, காலவரையின்றி வெளிநாடுகளில் குடியிருக்கவும் சிலர் விரும்புவதுண்டு. குடியுரிமை என்பது வசிப்பிடத்தால் பெறப்படுவது; மாறாக, வசிப்பிடத்தால் குடியுரிமை வருவதில்லை. வசிப்பிடம் என்பது ஒரு நாட்டின் ஆட்சிப் பகுதியுடன் தொடர்புடையதே அன்றி, குடியுரிமையின் மூலக்கருத்தான சமுதாய உறுப்பினர் என்பதுடன் தொடர்புடையது அன்று (அப்துல் ரஹ்மான் எதிர் அரசு AIR 1964 pat 384). நமது அரசியலமைப்பில் இரட்டைக்குடியுரிமை இல்லை. இந்தியாவின் ஆட்சிப்பகுதி முழுவதிலும் வசிப்பதற்கும் ஒரே குடியுரிமைதான்; ஒரு பகுதியில் மட்டும் வசிப்பதற்கு என்று குடியுரிமை இல்லை. அமெரிக்காவில் இருப்பது போன்று மாநிலக் குடியுரிமை என்று தனியாக ஏதுமில்லை. எனவே இந்தியக் குடிமகன் இந்திய ஒன்றியத்தின் அங்கமாக உளள ஒரு மாநிலத்தில் அல்லது இன்னொரு மாநிலத்தில் வசிப்பவனாக உள்ளான் என்று சொல்வது சரியன்று. அவனுக்குள்ளது ஒரே ஒரு வசிப்பிடம்; அது இந்திய ஆட்சிப்பகுதி என்ற பரந்துபட்ட வசிப்பிடம். (பிரதீப் ஜெயின் எதிர் இந்திய அரசு AIR 1984 SC 1420. 1984 3 SCC 654).

*பாகிஸ்தானிலிருந்து இடம் பெயர்ந்தவர்கள்:* அரசியலமைப்பு நடைமுறைக்கு வருவதற்கு முன்னர் பாகிஸ்தானிலிருந்து இந்தியாவுக்கு இடம் பெயர்ந்தவர்களுக்குக் குடியுரிமை வழங்க பிரிவு 6 வகை செய்கிறது. அவ்வாறு இடம் பெயர்ந்தவர்கள் (1) இடம் பெயர்வதறகான அனுமதி முறை அறிமுகப்படுத்தப்பட்ட 1948 ஜூலை 19ஆம் தேதிக்கு முன்னர் இந்தியாவுக்கு வந்தவர்கள்; (2) அந்தத் தேதிக்குப் பின்னர் வந்தவர்கள, என்று இரண்டு வகையாகப் பிரிக்கப்பட்டனர். 1948 ஜூலை 19ஆம் தேதிக்கு முன்னர் பாகிஸ்தானிலிருந்து இந்தியாவுக்கு இடம் பெயர்ந்தவரின் பெற்றோரில் ஒருவரோ, பெற்றோரைப் பெற்றோரில் ஒருவரோ, இந்திய அரசாங்கச் சட்டம் 1935-ல் வரையறுக்கப்பட்டபடி இந்தியாவில் பிறந்தவர்களாக இருந்து, இடம் பெயர்நதவராகவும், அவ்வாறு இடம் பெயர்ந்த நாளில் இருநது இந்தியாவில் குடியிருந்தும் வந்தார் என்றால், அரசியலமைப்பு நடைமுறைக்கு வந்தபோது, அவர் இந்தியக் குடிமகனாகக் கருதப்பட்டார். 1948 ஜூலை 19ஆம தேதிக்குப் பின்னர் இடம் பெயர்ந்தவர், இந்திய அரசாங்கத்தால் நியமிக்கப்பட்ட அதிகாரியிடம் இந்தியக் குடிமகனாகப் பதிவு செய்து கொண்டிருக்க வேண்டும். எனினும் அவ்வாறு பதிவு செய்ய விண்ணப்பிப்பதற்கு முன்னால் குறைந்த பட்சம் ஆறுமாதங்களாவது இந்தியாவில் குடியிருந்திருக்க வேண்டும்.

*பாகிஸ்தானுக்கு இடம் பெயர்ந்தவர்கள்:* இந்தியாவில் இருந்து 1947 மார்ச் முதல் தேதிக்குப் பின்னர் பாகிஸ்தானுக்கு இடம் பெயர்ந்து, பின்னர் மீண்டும் இந்தியாவுக்குத் திரும்பி வந்தவர்களின் குடியுரிமையைப்

பொறுத்தவரையில் பிரிவு 7 சில சிறப்பு ஏற்பாடுகளைச் செய்திருக்கிறது. அவ்வாறு இடம் பெயர்ந்து செல்லும் எவருமே இந்தியக் குடிமக்களாகத் தொடர்ந்து நீடிக்க முடியாது என்று அறிவிக்கப்பட்ட போதிலும், இந்தியாவில் மீண்டும் குடியேறுவதற்கான அனுமதி பெற்றுவந்தவர்களுக்கு இதிலிருந்து விலக்களிக்கப்பட்டது. அவ்வாறு திரும்பி வந்தவர்கள், பிரிவு 6-ல் சொல்லப்பட்டுள்ளவாறு, பாகிஸ்தானிலிருந்து இடம் பெயர்ந்து வருபவர்களுக்கான நிபந்தனைகளை நிறைவேற்றும் பட்சத்தில் இந்தியக் குடியுரிமையைப் பெறத் தகுதி பெற்றவர்களாகிறார்கள். அவ்வாறு திரும்பி வருபவர்கள், குறுகிய காலத்திற்கு மட்டும் இந்தியாவில் இருப்பதற்கோ, வியாபார நோக்கங்களுக்காகத் தற்காலிகமாகத் தங்கும் நோக்கத்திலோ வருபவர்களாக இருக்கக் கூடாது (அரசு எதிர் அமர்சிங் AIR 1955 SC 282; அதாவுர் ரஹ்மான் எதிர் மத்தியப் பிரதேச அரசு AIR 1951 நாக் 44). இந்தப் பிரிவில் சொல்லப்பட்டுள்ள 'இடம் பெயர்ந்தோர்' என்பது, அரசியலமைப்பு நடைமுறைக்கு வருமுன்னர் இடம் பெயர்ந்தோரை மட்டுமே குறிக்கும் என்பதைக் கருத்தில் கொள்ள வேண்டும். அதற்குப் பின்னர் இடம்பெயர்ந்தோர் சம்பந்தப்பட்டவை அனைத்தும் குடியுரிமைச் சட்டம் 1955-ன் கீழ்வரும். 'இடம் பெயர்ந்தோர்' என்பது, சுயவிருப்பத்தின் பேரில் இந்தியாவில் இருந்து நிரந்தரமாகவோ, தற்காலிகமாகவோ பாகிஸ்தானுக்குச் சென்றவர்கள் என்றும் வரையறுக்கப்பட்டுள்ளது (குல்தஹில் எதிர் கேரள அரசு AIR 1966 SC 1974).

**இந்தியாவிற்கு வெளியே வசிக்கும் இந்திய வம்சாவழியினர்:** இந்திய வம்சாவழியினர் பலர் வெளிநாடுகளில் வசிக்கின்றனர்; அல்லது வேலைவாய்ப்புப் போன்ற பிற காரணங்களுக்காக இடம் பெயர்ந்து செல்கின்றனர். அத்தகையவர்களின் இந்தியக் குடியுரிமையைப் பாதுகாக்கும் நெடுநோக்குடன் நமது அரசியலமைப்பை உருவாக்கியவர்கள் சில ஏற்பாடுகளைச் செய்துள்ளனர். எந்த ஒரு நபரோ அல்லது அவரது பெற்றோர்களில் ஒருவரோ அல்லது பெற்றோரைப் பெற்றோரில் ஒருவரோ, இந்திய அரசாங்கச் சட்டம் 1935-ல் வரையறுக்கப்பட்டபடி இந்தியாவில் பிறந்தவர்களாக இருந்து, வெளிநாடுகளில் குடியிருந்து வந்தாலும், அந்நாடுகளில் உள்ள இந்தியத் தூதரகங்களில் உள்ள இந்தியப் பிரதிநிதிகளிடம் தம்மை ஓர் இந்தியக் குடிமகனாகப் பதிவு செய்து கொண்டால் இந்தியக் குடிமக்களாகக் கருதப்படுவர். அரசியலமைப்பு நடைமுறைக்கு வருவதற்கு முன்னதாகவும், நடைமுறைக்கு வந்த பின்னும்கூட இவ்வாறு பதிவு செய்து கொள்ளலாம் என்று பிரிவு 8-ல் வகை செய்யப்பட்டுள்ளது. வெளிநாடுகளில் குடியிருக்கும் இந்தியர்களின் எதிர்காலக் குடியுரிமைத் தேவைகளை நிறைவு செய்ய இந்தப் பிரிவு 8 சேர்க்கப்பட்டுள்ளது.

**இன்னொரு நாட்டின் குடியுரிமையை விரும்பிப் பெறுதல்:** இந்தியக் குடிமகன் எவரேனும், வெளிநாட்டுக் குடியுரிமையைத் தாமே விரும்பிப் பெற்றார் என்றால், இந்தியக் குடியுரிமையை இழந்து விடுவார் என்று பிரிவு 9 கூறுகிறது. எனினும், அரசியலமைப்பு நடைமுறைக்கு வருவதற்குமுன் உள்ளவற்றுக்கே இது பொருந்தும். அரசியலமைப்பு நடைமுறைக்கு வந்த பின்னர் இது மாதிரியான விஷயங்கள், குடியுரிமைச்

சட்டம் 1955-ன்படி தீர்மானிக்கப்படும். வேறு ஒரு நாட்டின் குடியுரிமையைப் பெற்றதனால் இந்தியக் குடியுரிமையை ஒருவர் இழந்துவிட்டாரா என்பதை இந்திய அரசுதான் தீர்மானிக்க வேண்டும்; அவ்வாறு தீர்மானிக்கப்பட்ட பின்னரே அவரை ஓர் அன்னியராகக் கருதி மாநில அரசு அவர் மீது நடவடிக்கை எடுக்க முடியும் என்று உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்திருக்கிறது (குலாதி மம்மு எதிர் கேரள அரசு AIR 1966 SC 1614. 1617; உ.பி. அரசு எதிர் ரஹ்மத்துல்லா (1971) 2SCC 113, 118, AIR 1971 SC 1382; ஆந்திரப் பிரதேச அரசு எதிர் சையது முகமது AIR 1962 SC 1778; உ.பி அரசு எதிர் ரோஷன், (1969) 2SCWR 232; குஜராத் அரசு எதிர் இப்ராகிம் AIR 1974 SC 645; அயூப்கான் எதிர் போலீஸ் கமிஷனர் (1965) 2SCR 884; மொய்னுதீன் எதிர் இந்திய அரசு (1967) 2SCR 401; அக்பர் எதிர் இந்திய அரசு AIR 1962 SC 70; ம.பி அரசு எதிர் பீர்முகமது AIR 1963 SC645; இஸார் அகமது எதிர் இந்திய அரசு AIR 1962 SC 1052; அன்வர் எதிர் ஜம்மு-கஷ்மீர் அரசு (1971) 3SCC 104).

*குடியுரிமை நீட்டிப்பு:* பிரிவுகள் 5-லிருந்து 10 வரையுள்ள வகையுரைகளின் படி ஒவ்வொரு இந்தியக் குடிமகனும், இந்தியக் குடிமகனாகக் கருதப்படுபவரும், நாடாளுமன்றத்தில் இயற்றப்படும் சட்டத்தின் வகையுரைகளுக்கு உட்பட்டு, தொடர்ந்து இந்தியக் குடிமகனாகவே நீடிப்பார் என்று பிரிவு 10 கூறுகிறது. வேறுவிதமாகச் சொல்வதானால், நாடாளுமன்றத்தால் சட்டம் இயற்றினால் அன்றி எவரிடமிருந்தும் குடியுரிமையைப் பறிக்க முடியாது (இப்ராஹிம் வஜிர் எதிர் பம்பாய் அரசு AIR 1954 SC 229).

பிரிவுகள் 5லிருந்து 10 வரை உள்ளவற்றில் பயன்படுத்தப்பட்டுள்ள 'ஒவ்வொரு நபரும்' என்ற சொற்றொடர், சிறையில் இருப்பவர்கள், வழக்கு நிலுவையிலுள்ள விசாரணைக் கைதிகள், சிறைத்தண்டனை அனுபவிப்பவர்கள் என்று அனைவரையும் உள்ளடக்கியது (மகாராஷ்டிர அரசு எதிர் பிரபாகர் AIR 1966 SC 424; சுனில்பாத்ரா எதிர் தில்லி நிர்வாகம் AIR 1978 SC 1675). பிரிவு 33-ல் உள்ள நாடாளுமன்றத்தின் அதிகாரங்களுக்கு உட்பட்டு முப்படை வீரர்களும் சேர்த்துக் கொள்ளப்படலாம் (பிரிதி எதிர் இந்திய அரசு AIR 1982 SC 1413). 'கார்ப்பரேஷன்' என்ற வரையறையில் வரும் கூட்டு நிறுவனங்களும் சட்டப்பூர்வ நபராக ஏற்றுக் கொள்ளப்படுமா என்று சில சமயம் சூடான விவாதங்கள் நடைபெற்றன. கார்ப்பரேஷன்கள் சட்டப்படியான நபர்கள் இல்லை என்று குடியுரிமைச் சட்டம் 1955 தெளிவுபடுத்தியது. பிரிவு 19-ன்கீழ் உள்ள அடிப்படை உரிமைகளைக் கார்ப்பரேஷன்கள் கோரமுடியாது என்றும், அவை குடிமக்களுக்கே உரியவை என்றும், உச்சநீதிமன்றமும் தீர்ப்பளித்திருக்கிறது. (அரசு வர்த்தக கார்ப்பரேஷன் எதிர் வருமானவரி அலுவலர் (1964) 4 SCR 99; டாடா எஞ்சினியரிங் மற்றும் லோகோமோடிவ் கம்பெனி லிட் எதிர் பீகார் அரசு (1964) 6 SCR 885).

***குடியுரிமையைச் சட்டத்தின் மூலம் முறைப்படுத்தக்கூடிய நாடாளுமன்ற அதிகாரமும், 1955ஆம் ஆண்டு குடியுரிமைச் சட்டமும்:*** இந்தியக் குடியுரிமையைப் பெறுவது, குடியுரிமையை விட்டுவிடுவது போன்ற விஷயங்கள் குறித்துச் சட்டமியற்றுவதற்கு நாடாளுமன்றத்திற்கு எவ்விதக்

கட்டுப்பாடும் இல்லாத அதிகாரத்தை பிரிவு 11 வழங்குகிறது. அதன்படி 'குடியுரிமைச் சட்டம் 1955' இயற்றப்பட்டது. அரசியலமைப்பு நடைமுறைக்கு வந்த பின்னர் குடியுரிமை பற்றிய அனைத்து விஷயங்களும் இந்தச் சட்டத்தின்படியே பரிசீலிக்கப்பட வேண்டும். வங்காளதேசம், இலங்கை, மற்றும் சில ஆப்பிரிக்க நாடுகளில் இருந்து சட்டத்திற்குப் புறம்பாகப் பெருமளவில் பலர் இந்தியாவிற்குக் குடிபெயர்ந்ததை அடுத்து, 1986ஆம் ஆண்டில் இந்தச் சட்டம் திருத்தப்பட்டது. இந்தியக் குடியுரிமை பெறுவதை அந்தத் திருத்தம் மேலும் கடுமையாக்கியது. பிறப்பின் அடிப்படையில் இந்தியக் குடியுரிமை பெற வேண்டுமானால் பிறப்பின்போது பெற்றோரில் எவரேனும் ஒருவர் இந்தியக் குடிமகனாக இருக்க வேண்டும் என்ற அந்தச் சட்டத்தின் திருத்தப்பட்ட மூன்றாவது பிரிவு கூறுகிறது. பிறப்பாலும், மூதாதையர் வழியாலும், பதிவின் மூலமும், இயல்பாக்கத்தினாலும், புதிய ஆட்சிப்பகுதிகளைச் சேர்ப்பதினாலும் இந்தியக் குடியுரிமை பெறுவதற்கான விரிவான வழிமுறைகளை அச்சட்டம் கூறுகிறது. அதேபோல, இந்தியக் குடியுரிமையைத் துறந்து விடுவதன் மூலமும், வேறுநாட்டின குடியுரிமையைத் தானே முன்வந்து பெறுவதன் மூலமும், சில காரணங்களுக்காக இந்திய அரசே குடியுரிமையைக் கட்டாயமாகப் பறிமுதல் செய்வதன் மூலமும் குடியுரிமையை விலக்கிக் கொள்வதற்கான வழிகளையும் அச்சட்டம் கூறுகிறது. காமன்வெல்த் குடியுரிமை பற்றியும் அச்சட்டம் சில விதிகளைக் கொண்டுள்ளது.

குடியுரிமைச் சட்டம் 1955-ன் முக்கிய வகையுரைகள் பற்றிச் சுருங்கக் கூறுவதானால் —

1. 1950ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 26ஆம் தேதிக்குப் பின்னர் இந்தியாவில் பிறக்கின்ற எவரும் - வெளிநாட்டுத் தூதரக அதிகாரிகள், அன்னியப் பகைவர்கள் போன்றவர்களின் குழந்தைகள் தவிர - பிறப்பால் இந்தியக் குடிமக்கள் ஆவர்.
2. 1950 ஜனவரி 26ஆம் தேதிக்குப் பின்னர் இந்தியாவிற்கு வெளியே பிறக்கின்றவரின் தந்தை, பிறப்பின்போது இந்தியக் குடிமகனாக இருந்தால், சில நிபந்தனைகளுக்கு உட்பட்டு, அப்படிப் பிறந்தவரும் இந்தியக் குடிமகனாவார்.
3. குறிப்பிட்ட முறையில் பதிவு செய்து கொள்வதன் மூலம், சில நிபந்தனைகளுக்கு உட்பட்டு சில பிரிவு மக்களும் இந்தியக் குடியுரிமையைப் பெறலாம்.
4. சில நிபந்தனைகளுக்கு உட்பட்டு, இயல்பாக்கத்திற்கு விண்ணப்பிப்பதன் மூலம் வெளிநாட்டினரும் இந்தியக் குடியுரிமையைப் பெறலாம்.
5. ஏதேனும் ஓர் ஆட்சிப் பகுதி இந்தியாவின் அங்கமாக ஆனால், அதன் விளைவாக யார்யாரெல்லாம் இந்தியக் குடிமக்களாக ஆவர் என்பதை இந்திய அரசு ஓர் ஆணையின் மூலம் அறிவிக்கலாம்.
6. குடியுரிமையைத் துறப்பதன் மூலமும், சில காரணங்களினால் குடியுரிமையைப் பறிப்பதன் மூலமும் இந்தியக் குடியுரிமையை இழக்க வேண்டி வரும்.
7. காமன் வெல்த் நாட்டின் ஒரு குடிமகனுக்கு இந்தியாவில் காமன்வெல்த்

குடிமகன் என்ற அந்தஸ்து வழங்கப்படும். சம்பந்தப்பட்ட நாடுகளுடன், பரஸ்பர உடன்பாட்டின்படி அரசு இதற்கு வகை செய்யும்.

ஒன்றுபட்ட இந்தியாவையும், சகோதர உணர்வையும் நிர்மாணிக்க வேண்டும் என்று நமது அரசியலமைப்பை உருவாக்கியவர்கள் விரும்பியபடியே அரசியலமைப்பிலும் குடியுரிமைச் சட்டத்திலும் ஒரே குடியுரிமைதான் வழங்கப்பட்டுள்ளது என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும். எந்த மாநிலத்தில் பிறந்திருந்தாலும் - ஜம்மு-கஷ்மீர் மாநிலம், மற்றும் சில பழங்குடிப்பகுதிகள் தவிர - நாடு முழுவதிலும் எல்லாருக்கும் ஒரே மாதிரியான உரிமைகளும் கடமைகளும் உண்டு. எனினும், ஏதேனும் ஒரு மாநிலத்திலோ, நேரடி ஆட்சிப் பகுதியிலோ சில குறிப்பிட்ட வேலைகளில் சேருவதற்கு அந்த மாநிலத்தின் அல்லது நேரடி ஆட்சிப் பகுதியின் எல்லைக்குள் குடியிருப்பவராக இருக்க வேண்டும் என்று கூற நாடாளுமன்றத்திற்கு அதிகாரம் வழங்க, பிரிவு 16 வகைசெய்கிறது.

# 8

# அடிப்படை உரிமைகள்

## (பகுதி III, பிரிவுகள் 12-35)

வளமான பண்பாட்டு மரபினைக் கொண்ட இந்தியாவில் பன்னெடுங் காலமாகப் போற்றி வந்த மாண்புகளின் ஒட்டுமொத்த உருவமாகவும், சுதந்திரப் போராட்ட காலத்தின்போது மக்களிடையே நிலவிய ஊக்க சக்தியாகவும் விளங்குமாறு, உரிமைகள் மசோதா ஒன்றை வரைவதே தன்னுடைய முதற்பணியாக அரசியல் நிர்ணயசபை தீர்மானித்துக் கொண்டது. அதன்படி, விரைவிலேயே அரசியல் நிர்ணயசபையிலும் அதன் குழுக்களிலும் பல்வேறு நிலைகளைக் கடந்து விரிவான உரிமைப் பட்டியல் ஒன்று உருவானது. அரசியலமைப்பில் மிகவும் கடுமையாக விமர்சிக்கப்பட்ட பகுதி என்று அம்பேத்கர் வருணித்த அடிப்படை உரிமைகள் பற்றிய மூன்றாவது பகுதி, துணைக் குழுவில் 11 நாட்களும், ஆலோசனைக் குழுவில் 2 நாட்களும், அரசியல் நிர்ணயசபையில் 25 நாட்களும் என்று ஆக மொத்தம் 38 நாட்கள் விவாதிக்கப்பட்டது. கிட்டத்தட்ட சர்வதேச மனித உரிமைகள் பிரகடனம் போலவே அமைந்துள்ள அடிப்படை உரிமைகள் பகுதியை இந்திய அரசியலமைப்பில் சேர்த்ததன் மூலம், உலகின் மற்ற நாடுகளிலும் மக்களாட்சி மற்றும் மனிதாபிமானத் தூண்டுதலும் அரசியலமைப்பு நெறியும் புத்துயிர்ப்பு அடைந்தன எனலாம். சர்வதேச மனித உரிமைப் பிரகடனத்தில் இடம் பெற்றுள்ள அடிப்படைக் கோட்பாடுகளை எல்லாம் சேர்த்துச் செயல்படுத்த வேண்டும் என்று நமது அரசியலமைப்பை உருவாக்கியவர்கள் பெருவிருப்பம் கொண்டிருந்ததைப் பறைசாற்றுவதாக அடிப்படை உரிமைகள் பகுதி திகழ்கிறது. சிறுபான்மை யினரின் பிரச்சினைகளும், அவர்களுடைய உரிமைகளுக்கு முற்றிலும் பாதுகாப்பு அளிக்கப்படும் என்று உத்தரவாதமளிக்கவேண்டிய தேவையும் சேர்ந்து, நமது அரசியலமைப்பில், அடிப்படை உரிமைகள் பகுதியைச் சேர்க்க வேண்டிய இன்றியமையாமையை உருவாக்கி விட்டன.

மூன்றாவது பகுதியில் உள்ள அடிப்படை உரிமைகள், நான்காவது பகுதியில் உள்ள அரசின் நெறிமுறைக் கோட்பாடுகள், பின்னர் சேர்க்கப்பட்ட அடிப்படைக் கடமைகள் பற்றிய பகுதி 4A ஆகியவை சேர்ந்து ஒரே பகுதியாக, முகப்புரையில் இருந்து தோன்றியதாகக் கொள்ளலாம். அடிப் படையான மாண்புகளை பிரகடனப்படுத்தும் இந்த மூன்று பகுதிகளுமே

அரசியலமைப்பின் அஸ்திவாரமான கோட்பாடுகளாகத் திகழ்கின்றன. சர்வதேச மனித உரிமைப் பிரகடனத்தின் அடிப்படைக் கொள்கையாக விளங்கும் தனிமனித கண்ணியம் போற்றிக் காக்கப்படும் என்று முகப் புரையில் அளிக்கப்படும் உத்தரவாதத்தைச் செயல்படுத்துவதாக மூன்றாவது பகுதி மற்றும் நான்காவது பகுதியில் உள்ள பல்வேறு வகையுரைகளும் அமைந்துள்ளன. தனிமனித கண்ணியத்தைப் போற்றிக் காப்பதற்கு வேண்டிய சுதந்திரமும் சமத்துவமும். முகப்புரை பிரகடனப்படுத்தும் சமூக, பொருளா தார நீதியும்தான் அடிப்படை உரிமைகளிலும் நெறிமுறைக் கோட்பாடு களிலும் விரிவாக இடம் பெற்றுள்ளன.

இதுவரை எந்த ஒரு நாடும் உருவாக்காத, மிக விரிவான மனித உரிமைப் பட்டியலைக் கொண்டுள்ள நமது அரசியல் சட்டத்தின் மூன்றாவது பகுதி, நாட்டின் ஒற்றுமையையும் பொதுமக்களின் நலனையும் ஒருசேரப் பேணிக்காக்கும் நோககில் அமைந்துள்ளது. இதைப் பற்றி நீதிபதி கஜேந்திரகட்கர் கூறும்போது, "இந்த நாட்டில் நமது அரசியலமைப்பு உருவாக்கிய மக்களாட்சி வாழ்க்கை முறையின் அஸ்திவாரமாகவும், ஆதார சுருதியாகவும் திகழ்கிறது" என்று குறிப்பிடுகிறார் (சஜ்ஜன் சிங் எதிர் ராஜஸ்தான் அரசு AIR 1965 SC 845). இந்த அடிப்படை உரிமைகளில் பெரும்பாலானவை சர்வதேச மனித உரிமைப் பிரகடனத்தின் 2 முதல் 21 வரையிலான பிரிவுகளில் இடம் பெற்றுள்ள பாரம்பரியமான அனைத்து சிவில், அரசியல் உரிமைகளையும் உள்ளடக்கி விடுகின்றன. நீதிபதி பகவதி இவ்வாறு குறிப்பிடுகிறார்:

> வேதகாலம தொடஙகி இநநாட்டு மக்கள போறறி வந்த அடிப படையான மாண்புகளை இநத அடிபபடை உரிமைகள பிரதிபலிக கின்றன தனிமனிதனின் கண்ணியத்தைக் காக்கும் வகையிலும், ஒவ்வொரு மனிதனும் தனனுடைய ஆளுமையை முழுமையாக வளர்த்துக் கொள்வதற்கான சூழ்நிலையை உருவாக்கும வகையிலும் இந்த அடிப்படை உரிமைகள் வகுக்கப்பட்டுளளன. மனித உரிமைகள என்ற அடிப்படையான அமைப்பின் மீது 'உத்தரவாத அமைப்பு' ஒன்றைப் பின்னுவதுடன், தனிமனித உரிமைகளின் எநதப் பரிமாணத்தின மீதும் அரசு ஆக்கிரமிப்புச் செயயக்கூடாது என்ற எதிர்மறைக் கூடப்பாட்டினையும் அடிப்படை உரிமைகள் விதிக்கின்றன" (மேனகாகாந்தி எதிர் இந்திய அரசு AIR 1978 SC 597).

கீழ்க்காணும் ஆறு பெரும் பிரிவுகளில் அடிப்படை உரிமைகள் உத்தரவாதமளிக்கப்படுகின்றன.

(1) சட்டத்தின் முன் சமத்துவம், சட்டங்களின் மூலம் சம பாதுகாப்பு உள்ளிட்ட சமத்துவ உரிமை (பிரிவு 14); சாதி, சமய, இன, பால் அல்லது பிறப்பிட வேறுபாடுகளினால் பாரபட்சம் காட்டுவதற்குத் தடை (பிரிவு 15); அரசுத் துறை வேலை வாய்ப்புகளில் சமவாய்ப்பு (பிரிவு 16); தீண்டாமை ஒழிப்பு மற்றும் பட்டயமுறை ஒழிப்பு (பிரிவுகள் 17 & 18).

(2) உயிரைப் பாதுகாத்துக் கொள்ளும் உரிமை மற்றும் தனிப்பட்ட சுதந்திரம் உள்ளிட்ட சுதந்திர உரிமை (பிரிவு 21); சுதந்திரமாகப் பேசுவதற்கும், கருத்து வெளிப்படுத்துவதற்கும் கூட்டம் சேர்வதற்கும்

அல்லது சங்கம் அமைப்பதற்கும், இந்தியாவின் எந்தப் பகுதிக்கும் சென்று வரவும் , அங்கே வசிக்கவும், நிரந்தரமாகக் குடியேறவும், எந்த ஒரு தொழிலையும் மேற்கொள்ளவும் உரிமை (பிரிவு 19).

(3) சுரண்டலுக்கு எதிராகவும், எல்லாவிதமான நிர்ப்பந்தத் தொழிலாளர் முறையையும், குழந்தைத் தொழிலாளர் முறையையும் மனித வாணிகத்தையும் தடைசெய்யும் உரிமை (பிரிவுகள் 23 & 24)

(4) மனச்சான்றின்படி சுதந்திரமாகச் செயல்படவும், விரும்பிய சமயத்தை ஏற்று அதன்படி நடக்கவும், அதனைப் பரப்பவும் உரிமை (பிரிவுகள் 25 முதல் 28 வரை)

(5) சிறுபான்மையினர் தமமுடைய பண்பாடு, மொழி, எழுத்து வடிவம ஆகியவற்றைப் பேணிக்காக்கவும, அவர்களது விருப்பததிறகு ஏறப கல்வி நிறுவனங்களை ஏறபடுத்தி நிாவகிக்கவும் உரிமை (பிரிவுகள் 29 & 30).

(6) இந்த அடிப்படை உரிமைகள் யாவற்றையும நிலைநாட்டுவதறகாக அரசிலயமைப்பு வாயிலாக நிவாரணம தேடும உரிமை.

சட்டத்தின் முன் சமத்துவம், எல்லாச் சட்டங்களின் மூலமும் சமமான பாதுகாப்பு (பிரிவு 14), குற்றங்களுககாக தண்டனை அளிப்பதில் இருந்து பாதுகாப்பு (பிரிவு 20), உயிருக்குப் பாதுகாபபு. தனிநபர் சுதந்திரம் (பிரிவு 21), சில இனங்களில் கைது செய்யப்பட்டுக் காவலில் வைபபதில் இருந்து பாதுகாப்பு (பிரிவு 22). சமயச் சுதநதிரம (பிரிவுகள 25 முதல் 28 வரை) போன்ற சில அடிப்படை உரிமைகள் எல்லா நபர்களுக்கும் உரியவை. ஆனால் சில அடிப்படை உரிமைகளை குடிமக்கள் மட்டுமே கோரமுடியும். இதற்கு எடுத்துக் காட்டு. சாதி, மத, இன, பால் வேறுபாடு களாலும், பிறபபிட வேறுபாட்டினாலும் பாரபட்சம் காட்டக் கூடாது (பிரிவு 15); அரசு வேலை வாய்ப்புகளில் சமவாயப்பு (பிரிவு 16). சுதந்திர மாகப் பேசுவது, கருத்து வெளிப்படுத்துவது, கூட்டம் கூடுவது, சங்கம் அமைப்பது, எல்லாப் பகுதிகளுக்கும் சென்றுவருவது, குடியிருப்பது, விருமபிய தொழிலை மேற்கொள்வது போன்றவற்றுக்கான உரிமை (பிரிவு 19) ஆகியவையாகும்.

ஆரம்பத்தில் பிரிவு 19(1)(f), மற்றும் பிரிவு 31 ஆகியவை சொத்துரிமையை அடிப்படை உரிமையாகக் கொண்டிருந்தன. அதாவது, பொது நோக்கங்களுக்காக அரசாங்கத்தால் கட்டாயமாகக் கையகப் படுத்தலாம் என்ற நிபந்தனைக்கு உட்பட்டு, சொத்துக்களைப் பெறவோ, வைத்திருக்கவோ, விட்டொழிக்கவோ உரிமை இருந்தது. ஆனால் அரசியலமைப்பு 42ஆவது திருத்தச்சட்டம் 1978, 19ஆவது பிரிவின் முதலாவது விதியின் (f) உபவிதியையும், 31 ஆவது பிரிவையும் நீக்கியதால், சொத்துரிமையும் அடிப்படை உரிமைகளில் இருந்து நீக்கப்பட்டு விட்டது.

அரசியலமைப்பின் முதலாவது திருத்தச் சட்டத்தின் மூலம் சேர்க்கப் பட்ட பிரிவுகள் 31அ, 31ஆ மற்றும் 25ஆவது திருத்தச் சட்டத்தின் மூலம் சேர்க்கப்பட்ட பிரிவு 31இ ஆகிய பிரிவுகள், எஸ்டேட்டுகளைக் கையகப் படுத்தும் சட்டங்கள், ஒன்பதாவது அட்டவணையில் இடம் பெற்றுள்ள சட்டங்கள் மற்றும் விதிமுறைகள், நெறிமுறைக் கோட்பாடுகளுக்குச் செயல்வடிவம் கொடுக்கும் சட்டங்கள் ஆகும்.

அரசியலமைப்பின் மூன்றாவது பகுதியில் வழங்கப்பட்டுள்ள அடிப் படை உரிமைகள் முப்படை வீரர்களுக்குப் பொருந்துவதை மாற்றியமைக்கும் நாடாளுமன்ற அதிகாரம் பற்றி 33லிருந்து 35வரையுள்ள பிரிவுகளில் சொல்லப்பட்டுள்ளது.

இந்திய அரசியலமைப்பில் இடம் பெற்றுள்ள அடிப்படை உரிமைகள, பல்வேறு வரம்புகளாலும், கட்டுப்பாடுகளாலும் நெறிப்படுத்தப்பட்டுள்ளன. அடிப்படை உரிமைகள் பல்வேறு கட்டுப்பாடுகளைக் கொண்டவையாய் இருப்பதால் அவற்றுக்கு எவ்வித மதிப்பும் கிடையாது என்று விமர்சித்த வர்களுக்கும், அடிப்படை உரிமைகள் கட்டுப்பாடுகள் ஏதுமின்றி முழு மையாக இருந்தாலன்றி அவை அடிப்படை உரிமைகள் ஆகா என்று அமெரிக்க அரசிலமைப்பைச் சான்று காட்டிக் குறை கூறியவர்களுக்கும் பதில் அளித்து டாக்டர் அம்பேத்கர் 1948 நவம்பர் நான்காம் தேதி, அரசியல் நிர்ணய சபையில் பேசும்போது இவ்வாறு குறிப்பிட்டார்:

> "அடிப்படை உரிமைகள் பற்றிய விமர்சனங்கள் அனைத்துமே தவறான கருத்தின் அடிப்படையிலானவை. முதலாவதாக, அடிப்படையானவை அல்லாத உரிமைகளில் இருந்து அடிப்படை உரிமைகளைப் பிரித்துக் காண அது முயலுகிறது என்ற வாதம் சரியானது அன்று. அடிப்படை உரிமைகள் முழுமையானவை; ஆனால் அடிப்படையானவை அல்லாத உரிமைகள் முழுமையற்றவை என்ற கூற்றும் தவறானது. இரண்டு விதமான உரிமைகளுக்கும் உளள உண்மையான வேறுபாடு என்ன வென்றால், அடிப்படையானவை அல்லாத உரிமைகள் நபர்களுக்கு இடையேயான உடன்படிக்கை மூலம் உருவாக்கப்படுகின்றன; ஆனால் அடிப்படை உரிமைகளோ சட்டம் அளித்திருக்கும் நன் கொடையாகும். அடிப்படை உரிமைகள், அரசு அளிக்கின்ற நன்கொடை என்பதால் அவற்றுக்குக் கட்டுப்பாடு விதிக்கக் கூடாது என்பது சரியன்று. இரண்டாவதாக, அமெரிக்காவில் வழங்கபபட்டுள்ள அடிப்படை உரிமைகள் முழுமையானவை என்று கூறுவதும் தவறானது. அங்கே உச்ச நீதிமன்றம் போலீஸ் அதிகாரம் என்ற கோட்பாட்டை உருவாக்கி, ஒவ்வோர் அரசிடமும போலீஸ் அதிகாரம் உள்ளடங்கியதாக இருக்கிறது என்றும், அரசியலமைப்பின் மூலமாக வெளிப்படையாக அந்த அதிகாரத்தை வழங்க வேண்டியதில்லை என்றும் கூறி முழுமையான அடிப்படை உரிமைகள் ஏதுமில்லை என்று வழக்குரைஞர்களை மறுதலித்தது . . . மொத்தத்தில் பார்த்தால் இரண்டுக்கும் எந்த வேறுபாடும் இல்லை. ஒன்று நேரடியாகச் செய்வதை மற்றொன்று மறைமுகமாகச் செய்கிறது. இரண்டிலுமே அடிப்படை உரிமைகள் முழுமையானவை அல்ல."

தனி மனிதர்களுக்கு உத்தரவாதமளிக்கப்பட்டுள்ள அடிப்படை உரிமைகள், அரசாங்கத்தின் செயல்பாடுகள் மீதான வரம்புகளாகவும், கட்டுப்பாடுகளாகவும் அமைந்துள்ளன; தலைமை நீதிபதி பதஞ்சலி சாஸ்திரி ஒரு தீர்ப்பில் இவ்வாறு கூறினார்:

> "அரசியல் சட்டத்தின் மூன்றாவது பகுதியின் ஒட்டுமொத்தமான நோக்கம் என்னவென்றால், அதில் சொல்லப்பட்டுள்ள சுதந்திரங் களிலும் உரிமைகளிலும் அரசாங்கம் தன்னிச்சையாகத் தலையிடாமல்

> இருக்கப் பாதுகாப்பு அளிப்பதுதான் (மேற்கு வங்க அரசு எதிர் சுபோத் கோபால் போஸ் AIR 1954 SC 92).

"மக்களுக்கு அளிக்கப்படும் உறுதிமொழி என்றும், நாகரிக உலகத்துடன் செய்து கொள்ளப்பட்ட உடன்படிக்கை" என்றும் டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன் வருணிக்கின்ற அடிப்படை உரிமைகள் அரசாங்கத்தை அதாவது நிர்வாகத்தையும், சட்டமியற்றும் அவையையும் கட்டுப்படுத்தக் கூடியவை.

அரசியலமைப்பு நடைமுறைக்கு வருவதற்கு முன் அமலில் இருந்த, அடிப்படை உரிமைகளுக்கு முரணான அனைத்துச் சட்டங்களும் நிர்வாக ஆணைகளும் அரசியலமைப்புக்குப் புறம்பானவை என்றும், முரண்படுகின்ற அளவுக்கு அவை செல்லுபடியாகா என்றும் பிரிவு 13(2) அறிவிக்கிறது. அத்துடன்,

> "இந்தப் பகுதியில் வழங்கப்பட்டுள்ள உரிமைகளை ஒடுக்கும் முறையிலோ பறிக்கும் வகையிலோ அரசு எந்தச் சட்டத்தையும் இயற்றலாகாது; இந்த சட்டத்துக்குப் புறம்பாக இயற்றப்படும் எந்தச் சட்டமும் முரண்படுகின்ற அளவுக்குச் செல்லுபடியாகாது".

என்றும் கூறுகிறது.

இவ்வாறாக, இந்தியாவில் இயற்றப்பட்ட பழைய, புதிய சட்டங்கள் அனைத்தையும் நீதிப்புனராய்வு செய்வதற்கு இந்தப் பிரிவு வகை செய்கிறது. எனினும் அரசியலமைப்பு நடைமுறைக்கு வருவதற்கு முன்னர், மூன்றாவது பகுதியில் உள்ள வகையுரைகளுக்கு முரணாகச் செய்யப்பட்டுவிட்ட செயல்கள் எதுவும் முன்தேதியிட்டு செல்லுபடியாகாது என்று சொல்ல முடியாது (ஹபீப் முகமது எதிர் ஹைதராபாத் அரசு AIR 1953 SC 287). ஆர். சி. கூப்பர் எதிர் இந்திய அரசு AIR 1973 SC 106 என்ற வழக்கில் உச்சநீதிமன்றம் தீர்ப்பளிக்கும் போது, அரசின் ஒரு செயல், தனிநபர் உரிமையிலும், ஒரு குழுவினரின் உரிமையிலும் எல்லாப் பரிமாணங்களிலும் எப்படிச் செயல்படுகின்றது என்பதைப் பொறுத்தே அந்தச் செயலை மதிப்பிட வேண்டும் என்று கருத்துத் தெரிவித்தது.

பிரிவு 12-ன்படி, 'அரசு' என்பதில் (1) இந்திய அரசு மற்றும் நாடாளுமன்றம், (2) மாநில அரசுகள் மற்றும் அவற்றின் சட்டமன்றங்கள், (3) நகராட்சிகள், மாவட்ட வாரியங்கள், பஞ்சாயத்துக்கள், மேம்பாட்டு அறக்கட்டளைகள் போன்ற எல்லாவிதமான உள்ளாட்சி அமைப்புக்கள், (4) இந்திய ஆட்சிப் பகுதிக்குள் அல்லது இந்திய அரசாங்கத்தின் கட்டுப் பாட்டுக்குள் செயல்படும் பிற அதிகார அமைப்புகள், ஆகிய அனைத்தும் அடங்கும். இவற்றில் கடைசியாகச் சொல்லப்பட்ட 'பிற அதிகார அமைப்புகள்' என்பது பல சிக்கல்களை உண்டாக்கியது. எனினும், அரசியலமைப்பு அல்லது பிற சட்டங்களினால் உருவாக்கப்பட்டு, சட்டத்தின் மூலம் அதிகாரம் பெற்றுள்ள அனைத்தும் இதில் அடங்கும் என்று தீர்ப்பளிக்கப்பட்டிருக்கிறது. எடுத்துக் காட்டாக, ராஜஸ்தான் மின்சார வாரியம், கொச்சி தேவஸம் போர்டு, கூட்டுறவுச் சங்கம் போன்றவை இதில் அடங்கும். ஆயுள் காப்பீட்டுக் கழகம், எண்ணெய்-நிலவாயு ஆணையகம்,

நிதிக்கமிஷன் போன்றவையும் பிரிவு 12-ன்படி 'அரசு' ஆகும் என்றும் தீர்ப்பளிக்கப்பட்டது. (ராஜஸ்தான் மின்சார வாரியம் எதிர் மோகன்லால் AIR 1967 SC 1857; பி.பி.எம் நம்பூதிரிபாட் எதிர் கொச்சி தேவஸம் போர்டு AIR 1956 TC19; துக்காராம் எதிர் கூட்டுறவு வேளாண்மைச் சங்கம் AIR 1961 HP 219; சுக்தேவ் எதிர் பகத்ராம், AIR 1975 SC 1331).

ஆனால், சபாஜித் திவாரி எதிர் இந்தியா (AIR 1975 SC 1329) என்ற வழக்கில், அறிவியல் மற்றும் தொழிலக ஆய்வு நிறுவனம் (CSIR) சட்டப் பூர்வமான அமைப்பு இல்லை என்றும் ஆனால் சங்கங்கள் பதிவுச் சட்டத்தின் கீழ் பதிவு செய்யப்பட்டுள்ளது என்றும், எனவே அது 'அரசு' ஆகாது என்றும் உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்தது. இன்னொரு வழக்கில், பதிவு செய்யப்பட்ட சங்கம் பிரிவு 12-ன் படி 'ஓர் அதிகார அமைப்பு' எனத் தீர்ப்பளிக்கப்பட்டிருக்கிறது (அஜய் ஹஸியா எதிர் காலித் முஜித் AIR 1981 SC 487).

ராமன் டி ஷெட்டி எதிர் பன்னாட்டு விமான நிலைய அதிகார அமைப்பு என்ற வழக்கில், அந்த அதிகார அமைப்பானது பிரிவு 12-ல சொல்லப்பட்டுள்ள 'பிற அதிகார அமைப்புகள்' என்ற வகையில் அடங்கும என்று தீர்ப்பளித்ததுடன், அரசாங்கத்தின் 'தூண்டுதலால் செயல்படு பவையும்', அரசாங்கத்தின 'ஏஜென்சிகளும்', 'அதிகார அமைப்புகள்' அல்லது 'அரசு' எனக் கருதப்பட வேண்டும் எனவும் புதிய கொள்கை ஒன்றை அறிவித்தது. இவ்வாறான விஷயங்களில் விடைகாணுவதற்குச் சில ஆய்வு நெறிகளையும் உச்சநீதிமன்றம் வகுத்தது. எடுத்துக்காட்டாக, இத்தகைய அமைப்புகளின் நடவடிக்கைகளை அரசாங்கம் முற்றிலுமாகக் கட்டுப்படுத்துகிறதா? பங்கு மூலதனம் முழுவதும் அரசின் உரிமையில் உள்ளதா? அந்த அமைப்பின் நிர்வாகத்தை அரசாங்கம் நியமித்த இயக்கு நர்கள் கவனிக்கிறார்களா? அந்த இயக்குநர்கள் அரசாங்கத்தின் கட்டுப் பாட்டுக்கு உட்பட்டவர்களா? அந்த அமைப்பின் மீது ஆழமாக ஊடுருவிப் பரவும் கட்டுப்பாட்டை அரசு செலுத்துகிறதா? அரசாங்கம் அளித்த அல்லது அரசாங்கத்தின் பாதுகாப்புடன் கூடிய ஏக போக உரிமையை அது அனுபவிக்கிறதா? என்பது போன்ற வினாக்களை எழுப்பி அவற்றுக்கு விடை காணவேண்டும் என்று நீதிமன்றம் கூறியது. இந்த வினாப்பட்டியல் முழுமையானது அல்ல. ஒவ்வொரு வழக்கிலும், இது போன்ற வினாக்களை எழுப்பி, அதன் மூலம் ஓர் அமைப்பு, பிரிவு 12-ன் வரம்புக்குள வருகிறதா என்று தீர்மானிக்க வேண்டும். நீதித்துறையைப் பொறுத்த வரையில் ஒரு நீதிமன்றத்தை 'அரசு' ஆகக் கருதினாலும், பிரிவு 12-ன் கீழ், உயர்நீதிமன்றம் ஒன்றின் நீதித்துறை ஆணைகளுக்கு எதிராக நீதிப்பேராணையை வழங்க முடியாது. ஏனென்றால், நீதித்துறை ஆணைகள் அடிப்படை உரிமைகளை மீறுவனவாகக் கொள்ள முடியாது. (நரேஷ் எதிர் மகாராஷ்டிர அரசு AIR 1967 SC 1. எச்.எம். சீர்வையின் இந்திய அரசியலமைப்புச் சட்டம் முதலாவது பதிப்பினையும் (ப.155) காண்க).

## சமத்துவ உரிமை

### சட்டத்தின் முன் சமத்துவம் மற்றும் சட்டங்களின் மூலம் சம பாதுகாப்பு

இந்திய ஆட்சிப்பகுதிக்குள் 'சட்டத்தின் முன் சமத்துவம்' அல்லது 'சட்டங்களின் மூலம் சமபாதுகாப்பு' மறுக்கப்படலாகாது என்று பிரிவு 14-ல் அடிப்படை உரிமை வகுக்கப்பட்டுள்ளது. இந்தப் பிரிவு வழங்கும் பாதுகாப்பு குடிமக்களுக்கு மட்டுமின்றி எல்லாருக்கும் உரியது. "சட்டத்தின் முன் அனைவரும் சமம்; எவ்வித பாரபட்சமும் இன்றி சட்டத்தின் மூலம் சமமான பாதுகாப்புப் பெற அனைவருக்கும் உரிமையுள்ளது" என்ற சர்வதேச மனித உரிமைப் பிரகடனத்தின் கோட்பாட்டை உள்ளடக்கியதாக இந்த உரிமை திகழ்கிறது. நமது அரசியல் சட்டத்தில் பயன்படுத்தப்பட்டுள்ள "சட்டத்தின் முன் சமத்துவம்" மற்றும் "சட்டங்களின் மூலம் சம பாதுகாப்பு" என்ற இரு சொற்றொடர்களும், நீதியின் ஆட்சியையும் சமநீதியையும் குறிக்கின்றன. "சட்டத்தின்முன் சமத்துவம்" என்பதில் ஒருமையில் பயன்படுத்தப்பட்டுள்ள "சட்டம்" என்பது, டைசி என்பவர் குறிப்பிட்ட நீதியின் ஆட்சி அல்லது சட்டக் கோட்பாடு அல்லது நீதிக் கோட்பாடு என்பதையே குறிக்கும் "சட்டங்களின் மூலம் சம பாதுகாப்பு" என்ற சொற்றொடரில் பன்மைப பொருளில் வரும் "சட்டங்கள்" என்பது, அரசு இயற்றும் சட்டங்களைக் குறிப்பதாகவும் அவ்வாறு இயற்றப்படும் சட்டங்களின் வகையுரை எந்தவித பாரபட்சமும் இன்றி அனைவருக்கும் சமமான பாதுகாப்பை அளிக்க வேண்டும் என்பதைக் குறிப்பதாகவும் உள்ளது. ஆனால் இதுபோன்ற வேறுபாடு எதனையும் இதுவரை உச்சநீதிமன்றம விளக்கியதாகத் தெரியவில்லை. தலைமை நீதிபதி பதஞ்சலி சாஸ்திரி தீர்ப்புரைக்கும்போது, இரண்டாவதாகச் சொல்லப்பட்டது, முதலில் சொல்லப்பட்டதன் தொடர் விளைவாகும் என்றும், சட்டத்தின் முன் சமத்துவம் என்பதை மீறாமல், சட்டங்களினால் சம பாதுகாப்பு என்பதை மீற முடியும் என்று கற்பனை செய்வது சிரமமானது என்றும் கூறியிருக்கிறார் (மேற்கு வங்க அரசு எதிர் அன்வர் அலிசர்கார் AIR 1952 SC 75).

ஒரே மாதிரியான சூழ்நிலையில் இருக்கின்ற மனிதர்களை, வஸ்துக்களை, சலுகைகளை வழங்குவதிலும், பொறுப்புகளைச் சுமத்துவதிலும் ஒரே மாதிரியாக நடத்த வேண்டும் என்பதே பிரிவு 14-ல் இழையோடும் வழிகாட்டி நெறியாகும். ஒரே நிலையில் உள்ள எல்லாருக்கும் சட்டம் பொருந்தும் (AIR 1952 SC 75; பி.சி. & கோ. எதிர் இந்திய அரசு AIR 1973 SC 106). பலதரப்பான பிரிவு மக்களின் பல்வேறான தேவைகளுக்குத் தனித்தனியான நடைமுறை தேவை என்று உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்திருக்கிறது. (சிரஞ்ஜிலால் எதிர் இந்திய அரசு AIR 1951 SC41). எனவே, சட்டத்தின்முன் சமத்துவம் என்ற கோட்பாட்டின்படி பல பகுப்புகள் உருவாவது தவிர்க்க இயலாததாகி விடுகிறது. ஏனெனில், சமநிலையில் இருப்பவர்களைச் சரியான முகாந்திரம் இன்றி பலவாறாக நடத்துகின்ற போதுதான் பிரிவு 14 பொருத்தமுடையதாகிறது. சமநிலையில் உள்ள

வர்களும், சமநிலையில் இல்லாதவர்களும் வெவ்வேறாக நடத்தப்படும்போது அப்பிரிவு பொருந்தாது. அதாவது, பல பிரிவினருக்கு என்று சட்டமியற்றுவதை இப்பிரிவு தடை செய்கிறதே ஒழிய, நியாயமான முறையில் பல பிரிவுகளை உண்டாக்குவதைத் தடைசெய்யவில்லை. ஆனால் அதே சமயத்தில் அத்தகைய பிரிவுகள் 'தன்னிச்சையானவையாகவும்', 'செயற்கையானயையாகவும்', 'தப்பித்துக் கொள்ளுகின்றவையாகவும்', இருக்கலாகாது; எந்த இலட்சியத்திற்காகச் சட்டம் இயற்றப்படுகின்றதோ அந்த நோக்கத்திற்கு ஏற்ப நியாயமான வகையிலும் உண்மையானதாகவும் வேறுபாடுகள் கொண்டதாகப் பிரிவுகள் அமைய வேண்டும் ( ஆர்.கே. கார்க் எதிர் இந்திய அரசு AIR 1981 SC 2138; பிரபாகர் ராவ் எதிர் ஆந்திரப் பிரதேச அரசு AIR 1986 SC 210). நிலவியல் அடிப்படையிலோ, பிற வஸ்துகளின் அடிப்படையிலோ, தொழில் அடிப்படையிலோ பிரிவுகள் அமையலாம். (சசிமோகன் எதிர் மேற்குவங்க அரசு AIR 1958 SC 194). அனுமதிக்கப்படும் பிரிவுகள் செல்லுபடியாவதற்கு இரண்டு நிபந்தனைகளை நிறைவு செய்ய வேண்டும். அவை (1) ஒரு பிரிவாகப் பிரிக்கப்பட்ட நபர்கள் அல்லது வஸ்துக்களில் இருந்து எஞ்சியவற்றை வேறுபடுத்திக் காட்டும் அறிவார்த்தமான வேறுபாட்டின் அடிப்படையில் அத்தகைய பிரிப்பு அமையவேண்டும். (2) எந்தச் சட்டத்தின் நோக்கத்தை எட்டுவதற்காக பிரிவுகள் உண்டாக்கப்படுகின்றனவோ அந்த நோக்கத்திற்கும் வேறுபாட்டிற்கும் பகுத்தறிவுப் பூர்வமான தொடர்பு இருக்க வேண்டும். (மேற்கு வங்க அரசு எதிர் அன்வர் அலி சர்க்கார் AIR 1952 SC 75). அதற்குப் பின்னர் பல வழக்குகளில் இந்தச் சோதனை பின்பற்றப்பட்டது. எ.கா. சிரஞ்ஜிலால் எதிர் இந்திய அரசு AIR 1951 SC 41; புதான் சௌத்ரி எதிர் அரசு AIR 1955 SC 191; ராமகிருஷ்ண டால்மியா எதிர் நீதிபதி டெண்டுல்கர் 1958 SC 538; பிரபோத் வர்மா எதிர் உ.பி அரசு (1984) 4 SCC 251; ராஜ்பால் சர்மா எதிர் ஹரியானா அரசு (1985) துணை SCC 72,75).

இ.பி. ராயப்பா எதிர் தமிழ்நாடு அரசு (AIR 1974 SC555) என்ற வழக்கில், சமத்துவம் என்பதற்கு மரபு வழியான பொருள் இல்லை என்று கூறி, பிரிவு 14-ன் கீழ் சமத்துவ உரிமை என்பதற்கு புதிய அணுகுமுறையை நீதிபதி சந்திரசூட் மற்றும் நீதிபதி கிருஷ்ண ஐயர் ஆகியோர் உருவாக்கினர்.

> "சமத்துவம் என்பது பல்வேறு கூறுகளையும் பரிமாணங்களையும் கொண்ட ஆற்றல் உடைய கருத்தாகும். அதனைப் பாரம்பரியமான கோட்பாட்டு எல்லைக்குள் முடக்கிப் போட்டு விடமுடியாது. உடன்பாட்டு நோக்கில் பார்க்கும்போது, சமத்துவம் என்பது தன்னிச்சையான போக்கிற்கு எதிரான கொள்கையாகும். சொல்லப்போனால் தன்னிச்சையான போக்கும் சமத்துவமும் ஜன்ம விரோதிகள் எனலாம். ஒன்று, குடியரசின் நீதியின் ஆட்சியைச் சேர்ந்தது: மற்றொன்றோ கட்டுப்பாடற்ற எதேச்சாதிகாரியின் விருப்பத்தினையும் விளையாட்டான மனப்பாங்கினையும் சேர்ந்தது. ஒரு செயல் தன்னிச்சையானது என்றால், அது அரசியல் தர்க்க ரீதியிலும், அரசியலமைப்புச் சட்டவியலிலும் சமத்துவமற்றது என்பது உள்கிடக்கை ஆதலால் பிரிவு 14ஐ மீறியதாகும்."

இந்த அணுகுமுறையுடன் ஒத்துப் போவதாகக் கூறிய நீதிபதி பி.என். பகவதி, தனக்காகவும், நீதிபதி கிருஷ்ண ஐயருக்காகவும் பேசும்போது இவ்வாறு குறிப்பிட்டார்:

> "நமது குடியரசியலின் ஆதாரமான அடிப்படைக் கோட்பாடாகவும், நமது அரசியலமைப்பை ஏற்றுக்கொண்ட நாளன்று நமக்கென்று விதிக்கப்பட்ட உடன்படிக்கையை ஏற்று, வர்க்கபேதம் இல்லாத சமத்துவமான சமூக-பொருளாதார அமைப்பை உருவாக்குவதென்று நாம் நிர்ணயித்த குறிக்கோளை எட்டுவதற்கான கலங்கரை விளக்கம் போன்றும் பிரிவு 14 திகழ்கிறது. இவ்வுயர்ந்த சமத்துவக் கோட்பாட்டை எட்ட, வெறி பிடித்த பற்றாளர்களாக இருக்க வேண்டுமா அல்லது மேம்போக்கான விசுவாசிகளாக இருக்க வேண்டுமா என்றால், தயக்கமேதுமின்றி முன்னர் சொன்ன பக்கமே நாம் சாய்வோம்".
>
> மேலும் அவர் குறிப்பிட்டார்:
> உண்மையான, குறிப்பிடத்தகுந்த வேறுபாடுகளுக்கும், நிர்வாகத்தின் தன்னிச்சையான, மனம்போன போக்கிலான வேறுபாடுகளுக்கும் வித்தியாசம் உண்டு என்பதையே சமத்துவம் என்ற கோடபாடு சொல்ல முனைகிறது. பிரித்தறிய முடியாத நுண்ணிய வேறுபாடு களையும், கரடு முரடான நிழல் போனற அம்சங்களையும், கொள்கை ரீதியான உத்தேச முரண்பாடுகளையும் சட்டப்பூர்வமான சமத்துவமற்ற தனமையாகவோ, நிர்வாகப் பாரபட்சம் என்றோ பூதாகரமாகப் பெரிதுபடுத்துவது சமத்துவக கோட்பாட்டின் எண்ணத்திற்கும் நோக்கத்திற்கும் முரணானது. (எம். செங்கன்லால் எதிர் கிரேட்டர் பமபாய் முனிசிபாலிடி AIR 1974 SC 2009, 2029, 2039).

நீதிபதி பகவதி பின்னர் வழங்கிய தீர்ப்புகளில், (மேனகா காந்தி எதிர் இந்திய அரசு AIR 1978 SC 597; ரமண தயாராம் ஷெட்டி எதிர் பன்னாட்டு விமான நிலைய அதிகார அமைப்பு AIR 1979 SC1628; அஜய் ஹாஸியா எதிர் காலித் முஜிப் AIR 1981 SC 487), பிரிவு 14 ஐப் பொறுத்த வரையில் தம்முடைய அணுகுமுறையில் இன்னும் பட்டவர்த் தனமாகக் கருத்துரைத்தார். அதனை உச்ச நீதிமன்றத்தின் அரசியலமைப்பு பெஞ்ச் அப்படியே ஒரு மனதாக ஏற்றுக்கொண்டது.

> "தன்னிச்சையான போக்கையே பிரிவு 14 தாக்குகிறது; ஏனெனில், தன்னிச்சையான செயல் எனில் அது சமத்துவத்தை மறுப்பதாகவே இருக்கும் என்று ஒருவாறாக எல்லாரும் ஏற்றுக் கொண்டாகிவிட்டது. பிரிவுகளாகப் பகுப்பது பற்றி நீதிமன்றங்கள் உருவாக்கிய கோட்பாடு, பிரிவு 14-ன் பொழிப்புரை அன்று. அந்தப் பிரிவின் நோக்கமும் இறுதியும் அதுவன்று. சட்டமன்றம் அல்லது நிர்வாகத்தின் ஒரு செயல் தன்னிச்சையானதா, அப்படியானால் அது சமத்துவத்தை மறுப்பதாகுமா என்று தீர்மானிப்பதற்காக நீதித்துறை உருவாக்கிய சூத்திரம்தான் அது. அத்தகைய பகுப்புகள் நியாயமானவையாக இல்லாமல், முன்னர் குறிப்பிட்ட இரண்டு நிபந்தனைகளையும் நிறைவு செய்யவில்லை என்றால், மருவுள்ள அந்தச் சட்டம் அல்லது நிர்வாகச் செயல் தன்னிச்சையானதுடன் பிரிவு 14-ல் உத்தரவாத மளிக்கப்பட்டுள்ள சமத்துவம் மீறப்படுகின்றது என்பதும் வெள்ளிடை

மலை. எனவே, எங்கெல்லாம் அரசின் செயல் அல்லது பிரிவு 12-ன்படி ஒரு அதிகார அமைப்பின் செயல் தன்னிச்சையானதாக இருக்கின்றதோ - அது சட்டமன்றத்திலாகட்டும், நிர்வாகத்திலாகட்டும் - அங்கெல்லாம் பிரிவு 14 தோன்றி, தன்னிச்சையான அந்தச் செயலைத் தாக்குகிறது (AIR 1981 SC 487).

இவ்வாறாக, உச்ச நீதிமன்றம் வழங்கிய புதிய அணுகுமுறை பிரிவு 14-ன் எல்லையை விரிவாக்கியிருக்கிறது. எனவே மற்றவர்களிடமிருந்து தாம் பாரபட்சமாக நடத்தப்படுகிறோம் என்று எவரும் அஞ்சத தேவையில்லை (ஏ.எல். கல்ரா எதிர் ப்ராஜக்ட் அண்ட் எக்யூப்மெண்ட் கார்ப்பரேஷன் (1984) 3SCC 316, 328). தன்னிச்சையான அல்லது நியாய மற்ற செயல்கள் மேலோட்டமாகப் பார்க்கும்போதே பாரபட்சமானவை; பிரிவு 14க்கு முரணானவை.

## சாதி, சமய, இன, பால், பிறப்பிட வேறுபாடுகளினால் பாரபட்சம் காட்டாமை

சட்டத்தின் முன் சமத்துவம், சட்டங்களின் மூலம் சமமான பாதுகாப்பு ஆகிய பொதுவான சமத்துவக் கோட்பாட்டினை பிரிவு 14 கூறுகிறது அடுத்துவரும் 15 முதல் 18 வரையிலான பிரிவுகள், இந்தப் பொதுக் கோட்பாட்டினை இந்தியக் குடிமக்களிடையே செயல்படுத்தக்கூடிய சில பகுதிகளைப் பற்றிக் குறிப்பிடுகின்றன.

எந்த ஒரு குடிமகனையும் சாதி, சமய, இன, பால், பிறப்பிட வேறுபாடுகளை மட்டும் காரணம் காட்டி பாரபட்சமாக நடத்தக் கூடாது என்று பிரிவு 15 அரசுக்கு ஆணையிடுகிறது. இதில் 'மட்டும்' என்ற சொல்லின் பிரயோகம் மிகவும் முக்கியமானது. மேலே சொன்ன காரணங் களில் ஒன்றோ பலவோ சேர்ந்து அவற்றுடன் வேறு ஏதேனும் காரணமோ, காரணங்களையோ காட்டி பாரபடசமாக நடத்துவது இந்தப் பிரிவினால் பாதிக்காது (தத்தாத்ரேயா எதிர் பம்பாய் அரசு AIR 1953 BOM 311); குடியிருப்பிடம் காரணமாகப் பாரபட்சமாக நடத்துவது செல்லாததாகாது (டி.பி. ஜோஷி எதிர் மத்யபாரத் அரசு AIR 1955 SC 334).

பிரிவு 14-ன் இரண்டாவது விதி, பாரபட்சமான போக்கு தடை செய்யப்படவேண்டிய விசேஷமான செயல்களைக் குறிப்பிடுகிறது. சாதி, சமய, இன, பால், பிறப்பிட வேறுபாடுகளினால் மட்டுமே எந்த ஒரு குடிமகனையும் (1) கடைகள், பொது இடங்களில் உள்ள ரெஸ்டாரன்டுகள், ஓட்டல்கள், கேளிக்கை விடுதிகள், போன்றவற்றுக்குச் செல்வதற்கும் (2) கிணறுகள், குளங்கள், குளிக்கும் இடங்கள், சாலைகள், அரசின் நிதியை முழுமையாகவோ, ஓரளவுக்கோ பயன்பாட்டுக்கு என்று அர்ப்பணிக்கப் பட்டுவிட்ட ஓய்வகங்கள் போன்றவற்றைப் பயன்படுத்துவதற்கும் கட்டுப்பாடு விதிக்கவோ, நிபந்தனைகள் விதிக்கவோ, பொறுப்புகளைச் சுமத்துவதோ கூடாது என்று அந்த விதி கூறுகிறது. அரசாங்கமும், பொது மக்களும் இது மாதிரியான வேறுபாடுகளைக் காரணங்காட்டி பாரபட்சம் காட்டக் கூடாது என்று இரு தரப்புக்கும் இந்த விதி தடை விதிக்கிறது.

பாரபட்சம் காட்டலாகாது என்று பொதுவான கோட்பாடுகளுக்கு உள்ள விதிவிலக்குகளைப் பிரிவு 15-ன் மூன்றாவது, நான்காவது விதிகள் கூறுகின்றன. மகளிர் மற்றும் குழந்தைகளுக்குச் சிறப்பு ஏற்பாடுகளைச் செய்யவும், சமுதாய ரீதியாகவும், கல்வி ரீதியாகவும் பின்தங்கியோர் அல்லது ஆதி திராவிடர்கள் மற்றும் பழங்குடியினரின் மேம்பாட்டுக்காகச் சிறப்பு நடவடிக்கைகளை மேற்கொள்ளவும் இந்த இரு விதிகளும் வகை செய்கின்றன. இந்தப்பிரிவு மக்களின் பாதுகாப்புக்கு மேற்கொள்ளப்படும் நடவடிக்கைகள் செல்லுபடியாகும் என்று உச்சநீதிமன்றம் அளித்த தீர்ப்புகளே இந்த விதிவிலக்குகளின் தேவையையும் நியாயத்தையும் எடுத் துரைக்கின்றன. (யூசுப் அப்துல் அஜிஸ் எதிர் பம்பாய் அரசு AIR 1954 SC 321; சென்னை அரசு எதிர் சம்பகம் துரைராஜன் AIR 1951 SC 226). இந்த சிறப்பு ஏற்பாடுகள் இருந்த போதிலும், அத்தகைய இனங்களில் பிரிவு 14-ன் கீழ் உள்ள பொதுவான தடையும் பொருந்தும் என்றும் தீர்ப்புகள் அளிக்கப்பட்டுள்ளன. அரசு செய்கின்ற சிறப்பு ஏற்பாடுகள் தன்னிச்சை யானவையாகவோ, போதிய காரணங்கள் இல்லாதவையாகவோ இருத்தலாகாது (என். வசுந்தரா எதிர் மைசூர் அரசு AIR 1971 SC 1439).

பிரிவு 15(4) எழுப்பிய பெரிய பிரச்சினை என்னவென்றால், "சமுதாய ரீதியாகவும், பொருளாதார ரீதியாகவும் பின்தங்கிய வகுப்பினர்" என்று எவ்வாறு தீர்மானம் செய்வது என்பதே ஆகும். அவ்வாறு தீர்மானிப்பதற்கு உரிய அளவுகோலை வரையறுக்கப் பல காரணிகள் உள்ளன. ஒரு நபரின் சாதியை மட்டுமே அடிப்படையாகக் கொண்டு, ஒரு குறிப்பிட்ட பிரிவினர் பின்தங்கிய பிரிவினரா இல்லையா என்று தீர்மானிக்க முடியாது என உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்திருக்கிறது. சித்ரலேகா எதிர் மைசூர் (AIR 1964 SC 1823) என்ற வழக்கில், ஒரு பிரிவினரின் பின்தங்கிய நிலையை உறுதி செய்துகொள்ள சாதி என்பது ஏற்புடையதொரு காரணி என்றாலும், சாதியைப் பற்றிய எவ்விதமான கருத்தும் கொள்ளாமலேயே ஒரு குறிப்பிட்ட பிரிவினரைப் பின்தங்கிய பிரிவினர் என்று தீர்மானிக்க சம்பந்தப்பட்டவர்களை எதுவுமே தடைசெய்ய முடியாது என்று உச்ச நீதிமன்றம் தீர்ப்பளித்திருக்கிறது. "சாதியும் வறுமையும் பின்தங்கிய நிலையைத் தீர்மானிக்கும் ஏற்புடைய காரணிகளே. ஆனால் சாதியை மட்டுமோ அல்லது வறுமையை மட்டுமோ அளவுகோலாகக் கொள்ள முடியாது" என்று இன்னொரு வழக்கில் உச்சநீதிமன்றம் தீர்ப்புரைத்திருக்கிறது. (கேஎஸ். ஜெய்ஸ்ரீ எதிர் கேரளா AIR 1976 SC 2381; சோட்டேலால் எதிர் உத்திரப் பிரதேசம் AIR 1979 அலகாபாத் 135 ஆகியவற்றையும் காண்க).

## ஏனைய பின்தங்கிய வகுப்பினருக்கு (OBC) இட ஒதுக்கீடு

சமுதாய ரீதியிலும், கல்விரீதியிலும் பின்தங்கிய பிரிவினருக்கு இட ஒதுக்கீடு செய்வது குறித்து அண்மைக்காலத்தில் அரசியல் கட்சிகள் பெரிதும் முக்கியத்துவம் செலுத்திப் பேசி வருகின்றன. ஆதிதிராவிடர்கள், பழங் குடியினர் தவிர வேறு பல பிரிவினருக்கும் இட ஒதுக்கீட்டுச் சலுகையை நீட்டிக்க வேண்டும் என்று நிர்ப்பந்தங்கள் பெருகி வருகின்றன. அடிப்படை

யாகப் பார்க்கப் போனால், எந்தவிதமான இட ஒதுக்கீடு என்றாலும் அது பாரபட்சமான போக்குதான் என்றும், அது சமத்துவக் கோட்பாட்டை மீறுவதாகும் என்றும், தகுதிக்கு அது முன்னுரிமை அளிப்பதில்லை என்றும், அதனால் தகுதியுள்ள பலரிடையே அவநம்பிக்கையைத் தோற்று விக்கிறது என்றும் நாம் ஒப்புக் கொண்டாக வேண்டும். எனவே எந்த விதமான ஒதுக்கீடாக இருந்தாலும் அது செல்லுபடியாகக் கூடியதா என்பதை, அது பொருத்தமான, அறிவார்த்தமான அடிப்படையில் செய்யப்பட்டுள்ளதா என்று சோதித்துத்தான் தெரிந்து கொள்ள முடியும்.

எந்தவிதமான பகுப்புகள் பாரபட்சமானவை என்பதை அவ்வப்போது உச்சநீதிமன்றம் குறிப்பிட்டுச் சொல்லி வருகிறது. உத்தரப்பிரதேசத்தில் கிராமப் புறங்கள், மலைப்பகுதிகள் மற்றும் உத்தரகண்ட் ஆகிய பகுதிகளில் இருந்து வருகின்ற மாணவர்களுக்கு மருத்துவக் கல்லூரிகளில் சேர்வதற்கு அந்த மாநில அரசு இட ஒதுக்கீடு செய்தது. இதனை எதிர்த்து பிரதீப் தாண்டன் என்பவர் தொடுத்த வழக்கில் தீர்ப்பளித்த உச்சநீதிமன்றம், கிராமப் புறங்களில் இருந்து வருபவர்களுக்கு இட ஒதுக்கீடு வழங்கியது அரசியலமைப்புக்குப் புறம்பானது என்றும், ஆனால் மலைப்பகுதிகள் மற்றும் உத்தரகண்ட் பகுதிகளில் இருந்து வருபவர்களுக்கு இட ஒதுக்கீடு செய்தது செல்லுபடியாகும் என்றும் கூறியது. மலைப்பகுதிகளும் உத்தரகண்ட் பகுதியும், சமூக ரீதியாகவும், கல்வி ரீதியாகவும் பின்தங்கிய மக்கள் வசிக்கும் பகுதிக்கு எடுத்துக் காட்டாகும் என்று நீதிமன்றம் கருத்துத் தெரிவித்தது. நாட்டின் மக்கள் தொகையில் 80 சதவீதம்பேர் கிராமப்புறங்களில் வசிப்பதாலும், கிராமப்புறங்களில் இருந்து வருபவர்கள் அனைவரும் ஒத்த தன்மையுடைய ஒரு பிரிவினராக மாட்டார்கள் என்பதாலும் அவர்களுக்கு இட ஒதுக்கீடு செய்வது முறையாகாது என்று உச்ச நீதிமன்றம் கருத்துரைத்தது. ஒரு மாநிலத்தின் மொத்த மக்கள் தொகைக்கும் மாவட்டவாரியான மக்கள் தொகைக்கும் உள்ள விகிதாச்சாரத்திற்கு ஏற்ப மாவட்டவாரியாக இட ஒதுக்கீடு நிர்ணயம் செய்வதும் பாரபட்சமானது என்று உச்சநீதிமன்றம் அறிவித்திருக்கிறது (பி.ராஜேந்திரன் எதிர் சென்னை அரசு AIR 1971 SC 2303). ஆனால், கேரள மாநிலத்தில் மருத்துவக் கல்லூரி சேர்க்கைக்குப் பல்கலைக்கழக வாரியாக இருக்கைகளை ஒதுக்கீடு செய்வது செல்லுபடியாகும் என்று தீர்ப்பளிக்கப்பட்டது (டிஎன். சந்தாலா எதிர் மைசூர் அரசு AIR 1971 SC 1762)

## அரசு வேலைகளுக்குச் சமவாய்ப்பு

பிரிவு 16-ன் (1) மற்றும் (2) ஆவது விதிகளின்படி இந்தியக் குடிமக்கள் அனைவருக்கும் அரசு அலுவலகங்களில் வேலை பெறுவதற்குச் சமவாய்ப்பு உத்தரவாதமளிக்கப்பட்டுள்ளது. சாதி, சமய, இன, பால், வம்சாவழி, பிறப்பிட, இருப்பிட வேறுபாடுகளினால் மட்டும் அரசுப்பதவியை அல்லது வேலையைப் பெறத் தகுதியில்லை என்று எந்தக் குடிமகனுக்கும் பாரபட்சம் காட்டக்கூடாது என்று அந்த விதிகள் கூறுகின்றன. எனினும், சமவாய்ப்பு என்னும் பொதுவிதியில் இருந்து விலகிச் செல்வதற்கு மூன்று விதிவிலக்குச் சூழ்நிலைகளை அடுத்துவரும் (3), (4), (5) ஆகிய விதிகள் கூறுகின்றன.

(1) மற்றும் (2)இல் உள்ள பொதுவிதியிலிருந்து விலகி ஒரு மாநிலம் அல்லது நேரடி ஆட்சிப் பகுதி செயல்பட அனுமதிப்பதை முறைப்படுத்த விதி (3) நாடாளுமன்றத்திற்கு அதிகாரம் அளிக்கிறது. இந்த அதிகாரத்தின்படி அரசு வேலைவாய்ப்புகள் (இருப்பிடம் பற்றிய நிபந்தனை) சட்டம் 1957ஐ நாடாளுமன்றம் இயற்றியது. அரசு வேலையைப் பெறுவதற்காகக் குறிப்பிட்ட ஒருமாநிலம் அல்லது நேரடி ஆட்சிப்பகுதிக்குள் வசிப்பவராக இருக்க வேண்டும் என்பது போன்ற நிபந்தனைகளை விதித்த, வழக்கத்தில் இருந்த பழைய சட்டங்கள் அனைத்தையும் அந்தச் சட்டம் திரும்பப் பெற்றுக் கொண்டதுடன், ஒரு குறிப்பிட்ட மாநிலத்தில் வசிப்பவராக இல்லை என்ற காரணத்திற்காக எவரும் தகுதியற்றவர் ஆக மாட்டார்கள் என்றும் அறிவித்தது. எனினும் ஹிமாசலப் பிரதேசம், மணிப்பூர், திரிபுரா மற்றும் ஆந்திரப்பிரதேசத்தின் தெலுங்கானா பகுதி ஆகியவற்றின் பின்தங்கிய இயல்பின் காரணமாக அப்பகுதிகளுக்கு மட்டும் ஐந்து ஆண்டுகளுக்கு மேற்படாமல் வசிப்பிடத் தகுதியை நிர்ணயிக்கலாம் என்றும் அச்சட்டம் விதிவிலக்கு அளித்தது. ஆனால், இருப்பிடத் தகுதியை ஒரு மாநிலம் முழுவதுக்கும் நிர்ணயிக்கலாமே ஒழிய மாநிலத்தின் ஒரு பகுதிக்கு மட்டும் நிர்ணயிப்பது சரியாகாது என்று கூறி அச்சட்டத்தின் ஒரு பகுதியை அரசியலமைப்புக்கு முரணானது என்று நரசிம்மராவ் எதிர் ஆந்திரப் பிரதேச அரசு (AIR 1970 SC 422) என்ற வழக்கில் உச்சநீதி மன்றம் தீர்ப்பளித்தது.

பிரிவு 16க்கு இரண்டாவது விதிவிலக்கான விதி (4). அரசின் கணிப்பில், அரசுப் பணிகளில் போதிய பிரதிநிதித்துவம் பெறாத பின்தங்கிய பிரிவு குடிமக்களுக்காக, அரசுவேலைகளில் இட ஒதுக்கீடு செய்வதற்கு அரசுக்கு அதிகாரம் அளிக்கிறது. இந்த விதி அரசுக்கு வழிவகை செய்யும் விதியே அன்றி, இதில் எவ்வித உரிமையோ, கடமையோ கோர முடியாது (ராஜஸ்தான் எதிர் இந்திய அரசு AIR 1968 SC 507). ஆனால், என்.எம். தாமஸ் வழக்கில் (AIR 1976 SC 490), இந்த விதியானது, (1)ன்கீழ் உத்தரவாதமளிக்கப்பட்டுள்ள சமவாய்ப்பு என்பதைத் திட்டவட்டமாகக் கூறுவதாகச் சொல்லப்பட்டது. அதாவது, சமவாய்ப்பு என்பது ஒரே பிரிவைச் சேர்ந்த பணியாளர்களிடையே சமத்துவத்தைக் குறிக்கிறதே ஒழிய தனித்தனியான வெவ்வேறு பிரிவுகளைச் சேர்ந்த பணியாளர்களிடையே சமத்துவத்தைக் குறிப்பதாகாது. எனவே, சமூக-பொருளாதார ரீதியாகப் பின்னடைந்துள்ள ஆதி திராவிடர் மற்றும் பழங்குடி மக்களுக்கு அரசுப் பணிகளில் போதிய பிரதிநிதித்துவம் அளிப்பதற்காகத் தனித்தனிப் பிரிவினராக அவர்களைப் பிரிப்பதை சமவாய்ப்பு என்ற அடிப்படை உரிமை நியாயப்படுத்துகிறது (ஏ.பி.எஸ்.கே. சங் (ரயில்வே) எதிர் இந்திய அரசு AIR 1981 SC 298).

பிரிவு 16(4)-ல் வழங்கப்பட்டுள்ள அதிகாரத்தை அரசு செயல்படுத்த வேண்டுமானால் அதற்குள்ள ஒரே நிபந்தனை, குறிப்பிட்ட பின்தங்கிய பிரிவு குடிமக்களுக்கு அரசுப் பணிகளில் போதிய பிரதிநிதித்துவம் இல்லை என்பதை உறுதி செய்து கொள்வதே ஆகும். மேலும் போதிய எண்ணிக்கையின் அடிப்படையில் பிரதிநிதித்துவம் இருக்கிறதா, உயர் பதவிகளிலும்

அவர்களுக்குப் பிரதிநிதித்துவம் உள்ளதா என்பதையும் உறுதி செய்து கொள்ளவேண்டும். அதாவது, முதன்முதலாகப் பணியமர்த்தம் செய்யப்படும் போது இட ஒதுக்கீடு செய்வதுடன், தேர்வுநிலைப் பதவிகளிலும், பதவி உயர்வுகளிலும் இட ஒதுக்கீடு வழங்குவதற்கு இந்த அதிகாரத்தைப் பயன் படுத்திக் கொள்ளலாம் (தென்னக ரயில்வே தலைமை மேலாளர் எதிர் ரங்காச்சாரி AIR 1962 SC 36; இந்தியத் தலைமைத் தணிக்கைக் கட்டுப் பாட்டு அலுவலர் எதிர் வி.கே.எஸ். ஜெகன்னாத் 1986 SC 679). எனினும் இட ஒதுக்கீடு, அளவுக்கு மீறியதாக இல்லாமலும், பிரிவு 16(1)இல் உத்தரவாத மளிக்கப்பட்டுள்ள உரிமையை முற்றிலுமாகத் துடைத்தழித்து விடுவதாக இல்லாமலும் இருக்க வேண்டும். ஒதுக்கீடு செய்யப்பட்ட இடங்களில நிரப்பப்படாமல் இருப்பவற்றை அடுத்தடுத்த ஆண்டுகளில் நிரப்புவது அரசியலமைப்புக்கு உட்பட்டதா என்ற வினாவிற்கு தேவதாசன் எதிர் இந்திய அரசு (AIR 1964 SC 179) என்ற வழக்கில் தீர்ப்புரைக்கும்போது அது அரசியலமைப்புக்கு முரணானது என நான்கிற்கு ஒன்று என்ற பெரும் பான்மையுடன், உச்சநீதிமன்ற நீதிபதிகள் கூறினர். பின் தங்கிய பிரிவினர் அல்லாதவர்களுக்கு அரசுப் பணிகளில் சமவாய்ப்புக் கிடைப்பதை மறுக் கின்ற வகையில் பிரிவு 16(4)இன் கீழ் அரசுக்கு அளிக்கப்பட்டுள்ள அதிகாரத்தைப் பயன்படுத்தக் கூடாது என்று அவர்கள் தீர்ப்பளித்தனர். ஒரே ஆண்டில் ஐம்பது சதவீதத்திற்கு மேல் இடஒதுக்கீடு செய்வது, அரசிய லமைப்புக்கு முரணானது; ஏனெனில் பிரிவு 16(1)இன் நோக்கத்தை அது அழித்து விடுகிறது என்றும் அவர்கள் தமது தீர்ப்பில் குறிப்பிட்டிருந்தனர்.

இடஒதுக்கீடு 50 விழுக்காட்டைத் தாண்டக்கூடாது என்று உச்சநீதி மன்றம் விதித்துள்ள வரம்புக்கு இணங்க, பின்தங்கிய பிரிவினருக்கு 27 விழுக்காடு இடஒதுக்கீடு வழங்க வேண்டும் என்று மண்டல் கமிஷன் தனது அறிக்கையில் பரிந்துரை செய்திருந்தது. மண்டல் வழக்கில் 1992ஆம் ஆண்டு நவம்பர் 16ஆம் தேதி தீர்ப்பளித்த உச்சநீதிமன்ற நீதிபதிகள் ஆறுக்கு மூன்று என்ற பெரும்பான்மையுடன், சமூகரீதியாகவும், பொருளாதார ரீதியாகவும் பின்தங்கிய பிரிவினருக்கு 27 விழுக்காடு இட ஒதுக்கீடு சரியானதே என்று உறுதி செய்தனர். எனினும், அப்பிரிவினரிடையே முன்னேறியவர்களுக்கு (Creamy layer) இடஒதுக்கீட்டுச் சலுகை கூடாது என்றும், முதன்முதலாக பணியமர்த்தம் செய்யப்படும்போது மட்டுமே இட ஒதுக்கீட்டுச் சலுகை வழங்கப்பட வேண்டும் என்றும், பிரிவு 16(4)இன்படி பதவி உயர்வுகளில் இட ஒதுக்கீட்டிற்கு வகை செய்யப்படவில்லை என்றும், சில அசாதாரண சூழ்நிலைகள் தவிர மொத்த ஒதுக்கீடு 50 விழுக்காட்டிற்கு மிகாமல் இருக்க வேண்டும் என்றும் உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்தது. 'பின் தங்கிய பிரிவு குடிமக்கள்' என்பதை அரசியலமைப்பு வரையறை செய்ய வில்லை. பிரிவு 16(4), பொருளாதார ரீதியாகப் பின்தங்கிய நிலையைக் காட்டிலும், சமூக ரீதியாகப் பின்தங்கிய நிலையையே வலியுறுத்திக் கூறுவதால், பொருளாதார அளவுகோலை மட்டுமே கொண்டு பின்தங்கிய பிரிவினரை இனம்காண முடியாது. எனவே, ஏற்கெனவே உள்ள இட ஒதுக்கீட்டுச் சலுகை எதனையும் பெறாத, பொருளாதார ரீதியாகப் பின்தங்கிய பிரிவினருக்குத் தனியாகப் பத்து விழுக்காடு இடஒதுக்கீடு வழங்கிய

அறிவிப்பு செல்லாது என்றும் உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்தது. சாதிப்பிரிவு என்பது பெரும்பாலும் ஒரு சமூக வகுப்பாக இருக்கும் என்றும் நீதிமன்றம் கூறியது. "அது சமூக ரீதியாகப் பின்தங்கிய பிரிவானால், பிரிவு 16(4)இன் கீழும் அது பின்தங்கிய பிரிவே." இந்துக்கள் அல்லாதவர்களிடையே உள்ள, சமூக ரீதியாகப் பின் தங்கிய தொழில்களைச் செய்கின்ற பிரிவுகள, வகுப்புகள் பலவும் பிரிவு 16(4)இன் கீழ்வரும். எனவே பிரிவு 16(4)இன்கீழ் வருகின்ற பின்தங்கிய பிரிவினரும பிரிவு 15(4)இன் கீழ் வருகின்ற சமூக ரீதியாகவும், பொருளாதார ரீதியாகவும் பினதங்கிய பிரிவினரும் ஒன்றே என்பது தவறானதாகும். சாதியின் அடிப்படையில் பாரபட்சம் காட்டக் கூடாது என்று பிரிவு15(2) மறறும் 16(2)இல் கூறப்பட்டிருந்தாலும், பிரிவுகள் 15(4) மற்றும் 16(4)இல் 'பிரிவு' என்ற சொல்லே பயன்படுத்தப்பட்டுள்ளது எனவே, பின்தங்கிய பிரிவினரை, சாதி அடிப்படையிலும், குறிப்பிட்ட தொழில்களைச் செய்கின்ற வகுப்பின் அடிப்படையிலும் நிச்சயம் இனம் காண முடியும் எனறு பெரும்பான்மை நீதிபதிகள் கருத்துத் தெரிவித்தனர் மேலும், தொழில்நுட்பப் பதவிகள், ஆராய்ச்சி-அபிவிருத்தி அமைப்புகள, மருத்துவம், பொறியியல், மற்றும் இது போன்ற அறிவியல துறைகளின சிறப்புப் பிரிவுகள் மற்றும் உயர் சிறப்புப் பிரிவுகள், பாதுகாப்புத்துறை மற்றும் அது தொடர்பான நிறுவனங்கள் போன்றவற்றில் இடஒதுக்கீடு வழங்குவது உகந்ததன்று என்றும் நீதிமன்றம் கூறியது. கல்வித் துறைப் பேராசிரியர்கள், விமானப் போக்குவரத்துத் துறையில் விமான ஓட்டிகள், அணுசக்தி மற்றும் விண்வெளி ஆய்வுததுறை அறிவிய லறிஞர்கள் மற்றும் தொழில்நுட்ப வல்லுநர்கள் போன்ற உயர்பதவிகளுக்கும் இடஒதுக்கீடு வழங்குவது உகந்ததன்று (இந்திரா சஹானி எதிர் இந்திய அரசு SC 16, நவம்பர் 1992).

அரசு வேலைகளில் அனைவருக்கும் சமவாய்ப்பு அளிக்க வேண்டும் என்ற பொதுவிதிக்கு மூன்றாவது விதிவிலக்கு, பிரிவு 16–ன் 5ஆவது விதியில் இடம்பெற்றுள்ளது. அதன்படி சமயம் அல்லது மதப்பிரிவு சம்பந்தப்பட்ட விவகாரங்களை கவனிக்கின்ற பதவிக்கோ, அவற்றின் நிர்வாக அமைப்பில் உறுப்பினராவதற்கோ, ஒருவர் அந்தக் குறிப்பிட்ட சமயம் அல்லது மதப்பிரிவைச் சேர்ந்தவராக இருக்க வேண்டும் என்று சட்டத்தின் மூலம் நிபந்தனை விதிக்கலாம்.

## தீண்டாமை ஒழிப்பு

பிரிவு 17, தீண்டாமையை ஒழிப்பதுடன், தீண்டாமை எந்த வடிவத்திலும் பின்பற்றப்படுவதையும் தடை செய்கிறது. தீண்டாமையை எவரேனும் பின்பற்றினால் அது சட்டப்படி தண்டனைக்குரிய குற்றமாகக் கருதப்படும். சில குறிப்பிட்ட சாதிகளில் பிறந்த ஒரே காரணத்திற்காக சக மனிதர்களை அசுத்தமானவர்கள் என்றும் தீண்டத்தகாதவர்கள் என்றும் கூறுகின்ற மனிதாபிமானமற்ற செயலுக்கு முடிவு கட்டுவதே இந்தப் பிரிவின நோக்கமாகும். இந்தப் பிரிவின் மூலம் உத்தரவாதமளிக்கப்பட்டுள்ள தீண்டாமைக்கு எதிரான அடிப்படை உரிமை தனிநபர்களுக்கு எதிராகச் செயல்படுத்தக் கூடியது என்றும், அந்த உரிமையை மீறாமல் இருப்பதற்கு

உரிய நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டியது அரசின் அரசியலமைப்பு ரீதியான கடமையாகும் என்றும் உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்திருக்கிறது (ஜனநாயக உரிமைகளுக்கான மக்கள் சங்கம் எதிர் இந்திய அரசு AIR 1982 SC 1473). தீண்டாமை (குற்றங்கள்) சட்டம் 1955, பின்னர் 'சிவில் உரிமைகள் பாதுகாப்புச் சட்டம் 1955' என்று மாற்றப்பட்டு, தீண்டாமைக் குற்றம் இழைப்பவர்களுக்குத் தண்டனையளிக்க வகை செய்தது.

## பட்டங்கள் ஒழிப்பு

இந்தியக் குடிமகன் ஆனாலும், வெளிநாட்டுப் பிரஜை ஆனாலும் எவருக்கும் அரசாங்கம் எந்தவிதமான பட்டங்களையும் வழங்கக் கூடாது என்று பிரிவு 18 தடை செய்கிறது. எனினும் ராணுவத்திலும் கல்வித் துறையிலும் சாதனை புரிவோருக்குப் பட்டங்கள் வழங்குவற்கு விதிவிலக்கு அளிக்கப் பட்டுள்ளது. இப்பிரிவின் இரண்டாவது விதியின்படி, இந்தியக் குடிமகன் ஒருவர் வெளிநாட்டு அரசிடமிருந்தும்கூட எவ்விதமான பட்டத்தையும் பெறக்கூடாது. இந்திய அரசின் கீழ் ஊதியம் பெறும் பதவி, அல்லது ஓர் அறக்கட்டளையில் பொறுப்பு வகிக்கின்ற வெளிநாட்டவர் எவரும்கூட குடியரசுத் தலைவரின் ஒப்புதல் இன்றி எந்த வெளிநாட்டு அரசிடமிருந்தும் எவ்விதமான பட்டத்தையும் ஏற்கக் கூடாது என்று மூன்றாவது விதி கூறுகிறது. இந்திய அரசின் கீழ் ஊதியம் பெறும் பதவி அல்லது ஓர் அறக் கட்டளையில் பொறுப்பு வகிக்கின்ற எந்த நபரும், குடியரசுத்தலைவரின் அனுமதியின்றி எந்த வெளி நாட்டு அரசிடமிருந்தும் எந்த விதமான அன்பளிப்பையோ, வேலையையோ, பதவியையோ வேறு எந்தப் பொருளையுமோ ஏற்கக் கூடாது என்று நான்காவது விதி கூறுகிறது.

குறிப்பிடத்தக்க அளவில் மிகச் சிறப்பாகப் பணிபுரிந்தவர்களுக்கு குடியரசு நாளில் குடியரசுத் தலைவர் பல ஆண்டுகளாக வழங்கி வருகின்ற பாரத ரத்னா, பத்ம விபூஷண், பத்மபூஷண், பத்மஸ்ரீ ஆகிய சிவிலியன் விருதுகள் அரசியலமைப்பின் 18ஆவது பிரிவினை மீறிய செயலாகுமா என்ற வினா அண்மையில் எழுப்பப்பட்டது. தற்போது அந்த விஷயம் நீதிமன்றத்தின் பரிசீலனையில் உள்ளது. உச்சநீதிமன்றத்தின் இடைக்காலத் தடை உத்தரவின்பேரில், இந்த விருதுகள் தற்போது நிறுத்தி வைக்கப்பட்டுள்ளன.

## சுதந்திர உரிமை

அரசியலமைப்பின் 19ஆவது பிரிவு, இந்தியக் குடிமக்களுக்கு, அடிப் படையான ஆறு சுதந்திரங்களை வழங்க உத்தரவாதம் அளிக்கிறது. அவை யாவன: (1) பேச்சு மற்றும் கருத்து வெளிப்பாட்டுச் சுதந்திரம், (2) ஆயுதங்கள் இல்லாமல் அமைதியாகக் கூட்டம் கூடுவதற்குச் சுதந்திரம், (3) சங்கங்கள் அமைப்பதற்குச் சுதந்திரம், (4) இந்திய ஆட்சிப்பகுதிக்குள் எல்லா இடங்களுக்கும் போய் வருவதற்கான சுதந்திரம், (5) இந்தியாவின் எந்தப் பகுதியில் வேண்டுமானாலும் வசிக்கவும் குடியிருப்பதற்கும் சுதந்திரம் (6) எந்தத் தொழிலையோ, வியாபாரத்தையோ, வாணிகத்தையோ

மேற்கொள்வதற்கான சுதந்திரம். இந்தச் சுதந்திரங்கள் யாவும் 'ஒரு குடிமகன் என்ற நிலையில் இயற்கையாகவே அமைந்துள்ள சுதந்திரங்கள்' என்று அங்கீகரிக்கப்பட்டுள்ளன (மேற்கு வங்க அரசு எதிர் சுபோத் கோபால் போஸ், AIR 1954 SC 92, 95). எனினும் இவை, சுதந்திரமான ஒரு குடிமகன் மக்களாட்சி மாண்புகளை முழுமையாக அனுபவிப்பதற்குரிய விரிவான பட்டியலாகா என்று நீதிமன்றங்கள் தீர்ப்புரைத்திருக்கின்றன. பிரிவு 19-ல் வேறு பல சுதந்திரங்கள் குறிப்பிடப்படாவிட்டாலும் மக்களாட்சி அரசியலுக்கு மேலும் பல இணையான சுதந்திரங்கள் தேவை என்று தமது தீர்ப்புகளில் (மேனகா காந்தி எதிர் இந்திய அரசு AIR 1978 SC 597) நீதிமன்றங்கள் குறிப்பிட்டுள்ளன. எடுத்துக்காட்டாக, உயிர் வாழ்வதற்கான சுதந்திரம் (ஜக்மோகன் சிங் எதிர் உ.பி. அரசு AIR 1973 SC 947), தேர்தலில் வாக்களிக்கவும், போட்டியிடவும் சுதந்திரம் (என்.பி. பொன்னுசுவாமி எதிர் தேர்தல் அதிகாரி AIR 1952 SC 54, 71), வேலையில் தொடர்ந்து நீடிப்பதற்கு அரசு ஊழியருக்குச் சுதந்திரம் (பிபல்கோட்டியா எதிர் இந்திய அரசு AIR 1958 SC 232, 238), வேலைநிறுத்தம் செய்யும் உரிமை (ராதேஷியாம் சர்மா எதிர் தலைமை போஸ்ட் மாஸ்டர், நாக்பூர், AIR 1965 SC 311, 313), பத்திரிகைச் சுதந்திரம் (பிரிஜ்பூஷண் எதிர் அரசு AIR 1950 SC 129), தகவல் அறியும் உரிமை (எல்.கே. கூல்வால் எதிர் ராஜஸ்தான் அரசு AIR 1988, ராஜஸ்தான் உயர்நீதிமன்றம் 2), ஆகியவற்றை நீதிமன்றங்கள் பல்வேறு தீர்ப்புகளில் குறிப்பிட்டுள்ளன.

முன்னர் கூறிய ஆறு சுதந்திரங்களையும் அரசின் செயல்பாட்டுக்கு எதிராக நிலைநிறுத்தும் உரிமை எல்லாக் குடிமக்களுக்கும் உண்டு. எனினும் அந்த உரிமை முழுமையானதோ, வரம்பற்றதோ அன்று. ஏனெனில் நீதிபதி தாஸ் குறிப்பிட்டதுபோல, 'தனிமனித சுதந்திரத்தினால் உண்டாகும் சமூக நலனை, அதனிலும் பெரிய சமூக நலனுக்காக விட்டுக்கொடுக்கலாம்' (ஏ.கே.கோபாலன் எதிர் சென்னை அரசு AIR 1950 SC 27). எனவே, 'இந்தியாவின் இறையாண்மை, ஒருமைப்பாடு, நாட்டின் பாதுகாப்பு, வெளி நாடுகளுடனான நட்புறவு' இவற்றைப் பேணிக்காக்கவும், நீதிமன்ற அவமதிப்பு, அவதூறு, குற்றச்செயல் தூண்டுதல் போன்றவற்றுக்கு எதிராக பொது ஒழுங்கையும் கண்ணியத்தையும், தார்மீக நெறியையும், போற்றிக்காக்கவும், உரிய சட்டங்கள் இயற்றுவதன் மூலம் மேற்சொன்ன உரிமைகளைச் செயல்படுத்த சில நியாயமான கட்டுப்பாடுகளை விதிப்பதற்கு, பிரிவு 16-ன் 2முதல் 6வரையுள்ள விதிகள் அரசுக்கு அதிகாரம் அளிக்கின்றன. இவ்வாறு அரசு விதிக்கின்ற கட்டுப்பாடுகள் நியாயமானவையாக இருப்பதுடன் தன்னிச்சையானவையாகவும் வரம்பு மீறியவையாகவும் இருக்கக் கூடாது என்றும், நீதிமன்றத்திற்குத் திருப்தி அளிக்கின்ற வகையில் அவற்றின் காரணகாரியங்களை நிரூபிக்கின்ற பொறுப்பு அரசுக்கே உரியது என்றும் தீர்ப்பளிக்கப்பட்டுள்ளது (கைர்பாரி தேயிலைக் கம்பெனி எதிர் அசாம் அரசு AIR 1964 SC 925). கட்டுப்பாடுகள் கடுமையானவையாக இருந்தால், அதன் நியாயத்தன்மையை நிரூபிக்கும் பொறுப்பும் அதிகமாகிவிடும் (சாகிர் அகமது எதிர் உபி அரசு AIR 1954 SC 728. 738).

'நியாயமான கட்டுப்பாடுகள்' என்பதை அரசியலமைப்பு வரையறை

செய்யாததால், ஒவ்வொரு வழக்கிலும் அதன் தன்மையைப் பொறுத்தே தீர்மானத்திற்கு வரவேண்டும். கட்டுப்பாடுகள் விதிப்பதற்கான நோக்கம், கட்டுப்பாடுகளின் அளவு, அவற்றின் தேவை. அதன் காரணமாக நிவர்த்திக்கப்படும் தீமைகளின் அளவு, கட்டுப்பாடுகள் விதிக்கப்படும் போதுள்ள நிலைமை, அவற்றின் கால அளவு, போன்றவற்றைக் கணக்கில் எடுத்துக் கொண்டு அவை நியாயமானவையா என்று ஆராய வேண்டும் (சென்னை அரசு எதிர் விஜி ராவ் AIR 1952 SC 196). கட்டுப்பாடுகள விதிப்பதற்கான அளவுகோல் மிகவும் நெகிழ்ச்சியுடையதாக இருப்பதால், காலம், இடம், சூழ்நிலை ஆகியவற்றைப் பொறுத்து வழக்குக்கு வழக்கு அது மாறுபடுகிறது (கோலக்நாக் எதிர் பஞ்சாப் அரசு AIR 1967 SC 1643, 1655).

கட்டுப்பாடுகளின் நியாயத் தன்மையைப் புறநோக்கியல் முறையில் தீர்மானிக்க வேண்டுமே ஒழிய கருத்தியல் அடிப்படையில் தீர்மானிக்கக் கூடாது. அத்துடன் கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டுள்ள நபரின் கண்ணோட்டத்தில் இருந்து அவற்றின் நியாயத் தன்மையைப் பார்க்க வேண்டும். (ஹனிஃப் குரேஷி எதிர் பீகார் அரசு AIR 1958 SC 751). கட்டுப்பாட்டினை விதிக்கின்ற சட்டம் ஏற்படுத்தும் விளைவே நியாயத் தன்மையைச் சோதிக்கும் காரணியாகும் அதன் நோக்கம் நல்லதோ, கெட்டதோ என்னும் கேள்வி தேவையற்றது. ஒரு சட்டத்தின் தன்னியலான வகையுரைகள மட்டுமின்றி நடைமுறை வகையுரைகளும் அதனுடைய நியாயத் தனமையைத் தீர்மானிக்க உதவுகின்றன (என். பி. காரே எதிர் டெல்லி அரசு AIR 1950 SC 11; கிஷன்சந்த் அரோரா எதிர் போலீஸ் கமிஷனர் AIR 1961 SC 705). பிரிவு 19(1)இல் உத்தரவாதமளிக்கப்பட்டுள்ள சுதந்திரங்களுக்கும், பிரிவு 19-ன் 2 முதல் 6 வரையான விதிகளில் அனுமதிக்கப்பட்டுள்ள சமூகக் கட்டுப்பாடுகளுக்கும் இடையே ஒரு சமநிலையைப் பேணுவதாக இந்தக் கட்டுப்பாடுகள் அமைய வேண்டும் (துவாரகா பிரசாத் லக்ஷ்மிநாராயண் எதிர் உ.பி. அரசு AIR 1954 SC 224, 227). அரசின் நெறிமுறைக் கோட்பாடுகளைச் செயல்படுத்தும் நோக்கில் விதிக்கப்பட்ட கட்டுப்பாடுகள் நியாயமானவையே என்று ஏற்கப்பட்டிருக்கின்றன (பம்பாய் அரசு எதிர் எப்.என். பல்சாரா AIR 1951 SC 318, 328).

## பேச்சு மற்றும் கருத்து வெளிப்பாட்டுச் சுதந்திரம்

மக்களாட்சி அரசியலின் செயல்பாட்டுக்கு மிக அத்தியாவசியமான தேவை பேச்சு மற்றும் கருத்து வெளிப்பாட்டுச் சுதந்திரமாகும். மக்களாட்சி என்பது இணக்குவித்தல் மூலம் அரசாட்சி நடத்துவது; ஆகையால், அரசியல் மற்றும் பிற விஷயங்கள் குறித்து விவாதங்கள் நடத்தச் சுதந்திரம் இல்லாமல் போனால் அந்த அரசியலை மக்களாட்சி என்று சொல்லவே முடியாது. பேச்சு மற்றும் கருத்து வெளிப்பாட்டுச் சுதந்திரத்துடன், இயல்பாகவே பத்திரிகைச் சுதந்திரமும் அதில் அடங்கும். இந்தக் கருத்தை நீதிபதி பதஞ்சலி சாஸ்திரி கீழ்க்கண்டவாறு ரத்தினச் சுருக்கமாகக் குறிப்பிடுகிறார்:

> "பேச்சுச் சுதந்திரமும் பத்திரிகைச் சுதந்திரமும் எல்லா மக்களாட்சி அமைப்புகளிலும் அஸ்திவாரமாகத் திகழ்கின்றன. ஏனெனில் சுதந்திரமான அரசியல் விவாதம் இல்லாமல், மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட

> அரசு முறையாகச செயல்படுவதறகுத் தேவையான மக்கள் கல்வியை வழங்குவது இயலாது. அத்தகைய ஆற்றல் மிக்க சுதந்திரம் தவறாகப பயன்படுத்தப்படுவதற்குரிய அபாயங்களும் உண்டு. எனினும், கூட்டரசு அமைப்பின் முதலாவது திருத்தத்திறகுப் பின்னணித் தூண்டுதலாக விளங்கிய மடிசன் என்பாரின் கருத்தைப் பிரதிபலிப்பது போலவே நமது அரசியலமைப்பை உருவாக்கியவர்களும் செயல்பட்டிருக் கிறார்கள். அதாவது, நற்பயனாகும் கனிகளைத் தரும் கிளைகளுக்குத் தீங்கு விளைவிக்கின்ற ஒருசில கிளைகளைத் துண்டித்து விடுவதைக் காட்டிலும் அக்கிளைகளை வளர விடுவதே சாலச் சிறநதது என்ற கருத்தை அவர்கள் ஏற்றிருக்கின்றனர் (ரொமேஷ் தாப்பர் எதிர சென்னை அரசு AIR 1950 SC 124).

ஒவ்வொரு இந்தியக் குடிமகனுக்கும் பேச்சு மற்றும் கருத்து வெளிப் பாடுச் சுதந்திரத்திற்கான உரிமையை பிரிவு 19(1) (a) உத்தரவாதம் செய்கிறது. இந்தப் பிரிவு, பத்திரிகைச சுதந்திரத்தைக் குறிப்பிட்டுச் சொல்ல வில்லை என்றாலும் பேச்சு மற்றும் கருத்து வெளிப்பாட்டுச் சுதந திரத்திலேயே அது அடங்கியுள்ளதாக தீர்ப்பளிக்கப்பட்டுள்ளது. சமுதாய-அரசியல உறவுக்கு பத்திரிகைச் சுதந்திரமே இதயம் போன்றது. பத்திரிகைச சுதந்திரத்தை நிலைநாட்டி, அரசியலமைப்புக்கு முரணாக அதில் தலையிடு கின்ற எல்லாச் சட்டங்களையும் நிர்வாகச் செயலகளையும் செல்லாத தாக்குவதே நீதிமன்றங்களின் தலையாய கடமையாகும். (எக்ஸ்பிரஸ் நியூஸ பேப்பர்ஸ் லிட் எதிர் இந்திய அரசு AIR 1958 SC 578; இண்டியன் எக்ஸ்பிரஸ் நியூஸ்பேப்பர்ஸ் எதிர் இந்திய அரசு AIR 1985 I SCC 641) ஒவ்வொரு குடிமகனும் தன்னுடைய எண்ணங்களையும் கருத்துக்களையும் நம்பிக்கைகளையும் எவ்விதமான கட்டுப்பாடும் இன்றி வாய்மொழியாகவோ, எழுத்து மூலமாகவோ, அச்சிடோ, படங்களில் மூலமோ, வேறு ஏதேனும் வகையிலோ வெளிப்படுத்த சுதந்திரம் உண்டு. எனவே செய்தித்தாள் வெளியீட்டுக்கு முன்தணிக்கை விதிபபதும், (பிரிஜ் பூஷண் எதிர் டெல்லி AIR 1950 SC 129) அல்லது பற்றியெரியும் ஒரு விஷயத்தைப்பற்றி செய்தித் தாளின் கருத்தையோ, அதன் செய்தியாளர்களின் கருத்தையோ வெளியிடத் தடைவிதிப்பதும், பேச்சு மற்றும் கருத்து வெளிப்பாட்டுச் சுதந்திரத்தை மீறுவதாகும் (வீரேந்திரா எதிர் பஞ்சாப் AIR 1957 SC 896). இந்தியாவின் ஆட்சிப் பகுதிக்குள் மட்டுமின்றி அதன் எல்லைகளுக்கு அப்பாலுள்ள குடிமக்களுக்கும் இந்த உரிமை உண்டு (மேனகா காந்தி எதிர் இந்திய அரசு 1958 SC 597 என்ற வழக்கில் நீதிபதி பகவதி).

எனினும் இந்த உரிமையைச் செயல்படுத்துவதற்கு, நியாயமான சில வரம்புகளை அல்லது கட்டுப்பாடுகளையும் பிரிவு 19(2)இன்கீழ் விதிக்கலாம். (1) நாட்டின் பாதுகாப்பு, (2) வெளிநாடுகளுடன் நட்புறவு, (3) பொது ஒழுங்கு, (4) கண்ணியம் மற்றும் அறநெறி, (5) நீதிமன்ற அவமதிப்பு, (6) அவதூறு, (7) குற்றச் செயலைத் தூண்டுதல், (8) இந்தியாவின் இறையாண்மை மற்றும் ஒருமைப்பாடு, ஆகிய காரணங்களுக்காக இந்தக் கட்டுப்பாடுகளை விதிக்கலாம்.

**நாட்டின் பாதுகாப்பு:** நாட்டின் பாதுகாப்பு என்பது "பொது ஒழுங்கு

மிக மோசமாகவும் தீவிரமாகவும் கெட்டுப் போவதையே" குறிக்கிறது. வேறுவிதமாகச் சொல்வதானால், கிளர்ச்சி, அரசுக்கு எதிராகப் போர் தொடுத்தல், ஆட்சியெதிர்ப்பு போன்றவையே நாட்டின் பாதுகாப்புக்குப் பெரிதும் அச்சுறுத்தலாக அமையும். எனவே, கொலை போன்ற கொடிய குற்றங்களைச் செய்ய மக்களைத் தூண்டுகின்றவாறு அல்லது ஊக்கமளிக் கின்றவாறு பேசுவதோ, கருத்துக்களை வெளியிடுவதோ பிரிவு 19(2)இன் கீழ் கட்டுப்பாடுகள் விதிப்பதற்குப் போதிய காரணங்களாகும் (பீகார் அரசு எதிர் ஷைல்பாலாதேவி AIR 1952 SC 329). ஓர் அரசைக் கவிழ்க்கின்ற வகையில் பேசுவது தண்டனைக்குரியதாகும் (சந்தோஷ் சிங் எதிர் டெல்லி நிர்வாகம் AIR 1973 SC 1091). 1951ஆம் ஆண்டில் நிறைவேற்றப்பட்ட அரசியலமைப்புத் திருத்தச் சட்டத்தின் மூலம் கட்டுப்பாடு விதிப்பதற்குரிய ஒரு காரணமாக 'பொது ஒழுங்கு' என்பது சேர்க்கப்பட்ட போதிலும், சட்ட விரோதமான கூட்டம், கலகம், கலவரம் போன்றவற்றுக்கு இரண்டாவது விதி பொருந்தாது.

*வெளிநாடுகளுடன் நட்புறவு:* பேச்சு மற்றும் கருத்து வெளிப்பாட்டுச் சுதந்திரத்திற்குக் கட்டுப்பாடு விதிக்க வெளிநாடுகளுடன் நட்புறவு என்ற காரணம் அரசியலமைப்பின் முதலாவது திருத்தச் சட்டம் 1951-ன் மூலம் சேர்க்கப்பட்டது. பொல்லாங்கான எண்ணத்துடன் தொடர்ந்து மேற் கொள்ளப்படும் பிரச்சாரங்களால் இந்தியாவுக்கு ஏற்படும் தர்மசங்கடமான நிலையைத் தவிர்ப்பதற்காக இந்தக் காரணம் சேர்க்கப்பட்டது. எனினும் அரசாங்கத்தின் வெளியுறவுக் கொள்கையை விமர்சிப்பதைக்கூடத் தடை செய்வதாக இந்தக் காரணம் அமைந்துள்ளது எனப் பலரும் இதனைக் குறை கூறினர்.

*பொது ஒழுங்கு:* ரொமேஷ் தாப்பர் வழக்கில் (AIR 1950 SC 124) உச்சநீதிமன்றம் அளித்த தீர்ப்பினால் ஏற்பட்ட சூழ்நிலையை எதிர்கொள் வதற்காக பொது ஒழுங்கு என்ற இந்தக் காரணமும் 1951ஆம் ஆண்டு திருத்தச் சட்டத்தின் மூலம் சேர்க்கப்பட்டது. சாதாரண ஒழுங்குச் சீர்குலைவு களும், உள்ளூர் அளவிலான சீர்குலைவுகளும், பேச்சு மற்றும் கருத்து வெளிப்பாட்டுச் சுதந்திரத்திற்கு கட்டுப்பாடுகள் விதிக்கப் போதிய காரணங்கள் ஆகா என்றும், பொது ஒழுங்கு என்பது பரந்த பொருளுடையது என்றும், மக்கள் அமைத்த அரசு விதித்த கட்டுப்பாடுகளின் காரணமாக மக்களிடையே நிலவுகின்ற அமைதியான நிலையை அது குறிக்கும் என்றும் அந்த வழக்கில் உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்திருந்தது.

*கண்ணியமும் நீதிமுறைமையும்:* தெளிவான பொருள் ஏதுமின்றி, அவ்வப்போது கருத்துகள் மாறுபடுகின்ற இவ்விரு சொற்களும், மோசமான நடத்தையில் இருந்தும் ஊழல் நடவடிக்கைகளில் இருந்தும் சமூகத்தைப் பாதுகாக்கும் நோக்கத்துடனேயே, பேச்சு மற்றும் கருத்து வெளிப்பாட்டுச் சுதந்திரத்தின் மீது கட்டுப்பாடு விதிக்கக் கூடிய காரணங்களாகச் சேர்க்கப் பட்டுள்ளன. இந்தியக் குற்றவியல் சட்டத்தின் 292, 293, 294 ஆகிய பிரிவுகள் குறிப்பிடுகின்ற அநாகரிகம் அல்லது ஆபாசம் என்பது செல்லுபடி யாகும் என்று கூறிய நீதிமன்றம், ஆபாசத்திற்கு எதிரான சட்டம் பொது மக்களின் கண்ணியமான நடத்தையையும், நீதிமுறைமையையும் மேம்படுத்தும்

நோக்கிலேயே அமைந்துள்ளதாகக் குறிப்பிட்டது (ரஞ்சித் உதேசி எதிர் மகாராஷ்டிரா AIR 1965 SC 881). இங்கிலாந்து நாட்டின் வழக்கான ஆர் எதிர் ஹிக்லின் (LR3QB 360) என்ற வழக்கில் 'லேடி சேட்டலேஸ் லவர்' என்ற புத்தகம் படிப்பவர் மனதைக் கெடுத்துவிடும் தன்மையுடையதால் அது ஆபாசமான புத்தகம் என்று தீர்ப்பளித்த முறையைப் பின்பற்றியே உச்சநீதிமன்றமும் இந்த வழக்கில் தீர்ப்பளித்தது.

*நீதிமன்ற அவமதிப்பு:* நீதிமன்ற அவமதிப்புச் செயல்களைத் தண்டிக்கும் நீதிமன்ற மேலாண்மையைக் காக்கும் - நோக்கிலேயே நீதிமன்ற அவமதிப்பு என்ற காரணமும் பேச்சு மற்றும் கருத்து வெளிப் பாட்டுச் சுதந்திரத்தைக் கட்டுப்படுத்துகின்ற முகாந்திரமாகச் சேர்க்கப் பட்டுள்ளது. உச்சநீதிமன்ற அவமதிப்பைத் தண்டிப்பதற்கு அரசியலமைப்பின் 129ஆவது பிரிவும், உயர்நீதிமன்ற அவமதிப்பைத் தண்டிப்பதற்கு 215ஆவது பிரிவும் முறையே அவற்றுக்கு அதிகாரம் அளிக்கின்றன. 129ஆவது பிரிவின் கீழ்வரும் அவமதிப்புச் சட்டம், பிரிவு 19(2)இன்படி சரியான முகாந்திரமுடையது என்று உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்திருக்கிறது. (சி.கே. தப்தரி எதிர் ஓ.பி. குப்தா AIR 1971 SC 1132). இ.எம்.எஸ். நம்பூதிரிபாட் எதிர் டி.என்.நம்பியார் (AIR 1970 SC 2015) என்ற வழக்கில் உச்சநீதிமன்றம் தீர்ப்பளிக்கும்போது, திட்டவட்டமானதாகவோ, விஷமத்தனமானதாகவோ, பெரிதுபடுத்தப்பட்டதாகவோ நீதிமன்ற அவமதிப்பு அமைகின்ற சமயங் களைத் தவிர பேச்சுச் சுதந்திரம் மேலோங்கியே இருக்கும் என்று குறிப் பிட்டது. எனினும் அண்மைக் காலங்களில், அவமதிப்புச் சட்டத்தைப் பொறுத்தவரையில் நீதிமன்றங்கள் தாராளமான கண்ணோட்டத்துடன் செயல்படுகின்றன. (காண்க: AIR 1978 SC 727; AIR 1978 SC 489). எம்.ஆர். பராசர் எதிர் பரூக் அப்துல்லா (AIR 1984 SC615) என்ற வழக்கில் நீதிமன்றம் இவ்வாறு கூறியது:

> "எந்தஒரு முறைமையையோ, நிறுவனத்தையோ நல்லெண்ணத்துடன் விமர்சிப்பது, அந்த முறைமை அல்லது நிறுவனம் தன்னைத்தானே ஒரு முறை சரிபார்த்துக்கொண்டு மக்கள் மத்தியில் தனது மதிப்பை உயர்த்திக் கொள்ள வேண்டும் என்ற நோக்கத்தில்தான். நீதிமன்றங்கள் விமர்சனங்களுக்கு அப்பாற்பட்டவை என்றும், அவற்றின் செயல் பாட்டில் எவ்விதமான முன்னேற்றமும் தேவையில்லை என்றும் காட்டிக் கொள்ள அவை விரும்பவில்லை."

*அவதூறு:* பேசுவதற்கும், கருத்தினை வெளிப்படுத்துவதற்கும் ஒரு குடிமகனுக்கு அளிக்கப்பட்டுள்ள சுதந்திரம் மற்றவரை அவதூறாகப் பேசு வதற்கு உரிமையளிக்கவில்லை. ஒரு மனிதரை வெறுக்கின்றவாறோ, ஏளனம் செய்கின்றவாறோ, அவமதிப்புக்கு ஆளாக்குகின்றவாறோ பேசுவதும் கருத்து வெளியிடுவதும் அவதூறாகும் என்று வரையறை செய்யும் இந்தியக் குற்ற வியல் சட்டத்தின் 499ஆவது பிரிவு அரசியலமைப்பு ரீதியாகச் செல்லுபடி யாகும் என்று நீதிமன்றம் தீர்ப்பளித்திருக்கிறது.

*குற்றத்தைத் தூண்டுதல்:* பேச்சு மற்றும் கருத்து வெளிப்பாட்டுச் சுதந்திரத்தைக் கட்டுப்படுத்தும் இந்த முகாந்திரமும் 1951ஆம் ஆண்டில்தான் சேர்க்கப்பட்டது. கொலை அல்லது பிற கொடூரமான குற்றங்களை

இழைக்குமாறு தூண்டுவது நாட்டின் பாதுகாப்புக்கு அபாயமுண்டாக்கும் என்று உச்சநீதிமன்றம் கருத்து வெளியிட்டது. எனவே இந்தக் காரணத்தின் அடிப்படையில் பிரிவு 19(2)இன் கீழ் கட்டுப்பாடு விதிப்பது செல்லுபடியாகும் (பீகார் அரசு எதிர் ஷைலாபாலாதேவி AIR 1952 SC 329).

இந்தியாவின் இறையாண்மையும் ஒருமைப்பாடும்: பேச்சு மற்றும் கருத்து வெளிப்பாட்டுச் சுதந்திரத்தின் மீது கட்டுப்பாடு விதிக்கும் இந்த முகாந்திரம் 1963ஆம் ஆண்டில், அரசியலமைப்பில் 16ஆவது திருத்தச் சட்டத்தின் மூலம் சேர்க்கப்பட்டது. இந்தியாவின் இறையாண்மையையும், ஒருமைப்பாட்டையும் எதிர்த்து யாரும் சவால் விடுவதையும், இந்தியாவின் ஆட்சிப்பகுதி எதனையும் அதிலிருந்து பிரிந்துபோக வேண்டும் என்று போதிப்பதையும் தடைசெய்யும் நோக்கில் இத்திருத்தம் மேற்கொள்ளப் பட்டது.

## கூட்டம் சேரும் உரிமை

கூட்டங்கள், ஊர்வலங்கள், தர்ணாக்கள் போன்றவை மக்களாட்சி அமைப்பில் தவிர்க்க முடியாதவை. இத்தகைய நடவடிக்கைகள் மூலமாகவே மக்களுக்குத் தகவல் அளிக்கவும், அறிவுறுத்தவும், கருத்துக் கூறி அவர்களை இணங்கச் செய்யவும் முடியும். இந்தியக் குடிமக்கள் அனைவருக்கும், "ஆயுதங்கள் இன்றி அமைதியாக ஒன்று கூடுவதற்கு" பிரிவு 19(1) (b) உரிமையளிக்கிறது. இதன் அடிப்படையில் பொதுக்கூட்டங்களையும், தர்ணாக்களையும். ஊர்வலங்களையும் அமைதியாக நடத்துவதற்கு அனைவருக்கும் உரிமையுண்டு (பாபுலால் எதிர் மகாராஷ்ட்ர அரசு AIR 1961 SC 884). எந்தக் கூட்டமானாலும், உட்கிடக்கையாகவுள்ள இரண்டு நிபந்தனைகள் — அமைதியாகவும், ஆயுதம் ஏந்தாமலும் இருக்க வேண்டும் என்பவைதான். அத்துடன், மூன்றாவது விதியின்படி, நாட்டின் இறையாண்மை, ஒருமைப்பாடு, பொது ஒழுங்கு ஆகியவற்றைப் பேணிக்காக்கும் பொருட்டு, அவ்வப்போது தேவைக்கு ஏற்ப சட்டத்தின் மூலம் அரசு நியாயமான கட்டுப்பாடுகளையும் விதிக்கலாம். எனவே சட்டவிரோதமானது என்று அறிவிக்கப்பட்ட ஒரு கூட்டத்தை சட்டப்படி தடைசெய்யவும், கூட்டத்தில் உள்ளவர்களைக் கலைந்துபோக உத்தரவிடவும் முடியும்.

## சங்க உரிமை

குடிமக்கள் அனைவருக்கும் சங்கம் அமைக்கவும், மன்றம் ஏற்படுத்தவும் உரிமையுண்டு என பிரிவு 19(1) (c) உத்தரவாதம் அளிக்கிறது. எனினும் நான்காவது விதியின்படி இந்தியாவின் இறையாண்மை, ஒருமைப்பாடு, பொது ஒழுங்கு, அல்லது நீதிமுறைமை ஆகியவற்றைப் பேணிக்காக்கும் பொருட்டு நியாயமான சில கட்டுப்பாடுகளை அரசு விதிக்கலாம். இவ்வாறு அமைக்கப்படும் சங்கங்களில் அரசியல் கட்சிகள், சொஸைட்டிகள், மன்றங்கள், கம்பெனிகள், நிறுவனங்கள், கூட்டாண்மை நிறுவனங்கள், தொழிற்சங்கங்கள் போன்ற அனைத்து வகையான மக்கள் கூட்டமைப்பு களும் அடங்கும். நியாயமான கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டு சட்டப் பூர்வமான நோக்கங்களுக்காகச் சங்கங்கள் அமைப்பதற்கு முழுச் சுதந்திரம்

உண்டு. பிரிவு 19(1) (c)ஐ மிகத் தாராளமான கண்ணோட்டத்தில் பார்த்தாலும்கூட தொழிற்சங்கங்கள் வேலைநிறுத்தம் செய்வதற்கான உரிமை இதில் உத்தரவாதமளிக்கப்பட்டுள்ளதாகக் கொள்ளமுடியாது என்று உச்சநீதிமன்றம் கூறியிருக்கிறது. வேலைநிறுத்தம் செய்யும் உரிமையை சம்பந்தப்பட்ட தொழிற்சாலைச் சட்டத்தின் மூலம் கட்டுப்படுத்தலாம் (அனைத்திந்திய வங்கி ஊழியர் சங்கம் எதிர் தேசிய தொழிலகத் தீர்ப்பாயம், AIR 1962 SC 171). அத்துடன், அரசாங்கத்தால் ஏற்படுத்தப்படும் சங்கத்தில் உறுப்பினராகும்படி எவரையும் கட்டாயப்படுத்த முடியாது (ரகுபார் தயாள் எதிர் இந்திய அரசு AIR 1962 SC 263). ஒன்பதாவது விதியில் இடம் பெற்றுள்ள நீதி முறைமை என்பது, பொதுவாக தார்மீக நெறி என்பது மட்டுமின்றி, மக்கள் அனைவரும் அதனை ஏற்றுக்கொண்டுள்ள பொருளையும் உள்ளடக்கியதாக விரிவான பொருளைக் கொள்ள வேண்டும் (மனோகர் எதிர் மகாராஷ்ட்ரா AIR 1984 பம்பாய் 47).

## எங்கும், செல்லவும் குடியிருக்கவும் உரிமை

இந்தியாவின் ஆட்சிப் பகுதிக்குள் எந்த இடத்திற்கு வேண்டுமானாலும் கட்டுப்பாடு இன்றிச் சென்றுவரவும், இந்தியாவின் ஆட்சிப்பகுதிக்குள் எந்த இடத்திலும் குடியிருக்கவும் இந்தியக் குடிமக்கள் ஒவ்வொருவருக்கும் உரிமையுண்டு என பிரிவு 19(1) (d) மற்றும் (e) ஆகியவற்றில் உத்தரவாதமளிக்கப்பட்டுள்ள சுதந்திரங்கள் ஒன்றுடன் ஒன்று பின்னிப்பிணைந்தவை. இரண்டு உரிமைகளுமே, இந்திய ஆட்சிப்பகுதி ஒன்றே என்பதை வலியுறுத்துகின்றன. இந்தியக் குடிமகன் எவரும் இந்தியாவின் எந்தப் பகுதிக்கு வேணடுமானாலும் செல்லலாம்; எந்தப் பகுதியில் வேண்டுமானாலும் குடியேறலாம். எனினும் பொதுமக்களின் நலன் கருதியோ, எந்த ஒரு பழங்குடிப் பிரிவின் நலன் கருதியோ இவ்விரு உரிமைகள் மீதும், சட்டத்தின் மூலம் நியாயமான கட்டுப்பாடுகளை விதிக்க 19ஆவது பிரிவின் ஐந்தாவது விதி அரசுக்கு அதிகாரம் அளிக்கிறது. குடிமகனின் இயக்கத்தையும் குடியேற்றத்தையும் பாதிக்குமாறு கட்டுப்பாடுகள் விதிக்கும்போது இரண்டு உரிமைகளுமே பாதிக்கின்றன. பொதுவாக, இந்த இரண்டு உரிமைகளையும் பாதிக்கின்றவாறு, நாடுகடத்தும் ஆணைகள் பிறப்பிக்கப்படும்போதுதான் இவ்விஷயத்தில் வழக்குகள் தோன்றுகின்றன. என்.பி.காரே எதிர் தில்லி அரசு (AIR 1950 SC 211) எனற வழக்கில் உச்சநீதிமன்றம் தீர்ப்பளிக்கும் போது, நிர்வாகத்திற்கு திருப்தி அளித்த காரணங்களின் பேரிலேயே நாடுகடத்தும் ஆணை பிறப்பிக்கப்பட்டது என்பதாலும், அதனை நீதிப்புனராய்வு செய்வதற்கு அச்சட்டத்தில் வழியில்லை என்பதாலும் மட்டுமே அந்த ஆணை செல்லாததாகாது என்று கூறியது. அனுமதி விதிமுறைகளை (பாகிஸ்தானில் இருந்து மக்கள் வரவு (கட்டுப்பாடு) சட்டம் 1949) மீறியதற்காகத் தண்டனை அளிக்கப்பட்டதற்காகவோ, அப்படி மீறியதாக ஐயப்படுவதற்குப் போதிய காரணங்கள் இருப்பதாலோ, அந்த விதிமுறைகள் பொதுமக்களின் நலனைப் பேணுவதற்காக விதிக்கப்பட்ட நியாயமான கட்டுப்பாடுகளாகும் என்ற காரணம் காட்டி, குடிமகனின் குடியுரிமையையே பறிக்கின்ற மிகவும் கடுமையான தண்டனை அளித்தது செல்லுபடியாகாது

என்று இன்னொரு வழக்கில் நீதிமன்றம் தீர்ப்பளித்தது (இப்ராஹிம் வாஜர் மாவத் எதிர் பம்பாய் அரசு AIR 1954 SC 229). அசாமில், ஆதிகாலம் தொட்டே, தமக்கென்று உரிய பண்பாடு, மொழி பழக்கவழக்கங்களைக் கொண்ட பழங்குடி மக்களைக் கருத்தில் கொண்டே பழங்குடி மக்களின் நலனைக்காக்கும் நோக்கில் நியாயமான கட்டுப்பாடுகளை விதிக்கலாம் என்ற வகையுரை சேர்க்கப்பட்டது. பழங்குடி மக்கள் வாழும் பகுதிகளில் கட்டுப்பாடு இன்றி மற்றவர்களையும் அனுமதித்தால் அது பழங்குடி மக்களின் நலனைப் பாதிக்கும். (காண்க: தன்பகதூர் தோர்தி எதிர் அரசு 1953, பிரிவு 61).

விலைமாதர்கள் தங்கள் தொழிலை ஒரு குறிப்பிட்ட பகுதிக்குள் மட்டுமே செய்ய வேண்டும் என்றும், குறிப்பிட்ட பகுதிகளுக்குள் மட்டுமே அவர்கள் சென்றுவரலாம், வசிக்கலாம் என்றும் விதிக்கப்பட்ட கட்டுப் பாடுகள் செல்லுபடியாகும் என்று நீதிமன்றம் தீர்ப்பளித்திருக்கிறது (உபி அரசு எதிர் கௌசல்யா AIR 1964 SC 416). அது போலவே, குற்ற மிழைப்பதையே வழக்கமாகக் கொண்டவர்களை ஒரு குறிப்பிட்ட பகுதிக்குள தான் வசிக்க வேண்டும் என்று விதிக்கப்பட்ட கட்டுப்பாடுகளும் செல்லுபடி யாகும் என்றும் தீர்ப்பளிக்கப்பட்டுள்ளது (ஆறுமுகம் எதிர் சென்னை அரசு AIR 1953 சென்னை 664).

## தொழில் மற்றும் வாணிகச் சுதந்திரம்

ஒவ்வொரு இந்தியக் குடிமகனும் அவர் விரும்பிய ஏதேனும் ஒரு தொழிலை மேற்கொள்ளவோ, வியாபாரம் அல்லது வாணிகத்தில் ஈடுபடவோ பிரிவு 19(1) (g) உரிமை அளிக்கிறது. ஒரு வியாபாரத்தை மேற்கொள்ளும் உரிமை எனில், அதன் உரிமையாளர் விரும்புகின்ற சமயத்தில் அதனை மூடிவிடும் உரிமையும் அதில் அடங்கும் (ஹதிசிங் மேனுபாக்சரிங் கம்பெனி எதிர் இந்திய அரசு AIR 1960 SC 923). எனவே எந்த ஒரு குடிமகனையும் அவருடைய விருப்பத்திற்கு மாறாக ஒரு தொழிலைத் தொடர்ந்து நடத்துமாறு கட்டாயப்படுத்த முடியாது. ஒரு நிறுவனத்தின் தொழிலாளர்களுக்குக் குறைந்தபட்ச ஊதியத்தைக்கூட அதன் உரிமையாளரால் வழங்க முடியாத போது அந்த நிறுவனத்தை மூட அனுமதி மறுப்பதோ, அனுமதி அளிப்பதோ செல்லுபடியாகாது என்று எக்ஸல்வேர் எதிர் இந்திய அரசு (AIR 1979 SC 25) என்ற வழக்கில் உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்தது. மற்ற உரிமைகளைப் போலவே, இந்த உரிமையைப் பயன்படுத்துவதிலும், பொதுநலனைக் கருத்தில் கொண்டு அரசு நியாயமான கட்டுப்பாடுகளை விதிக்க முடியும். எடுத்துக்காட்டாக, அபாயகரமான, சேதம் விளைவிக்கக் கூடிய பொருள் களான போதை மருந்துகள், மதுபானங்கள், கலப்பட உணவுப் பொருள்கள் போன்றவற்றை வியாபாரம் செய்வதற்கும், பெண்களையும் குழந்தைகளையும் இழிசெயல்களில் ஈடுபடுத்துவதற்கும் எந்தவிதமான அடிப்படை உரிமையும் கிடையாது.

எந்த ஒரு தொழிலை மேற்கொள்ளவும், வியாபாரம் அல்லது வாணிகத்தில் ஈடுபடவும் சில தொழில் நுட்பத் தகுதிகள் அவசியம் என்று விதிக்கவும், குடிமக்களில் எவரேனும் ஒருவரையோ, ஒரு பிரிவினரையோ

விலக்கிவிட்டு அரசாங்கமே எந்த ஒரு தொழிலையும் மேற்கொள்ளவும், வியாபாரம் அல்லது வாணிகத்தில் ஈடுபடவும் பிரிவு 19-ன் ஆறாவது விதி அரசுக்கு அதிகாரம் அளிக்கிறது. சொல்லப்போனால், குடிமக்கள் அனை வரையும் விலக்கிவிட்டு எந்த ஒரு தொழிலையோ, வியாபாரத்தையோ நாட்டுடைமையாக்கும் அதிகாரமும் அரசுக்கு உண்டு. நாட்டுடைமையாக்கு வதற்கும், தொழிற்சாலைகளை அரசாங்கமே ஏற்று நடத்துவதற்கும் பெரிதும் முக்கியத்துவம் அளிக்கப்பட்டாலும், தொழிற்சாலைகளில் தனியார் உரிமையும் அங்கீகரிக்கப்பட்டு இருப்பதுடன், இந்தியப் பொருளாதார அமைப்பிலே தனியார் நிறுவனங்கள் பெரும்பங்கு வகிக்கின்றன என்பதையும் எக்ஸல்வேர் வழக்கில் நீதிமன்றம் சுட்டிக்காட்டியிருக்கிறது. பங்குதாரர் களைக் கொண்ட வரம்புற்ற நிறுவனங்கள் பலவும் பெரும் எண்ணிக்கை யிலான தொழிற்சாலைகளை நடத்தி வருகின்றன. இந்த அமைப்புகளுடன் தொடர்புடைய கடனாளர்கள், பற்றாளர்கள் எனப் பலதரப்பினரும் இருக் கின்றனர். அத்தகையோர் அனைவருடைய நலனையும் புறக்கணிக்கின்றவாறு சோஷலிசம் செயல்படக் கூடாது (AIR 1979 SC 36; நியூ பீகார் பீடிலீவ்ஸ் கம்பெனி எதிர் பீகார், AIR 1981 SC 679). எனினும் அரசு மேற்கொள்கின்ற ஏகபோக வாணிகம், நியாயமான கட்டுப்பாடுதான் என்றோ, பொதுநலனைக் கருத்தில் கொண்டதுதான என்றோ அரசாங்கம் நிரூபிக்க வேண்டியதில்லை (சாஹிர் அகமது எதிர் உ.பி. அரசு AIR 1954 SC 728; பி.டி. சொஸைடி எதிர் ஆர்.டி.ஏ AIR 1960 SC 801). சொல்லப்போனால், ஏதேனும் ஒரு தொழிலை அல்லது வாணிகத்தை முற்றிலுமாகவோ, ஓரளவுக்கோ ஏக போகமாக அரசு நடத்தினாலும், மற்ற குடிமக்களுக்குப் போட்டியாக அத்தகு செயல் களில் ஈடுபட்டாலும் பிரிவு 19(1) (g)இன் கீழ் எவ்விதமான எதிர்ப்பும் தெரிவிக்க முடியாது.

## குற்றங்களுக்குத் தண்டனையளிப்பது குறித்த பாதுகாப்பு

குற்றம் இழைத்ததாகக் குற்றஞ்சாட்டப்பட்ட நபர்களின் உரிமையை அரசிய லமைப்பின் 20ஆவது பிரிவு பாதுகாக்கிறது. இந்தப் பிரிவு மிகமுக்கியமான தாகக் கருதப்படுகிறது. ஏனெனில், அவசர நிலையின் போதும்கூட பிரிவு 359-ன்படி ஓர் ஆணை மூலம் இந்த உரிமையை நிறுத்திவைக்க முடியாது என்று அரசியலமைப்பின் 42ஆவது திருத்தச் சட்டம் கூறுகிறது.

*முன்தேதியிட்டு அமலாகும் சட்டம்:* ஒரு குற்றச்செயலைச் செய்யும் போது அமலில் உள்ள சட்டத்தின்படி அது குற்றமாக இருந்தால் ஒழிய அதற்குத் தண்டனை அளிக்கக் கூடாது என்றும், அந்தக் குற்றச் செயலைச் செய்யும்போது அமலில் இருந்த சட்டத்தின்படி உள்ள அதிகபட்ச அபராதத்தைவிட கடுமையான அபராதம் ஏதும் விதிக்கப்படக்கூடாது என்றும் பிரிவு 20-ன் முதலாவது விதி கூறுகிறது. அதாவது, குற்றவியல் சட்டங்கள் முன்தேதியிட்டு அமலாகுமாறு அவை இயற்றப்படக் கூடாது. முன்தேதியிட்டு சட்டத்தைச் செயல்படுத்துவதற்கு உள்ள இந்தத் தடை, அச்சட்டத்தின்படி தண்டனை பெறக்கூடிய நபருக்கு பாதுகாப்பு அளிக் கிறது (மகாராஷ்ட்ரா எதிர் கே.கே. சுப்ரமணியன் ராமசாமி AIR 1977 SC

2091). எனினும் முன்னேற்பாடாகக் கைது செய்வதிலிருந்து இந்த விதிப்படி பாதுகாப்புக்கோர முடியாது (பிரகலாத் எதிர் பம்பாய் AIR 1952 பம்பாய்-1); மேலும் ஒருவரிடமிருந்து பிணையத் (ஜாமின்) தொகை கோருவதையும் தடுக்க முடியாது (பீகார் அரசு எதிர் ஷைல்பாலா AIR 1952 SC 329). பிரிவு 29 (1)இன் கீழ் அளிக்கப்பட்டுள்ள பாதுகாப்பு, தண்டனையளிப்பதற்கு மட்டுமே பொருந்தும்; வழக்கு விசாரணைகளுக்கு அது பொருந்தாது என்பதையும், (ஷிவ் பகதூர் சிங் எதிர் விந்தியப் பிரதேஷ் அரசு AIR 1963 SC 394; இந்திய அரசு எதிர் சுகுமாரன்பைரே AIR 1966 SC 1206; ஜி.பி.நையார் எதிர் அரசு AIR 1979 SC 602), சிவில் பொறுப்புகளை இதன் மூலம் தட்டிக் கழிக்க முடியாது என்பதையும், (ஜவாலாராம் எதிர் பெப்ஸு அரசு AIR 1962 SC 1246; மேற்கு வங்க அரசு எதிர் எஸ்.கே.கோஷ் AIR 1963 SC 255 என்ற வழக்கையும் காண்க) கருத்தில் கொள்ள வேண்டும். விதி 1-ல் கூறப்பட்டுள்ள 'அபராதம்' என்ற சொல், குற்றம் சாட்டப்பட்டுள்ள நபர் குற்றவாளியே என்று நிரூபணமாவதன் காரணமாய், அவர் செலுத்த வேண்டிய தொகை, அல்லது அவருக்கு மறுக்கப்படுகின்ற உரிமை என்பதைக் குறிக்கின்ற வகையில் மிகவும் குறுகிய கண்ணோட்டத்திலேயே பயன் படுத்தப்பட்டுள்ளது (ஷிவ்தத்ராய் ஃபதே சந்த் எதிர் இந்தியா AIR 1984 SC 1194; ஆர்.எஸ்.ஜோஷி எதிர் அஜித் மில்ஸ் லிட் (1977), 4 SCC 98 ஆகியவற்றைக் காண்க).

*இரட்டைத் துன்பம்:* "ஒரே குற்றத்திற்காக ஒருமுறைக்கு மேல் எவர் மீதும் வழக்குத் தொடரப்பட்டு தண்டனையளிக்கப்படக் கூடாது" என்று பிரிவு 20-ன் இரண்டாவது விதி வலியுறுத்துவதன் மூலம் 'இரட்டைத் துன்பம்' என்ற கோட்பாட்டை உள்ளடக்கியதாகத் திகழ்கிறது. இந்தப் பாதுகாப்பைப் பெறுவதற்கு 'வழக்குத் தொடரல்', 'தண்டனையளித்தல்' என்ற இரண்டினையும் சேர்த்தே பார்க்க வேண்டும். ஏற்கெனவே உள்ள இந்தியச் சட்டத்தில், அதாவது, பொது ஷரத்துகள சட்டத்தின் 26ஆவது பிரிவிலும், இந்தியக் குற்றவியல் சட்டத்தின் 300ஆவது பிரிவிலும் இந்த இரட்டைத் துன்பம் கோட்பாடு ஏற்கப்பட்டுள்ளது. நீதிமன்றம் அல்லது நீதித்துறை தீர்ப்பாயம் ஒரு தண்டனையை விதிக்கும்போது மட்டுமே பிரிவு 20(2)இன் பாதுகாப்பைப் பெறலாம். நீதிமன்றம் அல்லாத பிற மன்றங்களில் நடைபெறும் வழக்கு விசாரணைகளில் இருந்து இந்த விதி பாதுகாப்பு அளிக்காது. எனவே அரசு ஊழியர் ஒருவர் மீது நீதிமன்றத்தில் வழக்குத் தொடரப்பட்டுத் தண்டனை அளிக்கப்பட்டாலும், அதே குற்றத்திற்காக அவர் பணியாற்றும் அலுவலகத்தில் அலுவலக ரீதியான விசாரணை நடத்தித் தண்டனை அளிக்கலாம். (மோடிசிங் சாஹன் சிங் வஹேலா எதிர் எஸ்.டி.மேத்தா AIR 1966 குஜராத் 233). அதேபோல பணியாற்றும் துறையில் தண்டனையளிக்கப்பட்ட நபர்மீது நீதிமன்றத்திலும் வழக்குத் தொடுக்கலாம் (வெங்கட்ரமணன் எதிர் இந்தியா 1954 SC 375). மேலும் பிரிவு 20(2), குற்றவியல் நீதிமன்றத்தில் குற்றம் சாட்டப்படுவதோடு மட்டுமே தொடர்புடையதால், குற்றவியல் வழக்குடன் இடைக்காலத் தடையை மீறியதற்காக உரிமையியல் நீதிமன்றத்தில் ஒரு வழக்கும் சேர்த்து விசாரணை நடத்துவதற்குத் தடையேதுமில்லை. ஏனெனில் இடைக்காலத்

தடையை மீறியதான உரிமையியல் வழக்கு குற்றவியல் வழக்குப் போன்றதாகாது (பாட்சாலால் எதிர் லால்ஜி AIR 1976 அலகாபாத் 393).

*சுயகுற்றச்சாட்டுக்கு எதிராகத் தடை:* குற்றச் சட்டவியலின்படியும், இயற்கைச் சட்டத்தின்படியும் ஒரு நபர் எப்போதும் நிரபராதி என்றே துணியப்படும். வழக்குத் தொடுப்பவரே அவருடைய குற்றத்தை நிரூபிக்க வேண்டும். அத்துடன் குற்றம் சாட்டப்பட்ட ஒருவர் அவருடைய விருப்பத் திற்கு மாறாக எவ்விதமான வாக்குமூலமும் அளிக்க வேண்டியதில்லை. இந்தக் கோட்பாடுகள் பிரிவு 20-ன் மூன்றாவது விதியில் இடம்பெற்றுள்ளன. "குற்றம் சாட்டப்பட்டுள்ள எவரையும் அவருக்கு எதிராக அவரையே ஒரு சாட்சியாக இருக்குமாறு கட்டாயப்படுத்த முடியாது" என்று அந்த விதி கூறுகிறது. குற்றம் சாட்டப்பட்டுள்ள நபருக்கு அளிக்கப்பட்டுள்ள இந்தச் சலுகையில் இரணடு கூறுகள் உள்ளன. அவை, (1) சாட்சியாக இருக்க வேண்டும் என்ற கட்டாயத்திற்கு எதிராகப் பாதுகாக்கப்படும் உரிமை; (2) அந்தக் கட்டாயத்தின் காரணமாகத் தனக்கு எதிராகவே சாட்சியம் அளிக்கும் நிலையிலிருந்து பாதுகாக்கப்படும் உரிமை வேறு விதமாகச் சொல்வதானால், குற்றம் சாட்டப்பட்ட நபர், கட்டாயத்தின காரணமாக தனக்குத்தானே குற்றம் சாட்டிக் கொள்வதில் இருந்து பாதுகாக்கப்படுகிறார். அதாவது குற்றம் சாட்டப்பட்டவருக்கு எதிராகவே வழக்கு மாறிவிடுகின்ற வகையில் வாக்குமூலம் அளிப்பதில் இருந்து அவருக்குப் பாதுகாப்பு அளிக்கப்படுகிறது. இங்கே கட்டாயம் என்பது அச்சுறுத்தி நிர்ப்பந்திப்பதைக் குறிக்கும் (பம்பாய் அரசு எதிர் காதி கொலு ஒகாத், AIR 1961 SC 1808, 1816). குற்றம் சாட்டப்பட்டவரை கட்டாயப்படுத்தி அவர் வாயாலேயே பெறப்படும் பதில்கள் சாட்சி என்னும் சங்கிலியின் தொடர் கண்ணிகளாக அமைந்து, அவரை அக்குற்றத்தில் சம்பந்தப்படுத்தினால், அதுவும் தன்னைத் தானே குற்றம் சாட்டிக் கொள்வதாகும் என்றும், அது பிரிவு 20(3)-க்கு எதிரானது என்றும் நந்தினி சத்பதி வழக்கில் (AIR 1978 SC 1025) உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்தது. கட்டாயப்படுத்துதல் என்பதை மேலும் விரிவாக்கி, 'கட்டாயப்படுத்திப் பெறப்பட்ட சாட்சியம்' என்பது அச்சுறுத்தல் அல்லது வன்முறையால் மட்டுமின்றி, சித்ரவதை செய்தல், சுற்றுச்சூழல் கெடுபிடிகள், நிர்ப்பந்தம், கேள்விக் கணைகளால் சலிப்புண்டாக்குதல், செல்வாக்கினால் சம்மதிக்க வைத்தல், அச்சுறுத்தி ஒப்புக் கொள்ளச் செய்தல் போன்றவற்றால் பெறப்பட்டதும் அடங்கும் எனவும் உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்திருக்கிறது. குற்றம் சாட்டப்பட்டவரிடமிருந்து சாட்சியங்களைப் பெறும்போது காவல்துறையினர் அனுசரிக்க வேண்டிய சில வழிகாட்டி நெறிகளையும் நீதிமன்றம் கூறியுள்ளது. காவல் துறையினர் எழுப்பும் வினாக்களுக்கு விடையளிக்கும் முன்னர், குற்றம் சாட்டப்பட்டவர் வழக் கறைஞர் ஒருவரைக் கலந்தாலோசிக்க உரிமை உண்டு என்ற தகவலைக் குற்றம் சாட்டப்பட்டவருக்கு அளிக்க வேண்டும் என்பது போன்றவை அவற்றில் அடங்கும் (நந்தினி சத்பதி எதிர் பி.எல்தனி AIR 1978 SC 1025).

20ஆவது பிரிவின் மூன்றாவது விதி குற்றம் சாட்டப்பட்டவருக்கு ஒரு சலுகையைத்தான் அளிக்கிறது. அவர் விரும்பினால் அச்சலுகையைப் பயன்படுத்தாமல் இருக்கலாம். அவரே முன்வந்து தனக்கு எதிரான

சாட்சியங்களை அளித்தால் அது இந்த விதியை மீறியதாகாது. லக்ஷ்மிபத் குராஷியா எதிர் மகாராஷ்ட்ரா AIR 1968 SC 938).

குற்றம் சாட்டப்பட்டவருக்கு அளிக்கப்பட்டுள்ள பாதுகாப்பு, பருப் பொருள்களைக் கட்டாயமாகக் கொண்டு வருவதற்கும், மாதிரிக் கையொப்பம் போடுவது, மாதிரிக்காக எழுதிக் காண்பிப்பது, விரல் ரேகைப் பதிவுகளைத் தருவது, நீதிமன்றத்தில் ஆஜர்படுத்துவது, ரத்தப் பரிசோதனைக்காக மாதிரி தருவது போன்றவற்றைக் கட்டாயமாகச் செய்வதற்குப் பொருந்தாது (தஸ்தகீர் எதிர் சென்னை அரசு AIR 1960 SC 756). குற்றம் சாட்டப்பட்டவருக்கு அக்குற்றம் தொடர்பாகப் பிரத்யேகமாகத் தெரிந்தவற்றை வெளிப் படுத்துவதாக உள்ள ஆவணங்களைத் தவிர மற்ற ஆவணங்களைக் கட்டாயமாகத் தாக்கல் செய்வதை இந்த விதி தடை செய்யவில்லை (பம்பாய் அரசு எதிர் காதி கொலு AIR 1961 SC 1808, 1816). குற்றம் சாட்டப்பட்ட ஒரு நபரின கைவசம் இருக்கும் இடத்தை ஆணையின் பேரில் சோதனையிடுவதும், சோதனையிட்டு ஆவணங்களைப பறிமுதல் செய்வதும் பிரிவு 20(3)ஐ மீறியதாகாது. ஏனெனில், சோதனை ஆணை காவல்துறை அதிகாரிகளுக்குத்தான் வழங்கப்படுகிறது. எனவே, ஓரிடத்தில் சோதனையிடுவதும், ஆவணங்களைப பறிமுதல் செய்வதும் அந்த இடத்தைத் தன கைவசம் வைத்திருப்பவரின் செயல்கள் ஆகா. மாறாக அவை, சோதனையிட்டுப் பறிமுதல் செய்பவரின் செயல்களே ஆகும். எனவே சோதனையிடுவதும், பறிமுதல் செய்வதும் குற்றம சாட்டப் பட்டவருடைய சுய சாட்சியங்கள் ஆகா (எம்.பி. சர்மா எதிர் சதீஷ் 1954 SC 300, 306). குற்றம் சாட்டப்பட்டவரை அவருக்கு எதிராக அவரையே சாட்சியம் அளிக்கக் கட்டாயப்படுத்தக் கூடாதாகையால் சோதனையிட்டுப் பறிமுதல் செய்ததன் மூலம் ஏதேனும் ஆவணங்கள் சிக்கினால் அவற்றைக் குற்றம் சாட்டப்பட்டவருக்கு எதிராக நீதிமன்றத்தில் சாட்சியமாகச் சமர்ப்பிக்கலாம் (வி.எஸ். குட்டன் பிள்ளை எதிர் ராம கிருஷ்ணன் AIR 1980 SC 185).

*உயிருக்கும் தனிப்பட்ட சுதந்திரத்திற்கும் பாதுகாப்பு:* 'சட்டத்தினால் நிர்ணயிக்கப்பட்டுள்ள முறைப்படி அல்லாமல்' எந்த ஒரு நபரின் உயிரையும் தனிச் சுதந்திரத்தையும் பறிகக முடியாது என்று அரசிய லமைப்பின் 21ஆவது பிரிவு உத்தரவாதமளிக்கிறது. குடிமக்களுக்கும், குடிமக்கள் அல்லாதவர்களுக்கும் இந்த உரிமை உண்டு. பிரசித்தி பெற்ற கோபாலன் வழக்கில், தனிச் சுதந்திரம் என்பது ஒரு நபரின் உடல் சம்பந்தமான சுதந்திரத்தைத்தான் குறிப்பதாகத் தீர்ப்பளிக்கப்பட்டது. நிர்வாகத்தின் தன்னிச்சையான செயலுக்கு எதிராகத்தான் இந்தப் பிரிவு பாதுகாப்பு அளிக்கிறது என்றும் அத்தீர்ப்பில் கூறப்பட்டது (ஏ.கே. கோபாலன் எதிர் சென்னை அரசு AIR 1950 SC 27 ). ஆனால் பின்னர், சட்டமியற்றும் அவையின் செயலுக்கு எதிராக பாதுகாப்பு அளிப்ப தாகவும், பிரிவு 19(1)இல் குறிப்பிடப்படாத, ஒரு மனிதனின் தனிச் சுதந் திரத்தைப் பேணுகின்ற பல்வேறு வகையான பிற உரிமைகளைக் கொண்டதாகவும் இதன் பரப்பு விரிவாக்கப்பட்டது. மேனகா காந்தி எதிர் இந்திய அரசு வழக்கில் தீர்ப்பளிக்கும்போது, உச்சநீதிமன்றம் முன்னர் கோபாலன் வழக்கில் அளித்த தீர்ப்பை மீறி, "நீதிமன்றங்களின்

முயற்சி அடிப்படை உரிமைகளை எட்டுவதாக விரிவாக வேண்டுமே ஒழிய, நீதித்துறை கட்டமைப்பு என்ற நடைமுறை மூலம் அவற்றின் பொருளை மெல்லியதாக்குவதாக அமையக்கூடாது" என்று கருத்துத் தெரிவித்தது. உயிர் வாழ்வதற்கான உரிமை என்றால் உடல் ரீதியாக உயிரோடு இருப்பது மட்டுமின்றி, மனிதனுக்குரிய கண்ணியத்தோடு வாழ்வதற்கான உரிமையும் அதில் அடங்கும் என்றும் நீதிமன்றம் தீர்ப் பளித்தது (AIR 1978 SC 597). இந்தக் கருத்தையே மேலும் விரிவாக்கி, பிரான்ஸிஸ் கொராலீ எதிர் தில்லி ஆட்சிப் பகுதி என்ற வழக்கில் தீர்ப் பளிக்கும்போது, உயிர் வாழ்வதற்கான உரிமை வெறும் விலங்குபோல் இருப்பதற்கான உரிமை மட்டுமே ஆகாது என்று உச்சநீதிமன்றம் கூறியது. (AIR 1981 SC 746). தொழிலாளர்களுக்குக் குறைந்த பட்சக் கூலியை கொடுக்காதிருப்பது, மனிதனுக்குரிய கண்ணியத்தோடு வாழ்வதற்கான உரிமையை மறுப்பதாகும். என்றும், எனவே பிரிவு 21ஐ மீறியதாகும் என்றும் தீர்பபளிக்கப்பட்டுள்ளது (மக்களாட்சி உரிமைகளுக்கான சங்கம் எதிர் இந்திய அரசு AIR 1982 SC 1473). பிரசித்தி பெற்ற நடைபாதை வாசிகள் வழக்கில், பிரிவு 21-ல் குறிப்பிட்டுள்ள 'உயிர் வாழ்க்கை' என்பதில் 'பிழைப்புக்கான உரிமையும்' அடங்கும் என்று உச்சநீதிமன்றம் கூறியது. பிழைப்புக்கான வழியைப் பெறுகின்ற உரிமையை, அரசிய லமைப்பு வழங்கியுள்ள உயிர் வாழ்வதற்கான உரிமையின் ஓர் அங்கமாகக் கொள்ளவில்லை என்றால், ஒரு மனிதனுடைய உயிர் வாழவதற்கான உரிமையைப் பறிப்பதற்கு மிக எளிதான வழி, அவனுடைய பிழைப்புக்கான வழியைப் பறித்துக் கொள்வதுதான் என்று நீதிமன்றம் கூறியது (ஓல்காதெலீஸ் எதிர் பம்பாய் முனிசிபல் கார்ப்பரேஷன் AIR 1968 SC 180).

இத்தகைய தாராளமான சிந்தனையும் கண்ணோட்டமும், உச்ச நீதிமன்றத்தின் முன்வந்த பல்வேறு வழக்குகளிலும் பின்பற்றப்பட்டன. அவ்வாறு வழங்கப்பட்ட சில முக்கியத் தீர்ப்புகள் வருமாறு:

- கடனைத் திருப்பிச் செலுத்தாத ஏழையைச் சிறையில் அடைப்பது அவனது தனிச் சுதந்திரத்தைப் பறிப்பதாகும் (ஜாலி ஜியார்ஜ் வர்கீஸ் எதிர் கொச்சின் வங்கி AIR 1980 SC 470)
- கொத்தடிமைத் தொழிலாளர்முறை (ஒழிப்பு) சட்டம் 1976-ன் படி கொத்தடிமைத் தொழிலாளர்களை இனம் கண்டு அவர்களை விடுவிப்பது மட்டும் போதாது; பிரிவு 21-ல் குறிப்பிட்டுள்ளவற்றை நிறைவேற்ற வேண்டுமானால் அவர்களுக்கு உரிய முறையில் மறுவாழ்வு வசதிகள் ஏற்படுத்தித் தருவது மிகவும் முக்கியமான தாகும் (நீர்ஜா சௌத்ரி எதிர் ம.பி. அரசு AIR 1984 SC 1099).
- உயிர் வாழ்க்கை என்பது உடல் ரீதியாக எதிர்ப்பதோ, சிறையி லடைப்பதை எதிர்ப்பதோ மட்டுமன்று; வெறும் விலங்குபோல் வாழ்வதைக் காட்டிலும் மேலானது. (காரக்சிங் எதிர் உ.பி. அரசு AIR 1963 SC 1295 );
- தனிமை உரிமை என்பதை ஒவ்வொரு நிலையில் இருந்தும் படிப்படியாகத்தான் எட்டமுடியும் (கோவிந்த் எதிர் ம.பி. அரசு

AIR 1975 SC 1379). நடத்தை கெட்ட பெண்ணுக்குக்கூட இந்த உரிமை உண்டு; யாரும் அவளுடைய உரிமையை ஆக்கிரமிக்க முடியாது. (மகாராஷ்டிரா அரசு எதிர் மதுகர் நாராயண் AIR 1991 SC 207);

- குற்றச் செயல்கள் நடைபெறாமல் தடுக்கும் நோக்கத்துடன் காவல் துறை அதிகாரிகள் சட்டவரம்புக்கு உட்பட்டுக் கண்காணிப்புப் பணியில் ஈடுபடும் போது, ஒரு நபர் தன்னுடைய பெயர் கண் காணிக்கப்பட வேண்டியவர்கள் பட்டியலில் சேர்க்கப்பட்டதை எதிர்த்துப் புகார் செய்ய முடியாது. ஆனால் காவல் துறையின் நடவடிக்கை சட்டவரம்புகளை மீறும்போது அவை, பிரிவு 21-ன் படி தனிச் சுதந்திரத்தையும், பிரிவு 19 (1) (d)இன்படி சுதந்திரமான நடமாட்டத்தையும் மீறுவதாகக் கூறி வழக்குத் தொடுக்கலாம். (மாலக்சிங் எதிர் பஞ்சாப் அரசு 1981 SC 760);
- கொலைவழக்கில் போதிய காரணங்கள் இன்றி பிணைவிடுதலை வழங்க மறுப்பது, பிரிவு 21-ன்கீழ் தனிச் சுதந்திரத்தைப் பறிப்பதாகும் (பாபுசிங் எதிர் உபி. அரசு AIR 1978 SC 527);
- சிறையில் உள்ள தண்டனைக் கைதிகளுக்கும் கூட பிரிவு 21-ன் கீழ் பாதுகாப்பு உண்டு (டிபி.எம். பட்நாயக் எதிர் ஆபி. அரசு AIR 1974 SC 2092);
- கைதிகளைத் தனிமைச் சிறையில் அடைப்பதன் மூலம், சக கைதிகளிடையே கலந்து பழகவும், பேசவுமான தோழமை உணர்வு மறுக்கப்படுவதால், அது பிரிவு 21ஐ மீறுவதாகும் (சுனில் பாத்ரா (எண் 1) எதிர் தில்லி நிர்வாகம் AIR 1978 SC 1575);
- காவலில் வைக்கப்பட்டவர் மீது, தடுப்புக் காவல் சட்டத்தின படியான அங்கீகரிக்கப்பட்ட கட்டுப்பாடுகளை மட்டுமே விதிக்க முடியும். அங்கீகாரமற்ற கட்டுப்பாடுகள் ஏதும் விதிக்கப்பட்டால் அது பிரிவு 21ஐ மீறியதாகும் (மகாராஷ்ட்ர அரசு எதிர் பிரபாகர் பாண்டுரங் AIR 1986 SC 424);
- 'வெளிநாட்டுக்குப் பயணம் செய்யும் உரிமை' ஒரு நபருக்குள்ள தனிச்சுதந்திரத்திற்குள் அடங்கும்; அது பிரிக்க முடியாதது (சத்வந்த் சிங் எதிர் உதவி பாஸ்போர்ட் அலுவலர் AIR 1967 SC 1836);
- காயம்பட்ட ஒருவருக்கு, குற்றவியல் நடைமுறைச் சட்டத்தின்படி காவல்துறையினர் வேண்டிய நடைமுறைகளுக்காகக் காத்திராமல் அவருடைய உயிரைக் காப்பாற்றும் பொருட்டு உடனடியாக மருத்துவ சிகிச்சை அளிக்க வேண்டியது மருத்துவர்களுடைய- அவர்கள் அரசு மருத்துவராயினும், தனியார் மருத்துவராயினும்- தொழில்முறைக் கடமையாகும் (பரமானந்த் கட்டாரா எதிர் இந்திய அரசு AIR 1989 SC 2039).
- பிரிவு 21-ல் அளிக்கப்பட்டுள்ள உரிமைகளை மீறியதற்காக நிவாரணம் வேண்டுவோர், தம்முடைய அல்லது சமுதாயத்தில் உள்ள மற்றவர்களுடைய உயிரின் முழுமையான பாதுகாப்புக்கு அச்சுறுத்தல் நேருகின்ற நேரிடையான கட்புலனாகும் செயலால்

பாதிக்கப்பட்டிருக்க வேண்டும் (ராமஷரண் ஆட்டோ ரனுப்ரசி எதிர் இந்திய அரசு AIR 1989 SC 549, 552);

மனிதர்கள் வாழமுடியாத கீழான நிலையில் வாழுமாறு ஒரு நபரைக் கட்டாயப்படுத்துவதும் கூட அவருடைய உயிரைப் பறிப்பதற்குச் சமமாகும். ஒருவனுக்கு விதிக்கப்பட்ட மரண தண்டனையை நிறைவேற்றாமல் அவனது மனிதப் பண்புகளையும் குணங்களையும் மெதுவாக அவனிடமிருந்து பறிப்பதானது அவனைத் தூக்குமேடைக்கு அனுப்புவதைக் காட்டிலும் கொடுமையானது. (சங்கர் பானர்ஜி எதிர் துர்காபூர் ப்ராஜக்ட் லிட் AIR 1988 கல்கத்தா 136).

மோகினி ஜெயின் எதிர் கர்நாடக அரசு (AIR 1992 SC 1858) என்ற வழக்கில் உச்சநீதிமன்றம் தீர்ப்பளிக்கும்போது, பிரிவு 21-ன் எல்லையை மேலும் விரிவாக்கி, உயிர்வாழும் உரிமையில் 'கல்விபெறும் உரிமையும்' அடங்கும் என்று கூறியது. இன்னும் சொல்லப்போனால், மருத்துவம் போன்ற தொழில்முறை உயர்கல்வியைப் பெறுவதும் அடிப்படை உரிமையாகும் என்று உச்சநீதிமன்றம் அந்த வழக்கில் தீர்ப்பளித்தது. ஆனால், மோகினி ஜெயின் வழக்கில் அளித்த தீர்ப்பிலிருந்து பின்னர் உச்ச நீதிமன்றம் விலகி, பிரிவு 21-ல் தொழிற் கல்வி பட்டம் பெறும் அடிப்படை உரிமை ஏதுமில்லை என்று தீர்ப்பளித்தது. எனினும், 14 வயது வரையான தொடக்கக் கல்வி பெறுவது குடிமக்களின் அடிப்படை உரிமையாகும் என ஐந்து நீதிபதிகளில் மூன்று பேர் கருத்து வெளியிட்டனர். (ஜே.பி. உன்னி கிருஷ்ணன் மற்றும் ஏனையோர் எதிர் ஆந்திரப்பிரதேச அரசு மற்றும் ஏனையோர், ஜட்ஜ்மெண்ட்ஸ் டுடே 1993 (1)SC 474).

அண்மையில் 1993 ஜூன் ஏழாம் தேதியன்று உச்சநீதிமன்றம் அளித்த தீர்ப்பு ஒன்றில், பிரிவு 21-ன் கீழ் வரும் உயிர் வாழ்க்கை உரிமையில், பிழைப்புக்கான வழியைப் பெறுகின்ற உரிமையும் அடங்கும் என்று கூறியது. பணியாளர் ஒருவரைப் பணியில் இருந்து நீக்கும் உத்தரவினால் அவருடைய பிழைப்புக்கான வழி மட்டுமின்றி அவரைச் சார்ந்துள்ளவர்களின் பிழைப்புக்கான வழியும் பாதிக்கப்படுகிறது. (டி.கே. யாதவ் எதிர் ஜே.எம்.ஏ. இண்டஸ்டிரீஸ் லிட்).

## கைது செய்யப்படுவதற்கும், காவலில் வைக்கப்படுவதற்கும் எதிராகப் பாதுகாப்பு

வழக்கு, விசாரணை என்று எதுவுமின்றி பொதுமக்களையும் தலைவர்களையும் கைது செய்து காவலில் வைப்பது ஆங்கிலேய ஆட்சியின் போது சர்வ சாதாரணமாக இருந்தது. சுதந்திரப் போராட்டத்தின்போது இந்த அநியாயத்தையும் மக்கள் கடுமையாக எதிர்த்தனர். கைது செய்யப்படும் எந்த ஒரு நபரையும் அவர் கைது செய்யப்பட்டதற்கான காரணத்தைத் தெரியப் படுத்தாமல் அடைத்து வைத்திருக்கக் கூடாது என்றும், வழக்குரைஞரைக் கலந்தாலோசிக்கவும், அவர் மூலமாகத் தன்மீது சுமத்தப்பட்ட குற்றச் சாட்டுக்களை மறுப்பதற்கும் அவருக்கு வாய்ப்பு அளிக்காமல் இருக்கக்

கூடாது என்றும், அருகில் உள்ள மாஜிஸ்ட்ரேட்டிடம் 24 மணி நேரத்திற்குள் அவரை ஆஜர்படுத்த வேண்டும் என்றும் பிரிவு 22-ன் முதலாவது, இரண்டாவது விதிகள் கூறுகின்றன.

எனவே காவலில் வைக்கப்பட்டவருக்கு அதற்கான காரணத்தைத் தெரியப்படுத்துவதும், வழக்குரைஞரைக் கலந்தாலோசிக்கவும், அவர் மூலமாகக் குற்றச்சாட்டுகளை மறுக்க வாய்ப்பளிப்பதும், 24 மணி நேரத் திற்குள் அருகில் உள்ள குற்றவியல் நீதி மன்றத்தில் முன்னிலைப்படுத்துவதும் இந்தப் பிரிவின்படி கட்டாயமாக நிறைவேற்றப்பட வேண்டிய செயல் களாகும் என்று உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்திருக்கிறது (கோபாலன் எதிர் சென்னை அரசு (1950) SCR 88; ஹன்ஸ்முக் எதிர் குஜராத் அரசு AIR 1981 SC 28; ம.பி. அரசு எதிர் ஷோபாராம் AIR 1968 SC 1910; உ.பி. அரசு எதிர் அப்துல்சமது AIR 1962 SC 1506).

நீதிமன்ற ஆணையின்படி கைது செய்யப்படுவதும், ஓர் அன்னியனை நாடு கடத்துவதும் உரிமையியல் வழக்குக் காரணமாகக் கைது செய்யப் படுவதும் பிரிவு22(1) மற்றும் 22(2)இன் கீழ் வாரா என்றும் உச்ச நீதி மன்றம் தெளிவுபடுத்தியுள்ளது (உ.பி. அரசு எதிர் அப்துல் சமது AIR 1962 SC 1506; மதுலிமாயி வழக்கு AIR 1969 SC 1014; பஞ்சாப் அரசு எதிர் அஜாயப்சிங்(1953) SCR 254). முன்னேற்பாட்டு நடவடிக்கையாக கைது செய்யப்படுவதற்கும், அன்னியர்களுக்கும் இந்த இரண்டு விதிகளும் பொருந்தா.

பிரிவு 22-ன் மூன்று முதல் ஏழு வரையுள்ள விதிகள் யாவும் சட்டத்தின் மூலம் செய்யப்படும் தடுப்புக்காவல் கைதுகளைப் பற்றிய விதி விலக்குகள் ஆகும். தடுப்புக்காவல் என்றால், சட்டவிரோதமான செயல் ஒன்றை நடைபெறவிடாமல் தடுப்பதற்காகக் காவலில்வைப்பதே ஒழிய, சட்டவிரோதமான செயலுக்காகத் தண்டிப்பது ஆகாது. தடுப்புக் காவலுக்கு வகை செய்யும் சட்டத்தை இயற்றவும், தடுப்புக்காவல் மேற்கொள்ளப்பட வேண்டிய சூழ்நிலைகளை வரையறுத்தல், தடுப்புக் காவலுக்கான வழக்குகள், தடுப்புக்காவலில் வைக்கப்படுவதற்கான அதிகபட்ச காலவரையறை, அதற்கான ஆலோசனைக்குழு ஒன்றை நியமித்தல், தடுப்புக்காவலில் கைது செய்வதற்கான வழிமுறை போன்றவை குறித்து சட்டதிட்டங்களை வரை யறுக்கவும் பிரிவு 22 நாடாளுமன்றத்திற்கு அதிகாரம் அளிக்கிறது. தடுப்புக் காவல் அதிகாரத்தைத் தவறாகப் பயன்படுத்தாமல் இருக்கவும் சில பாதுகாப்பு ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. அதன்படி, ஆலோசனைக்குழு போதுமான காரணம் இருப்பதாகக் கூறினால் ஒழிய எந்தச் சட்டத்தின் படியும் தடுப்புக் காவல் மூன்று மாதங்களுக்கு மேல் போக அனுமதிக்கக் கூடாது. அத்துடன், தடுப்புக் காவலுக்கு வகை செய்யும் எந்தச் சட்ட மானாலும், அதிகபட்சம் எவ்வளவு காலத்திற்குத் தடுப்புக் காவலில் வைக்கலாம் என்பதையும் கண்டிப்பாகக் கூறியாக வேண்டும். தடுப்புக் காவலில் வைக்கப்பட்டவருக்கு அதற்கான காரணத்தைத் தெரியப்படுத்துவ துடன், அவர் முறையீடு செய்வதற்கும் ஒரு வாய்ப்பு அளிக்க வேண்டும்.

சரியான காரணங்களுக்காக சட்டப்படி செய்யப்படும் தடுப்புக்காவல் நடவடிக்கைகள்தவிர, விசாரணை ஏதுமின்றி காவலில் வைப்பதை நீதி

மன்றங்கள் கடுமையாகச் சாடியுள்ளன. சட்டம் நியாயமற்றதாகவோ, முகாந்திரம் அற்றதாகவோ இருக்குமானால் அதனைச் செல்லாததாக அறிவிக்க வேண்டும்; அச்சட்டத்தின்படி பிறப்பிக்கப்பட்ட கைது அல்லது தடுப்புக் காவல் ஆணை குறைபாடு உடையதாக இருக்குமானால், காவலில் வைக்கப்பட்டவரை உடனடியாக விடுதலை செய்யுமாறு நீதிமன்றம் ஆணையிட வேண்டும் (கோபாலன் எதிர் சென்னை அரசு (1950) SCR 88; ஏ.டி.எம். எதிர் சுக்லா AIR 1976 SC 1207).

## சுரண்டலுக்கு எதிரான பாதுகாப்பு

சட்டவிரோதமாக மனிதர்களை வியாபாரம் செய்வது, 'பெகர்', நிர்ப்பந்தப்படுத்தி வேலை வாங்குவது, தொழிற்சாலைகளில் சிறுவர்களை வேலைக்கு அமர்த்துவது போன்ற சுரண்டல்களில் இருந்து பாதுகாப்பு அளிக்க பிரிவு 23-ம், 24-ம் வகை செய்கின்றன. சட்டவிரோதமாக மனிதர்களை—பெண்கள், குழந்தைகளை வியாபாரம் செய்வது, நிர்ப்பந்தப்படுத்தி வேலை வாங்குவது போன்றவை, அரசியலமைப்பின் அடிப்படையான மாண்பாகிய மனித கண்ணியத்திற்கு எதிரானவையாகும். பழைய ஜமீன்தாரி முறையில், வாரதாரர்கள் நிலச் சொந்தக்காரர்களுக்குச் சில சமயங்களில் இலவசமாக வேலை செய்ய வேண்டுமென்று நிர்ப்பந்திக்கப்படுவார்கள். அதுவே 'பெகர்' எனப்பட்டது. இந்த மாதிரியான வேலைகளுக்குச் சிறிதளவு சன்மானம் அளிக்கப்பட்டாலும்கூட, வேலை வாங்கப்படுவது நிர்ப்பந்தத்தினால்தான் என்று நீதிமன்றம் தீர்ப்பளித்திருக்கிறது (மக்கள் சங்கம் எதிர் இந்திய அரசு AIR 1982 SC 1473).

ஒரு நபரை அவருடைய விருப்பத்திற்கு மாறாக வேலை வாங்கவோ, அவரை எந்த விதத்திலும் தவறாகப் பயன்படுத்தவோ அரசையும், தனிப்பட்ட வேறு எவரையும் அனுமதிக்கக் கூடாது என்பதே இந்தப் பிரிவின் நோக்கமாகும். இதற்கு ஒரே விதிவிலக்காக ராணுவசேவை, சமூகசேவை போன்ற பொதுக் காரியங்களுக்காகக் கட்டாய சேவை செய்ய வேண்டுமென்று அரசாங்கம் மட்டும் நிர்ப்பந்திக்கலாம். அதுவும்கூட சாதி, சமய, இன, வகுப்பு பேதமின்றி எல்லாருக்கும் ஒரே மாதிரியாக விதிக்கப்பட வேண்டும்.

14 வயதுக்கு உட்பட்ட சிறுவர்களைத் தொழிற்சாலைகளிலோ, சுரங்கங்களிலோ, பிற அபாயகரமான தொழில்களிலோ வேலைக்கு அமர்த்துவதை பிரிவு 24 தடை செய்கிறது. ஐக்கியநாடுகள் சபையின் மனித உரிமைக் கோட்பாடுகளுக்கு ஏற்ப இந்தத் தடை விதிக்கப்பட்டுள்ளது.

பிரிவு 22 மற்றும் 23-ன் வகையுரைகளைச் செயல்படுத்துவதற்காக சில சட்டங்கள் தற்போது இயற்றப்பட்டுள்ளன.

## சமயச் சுதந்திர உரிமை

நம்முடைய குடியரசு சமயச் சார்பற்றது என அரசியல் சட்ட முகப்புரை கூறுகிறது. அரசியல் சட்டத்தில் கூறப்படும் சமயச்சார்பின்மை என்பது

சமயமற்ற நிலையோ, சமயத்திற்கு எதிரான நிலையோ அன்று. அரசுக்கு என்று எவ்வித சமயமும் கிடையாது; எல்லாச் சமயங்களுக்கும் சமமான மதிப்பும், பாதுகாப்பும் உண்டு; சமயத்தின் காரணமாக எவருக்கும் பாரபட்சமான நிலை கிடையாது; எல்லாருக்குமே முழுமையான, சமமான சமயச் சுதந்திரம் உண்டு என்பதையே சமயச்சார்பின்மை குறிக்கிறது (முகப்புரை என்ற அதிகாரத்தின் கீழ் காணக). 25 முதல் 28 வரையுள்ள பிரிவுகள், எல்லாருக்கும் எல்லாவிதமான சமயச் சுதந்திர உரிமைகளுக்கும் உத்தரவாதம் அளிக்கின்றன.

## மனச்சான்று சுதந்திரமும், சமயச் சுதந்திரமும்

குடிமக்கள் மட்டுமின்றி எல்லா மக்களுக்குமே மனச்சான்று சுதந்திரம் உண்டு, எவ்விதக் கட்டுப்பாடும் இன்றி எந்தச் சமயத்தையும் ஏற்கவும், பின்பற்றவும் பரப்பவும் அனைவருக்கும் சுதந்திரம் உண்டு என்று பிரிவு 25 கூறுகிறது. எனினும் இந்தச் சமயச சுதந்திரம், பொது ஒழுங்கு, நீதி முறைமை, சுகாதாரம் ஆகியவற்றுக்கு உட்பட்டது. சமய நடைமுறையுடன் சமபந்தப் பட்ட சமயச்சார்பற்ற நடவடிக்கையை நெறிப்படுததவும், சமூக நலனை உறுதிப்படுத்தவும், இந்துக் கோயில்களில் இந்துககளின அனைத்துப் பிரிவு மக்களும் செனறு வழிபடுவதற்கு அனுமதி அளிக்கவும் சட்டம் இயற்றுவதற்கு அரசுக்குச் சுதந்திரம் உண்டு. கிர்பான அணிவது சீக்கிய சமயத்தைப் பின்பற்றுவதில் அடங்கும். இந்தப் பிரிவைப் பொறுத்தவரையில் இந்துக்கள் என்பதில் சீக்கியர்களும், சமணர்களும, பௌத்தர்களும் அடங்குவர்.

ஒரு சமயத்தைப் பரப்புகின்ற உரிமையில் பலவநதமாக மதமாற்றம் செய்யும் உரிமை அடங்காது; ஏனெனில், அதனால பொது ஒழுங்கு பாதிக்கப்படலாம் எனறு உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்திருக்கிறது. (ஸ்டெயின் ஸ்லாஸ் எதிர் ம.பி. அரசு, AIR 1977 SC 908). ஊர்வலததில் மண்டை ஓடு களுடனும் அபாயகரமான ஆயுதங்களுடனும் தாணடவ நடனம் ஆடுவது சமயத்தின் அத்தியாவசியமான சடங்கு அல்ல என்றும், பொது ஒழுங்கைக் கருத்தில் கொண்டு அந்த ஊர்வலத்தைத் தடைசெய்வது நியாயமான கட்டுப்பாடுதான் என்றும் ஆனந்த மார்க்கம் வழக்கில் தீர்ப்பளிக்கப்பட்டது. (ஜகதீஸ்வர் ஆனந்த எதிர் போலீஸ் கமிஷனர் AIR 1984 SC 51). அதே போல, பக்ரீத் நாளில் பசுவைப் பலியிடுவது இஸ்லாததின் அத்தியா வசியமான சடங்கு அலல என்றும், பொது ஒழுங்கைக் கருத்தில் கொண்டு அது தடை செய்யப்பட வேண்டியதே என்றும் தீர்ப்பளிக்கப்பட்டு இருக்கிறது (முகமது ஹனிப் குரேஷி எதிர் பீகார் அரசு AIR 1958 SC 731). சமய நடை முறைகளுடன் சம்பந்தப்பட்ட சமயச்சார்பற்ற நடவடிக்கைகளை அரசு கட்டுப்படுத்தலாம் என்பது, சமயத்தின் அத்தியாவசியம் அற்ற விஷயங் களையும், சமயச் சொத்துக்களைச் சட்டப்பிரகாரம் சமயச் சார்பற்ற முறையில் நிர்வகிப்பதையும் குறிக்கும் (ரதிலால் எதிர் பம்பாய் அரசு (1954) SCR 1055; ராமானுஜா எதிர் தமிழ்நாடு அரசு AIR 1972 S C 1586; இந்து சமய அறநிலையத்துறை ஆணையர் எதிர் லக்ஷ்மிந்தரா (1954) SCR 1005; திக்யாதர்ஷன் எதிர் ஆந்திரப்பிரதேச அரசு AIR 1970 SC 181).

## சமய விவகாரங்களை நிர்வகிக்கும் உரிமை

பிரிவு 25-ன் தொடர்ச்சியாக அமையும் பிரிவு 26, எல்லாச் சமயத்தவருக்கும், சமயப் பிரிவினருக்கும், சமய மற்றும் அறநிலைய அமைப்புகளை ஏற்படுத்திப் பராமரிக்க, சமயம் சம்பந்தப்பட்ட விஷயங்களைத் தாமே நிர்வகித்துக் கொள்ள, சொத்துக்களை வாங்கி நிர்வகிக்க அடிப்படை உரிமையை அளிக்கிறது. எனினும் சொத்துக்களை நிர்வகிக்கும்போது, சட்டப்படி நடக்க வேண்டும். பிரிவு 25-ன் கீழ் அளிக்கப்பட்ட உரிமைகளுக்குக் கட்டுப்பாடுகள் விதிக்கப்படுவதைப் போலவே பிரிவு 26-ன கீழ் அளிக்கப்படுகின்ற உரிமைகளுக்கும் பொது ஒழுங்கு, நீதி முறைமை, சுகாதாரம் ஆகியவற்றின் அடிப்படையில் கட்டுப்பாடுகள் விதிக்கப்படலாம் என்றாலும், பிற அடிப்படை உரிமைகள் இந்த உரிமைகளைக் கட்டுப்படுத்தா. பிரிவு 25-ல் உள்ளதுபோல, சமயத்திற்கு அத்தியாவசியமானவை என்பவற்றுக்கும் அவசியமற்றவை என்பவற்றுக்கும் இடையேயான வேறுபாட்டினை நீதிமன்றங்கள் நிலை நாட்டியுள்ளன. சமய நிறுவனங்களின் சொத்துக்களை நிர்வகிப்பதை சட்டத்தின் மூலம் கட்டுப்படுத்தலாம் என்றாலும், நிர்வகிக்கும் உரிமையை முற்றிலுமாகப் பறித்துவிட முடியாது என்றும் தீர்ப்பளிக்கப்பட்டுள்ளது (ரதிலால் எதிர் பம்பாய் அரசு (1954) SCR 1055; ராமானுஜா எதிர் தமிழ்நாடு அரசு, AIR 1961 SC 1402; சரூப் எதிர் பஞ்சாப் அரசு AIR 1959 SC 850; நரேந்திரா எதிர் குஜராத் அரசு AIR 1974 SC 2092; ராம் எதிர் பஞ்சாப் அரசு AIR 1984 SC 1576).

பிரிவு 25-26 இரண்டையும் சேர்த்துப் பார்க்கும்போது, அரசாங்கமும், சமயமும் முறையே தத்தமது சமயச்சார்பற்ற நடவடிக்கைகளையும், சமய விவகாரங்களையும், பரஸ்பரம் ஒன்று மற்றொன்றின் தலையீடு இல்லாமல், கவனித்துக் கொள்ள வழி செய்யப்பட்டுள்ளதாகத் தோன்றுகிறது

## சமயவளர்ச்சிக்காக வரி செலுத்தாமல் இருக்க உரிமை

எந்த ஒரு குறிப்பிட்ட சமயத்தின் வளர்ச்சிக்காகவும், பராமரிப்பிற்காகவும் ஆகும் செலவுகளுக்காக வரி செலுத்துமாறு எந்த ஒரு நபரையும் கட்டாயப் படுத்த முடியாது என்று பிரிவு 27 கூறுகிறது. ஆனால் வரிகளின் மூலம் பெறப்படும் தொகை எல்லாச் சமயங்களின் வளர்ச்சிக்காகவும் பயன்படுத்தப் படுவதற்கு எந்தவித ஆட்சேபணையும் கிடையாது. எல்லாச் சமயங்களுக்கும் சமமான மதிப்பு என்ற சமயச் சார்பற்ற நெறியின் அடிப்படையில் இந்தப் பிரிவு அமைந்துள்ளது.

## சமய போதனைகளுக்குச் செல்லாமலிருக்க உரிமை

முற்றிலும் அரசாங்க நிதியில் செயல்படும் கல்வி நிறுவனங்களில் சமய போதனை கூடாது என்று பிரிவு 28 முற்றிலுமாகத் தடை செய்கிறது. அரசாங்கத்தின் உதவி பெறுகின்ற கல்விநிறுவனங்களிலும், அங்கீகரிக்கப் பட்ட கல்வி நிறுவனங்களிலும் சமய போதனைக்கோ, வழிபாட்டுக்கோ செல்லாமல் இருக்கும் உரிமை எல்லாருக்குமே உண்டு.

# பண்பாடு, கல்வி உரிமைகள்

## சிறுபான்மையினர் நலனுக்குப் பாதுகாப்பு

இந்தியாவின் எந்தப் பகுதியிலேனும் வசிக்கின்ற குடிமக்களின் எந்த ஒரு பிரிவினரும் தமக்கென்று பிரத்யேகமான மொழியையோ, எழுத்து வடிவத்தையோ, பண்பாட்டையோ கொண்டவர்களாக இருந்தால் அவற்றைப் பேணிக்காக்கும் உரிமை அவர்களுக்கு உண்டு என பிரிவு 29 உத்தரவாதம் அளிக்கிறது. அரசின் உதவி பெற்று நிர்வகிக்கப்படுகின்ற அல்லது அரசாலேயே நிர்வகிக்கப்படுகின்ற கல்வி நிறுவனங்களில் சேருவதற்கு, சாதி, சமயம், இனம், மொழி ஆகிய காரணங்களின் அடிப்படையினாலேயே எந்த ஒரு குடிமகனுக்கும் அனுமதி மறுக்கப்படக்கூடாது.

அரசியலமைப்பின் மூல வாசகத்தில், இந்தப் பிரிவின் விளிம்புத் தலைப்பில் 'சிறுபான்மையினர்' என்று குறிப்பிடப்பட்டு இருந்தாலும், பிரிவின் வாசகத்தில் எந்த இடத்திலும் அவ்வாறு குறிப்பிடப்படாததால், இந்த உரிமையானது எல்லாப் பிரிவினருக்கும் – சிறுபான்மையினருக்கும் பெரும்பான்மையினருக்கும் – எந்தவித வித்தியாசமும் இன்றிக் கிடைக்கும் என்று நீதிமன்றத்தில் தீர்ப்பளிக்கப்பட்டுள்ளது (அகமதாபாத் செயின்ட் சேவியர்ஸ் கல்லூரிச் சங்கம் எதிர் குஜராத் அரசு AIR 1974 SC 1389).

## சிறுபான்மையினர் கல்வி நிறுவனங்களை ஏற்படுத்தி நிர்வகிக்கும் உரிமை

சிறுபான்மையினர் அனைவரும் — அவர்கள் சமயச் சிறுபான்மையினராலும் மொழிச் சிறுபான்மையினரானாலும்— அவர்கள் விருப்பத்திற்கு ஏற்ப, கல்வி நிறுவனங்களை உருவாக்கி நிர்வகிப்பதற்கு உரிமையுண்டு என்று பிரிவு 30(1) கூறுகிறது. அரசியலமைப்பின் 44ஆவது திருத்தச் சட்டத்தின்படி சேர்க்கப்பட்ட விதி 1(A), சிறுபான்மையினரின் கல்வி நிறுவனங்களுக்குச் சொந்தமான ஏதேனும் ஒரு சொத்தினைக் கையகப் படுத்தினால் அதற்கு அளிக்கப்படும் இழப்பீடு நியாயமானதாகவும், போதுமானதாகவும் இருக்க வேண்டும் என்றும், அப்போதுதான் இந்தப் பிரிவில் வழங்கப்பட்டுள்ள உரிமை பொருள் உடையதாய் இருக்கும் என்றும் கூறுகிறது. அரசு நிதியுதவி அளிக்கும்போது சிறுபான்மையினர் நிர்வகிக்கும் நிறுவனங்களுக்குப் பாரபட்சமாக நடந்து கொள்ளக் கூடாது என்று இரண்டாவது விதி கூறுகிறது.

சொல்லப்போனால், பிரிவு 30, சிறுபான்மையினர் உரிமையைப் பற்றியதாகவே இருக்கிறது; அதாவது சிறுபான்மையினரின் உரிமையைப் பாதுகாப்பதாக அமைந்துள்ளது. பிரிவு 20-ல் சொல்லப்பட்டுள்ளது போன்று மொழி, எழுத்துவடிவம், பண்பாடு ஆகியவற்றுடன் மட்டும் நின்றுவிடாமல் பிரிவு 30 மிகவும் பரவலானதாக அமைந்துள்ளது. (புரூட் பாதிரி எதிர் பீகார் அரசு AIR 1969 SC 465; அகமதாபாத் செய்ண்ட் சேவியர்ஸ் கல்லூரிச் சங்கம் எதிர் குஜராத் அரசு AIR 1974 SC 1389). சிறுபான்மையினர் தங்கள் விருப்பம்போல கல்வி நிறுவனங்களை ஏற்படுத்தி

நிர்வகிப்பதற்கு இந்தப் பிரிவின் கீழ்அளிக்கப்பட்டுள்ள உரிமையில், பயிற்றுமொழி, பாடத்திட்டம், பயிற்றுவிக்கப்பட வேண்டிய பாடங்கள் ஆகியவற்றையும் தம் விருப்பம் போல் தேர்ந்தெடுக்கும் உரிமையும் அடங்கும் (டிஏவி. கல்லூரி, படிண்டா எதிர் பஞ்சாப் அரசு, AIR 1971 SC 1731; கேரள கல்வி மசோதா வழக்கு AIR 1958 SC 956).

நிர்வகிக்கும் உரிமை என்றால் நிர்வாகத்தை குழப்படியாக்கி விடுவதற்கு உரிமை என்று பொருளாகாது. இந்த உரிமை, அரசின் நெறிப்படுத்தும் அதிகாரத்திற்கு உட்பட்டது. சமூக நலம், தொழில் உறவு, கல்வித்தரம், திறமை, ஒழுக்கம், ஆரோக்கியம், சுகாதாரம், பொது ஒழுங்கு, நீதிமுறைமை போன்றவற்றைப் பேணுவதற்காக இயற்றப்படும் சட்டங்கள் சிறுபான்மை யினருக்கு அளிக்கப்பட்டுள்ள கல்வி நிறுவனங்களை நிர்வகிக்கும் உரிமையை மறுத்தலிக்காதவரை பிரிவு 30ஐ மீறியவை ஆகா. சிறுபான்மை யினர் கல்வி நிறுவனங்களில் பணியாற்றும் ஆசிரியர்களின் பணி நிலைமையைப் பாதுகாக்கவும், பணி நீக்கம், பதவியிறக்கம் போன்ற விஷயங்களை முறைப்படுத்துவதற்கும் இயற்றப்படும் சட்டமும் பிரிவு 30ஐ மீறியதாகாது (கேரள கல்வி மசோதா வழக்கு AIR 1958 SC 956; அகமதாபாத் செயிண்ட் சேவியர் கல்லூரிச் சங்கம் எதிர் குஜராத் அரசு AIR 1974 SC 1389; ப்ராங் அந்தோனி பொதுப்பள்ளி ஊழியர் சங்கம் எதிர் இந்திய அரசு (1986) 4 SCC 707; ஆல் செயின்ட்ஸ் உயர்நிலைப்பள்ளி எதிர் ஆந்திரப்பிரதேச அரசு AIR 1980 SC 1042).

சிறுபான்மையினர் தமது விருப்பம்போல் கல்வி நிறுவனங்களை ஏற்படுத்தி நிர்வகிப்பதற்கு அளிக்கப்பட்டுள்ள உரிமை, பெரும்பான்மை யினருக்கு மறுக்கப்படுவதாகக் கூறி பிரிவு 30 விமர்ச்சிக்கப்பட்டு வருகிறது. 'சிறுபான்மைப் பிரிவு' என்பது அரசியலமைப்பின் எந்த இடத்திலும் வரையறை செய்யப்படாததாலும், சிறுபான்மைப் பிரிவினராக இருப்பதால் பல அனுகூலங்கள் இருப்பதாலும், பெரும்பான்மையினரான இந்துக் களுக்குள்ளேயே சில பிரிவினர் தம்மைச் சிறுபான்மையினராகக் கருத வேண்டும் என்று கோரிக்கை எழுப்பத் தொடங்கியுள்ளனர். இதற்கு எடுத்துக்காட்டாக, பஞ்சாபில் ஆரிய சமாஜத்தினரைக் கூறலாம். மேற்கு வங்காளத்தில் உள்ள இராமகிருஷ்ண மிஷன், தான் ஓர் இந்து அமைப்பு இல்லை என்றும், சுயேட்சையான ஒரு சிறுபான்மைச் சமயம் என்றும் அறிவிக்க நேர்ந்தது. இராமகிருஷ்ண மிஷன் நிறுவனங்களுக்கும் டிஏ.வி அமைப்புகளுக்கும் பிரிவு 30-ன் கீழ் அளிக்கப்பட்டுள்ள பாதுகாப்பினையும் சலுகைகளையும் பெறுவதற்காக அந்த அறிவிப்பு அவசியமானது என்று கல்கத்தா உயர்நீதி மன்றத்தில் இராமகிருஷ்ண மிஷன் தாக்கல் செய்த பிரமாண வாக்கு மூலத்தில் கூறியுள்ளது. ('மொழி பற்றிய பிரிவுகள்' என்ற அதிகாரத்திலும் காண்க).

## சொத்துரிமையும் சில திட்டங்களுக்கு விதிவிலக்கும்

சொத்துரிமை என்பது மிகவும் சிக்கல் நிறைந்ததாகவும், சர்ச்சைக்கு உரியதாகவும் ஆகிவிட்டது. நமது அரசியலமைப்பு வரலாற்றில் 'சொத்துரிமை'

பல சோதனைகளைக் கண்டுள்ளது. அரசியல் நிர்ணயசபையில் அரசியலமைப்பை உருவாக்கிய பல்வேறு கட்டங்களிலும், சொத்துரிமை பற்றிய வகையுரைகளே, அரசியலமைப்பை உருவாக்கியவர்களின் கற்பனையையும், விவேகத்தையும், வரைவுத் திறனையும், விட்டுக் கொடுத்து இடமளிக்கும் மனப்பாங்கினையும் பெருமளவுக்குச் சிரமப்படுத்தின எனலாம். பல்வேறு கருத்துக்களை முன்வைத்த அனைவரும் தத்தம் மனப்போக்கில் விளக்கம் அளித்துக் கொள்வதற்கு ஏதுவாக, இறுதியில் கருத்தொற்றுமை எட்டப்பட்டது.

அவ்வாறு எட்டப்பட்ட கருத்தொற்றுமை நமது அரசியலமைப்பின் பிரிவு 31-இலும் பிரிவு 19(f)இலும் சேர்க்கப்பட்டன. எனினும் அரசிய லமைப்பு நடைமுறைக்கு வந்த பின்னரும் சொத்துரிமை பற்றிய வகையுரைகள் பெரிதும் சர்ச்சைக்கு உரியவையாகவே இருந்து வந்தன. நீதித்துறைக்கும் சட்டமியற்றும் துறைக்கும் இடையே பல மோதல்களை உருவாக்கிய அவை, அரசியலமைப்புத் திருத்தங்கள் பலவற்றை அவசிய மாக்கின. கடைசியாக அரசியலமைப்பு 44ஆவது திருத்தச் சட்டம் 1978 மூலமாக பிரிவு 19(f)-ம், பிரிவு 31-ம் அடிப்படை உரிமைகளில் இருந்து 1979 ஜூன் 20ஆம் தேதி முதல் முற்றிலுமாக நீக்கப்பட்டுவிட்டன. அவற்றுக்குப் பதிலாக, அரசியலமைப்பின் பன்னிரண்டாவது பகுதியில் புதிதாக நான்காவது அத்தியாயம் ஒன்றும், 300A என்ற புதிய பிரிவு ஒன்றும் சேர்க்கப்பட்டன. சட்டத்தின் அதிகாரம் இல்லாமல் எந்த ஒரு நபருடைய சொத்துரிமையையும் பறிக்க முடியாது என்று அப்புதிய பிரிவு வகை செய்தது. இவ்வாறாக சொத்துரிமை என்பது அடிப்படை உரிமையில் இருந்து நீக்கப்பட்டுவிட்டாலும் சட்டப்பூர்வமான உரிமையாக நீடிக்கிறது. பிரிவு 300A, நிர்வாகத்தின் செயலுக்கு எதிராகப் பாதுகாப்பு அளித்தாலும், சட்டமியற்றும் துறையின் தீர்மானத்திற்கு எதிராக அதனால் ஒன்றும் செய்யமுடியாது. பிரிவு 31 நீக்கப்பட்டு விட்டாலும், பிரிவு 31A (1951 ஆம் ஆண்டில் முதலாவது திருத்தத்தின் மூலம் சேர்க்கப் பட்டுப் பின்னர் 4, 17, 44 ஆகிய திருத்தங்களின் மூலம் திருத்தப்பட்டது), பிரிவு 31B (1951ஆம் ஆண்டில் முதலாவது திருத்தத்தின் மூலம் சேர்க்கப்பட்டது), பிரிவு 31C (1971ஆம் ஆண்டில் 25ஆவது திருத்தத்தின் மூலம் சேர்க்கப்பட்டுப் பின்னர் 42 மற்றும் 44ஆவது திருத்தங்களால் திருத்தப்பட்டது) ஆகியவை அடிப்படை உரிமைகளின் அங்கங்களாகவே தொடர்ந்து நீடிக்கின்றன. இறந்து போனவரின் சொத்துக்களைக் கைப்பற்ற வகைசெய்யும் சில சட்டங்கள் பிரிவு 14 மற்றும் பிரிவு 19 ஆகியவற்றுக்கு ஒத்திசைவு இல்லாமல் இருப்பதாகக் கூறி அவற்றைச் செல்லுபடி ஆக்காமல் இருப்பதைத் தடுக்கவும், ஒன்பதாவது அட்டவணையில் இடம்பெற்றுள்ள சில சட்டங் களும் விதிமுறைகளும் எந்தவிதமான அடிப்படை விதிகளுக்கும் முரணானவை என்று எதிர்க்கப்படுவதில் இருந்து பாதுகாத்துச் செல்லுபடி யாக்குவதற்கும், அரசின் நெறிமுறைக் கோட்பாடுகளுக்குச் செயல்வடிவம் கொடுத்த சில சட்டங்களை, பிரிவு 14 மற்றும் பிரிவு 19 ஆகியவற்றுக்கு ஒத்திசைவு இல்லாமல் இருப்பதாகக் கூறிச் செல்லாதவையாக்காமல் காப்பதற்கும், பிரிவுகள் 31A, 31B, 3 1Cஆகியவை வகை செய்கின்றன.

ஒன்பதாவது அட்டவணையில் ஒரு சட்டம் சேர்க்கப்பட்டு விட்டாலும்கூட, அது அரசியலமைப்பின் அடிப்படைக் கூறுகளை மீறுவதாகக் கூறி அதனை எதிர்த்து வழக்குத் தொடுக்கலாம் என்றும், அரசின் நெறிமுறைக் கோட்பாட்டுக்கு ஏற்ப ஒரு சட்டம் உள்ளதா என்று நீதிப்புனராய்வு செய்யும் அதிகாரத்தைப் பறிக்க முடியாது என்றும் கேசவானந்த பாரதி எதிர் கேரள அரசு என்ற வழக்கில் (AIR 1973 SC 146) உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்தது. 42ஆவது திருத்தச் சட்டத்தின்படி பிரிவு 31C-ல் செய்த திருத்தத்தின் மூலம் சட்டங்களை நீதிப்புனராய்வு செய்வதை ஒரேயடியாக விலக்கிக் கொண்டது அரசியலமைப்பின் அடிப்படைக் கட்டமைப்பை மதிக்காத போக்காகும் என்று மினர்வா மில்ஸ் எதிர் இந்திய அரசு என்ற வழக்கில் (AIR 1980 SC 1789 ) உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்தது. (சீனிவாசா எதிர் கர்நாடகா அரசு AIR 1987 SC 1518; மினர்வா மில்ஸ் எதிர் இந்திய அரசு AIR 1986 SC 2030; சஞ்சீவ் கோக் எதிர் பாரத் கோக்கிங் AIR 1983 SC 239; மகாராஷ்ட்ரா அரசு எதிர் பசந்திபாய் (1986)2SCC 516; வாமன்ராவ் எதிர் இந்திய அரசு AIR 1980 SC 273) ஆகிய வழக்குகளையும் காண்க).

## அரசியலமைப்பு வாயிலாகப் பரிகாரம் பெறும் உரிமை

உரிமைகள் பொருள் உடையவையாய் இருக்க வேண்டுமானால், அவை நிலைநாட்டப்படக் கூடியவையாகவும், உரிமைகள் மீறப்படும்போது பரிகாரம் கிடைப்பவையாகவும் இருக்க வேண்டும். நமது அரசியலமைப்பு சில அடிப்படை உரிமைகளுக்கு உத்தரவாதம் அளிப்பதோடு மட்டுமின்றி, அந்த அடிப்படை உரிமைகளை நிலைநாட்டுவதற்காக, உரிய முறைப்படி நேரடியாகவே இந்த நாட்டின் உச்சநீதிமன்றத்தையே அணுகுவதற்குரிய உரிமையையும் பிரிவு 32-ன் கீழ் அளித்துள்ளது. ஆட்கொணர்வித்தல் (Habeas Corpus), செயலுறுத்தல் (Mandamus), தடையுறுத்தல் (Prohibition), நெறிமுறையுறுத்தல் (Quo-warranto), தகுதிமுறைவின்வல் (Certiorari) ஆகிய நீதிப் பேராணைகளை உச்சநீதிமன்றம் வழங்கலாம். பிற நீதி மன்றங்களுக்கும் இந்த அதிகாரங்களைச் செயல்படுத்தும் அதிகாரத்தை நாடாளுமன்றம் அளிக்கலாம். பிரிவு 32-ல் உத்தரவாதம் அளிக்கப்பட்டுள்ள உரிமையை அரசியலமைப்பில் சொல்லப்பட்டுள்ள முறைக்கு மாறாக நிறுத்திவைக்க முடியாது. எடுத்துக்காட்டாக அவசரநிலைப் பிரகடனத்தின் போது — 1. பிரிவு 20 மற்றும் 21-ல் அளிக்கப்பட்டுள்ள அடிப்படை உரிமைகளைத்தவிர மற்றஉரிமைகளை நிலைநாட்டுவதற்காக நீதிமன்றத்தை அணுகும் உரிமையை பிரிவு 359-ன்படி தற்காலிகமாக நிறுத்தி வைக்கலாம். 2. பிரிவு 358-ன்படி, பிரிவு 19-ன் கீழ் உத்தரவாதம் அளிக்கப்பட்டுள்ள உரிமைகள் அரசாங்கத்தின் நிர்வாக மற்றும் சட்டமியற்றும் செயல்களைக் கட்டுப்படுத்த முடியாது. அடிப்படை உரிமைகளைத் தற்காலிகமாக நிறுத்திவைக்க அரசியலமைப்பு வகை செய்துள்ள இனங்களில் பிரிவு 32 பொருந்தாது (சொம்மாவந்தி எதிர் பஞ்சாப் அரசு, AIR 1964 SC 131).

பரிகாரம் தேட வகை செய்யும் இந்த உரிமையை அரசியலமைப்பைத் திருத்துவதன் மூலம் முற்றிலுமாக நீக்கிவிட முடியாது; ஏனெனில் இது அரசியலமைப்பின் அடிப்படைக் கூறாகும் (இந்திய உரக் கார்ப்பரேஷன் எதிர் இந்திய அரசு AIR 1981 SC 344). அரசியலமைப்பை உருவாக்கிய சமயத்தில்கூட, இந்தப் பிரிவே ஆன்ம நாடியாகவும் இதயத்துடிப்பாகவும் விளங்குகிறது என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார். அரசியலமைப்பில் உத்தரவாதம் அளிக்கப்பட்டுள்ள அடிப்படை உரிமைகளை மட்டுமே பிரிவு 32-ன் கீழ் நிலைநாட்ட முடியும். எந்த ஓர் அடிப்படை உரிமையையும் நேரிடையாகப் பாதிப்பதாகவோ மீறுவதாகவோ ஒரு சட்டம் இருந்தால் ஒழிய, குற்றமுள்ளஓர் ஆணையைப் பற்றி அல்லது அரசியலமைப்புக்குப் புறம்பான சட்டத்தைப் பற்றி பிரிவு 32 அக்கறை கொள்வதில்லை. (சிரஞ்சிலால் எதிர் இந்திய அரசு 1950 SC 109; சாதுசிங் எதிர் தில்லி நிர்வாகம் AIR 1965 SC 9; கோபால்தாஸ் எதிர் இந்திய அரசு AIR 1955 SC 1; ஹாஜி இஸ்மாயில் எதிர் அதிகாரம் பெற்ற அலுவலர் AIR 1967 SC 1244; குரியகோஸ் எதிர கேரள அரசு AIR 1977 SC 1509). பிரிவு 32-ன் கீழ் பரிகாரம் பெறும் உரிமை ஓர் அடிப்படை உரிமையாதலால், ஓர் அடிப் படை உரிமையை மீறியதற்குப் பரிகாரம் அளிக்க உச்சநீதிமன்றம் மறுக்க முடியாது. உயர்நீதிமன்றங்களும் நீதிப்பேராணைகளை வழங்க பிரிவு 226 அதிகாரம் அளிக்கிறது. அடிப்படை உரிமை மீறப்படும்போது அதுபற்றி விசாரிக்கும் அதிகாரம் உச்சநீதிமன்றத்திற்கும், உயர்நீதிமன்றங்களுக்கும் உண்டு. எனவே பாதிக்கப்பட்டவர் உச்சநீதிமன்றத்தையோ, உயர்நீதி மன்றத்தையோ அணுகலாம். (சொச்சுணி எதிர் சென்னை அரசு AIR 1959 SC 725; எம்.கே.கோபாலன்எதிர் மத்தியப்பிரதேச அரசு (1955) 1 SCR 168; பசப்பா எதிர் நாகப்பா (1955) 1SCR 250). ஆனால் பிரிவு 226-ன்படி உயர்நீதிமன்றத்தில் பரிகாரம் கிடைக்கும் என்றால் முதலில் உயர்நீதிமன்றத் தினையே அணுக வேண்டும் என்று அண்மையில் உச்சநீதிமன்றம் தீர்ப்பளித் திருக்கிறது (சாணுபாய் பிரம்பத் எதிர் குஜராத் அரசு AIR 1987 SC 1159; பி.என்.குமார் எதிர் தில்லி முனிசிபல் கார்ப்பரேஷன் (1987) 4 SCC 609).

பொதுநல வழக்கு என்ற புதிய கருத்தின்படி, அடிப்படை உரிமைகள் மீறப்படும்போது பாதிக்கப்பட்டவரே நீதிமன்றத்தை நேரிடையாக அணுகத் தேவையில்லை என்று நீதிபதிகள் இடமாற்ற வழக்கில் உச்சநீதிமன்றம் புதிய கொள்கை ஒன்றை உருவாக்கியது. அதன்படி பாதிக்கப்பட்ட ஒரு நபர் அல்லது ஒரு பிரிவினர் ஏதேனும் காரணத்தினால் நீதிமன்றத்தை அணுக முடியாத சூழ்நிலையில், பொதுமக்களில் எவரேனும் ஒருவர் ஒரு கடிதத்தின் மூலமாகக் கூட நீதிமன்றத்தை அணுகலாம் (எஸ்.பி.குப்தா எதிர் இந்தியக் குடியரசுத் தலைவர், AIR 1982. SC 149). (நீதிப்பேராணைகளின் பொருளிற்கும், விளக்கத்திற்கும் நீதித்துறை என்ற அதிகாரத்தின் கீழ்க்காண்க).

முப்படை வீரர்கள், பொது ஒழுங்கைப் பராமரிப்பதற்காக நியமிக்கப்பட்டுள்ள காவல் துறையினர், உளவுத்துறையினர் போன்றவர் களுக்கு அடிப்படை உரிமைகள் பொருந்துமாற்றை, அவர்களின் கடமை நிறைவேற்றம், ஒழுங்கு பராமரிப்பு, போன்றவற்றைக் கருத்தில் கொண்டு, மாற்றியமைக்க நாடாளுமன்றத்திற்குப் பிரிவு 33 அதிகாரம் அளிக்கிறது.

இராணுவச் சட்டம் அமலில் உள்ளபோது ஒழுங்கைப் பராமரிக்கும் பொருட்டு ஒரு நபரின் அடிப்படை உரிமைகளுக்கு மாறாக ஏதேனும் செய்யப்பட்டால் அதற்குச் சட்டத்தின் மூலமாக முன்காப்பீடு வழங்க பிரிவு 34 நாடாளுமன்றத்திற்கு அதிகாரம் அளிக்கிறது.

# 9

# நெறிமுறைக் கோட்பாடுகள்

## (பகுதி IV, பிரிவுகள் 36-51)

நமது அரசியலமைப்பின் நான்காவது பகுதியில் இடம்பெற்றுள்ள அரசுக கொள்கையின் நெறிமுறைக் கோட்பாடுகள், தனிச்சிறபபு வாய்ந்த ஓர் அம்சமாகும். ஐரிஷ் அரசியலமைப்பைப் பின்பற்றியதாக மட்டுமின்றி, நலம் பேணும் அரசு என்னும் கருத்தில் இருந்து பெறப்பட்ட தூண்டுதலின் காரணமாகவும் நெறிமுறைக் கோட்பாடுகள் எனும் அத்தியாயம் திகழ்கிறது (கேசவானந்த பாரதி எதிர் கேரள அரசு AIR 1973 SC 146). தனிமனிதர் களின் அடிப்படை உரிமைகளைப் பாதுகாக்கின்ற அதே வேளையில், அது சமுதாயப் புரட்சியை உண்டாக்கும் ஒரு கருவியாகவும் அமைய வேண்டு மென நமது அரசியலமைப்பை உருவாக்கியவர்கள் விரும்பினர். தனிமனிதர் களின் உரிமைகளுக்கும், சமுதாயத்தின் தேவைகளுக்கும் இடையே உருவாகக் கூடிய முரண்பாடுகளைத் தீர்ப்பதற்காக, பொது நலனைக் கருத்திற்கொண்டு அடிப்படை உரிமைகளைக் கட்டுப்படுத்தலாம் என்று ஒருபுறத்தில் ஓர் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. மற்றொரு புறத்தில் உடன்பாட்டு நெறியாக அரசுக் கொள்கையின் நெறிமுறைக்கோட்பாடுகள் என்ற அதிகாரமே சேர்க்கப்பட்டுள்ளது. 'நாட்டின்ஆட்சி முறையின் அடிப்படையாக' நெறிமுறைக் கோட்பாடுகள் அமைந்துள்ளன என்றும், 'சட்டமியற்றும்போது இந்தக் கோட்பாடுகளைப் பின்பற்ற வேண்டியது அரசின் கடமையாகும்' என்றும் பிரிவு 37 கூறுகிறது. எனவே, அரசியலமைப்பின் இந்த நெறிமுறைகள் வெறும் தார்மீக நெறிகளாக மட்டுமின்றி, கட்டாயமாகச் செயல்படுத்த வேண்டிய நெறிகளாகவும், அரசியலமைப்பில் இடம் பெற்றுள்ள மனித உரிமை குறித்த வகையுரைகளின் பிரிக்க முடியாத அங்கமாகவும் திகழ் கின்றன என்பது தெற்றெனப் புலனாகும். இருந்த போதிலும், நெறிமுறைக் கோட்பாடுகள் எவ்விதமான சட்டப்பூர்வமான உரிமையையும் வழங்குவதில்லை. எனவே, இக்கோட்பாடுகளை மீறியமைக்காக எவரும் நிவாரணம் தேடவும் முடியாது; இக்கோட்பாடுகள் சட்டமியற்றும் அவை களுக்கு எவ்விதமான அதிகாரத்தையும் அளிக்கவில்லை. அத்துடன் நெறிமுறைக் கோட்பாடுகளுடன் ஒத்திசையாத காரணத்திற்காக எந்த ஒரு சட்டத்தையும் அரசியலமைப்புக்கு முரணானது என்று அறிவிக்க முடியாது (சென்னை அரசு எதிர் சம்பகம் துரைராஜ் (1957) SCR 525; கேரள கல்வி

மசோதா வழக்கு AIR 1958 SC 956; திப்சந்த் எதிர் உ.பி. அரசு AIR 1959 SC 648; உ.பி. மாநில மின்வாரியம் எதிர் ஹரி AIR 1979 SC65).

இந்த உரிமைக் கட்டளைகள் யாவும் நீதிமன்றத்தால் நிலைநாட்ட முடியாதவையாகவும், அவற்றைச் செயல்படுத்தும் வரிசை, காலம், முறை, ஆகியவை பற்றி சட்டமியற்றும் அவை தீர்மானித்துக் கொள்வதற்கு ஏதுவாக இந்த நெறிமுறைகள் மிகுந்த நெகிழ்ச்சிப் போக்குடன் அடுத்தடுத்தும், சேர்க்கப்பட்டுள்ளன. இந்த நெறிமுறைகளைச் செயல்படுத்துவதற்குக் கிடைக்கக்கூடிய நிதிவளங்கள், அவை செயல்படுத்தப்படுவதால் உருவாகும் சமூக-பொருளாதார மாற்றங்களை ஏற்றுக்கொள்ள சமுதாயம் தயாராகும் நிலை போன்று, முன்கூட்டியே கணித்தறிய முடியாத பல காரணிகளைக் கருத்தில் கொள்ளவேண்டியுள்ளதால் செயல்படுத்தும் காலம், முறை, வரிசை பற்றி எவ்விதமான உரிமைக் கட்டளையும் சேர்க்கப்படவில்லை.

அரசியல் நிர்ணய சபையில் டாக்டர் அம்பேத்கர் பேசும்போது, நெறி முறைக்கோட்பாடுகள் கடமைக்காகச் சேர்க்கப்பட்ட பிரகடனங்கள் அல்ல என்றும், அவை அறிவுரை ஆவணமாகத் திகழ்கின்றன என்றும், அதிகாரத்தை எவர் கைப்பற்றினாலும், 'இவற்றை மதித்து நடக்க வேண்டும்' என்றும் திட்டவட்டமாகக் கூறினார்.

> "வருங்காலத்தில் சட்டமியற்றும் பிரிவும், நிர்வாகப் பிரிவும் இந்தக் கோட்பாடுகளை வெறும் வாயப்பேச்சாக எடுத்துக் கொள்ளாமல், நாட்டின் ஆட்சிமுறைக்காகப் பின்னர் மேற்கொள்ளப்படும் எல்லா நிர்வாக மற்றும் சட்டத்துறை செயல்களுக்கும் அடிப்படையாகக் கொள்ள வேண்டும் என்பதே அரசியல் நிர்ணயசபையின் உள்ளக் கிடக்கையாகும்"

இந்த நெறிமுறைகளின்படி அரசாங்கத்தைக் கடமையாற்றும்படி நீதித்துறை கட்டாயப்படுத்த முடியாது என்பதையே, பிரிவு 37-ல் உள்ள நீதித்துறை மூலம் செயலுறுத்த முடியாது எனும் விதி தெளிவுபடுத்துகிறது. இதைப்பற்றி டாக்டர் அம்பேத்கர் கூறும்போது "விடுதலைபெற்று இப்போது தான் விழித்தெழுந்திருக்கின்ற இந்த நாடு, இந்த நெறிமுறைகளை எந்தக் கிரமத்தில், எப்போது, எந்த இடத்தில், எப்படி நிறைவேற்றுவது என்று தீர்மானிக்க முடியாவிட்டால், இவற்றைவிடத் தலைபோகிற பல விஷயங் களைச் செயல்படுத்த முடியாமல் இதிலேயே அழுந்திப்போய்விடும்" என்று குறிப்பிட்டார்.

அரசியலமைப்பின் செயலுறுத்தும் முக்கியப்பகுதியாக, நெறிமுறைக் கோட்பாடுகள் திகழ்கின்றன. இந்தக் கோட்பாடுகளின் மூலமாகவே முகப் புரையில் சொல்லப்பட்டுள்ள 'மக்களாட்சி நல அரசு' என்ற இலக்கை எட்ட நமது அரசியலமைப்பு முயலுகிறது. நமது குடியரசை உருவாக்கிய வர்கள் கண்ட சமூக-பொருளாதாரப் புரட்சி என்ற கனவை நனவாக்கவும், இந்த நெறிமுறைகளே வாயிலாகத் திகழ்கின்றன. இதைப்பற்றி நீதிபதி கே.எஸ். ஹெக்டே கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகிறார்:

> "சமத்துவ சமுதாயத்தை உருவாக்குவதும், சமுதாயத்தின் கட்டுப் பாடுகளில் இருந்தும் நிர்ப்பந்தங்களில் இருந்தும் குடிமக்கள் அனைவ ரையும் விடுபெறச் செய்வதும், அனைவருக்கும் சுதந்திரம் கிடைக்கச்

செய்வதும் அடிப்படை உரிமைகளின் நோக்கமாகும். வன்முறையற்ற சமுதாயப் புரட்சியின்மூலம் உடனடியாகச் சில சமூக-பொருளாதார இலக்குகளை எட்ட வேண்டும் என்று நிர்ணயிப்பதே நெறிமுறைக் கோட்பாடுகளின் நோக்கமாகும். அத்தகைய சமுதாயபுரட்சியின் மூலமாக சாதாரண குடிமகனின் அடிப்படைத் தேவைகளை நிறைவு செய்யவும், நமது சமுதாய அமைப்பை மாற்றியமைக்கவும் வேண்டு மென நமது அரசியலமைப்பு விழைகிறது இந்திய மக்களை உடன் பாட்டுப் பொருளில் சுதந்திரமானவர்களாக ஆக்குவதே அதன் நோக்கமாகும்."

1970ஆம் ஆண்டுகளில் இருந்து உச்சநீதிமனறம் அளித்த பல்வேறு தீர்ப்புகளிலும் நெறிமுறைக் கோட்பாடுகளின் உடன்பாட்டுக்கூறுகள் வலியுறுத்தப்பட்டு வந்துள்ளன. 'நல அரசு' என்னும் இலக்கை அடைய அடிப்படை உரிமைகளுக்குத் துணையாக இக்கோட்பாடுகள் அமைந்துள் ளதாகத் தீர்ப்புகள் அளிக்கப்பட்டுள்ளன. நெறிமுறைக் கோட்பாடுகளை அமலாக்குவதற்காக, அரசியலமைப்பின் அடிப்படைக் கூறுகளைச் சிதைக் காமல். அடிப்படை உரிமைகளையே நாடாளுமன்றம் திருத்தியமைத்தாலும் அது செல்லுபடியாகும் (கேரள அரசு எதிர் தாமஸ் AIR 1976 SC 496; தலைமை நீதிபதி எதிர் தீக்ஷிதலு (1979) 2SCC 34: முகேஷ் எதிர் ம.பி. அரசு AIR 1985 SC 537; லக்ஷ்மி காந்த் எதிர் இந்திய அரசு AIR 1982 SC 232).

உண்மையான நல அரசு ஒன்றை உருவாக்கும் நோக்கத்திலேயே நெறிமுறைக்கோட்பாடுகள் அமைந்துள்ளன. அத்துடன் பொருளாதாரச் சுரண்டலுக்கும், ஏற்றத் தாழ்வுகளுக்கும், சமுத்துவமின்மைக்கும் முடிவுகட்டி நியாயமான சமூக அமைப்பு ஒன்றை உருவாக்க வேண்டிய கடமையை அரசின் மேல் சுமத்துகிறது. 'மக்கள் அனைவருக்கும் சமூக-பொருளாதார-அரசியல் நீதி கிடைக்கக் கூடியதான சமுதாய அமைப்பினை உருவாக்கி, நல அரசை உருவாக்க அரசாங்கம் முயல வேண்டும்; தேசிய வாழ்வின் அனைத்து ஸ்தாபனங்களிலும் அவ்வுணர்வு பரவ வகை செய்ய வேண்டும்' என்று நெறிமுறைக் கோட்பாடுகளின் அடித்தளமாக விளங்கும் பிரிவு 38 கூறுகிறது. ஆண்-பெண் அனைவருக்கும் பிழைப்புக்குப்போதிய வாய்ப்புகள் கிடைக்கும் வகையிலும். சமுதாயத்தின் பொருண்மை வளங்களின் கட்டுப் பாடும் உரிமையும் பொதுநலனுக்கு நன்மை பயக்கின்ற வகையில் பகிர்ந்தளிக் கப்படுவதாகவும்; சொத்துக்களும், உற்பத்திக்காரணிகளும் பொது நலனுக்குப் பங்கம் விளைவிக்கின்ற வகையில் ஓரிடத்திலேயே குவியுமாறு பொருளாதார முறை அமைந்து விடாமலும்; ஆண்களுக்கும் பெண்களுக்கும் சமவேலைக்குச் சம ஊதியம் கிடைப்பதாகவும் ("அடிப்படை உரிமையன்று, அரசிய லமைப்பின் இலட்சியம்"—ரந்தீர் எதிர் இந்திய அரசு AIR 1984 SC 879. ராமச்சந்திரா எதிர் இந்திய அரசு AIR 1984 SC 541); ஆண்-பெண் உள்ளிட்ட அனைத்துத் தொழிலாளர்களின் ஆரோக்கியமும் பலமும், சிறாரின் இளம் பிராயமும் தவறாகப் பயன்படுத்தாமலும், பொருளாதாரத் தேவைகளின் காரணமாக குடிமக்கள் தமது வயதுக்கும், வலுவுக்கும் பொருத்தமில்லாத வேலையைச் செய்யுமாறு கட்டாயப்படுத்தப்படாமலும்;

சிறாரும் இளைஞரும் சுரண்டப்படாமல் காக்குமாறும் அரசு தன்னுடைய கொள்கையை நெறிப்படுத்த வேண்டும் என்று பிரிவு 39 கூறுகிறது. அடிப்படை உரிமைகளுக்கு விளக்கமுரைக்கும்போது இந்தப்பிரிவின் வாசகத்தையும் மேற்கோளாகக் கொள்ளலாம் (கேசவானந்த பாரதி எதிர் கேரள அரசு AIR 1973. SC 146; ஸ்ரீனிவாசா எதிர் கர்நாடக அரசு AIR 1987 SC 1518). அரசின் பொருளாதாரத் திறனுக்கும் வளர்ச்சிக்கும் உட்பட்டு, வேலை செய்யும் உரிமையையும், கல்வி பெறும் உரிமையையும் வழங்கவும், வேலையில்லாத நிலையில்-முதுமையில்-நோயுற்றபோதும்-இயலாத சூழ்நிலைகளில் அரசின் உதவியை வழங்கவும் முயல வேண்டுமென பிரிவு 41 கூறுகிறது. தொழிலாளர்களுக்கு வாழ்க்கைத் தரக்கூலி கிடைக்க, மனிதாபிமான வேலைச் சூழல் அமைய, பேறுகாலச் சலுகை கிடைக்க, கண்ணியமான வாழ்க்கை அமைய, ஓய்வு நேரத்தையும் சமுதாய-பண்பாட்டு வாழ்க்கை முறைகளையும் முழுமையாக அனுபவிக்க வாய்ப்புகள் ஏற்படுத்தப்பட வேண்டும் என பிரிவு 42, 43 ஆகியவை கூறுகின்றன.

வேறு சில முக்கியமான நெறிமுறைகள்: 14 வயது வரையுள்ள அனைத்துச் சிறாருக்கும் இலவசமாகக் கட்டாயக் கல்வி அளிப்பது (பிரிவு 45); ஆதி திராவிடர்கள், பழங்குடிமக்கள், சமுதாயத்தின் நலிந்த பிரிவினர் ஆகியோரின் கல்வி நலனையும் பொருளாதார நலனையும் மேம்படுத்துதல் (பிரிவு 46); ஊட்டச்சத்து அளவை உயர்த்தி, வாழ்க்கைத் தரத்தையும் பொது ஆரோக்கியத்தையும் மேம்படுத்தும் அரசின் கடமை (பிரிவு 47); வேளாண்மை, கால்நடை வளர்பபு ஆகியவற்றை அமைப்பு ரீதியாக்கி, பசுவதையைத் தடுத்தல் (பிரிவு 48); கிராமப் பஞ்சாயத்துக்களை அமைத்தல் (பிரிவு 40); நிர்வாகத்தில் இருந்து நீதித் துறையைப் பிரித்தல் (பிரிவு 50); நாடு முழுமைக்கும் ஒரே மாதிரியான சிவில் சட்டத்தைக் கொண்டு வருதல் (பிரிவு 44); தேசிய நினைவுச் சின்னங்களைப் பாதுகாத்தல் (பிரிவு 49); சர்வதேச அமைதி, பாதுகாப்பு ஆகியவற்றை மேம்படுத்தி மற்ற நாடுகளுடன் கண்ணியமான நல்லுறவை வளர்த்துக் கொண்டு, சர்வதேச சட்டங்களையும் உடன்படிக்கைப் பொறுப்புகளையும் மதித்து, சர்வதேச தகராறுகளை மத்தியஸ்தத்தின் மூலம் தீர்த்துக் கொள்ளுதல் (பிரிவு 51). சர்வதேச உடன்படிக்கைகள் தாமாகவே தேசியச் சட்டத்தின் அங்கமாக ஆகிவிடுவதில்லை என்பதை நினைவில் இருத்த வேண்டும்; அவற்றுக்கென்று தனியாகச் சட்டம் இயற்றி, அதன் மூலமாகவே அவை ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும்; அல்லது தேசியச் சட்டத்தின் அங்கமாக ஆக்கப்படவேண்டும். பிரிவு 253-ன்படி இது ஒன்றியத்தின் அதிகார வரம்பிற்கு உட்பட்டது. தேசியச்சட்டங்களுக்கு விளக்கமுரைக்க நேரும்போது சர்வதேச சட்டங்களின் கோட்பாடுகளுக்கு இணக்கமாக நீதிமன்றங்கள் விளக்கமுரைக்க வேண்டும். எனினும் ஒத்திசைவு ஏற்படாதபோது தேசியச் சட்டமே மதிக்கப்பட வேண்டும் (பேருபாரி யூனியன் வழக்கு AIR 1960 SC 845; கிராமபோன் கம்பெனி எதிர் பீரேந்திரா, AIR 1984 SC 667).

நெறிமுறைக் கோட்பாடுகளை நீதிமன்றத்தின்மூலமாகச் செயலுறுத்த முடியாது என்றாலும், அவை சமுதாயச் சீர்திருத்தச் சட்டங்களை இயற்றுவதில் மத்திய-மாநில அரசுகளுக்கு வழிகாட்டிகளாகத் திகழ்ந்திருக்கின்றன.

அரசியலமைப்பின் வரையுரைகளுக்கு விளக்கமுரைக்க நேர்ந்தபோது நீதிமன்றங்கள், நெறிமுறைக் கோட்பாடுகளை மேற்கோளாகக் காட்டியுள்ளன. தேசிய மறுநிர்மாணத்தில் திட்டக் கமிஷனின் அணுகுமுறையைத் தீர்மானிக்கப் பயனுள்ள வழிகாட்டிகளாகவும் நெறிமுறைக் கோட்பாடுகள் இருந்திருக்கின்றன.

அரசியலமைப்பின் நாற்பத்திரண்டாவது திருத்தச் சட்டம் 1976, மேலும் சில நெறிமுறைகளைச் சேர்த்தது. அவை:

1. சுதந்திரமான சூழலிலும் கண்ணியமான சூழலிலும் ஆரோக்கிய மான வகையில் வளருவதற்கான வாய்ப்புகளைச் சிறாருக்கு ஏற்படுத்தித் தரவேண்டும் (பிரிவு 39 (f);
2. நீதித்துறையின் செயல்பாடு சமவாய்ப்பு என்ற அடிப்படையில் அனைவருக்கும் நீதி கிடைப்பதாக அமைவதுடன், குறிப்பாக, பொருளாதார ரீதியாகவும் மற்ற காரணங்களாலும் நீதிமன்றத்தை அணுக முடியாதவர்களுக்கு இலவச சட்ட உதவி அளிக்க வேண்டும் (பிரிவு 39A). இந்த உரிமை பிரிவு 21-ல்கூட உட்கிடக்கை யாக அமைந்துள்ளது (ஹரியானா அரசு எதிர் தர்ஷணா AIR 1979 SC 855; கத்ரி எதிர் பீகார் அரசு AIR 1981 SC 928; சுக்தாஸ் எதிர் ஒன்றிய ஆட்சிப்பகுதி AIR 1986 SC 991);
3. தொழிற்சாலைகளின் நிர்வாகத்தில் தொழிலாளர்களும் பங்கெடுக்க வாய்ப்பளிக்க வேண்டும் (பிரிவு 43A);
4. சுற்றுச் சூழல் பாதுகாக்கப்பட்டு மேம்படுததப்படுவதுடன், காடுகளும் வனவிலங்குகளும் பேணிக்காக்கப்பட வேண்டும் (பிரிவு 48A).

தனி நபர்களுக்கு இடையேயும், பல்வேறு பகுதிகளில் வாழும் மக்கள் பிரிவுகளுக்கு இடையேயும், பல்வேறு தொழில்களில் ஈடுபட்டுள்ள பல்வேறு மக்கள் பிரிவுகளுக்கு இடையேயும் அந்தஸ்திலும் சலுகைகளிலும், வாய்ப்புகளிலும், வருமானத்திலும் உள்ள ஏறறத் தாழ்வுகளைக் குறைக்க அரசு முயல வேண்டும் என்று கூறும் ஒரு வகையுரை, 44ஆவது அரசிய லமைப்புத் திருத்தச் சட்டத்தின்மூலம் பிரிவு 38-ல் சேர்க்கப்பட்டது. (அடிப்படை உரிமைகள் என்ற அத்தியாயத்தில் சொத்துரிமை, சிலசட்டங் களுக்கு விதி விலக்கு, பிரிவு 31 C ஆகிய தலைப்புகளின் கீழும் காண்க).

அத்துடன் (1) நெறிமுறைக் கோட்பாடுகளில் ஏதேனும் ஒன்றுக்கோ, அனைத்திற்குமோ செயல்வடிவம் கொடுக்கும் எந்தச் சட்டமானாலும், பிரிவுகள் 14, 19 அல்லது 31 ஆகியவற்றில் இடம்பெற்றுள்ள அடிப்படை உரிமைகளுக்கு ஒத்திசையாமல் இருந்தாலும்கூட, அதனைச்செல்லாததாக்க முடியாது என்று பிரிவு 31C திருத்தப்பட்டுள்ளது. (2) தேசவிரோத நடவடிக்கைகளையோ, அமைப்புகளையோ, தடைசெய்ய அதிகாரமளிக்கும் எந்தச் சட்டமானாலும் அது, பிரிவு 14, 19, 31 ஆகியவற்றில் இடம் பெற்றுள்ள அடிப்படை உரிமைகளுக்கு ஒத்திசையாமல் இருந்தாலும்கூட, செல்லாததாகாது என்று வகை செய்ய 31D என்ற புதிய பிரிவு சேர்க்கப்பட்டுள்ளது.

## முகப்புரை, அடிப்படை உரிமைகள், நெறிமுறைக் கோட்பாடுகள் ஆகியவற்றுக்கு இடையேயான தொடர்பு

முகப்புரை, அடிப்படை உரிமைகள், நெறிமுறைக் கோட்பாடுகள் ஆகிய அனைத்துமே அரசியலமைப்பு என்னும் ஒரே மண்டபத்தின் ஒருங்கிணைவான அங்கங்கள் என்பதை நாம் நினைவில் இருத்த வேண்டும். மூன்று பகுதிகளுமே சமஅளவுக்கு முக்கியத்துவம் வாய்ந்தவை; அவற்றை எப்போதும் இணைத்தே படிக்க வேண்டும்.

இம்மூன்று தலைப்புகளில் சொல்லப்பட்டுள்ள கூறுகள் அனைத்துமே சமத்துவ சமுதாயத்தை உருவாக்குவதையும், சமூக-பொருளாதார நீதி தழைப்பதையும் வலியுறுத்துகின்றன. சட்டங்களை இயற்றி நிர்வகிப்பதற்கு அடிப்படையான வழிகாட்டி நெறிகளாக நெறிமுறைக் கோட்பாடுகள் விளங்கினாலும், நீதிமன்றங்களின் வாயிலாக அவற்றைச் செயலுறுத்த முடியாது. நமது அரசியலமைப்பை உருவாக்கியவர்கள் சுதந்திரப்போராட்ட வீரர்கள் என்ற கண்ணோட்டத்தில், அடைய வேண்டிய இலட்சியமாக இந்த நெறிமுறைக்கோட்பாடுகளைக் கருதிய போதும், யதார்த்த வாதிகள் என்ற கண்ணோட்டத்தில், உடனடியாக இவை அனைத்தையும் அடைந்து விட முடியாது என்று உணர்ந்ததால் நீதிமன்றத்தின் வாயிலாகச் செயலுறுத்த முடியாத நெறிமுறைக் கோட்பாடுகளை உருவாக்கினர் எனலாம். எனவே அடிப்படை உரிமைகளும், நெறிமுறைக் கோட்பாடுகளும் சேர்ந்து நமது அரசியலமைப்பின் ஆன்மாவாகத் திகழ்கின்றன எனலாம்.

ஆகவே, உரிமைகளுக்கும் கடமைகளுக்கும் இடையே, அதாவது அடிப்படை உரிமைகளுக்கும் நெறிமுறைக் கோட்பாடுகளுக்கும் இடையே, எவ்விதமான பகுப்பும் கிடையாது என்று தெளிவாகப் புலனாகிறது. அவை இரண்டும் ஒன்றினை ஒன்று முழுமை செய்வனவாகவும், ஒன்றுக்கு ஒன்று துணை செய்வனவாகவும் அமைந்துள்ளன (கேசவானந்த பாரதி எதிர் கேரள அரசு AIR 1973 SC 146). அரசும் சட்டமியற்றும் துறையும் செய்யக் கூடாதவைகளை அடிப்படை உரிமைகள் சுட்டுகின்றன என்றால், செய்ய வேண்டுவனவாக நெறிமுறைக் கோட்பாடுகள் திகழ்கின்றன எனலாம். இரண்டுக்கும் இடையே முரண்பாடு ஏதுமில்லை. அரசியலமைப்பின் முதலாவது திருத்த மசோதாவை நாடாளுமன்றத் தெரிவுக்குழுவின் பரிசிலனைக்கு அனுப்ப வேண்டுமென்று முன்மொழிந்து ஜவகர்லால் நேரு பேசும்போது, அடிப்படை உரிமைகளுக்கும், நெறிமுறைக் கோட்பாடுகளுக்கும் இடையே முரண்பாடு தோன்ற வாய்ப்புள்ளது என்று கூறி, அந்தச்சிரமத்தை இவ்வாறு விளக்கினார்:

> "நம் முன் வந்துள்ள உண்மையான இக்கட்டு இதுதான்: அரசுக் கொள்கையின் நெறிமுறைக் கோட்பாடுகள் சிலவற்றை அரசியலமைப்புக் கூறுகிறது. நீண்ட விவாதங்களுக்குப் பின்னர் அவற்றை நாம் ஏற்றுக் கொண்டுள்ளோம். நாம் பயணிக்க வேண்டிய பாதையை அவை குறிப்பிடுகின்றன. சில அடிப்படை உரிமைகளையும் அரசியலமைப்புக் கூறுகிறது. இரண்டுமே முக்கியமானவை. நிச்சயமான ஓர் இலக்கை நோக்கிய இயக்காற்றல் மிக்க முன்னேற்றமாக அரசுக் கொள்கையின் நெறிமுறைக்கோட்பாடுகள் விளங்குகின்றன. அடிப்படை

உரிமைகளோ, நிலையாக உள்ள சிலவற்றை - ஏற்கெனவே உள்ள சில உரிமைகளை - பேணிக்காக்க வேண்டும் என்பதைக் குறிக்கின்றன. இரண்டுமே சரியானவைதான். எனினும் சில சமயங்களில் இயக்காற்றல் மிக்க முன்னேற்றமும், நிலையாக நிற்பவையும் ஒன்றுக் கொன்று பொருந்தாதவையாகப் போய்விடும் வாய்ப்புள்ளது.

குறிப்பிட்ட இலக்கை நோக்கிய இயக்காற்றல் மிக்க முன்னேற்றம் என்றால், அதில் சில மாற்றங்கள் ஏற்படுவது நிச்சயம். அதுவே முன்னேற்றத்தின் சாரமாகும். எனினும் முன்னேற்றத்தின்போது ஏற்கெனவே உள்ள சில தொடர்புகள் மாற்றப்படலாம்; பாதிக்கப் படலாம். சொல்லப் போனால், ஏற்கெனவே நிலைபெற்றுவிட்ட தொடர்புகளையே அவை பாதித்துவிடும். அடிப்படை உரிமைகளை எடுத்துக் கொண்டால் அவை ஏற்கெனவே நிலைபெற்றுவிட்ட சில தொடர்புகளை நேரிடையாகப் பேணிக்காக்கும் நோக்கிலானவை. இரண்டு அணுகுமுறைகளிலும் உட்கிடக்கையாக அல்லாமல் வெளிப் படையாகவே நிச்சயமாக முரண்பாடு தோன்றும் என்று நான் திட்டவட்டமாகக் கூறுவேன். இந்த விஷயங்கள் குறித்து நம்நாட்டின் நீதிமன்றங்கள விசாரணை நடத்தும்போது நெறிமுறைக் கோட்பாடுகளைக் காட்டிலும் அடிப்படை உரிமைகளுக்கே முக்கியத் துவம் அளிக்கும். எனவே, ஓர் இலக்கை நோக்கி படிப்படியாக முன்னேறும் இயல்புடைய அரசியலமைப்பை, இயக்க ஆற்றல் அம்சத்தைக் காட்டிலும் நிலை பெற்றுவிட்ட அம்சத்திற்கு முக்கியத் துவம் அளிப்பதன் மூலம் முட்டுக் கட்டை போட்டுவிடலாம். அதனைத் தீர்ப்பதற்கு நாம் ஒரு வழியைக் கண்டறிந்தாக வேண்டும்.

-தனிநபர் சுதந்திரத்தைப் பாதுகாப்பதற்காக தனிநபர் அல்லது ஒரு பிரிவின் ஏற்றத்தாழ்வையும் பாதுகாக்கின்றோம் என்றால் ஏற்றத் தாழ்வுகள் மிகச் சொற்பமாகவும், சமத்துவம் மிக அதிக அளவிலும் இருக்கின்றவாறு படிப்படியாக முன்னேறுகின்ற, அல்லது வேறு வகையாகச் சொல்வதானால், மிகத் துரிதமாக முன்னேறுகின்ற நிலையில் நமது செயல்பாடுகள் அமைய வேண்டுமென்று விழைகின்ற நெறிமுறைக் கோட்பாடுகளுடன் நாம் முரண்படுகிறோம் என்றுதான் பொருள். தனிநபர் சுதந்திரத்தைப் பேணிக்காக்க வேண்டும் என்னும் கோரிக்கை, ஏற்கெனவே உள்ள ஏற்றத்தாழ்வுகள் தொடர்ந்து நீடிக்க வேண்டும் என்ற கோரிக்கையாகப் பொருள்கொள்ளப்பட்டால் நாம் இக்கட்டில் மாட்டிக் கொள்ள நேரிடும். நாம் செயலற்றவர்களாகி, முன்னேற்றத்தை நோக்கி நடைபோட முடியாமலும், மாற்றத்தை உருவாக்க முடியாமலும், நாம் அனைவரும் அடையவேண்டுமென்று இலட்சியமாகக் கொண்டுள்ள சமத்துவ சமுதாயத்தை அடைய முடியாமலும் போய்விடும்."

'நாட்டின் பொருளாதார-சமூக நலக் கொள்கைகளை வரையறுத்துச் செயல்படுத்தும் பொறுப்பு நாடாளுமன்றத்திடம் இருக்க வேண்டுமே ஒழிய, நீதிமன்றங்களிடம் இருக்கக்கூடாது' என்று அரசியலமைப்பின் நான்காவது திருத்த மசோதாவின்மீது மக்களவையில் பேசும்போது நேரு குறிப்பிட்டார். இதுவரை நீதிமன்றங்கள் வழங்கிய தீர்ப்புகளைப் பார்க்கும் போது, அடிப்படை உரிமைகளுக்கும், நெறிமுறைக் கோட்பாடுகளுக்கும் இடையே உள்ளார்ந்த முரண்பாடுகள் இருப்பதாகவே கூறியுள்ளன. எனவே

அந்த முரண்பாடுகளைக் களைந்து, 'நெறிமுறைக் கோட்பாடுகளுக்குக் கீழான நிலையில் அடிப்படை உரிமைகள் அமையுமாறு' ஆக்க வேண்டியது நாடாளுமன்றத்தின் கடமையாகும்.

பின்னர் 1971ஆம் ஆண்டில் ஒரு வழக்கில் தீர்ப்பளிக்கும்போது உச்சநீதிமன்றம் இவ்வாறு குறிப்பிட்டது:

> "வியாபார உரிமை என்றால் சுரண்டலுக்கு உரிமை என பொருளாகாது. அரசியல் சட்ட வகையுரைகள் முன்னேற்றத்திற்குத் தடைக்கற்களாக அமைக்கப்படவில்லை. அரசியலமைப்பின் முகப்புரையில் உத்தேசிக்கப் பட்டுள்ள சமுதாய அமைப்பை நோக்கி முறைப்படி முன்னேறு வதற்கான திட்டத்தையே அவை அளிக்கின்றன. சமூக- பொருளாதார- அரசியல் அடிமைத்தனத்துக்கு அவை அனுமதி அளிக்கவில்லை. நமது அரசியலமைப்பில் உரிமைகள் மட்டுமே உள்ளன, கடமைகள் ஏதுமில்லை என்று எண்ணுவது பெருந்தவறாகும். அரசியலமைப்பின் மூன்றாவது பகுதியில் அளிக்கப்பட்டுள்ள உரிமைகள் நாட்டை ஆட்சி புரிய அடிப்படையானவை என்றால், ஒட்டுமொத்தமாகப் பார்க்கும் போது, மூன்றாவது பகுதியில் உள்ள வகையுரைகளுக்கும் நான்காவது பகுதியில் உள்ள வகையுரைகளுக்கும் எந்தவிதமான முரண்பாடும் இருப்பதாகத் தெரியவில்லை. அவை ஒன்றுக்கொன்று முழுமை செய்வனவாகவும், துணைசெய்வனவாகவும் அமைந்துள்ளன. நான்காவது பகுதியில் உள்ள வகையுரைகள், அரசும் சட்டமன்றமும் குடிமக்கள் மீது பல கடமைகளைச் சுமத்த வகை செய்கின்றன. அவை தெரிந்தே மிகவும் நெகிழ்ச்சியுடையவையாக அமைக்கப்பட்டுள்ளன. ஏனெனில், நெறிமுறைக் கோட்பாடுகள் எந்த அளவிற்கு அமலாக்கப் பட்டுள்ளளன என்பதைப் பொறுத்தே மக்கள் மீது சுமத்தப்படும் கடமைகளும் அமையும். நமது தேசிய வாழ்வின் அனைத்து அமைப்புகளையும் சமூக, பொருளாதார, அரசியல் நீதி ஊடுருவிப் பரவுகின்ற நலச் சமுதாயம் ஒன்றை உருவாக்க வேண்டும் என்றே அரசியலமைப்பு உரிமைக்கட்டளை இட்டிருக்கிறது. நமது குடிமக்களில் மிகவும் கீழ்மட்டத்தில் இருப்பவர்களின் குறைந்தபட்சத் தேவைகளைக் கூட நாம் நிறைவேற்றாவிட்டால் அரசியலமைப்பு தோற்றுவித்த நம்பிக்கைகளும் நோக்கங்களும் பொய்த்துப்போய்விடும் (சந்திராபவன் போர்டிங் & லாட்ஜிங் பெங்களூர் எதிர் மைசூர் அரசு மற்றும் ஏனையோர் 1970 2SCR 600).

பின்னர் கேசவானந்த பாரதி வழக்கில் நீதிபதி மாத்யூ கீழ்க்காணும் முக்கியமான கருத்துக்களை வெளியிட்டார்:

> "அடிப்படை உரிமைகளுக்கு நிலையான உள்ளடக்கம் ஏதுமில்லை; அவற்றில் பெரும்பாலானவை காலியான பாத்திரங்கள் போன்றவையே. ஒவ்வொரு தலைமுறையும் தனது அனுபவத்தின் அடிப்படையில் அவற்றை நிரப்பிக் கொள்ள வேண்டும். அரசியலமைப்பை உருவாக்கிய வர்கள் எண்ணிப் பார்த்தே இராத அளவுக்கு இந்த உரிமைகளைக் கட்டுப்படுத்தவும், ஒடுக்கவும், குறைக்கவும்; அடியோடு நீக்கிவிடவும்கூட அவசியமான சூழ்நிலைகள் தோன்றலாம். அந்த உரிமைகளுக்கு முன்னுரிமை தரப்படவேண்டும் அல்லது அவை மேலானதாகக் கருதப்பட வேண்டும் என்ற கோரிக்கை நான்காவது பகுதியில் இடம் பெற்றுள்ள தார்மீகக் கோரிக்கைகளால் நாட்டு வரலாற்றின் ஒரு

குறிப்பிட்ட கட்டத்தில் அமுக்கப்பட்டுவிடலாம். வரலாற்றின் ஒரு குறிப்பிட்ட கட்டத்தில், நான்காவது பகுதியில் இடம்பெற்றுள்ள தார்மீகக் கோரிக்கைக்கையைவிட ஒரு குறிப்பிட்ட அடிப்படை உரிமைக்கு முன்னுரிமை அளிக்கப்பட வேண்டுமா, அல்லது அடிப்படை உரிமை பின்னுக்குத் தள்ளப்பட வேண்டுமா, என்பதை அந்தந்தத் தலைமுறை தனது அனுபவத்தின் அடிப்படையிலும் மாண்புகளின் அடிப்படையிலும் தீர்மானித்துக் கொள்ளட்டும் என்று நாம் விட்டுவிட வேண்டும். அரசியலமைப்பின் நான்காவது பகுதியில் இடம் பெற்றுள்ள தார்மீகக் கோரிக்கைகளுக்கு முன்னுரிமை அளிக்கும் நோக்கில் அடிப்படை உரிமைகளை ஒடுக்குகின்ற வகையிலோ, அடியோடு பறிக்கின்ற வகையிலோ அரசியலமைப்பை நாடாளுமன்றம் திருத்துமானால், அரசியலமைப்பை உருவாக்கியவர்கள் இரண்டாம் பட்சமாகக் கருதியது ஆதிக்கம் பெறுகிறது என்ற காரணத்திற்காக, அந்தத் திருத்தம் செல்லாது என்று நீதிமன்றம் தீர்ப்பளிக்கக்கூடாது அரசியலமைப்பின் மூன்றாவது பகுதியில் உத்தரவாதம் அளிக்கப் பட்டுள்ள அடிப்படை உரிமைகளைக் காட்டிலும் நான்காவது பகுதியில் இடம்பெற்றுள்ள தார்மீகக் கோரிக்கைகளுக்கு முன்னுரிமை அளிக்கின்ற காரணத்திற்காக அரசியலமைப்புத் திருத்தச் சட்டத்தை நீதிப் புனராய்வு செய்வது அனுமதிக்க முடியாததாகும் (1973(4)SCC 225).

'உடன்பாட்டு உரிமைகள்' என்றும் 'எதிர்மறை உரிமைகள்' என்றும் சொல்லப்படுகின்றவற்றுக்கு இடையேயான வேறுபாடு சில சமயங்களில் தேவையாகிறது. பொதுவாகச் சொல்வதானால், தனிநபர் சுதந்திரங்கள் பற்றியும், அவற்றை எந்த அளவுக்கு அரசாங்கம் கட்டுப்படுத்த முடியும் என்பது பற்றியும் மூன்றாவது பகுதியில் சொல்லப்பட்டுள்ளது; சமூக-பொருளாதார நீதி என்ற இலக்கை எட்ட அரசு மேற்கொள்ள வேண்டிய கடமைகளைப்பற்றி நான்காவது பிரிவு கூறுகிறது எனலாம். அடிப்படை உரிமைகளிலேகூட செல்வாக்கு நிறைந்த மக்களின் ஆக்கிரமிப்பில் இருந்து சமுதாயத்தின் நலனையும் ஏழைமக்களின் நலனையும் காப்பதற்காக, சில உடன்பாட்டுக் கட்டுப்பாடுகள் உள்ளன. அவற்றின்படி பிரிவு 17, தீண்டாமையை ஒழிப்பதுடன், தீண்டாமையைப் பின்பற்றுவதையும் சட்டப்படி தண்டனைக்குரிய குற்றமாக்குகிறது. எந்த ஒரு குடிமகனையும் அவனது சாதி, மதம், இனம், பால், பிறப்பிடம் போன்ற காரணங்களுக்காக கடைகள், கிணறுகள், சாலைகள், உணவகங்கள் போன்ற பொது இடங்களைப் பயன்படுத்துவதில பாரபட்சமாக நடத்தக்கூடாது என்று பிரிவு 15 கூறுகிறது. அதேபோல இன்னொரு பெரும் சமூகக் கொடுமையான கட்டாய வேலையை பிரிவு23 தடை செய்கிறது. குடிமக்களுக்கு வழங்கப் பட்டுள்ள அடிப்பண்ட உரிமைகள் பெரும்பான்மையோரின் நலனுக்கு எதிராக ஒரு சிலரே சுதந்திரம் அனுபவிப்பதாக சீர்கெட்டுப் போய்விடக் கூடாது என்பதற்காகவே இந்த ஏற்பாடுகள் அனைத்தும் செய்யப்பட்டுள்ளன.

# 10

# அடிப்படைக் கடமைகள்

## (பகுதி IVA, பிரிவு 51A)

அவசரநிலைப் பிரகடனம் அமலில் இருந்தபோது, நாற்பத்திரண்டாவது திருத்தச் சட்டம் 1976-ன் வாயிலாக, குடிமக்களுக்குச் சில கடமைகளை விதித்த பிரிவு IV A நமது அரசியல் சட்டத்தில் சேர்க்கப்பட்டது. அரசிய லமைப்பின் முக்கியமான பகுதிகளில் ஒன்றான இப்பகுதி பெரிதும் புறக்கணிக்கப்பட்ட பகுதியாகவும் விளங்குகிறது.

தனிநபர்களின் உரிமைகளுக்காக அடிப்படை உரிமைகள் பகுதியும், அரசின் கடமைகளுக்காக நெறிமுறைக் கோட்பாடுகள் பகுதியும் இருந்த போதிலும், 1976ஆம் ஆண்டுவரை தனி நபர்கள் மீது கடமைகளைச் சுமத்துகின்ற வகையுரை ஏதும் நமது அரசியலமைப்பில் இடம் பெறவில்லை. பன்னெடுங் காலமாகவே இந்திய மரபிலும் சிந்தனைப் போக்கிலும் கடமைகள் வலியுறுத்தப்பட்டு வந்த போதிலும், அரசியலமைப்பில் அவை இடம் பெற்றிருக்கவில்லை ஒவ்வோர் உரிமைக்கும் இணையான கடமையும் உள்ளது. கடமை என்பது உரிமையின் பிரித்தறிய முடியாத பகுதியாகும் உரிமையும் கடமையும் ஒரு நாணயத்தின் இரண்டு பக்கங்கள். ஒருவருடைய கடமையே இன்னொருவருடைய உரிமையாகும், அதேபோல் ஒருவரின் உரிமை இன்னொருவர் செய்ய வேண்டிய கடமையாகும் மக்கள் அனைவருக்கும் உயிர் வாழ்வதற்கு உரிமை உண்டு என்றால், மனித உயிரை மதிக்க வேண்டும் என்றும், மற்றவருக்குத் தீங்கு இழைக்கக் கூடாது என்றும் எல்லார் மீதும் ஒரு கடமையும் சுமத்தப்பட்டுள்ளது சர்வதேச மனித உரிமைப் பிரகடனம் பற்றி காந்தியடிகளிடம் கருத்துக் கேட்டபோது அவர் சொன்னார்:

> கடமையைச் ஒழுங்காகச் செய்வதன்மூலம் உருவாகும் எல்லா உரிமைகளையும் ஏற்று மதிக்க வேண்டும் என்று. படிப்பறிவு இல்லாவிட்டாலும் அறிவாளியான எனது அன்னையிடமிருந்து நான் கற்றுக் கொண்டேன். உலகின் குடிமகன் என்ற நமது கடமையைச் செய்யும் போதுதான் உயிர் வாழ்வதற்கான உரிமையே நமக்குக் கிடைக்கிறது. இந்த அடிப்படையான வாசகத்தில் இருந்தே, ஆண்கள், பெண்கள் அனைவரின் கடமைகளையும் வரையறுத்து, எந்த உரிமையானாலும், முதலில் கடமையைச் செய்வதன் மூலமே அது உருவாகும் என்று எளிதாகக் கூறிவிட முடியும். பிற உரிமைகள் யாவும் போராடிப்

பெறும் தகுதியற்ற அடாவடியான உரிமைகள் என்று புலப்படுத்தி விட முடியும்."

குடிமக்கள் அனைவருக்கும் பொருளாதார, சமூகப் பொறுப்புகள் உண்டு என காந்தியடிகள் வலியுறுத்தினார். இந்தக் கருத்தின் அடிப் படையிலேயே, அரசியலமைப்பின் நாற்பத்திரண்டாவது திருத்தச் சட்டம் 1976-ன் மூலமாக நமது 'அடிப்படைக் கடமைகள்' என்ற பகுதி IVA சேர்க்கப்பட்டுள்ளது. அரசியலமைப்பின் மூலத்தில் அடிப்படை உரிமைகள் என்ற பகுதி III மற்றும் நெறிமுறைக் கோட்பாடுகள் என்ற பகுதி IV ஆகியவற்றை அடுத்து இப்புதிய பகுதி சேர்க்கப்பட்டது. புதிய பகுதியில் உள்ள ஒரே பிரிவான 51A கீழ்க்கண்டவாறு கூறுகிறது:

(அ) அரசியலமைப்புக்குக் கீழ்ப்படிந்து, அதன் நோக்கங்களையும், ஸ்தாபனங்களையும் மதிப்பதுடன் தேசியக் கொடியையும் தேசிய கீதத்தையும் மதித்து நடத்தல்;

(ஆ) நமது சுதந்திரப் போராட்டத்திற்குத் தூண்டுகோலாக அமைந்த உன்னதமான நோக்கங்களைப் பேணிக்காத்து பின்பற்றி நடத்தல்;

(இ) இந்தியாவின் இறையாண்மையையும், ஒற்றுமையையும், ஒருமைப் பாட்டையும் பேணிக்காத்தல்;

(ஈ) நாட்டைக்காப்பதுடன், தேவையானபோது நாட்டு நலப்பணி செய்தல்;

(உ) சமய, மொழி, வட்டார, பிரிவினை வேறுபாடுகளை எல்லாம் கடந்து இந்திய மக்கள் அனைவரிடையேயும் சகோதர உணர்வையும் நல்லிணக்கத்தையும் வளர்த்தல்; பெண்களின் கண்ணியத்தைக் குறைக்கின்ற செயல்களை விட்டொழித்தல்;

(ஊ) பல்வேறு கூறுகளுடைய நமது பண்பாட்டின் வளமான பாரம் பரியத்தை மதித்துப் போற்றிக் காத்தல்;

(எ) காடுகள், ஏரிகள், ஆறுகள், வனவிலங்குகள் உள்ளிட்ட இயற்கைச் சூழலை மேம்படுத்திப் பாதுகாத்தல; உயிரினங்களிடையே பரிவுடன் இருத்தல்;

(ஏ) அறிவியல் மனப்பாங்கு, மனிதாபிமானம், ஆராய்ச்சியுணர்வு, சீர்திருத்த மனப்பான்மை ஆகியவற்றை வளர்த்தல்;

(ஐ) பொதுச் சொத்தைப் பாதுகாத்தல்; வன்முறையை விட்டொழித்தல்;

(ஒ) தொடர்ச்சியாக நம்நாடு தன்னுடைய முயற்சியில் பல முன்னேற்றங் களைக் காணவும், சாதனைகளைப் படைக்கவும் தனிமனித மற்றும் கூட்டு முயற்சிகள் அனைத்திலும் திறமையை வளர்க்கப் பாடுபடுதல்;

இவையாவும் இந்தியக் குடிமக்கள் ஒவ்வொருவரின் கடமையாகும்.

நெறிமுறைக் கோட்பாடுகளில் உள்ள அரசின் கடமைகளைப் போலவே கடமை நிறைவேற்றத்தை உறுதிப்படுத்தவோ, கடமை மீறலைத் தண்டிக்கவோ அரசியலமைப்பில் வகையேதும் செய்யப்படவில்லை எனினும் ஒரு சட்டத்திற்கு ஒன்றுக்கு மேற்பட்ட விதமாகப் பொருளுரைக்க நேரும்போது நீதிமன்றங்கள் இந்தக் கடமைகளைக் கருத்தில் கொள்ளலாம்.

குறிப்பாக, சுற்றுச் சூழலைப் பாதுகாப்பது பற்றிய விதி 51A(g) நீதிமன்றங்களின் முன் வழக்குகளாக வந்துள்ளது. உத்தரப்பிரதேச மாநிலத்தின் சில பகுதிகளில் கல்லுடைக்கும் பணிகளை நிறுத்த வேண்டும் என்று உச்சநீதிமன்றம் வாய்மொழி ஆணை பிறப்பித்திருக்கிறது. தகராறுக்கு உட்பட்ட சில பகுதிகளை பாதுகாக்கப்பட்ட வனப்பகுதிகள் என அறிவிப்பது சம்பந்தமாகவும் ஆணைகள் பிறப்பிக்கப்பட்டுள்ளன. (மும்பாய் காம்கர் சபா எதிர் அப்துல்பாய் AIR 1976 SC 1455; ஊரக வழக்குத் தொடுப்பு மையம் எதிர் உ.பி. அரசு AIR 1987 SC 2426; சச்சிதானந்த் எதிர் மேற்கு வங்க அரசு AIR 1987 SC 1109; பன்வாசி சேவா ஆசிரமம் எதிர் உ.பி. அரசு AIR 1987 SC 374).

மொத்தத்தில் பார்க்கும்போது, பொதுக்கருத்தை உருவாக்கி குடிமக்களிடையே குடியுரிமையின் மதிப்பினையும் கடமைகளையும் பற்றி எடுத்துரைத்து, அரசியலமைப்பு விதித்துள்ள நாட்டுக்கு ஆற்றவேண்டிய கடமைகளைச் செய்து, சமுதாயத்திற்குத் தான் பட்டுள்ள கடனைத் தீர்ப்பதில் ஒவ்வொரு குடிமகனும் பெருமிதம் கொள்கின்ற சூழ்நிலையையும் விழிப்புணர்வையும் உருவாக்குவது ஒன்றே அடிப்படைக் கடமைகளை நிறைவேற்றுவதற்குரிய வழியாகத் தோன்றுகிறது.

# 11

# ஒன்றிய நிர்வாக அமைப்பு

## (பகுதி V, அத்தியாயம் 1, பிரிவுகள் 52-78)

மக்களவையின் உறுப்பினர்களாகிய மக்கள் பிரதிநிதிகளுக்கு அமைச்சர்கள் பதிலளிக்கும் பொறுப்புடையதான நாடாளுமன்ற மக்களாட்சி முறையை, அரசியலமைப்பை உருவாக்கியவர்கள் நமக்குஅளித்துச் சென்றிருக்கின்றனர். பிரிட்டிஷ் ஆட்சிமுறையில் பரம்பரைவழி மன்னரே நாட்டின் தலைவராவார். ஆனால் காலப்போக்கில் பல நூற்றாண்டுகளாகவே மன்னருக்கும் நாடாளுமன்றத்திற்கும் நல்லுறவு வளர்ந்ததை அடுத்து, உண்மையான அரசியல் அதிகாரமும் நிர்வாக அதிகாரமும் அமைச்சரவை யிடமே இருக்க, மன்னர் அரசியலமைப்பு ரீதியாக, பெயரளவில் வெறும் சம்பிரதாயத் தலைவராக ஆகிவிட்டார். இந்தியாவில் மரபு வழிவந்த மன்னர் எவரும் இல்லை. அத்துடன் நம்நாடு இங்கிலாந்தைப் போன்ற ஒரு சிறிய ஓரடுக்கு அரசமைப்புடைய நாடும் அல்ல. அமெரிக்க ஐக்கிய நாடுகளைப்போல் மாநிலங்களின் ஒன்றியமாக, தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவரைக் கொண்ட பெரும்குடியரசாக நமது நாடு திகழ்கிறது. ஆகவே, ஒருபுறம் நாடாளுமன்ற ஆட்சிமுறையும், மறுபுறம் தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவரை உடைய குடியரசும் கொண்ட தனிச்சிறப்பான இயல்புடன் நாம் திகழ்கிறோம்.

நாடாளுமன்றம் சட்டம் இயற்றக் கூடிய விஷயங்களிலும், சர்வதேச ஒப்பந்தம் அல்லது உடன்படிக்கையின் மூலமாக இந்திய அரசாங்கத்திற்கு அதிகாரம் கிடைக்கும் விஷயங்களிலும் ஒன்றியம் தனது நிர்வாக அதிகாரங் களைச் செயல்படுத்தும் என்று 73ஆவது பிரிவு கூறுகிறது.

## குடியரசுத் தலைவர்

### குடியரசுத் தலைவரின் நிலையும் அதிகாரங்களும்

இந்தியக் குடியரசின் தலைவராக ஒருவர் இருப்பார் என்று 52ஆவது பிரிவு கூறுகிறது. நமது அரசியலமைப்பில் குடியரசுத் தலைவருக்கு உரிய இடம் மிகவும் பெருமையும், மதிப்பும், கண்ணியமும் உடையதாகும். அவரே நாட்டின் தலைவர். பெயரளவுக்கு மட்டுமே அவர் தலைவராக இருக்கிறார்

என்று சொல்வது மிகவும் தவறானதாகும். அரசியல் நிர்ணயசபையில் நேரு குறிப்பிட்டதைப்போல், இந்தியக் குடியரசுத் தலைவரை வெறும் பொம்மைத் தலைவராக நமது அரசியலமைப்பு ஆக்கவில்லை. ஒன்றிய நிர்வாக அதிகாரங்கள் அனைத்தும் அவரிடமே உள்ளன. அந்த அதிகாரங்களை அரசியலமைப்பின் சட்ட திட்டங்களுக்கு உட்பட்டு அவரே நேரடியாகவோ, தனக்குக் கீழ்ப்படிந்த நிலையில் உள்ள அதிகாரிகள் மூலமாகவோ செயல்படுத்துகிறார். கீழ்ப்படிந்த நிலையில் உள்ள அதிகாரிகள் எனில் அதில் அமைச்சர்களும் அடங்குவர் (பேரரசர் எதிர் ஸ்ரீநாத், AIR 1945 PC 163). இந்திய அரசின் அனைத்து நிர்வாகச் செயல்களும் குடியரசுத் தலைவரின் பெயராலேயே மேற்கொள்ளப்படுகின்றன. முப்படைகளின் தலைமை ஆணை அதிகாரமும் அவரிடமே உள்ளது. அந்த அதிகாரத்தைச் சட்டம் கூறுகின்றபடி அவர் செயல்படுத்துவார் (பிரிவுகள் 53 & 77).

குடியரசுத் தலைவரே பிரதமரை நியமிக்கிறார். பிரதமரின் ஆலோசனையின் பேரில் ஏனைய அமைச்சர்களையும் நியமிக்கிறார். குடியரசுத் தலைவர் விரும்புகின்றவரை அமைச்சர்கள் அனைவரும் பதவியில் இருக்கலாம் (பிரிவு 75).

நாடாளுமன்றத்தின் இரண்டு அவைகளுடன், ஒருங்கிணைந்த ஓர் அங்கமாகக் குடியரசுத் தலைவரும் திகழ்கிறார். நாடாளுமன்றத்தின் இரண்டு அவைகளையும் கூடுமாறு அழைப்பதும், அவற்றின் கூட்டத்தொடர்களை முடித்துவைப்பதும், மக்களவையைக் கலைப்பதும் அவரது அதிகாரத்திற்கு உட்பட்டவையே (பிரிவு 85). ஒவ்வோராண்டின் முதலாவது கூட்டத் தொடரின் தொடக்கத்திலும், ஒவ்வொரு பொதுத் தேர்தலுக்குப் பின்னரும் நாடாளுமன்றத்தின் இரண்டு அவைகளின் உறுப்பினர்களும் ஒருசேரக் கூடியிருக்கும் கூட்டத்தில் அவர் உரையாற்றுகிறார். வேறுவகையாகக் கூட, குடியரசுத் தலைவர் நாடாளுமன்றத்தின் இரண்டு அவைகளுக்கும் தன் செய்தியை அனுப்பலாம்; அல்லது ஏதேனும் ஒரு அவையிலோ, இரண்டு அவைகளிலுமோ உரையாற்றலாம். நாடாளுமன்றத்தின் இரண்டு அவைகளிலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட மசோதாக்கள் அனைத்தும், சட்டமாக நடைமுறைக்கு வருமுன்னர் குடியரசுத் தலைவரின் ஒப்புதலைப் பெற்றாக வேண்டும். சிலவகை மசோதாக்கள் (எ.டு - நிதிமசோதாக்கள்) குடியரசுத் தலைவரால் பரிந்துரைக்கப்பட்ட பின்னரே நாடாளுமன்றத்தின் அவைகளில் அறிமுகம் செய்யப்பட வேண்டும். (பிரிவுகள் 79, 85, 86, 87, 111, 117). ஒன்பதாவது மக்களவையில், நாடாளுமன்ற உறுப்பினர்கள் ஓராண்டுக்காலம் மட்டுமே பதவியில் இருந்தாலும் அவர்களுக்கு ஓய்வூதியம் வழங்க வகை செய்யும் திருத்த மசோதா குடியரசுத்தலைவரின் பரிந்துரை இல்லாமலேயே அறிமுகம் செய்யப்பட்டு ஏற்றுக் கொள்ளப்பட்ட போதிலும், அப்போதைய குடியரசுத் தலைவர் திரு. ஆர். வெங்கட்ராமன் அந்த மசோதாவுக்கு ஒப்புதல் அளிக்கவில்லை.

நாடாளுமன்றத்தின் இரண்டு அவைகளின் கூட்டத்தொடரும் நடைபெறாத சமயத்தில், உடனடியாகச் செயல்பட வேண்டிய தேவை இருப்பதாக குடியரசுத் தலைவர் கருதினால், அவசரச் சட்டங்களை அவர் பிறப்பிக்கலாம். அந்த அவசரச் சட்டங்கள் நாடாளுமன்றத்தால் இயற்றப்

பட்ட மற்ற சட்டங்களைப் போலவே செயல் வீச்சுக்கொண்டவை (பிரிவு 123). அந்த அவசரச் சட்டங்கள் இடைக்கால அல்லது தற்காலிகச் சட்டங்களாக இருக்கும். அவை தொடர்ந்து அமலில் இருக்க வேண்டு மானால், மீண்டும் நாடாளுமன்றம் கூடும்போது அவசரச் சட்டத்திற்கு ஒப்புதல் அளித்து, அதற்குப் பதிலாக புதிய சட்டத்தை முறைப்படி இயற்ற வேண்டும். நாடாளுமன்றம் சட்டம் இயற்றக்கூடிய விஷயங்களில் மட்டுமே குடியரசுத் தலைவர் அவசரச் சட்டங்களைப் பிறப்பிக்கலாம். அவசரச் சட்டங்களைப் பிறப்பிக்கும் குடியரசுத் தலைவரின் அதிகாரம் சரியானது தான் என்றும், செல்லுபடியாகக் கூடியதே என்றும் உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்திருக்கிறது (ஏ.கே. ராய் எதிர் இந்திய அரசு, AIR 1982 SC 710; ஆர்.கே. கர்க் எதிர் இந்திய அரசு, AIR 1981 SC 2139).

அரசியமைப்பின்படி, நாடாளுமன்றம் தொடர்பாகக் குடியரசுத் தலைவர் மேலும் சில பணிகளைச் செய்யவேண்டும். தேவைகள் ஏற்படும் போது, மக்களவைக்கும் மாநிலங்களவைக்கும் தற்காலிகத் தலைவரை அவரே நியமிக்கிறார். ஒரு மசோதாவைப்பற்றி இரண்டு அவைகளிலும் இறுதி முடிவு எட்டப்படாத சூழ்நிலையில் இரண்டு அவைகளின் கூட்டுக் கூட்டத்தை அவர் அழைக்கலாம். அரசியலமைப்பில் 'வருடாந்திர நிதிநிலை அறிக்கை' என்று குறிப்பிடப்பட்டுள்ள அரசின் பட்ஜெட்டை ஆண்டுதோறும் நாடாளுமன்றத்தில் தாக்கல் செய்ய வேண்டுமென குடியரசுத் தலைவரே ஆணை பிறப்பிக்கிறார். அதுபோலவே, அரசியலமைப்பு ஸ்தாபனங்களாகிய இந்தியாவின் தலைமைக் கணக்குத் தணிக்கையர், நிதிக்கமிஷன். ஒன்றிய அரசுப் பணியாளர் தேர்வாணையம், ஆதி திராவிடர்-பழங்குடியினருக்கான தனி அலுவலர், பின்தங்கிய வகுப்பினர் கமிஷன் ஆகியவற்றின் அறிக்கை களையும் நாடாளுமன்றத்தில் தாக்கல் செய்ய அவரே ஆணையிடுகிறார். ஆங்கிலோ-இந்திய சமூகத்தைச் சேர்ந்தவர்களுக்கு மக்களவையில் உரிய பிரதிநிதித்துவம் இல்லை என்று குடியரசுத்தலைவர் கருதினால், அந்தச் சமூகத்திலிருந்து அதிகபட்சமாக இரண்டு உறுப்பினர்களை அவர் மக்களவைக்கு நியமிக்கலாம். அதுபோலவே இலக்கியம், அறிவியல், கலை, சமூக சேவை போன்ற துறைகளில் பழுத்த அனுபவமும் சிறப்பான அறிவும் கொண்டவர்கள் பன்னிரண்டு பேரை அவர் மாநிலங்களவைக்கு உறுப்பினராக நியமிக்கலாம். நாடாளுமன்றத்தின் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர் எவரேனும் அரசியல் சட்டத்தின் 108ஆவது பிரிவின்படி தகுதி யிழக்கிறாரா என, தேர்தல் ஆணையத்தின் கருத்தைக் கேட்டறிந்து தீர்மானிக்கும் அதிகாரமும் குடியரசுத் தலைவருக்கு உண்டு. இந்த விஷயத்தில் அவரது முடிவே இறுதியானது.

உச்சநீதிமன்ற நீதிபதிகள், உயர்நீதிமன்ற நீதிபதிகள், இந்திய அரசுத் தலைமை வழக்கறிஞர், தலைமைக் கணக்குத் தணிக்கையர், மாநில ஆளுநர்கள் போன்ற, நாட்டின் உயர் பதவிகளுக்கு உரியவர்களை குடியரசுத் தலைவரே நியமிக்கிறார் (பிரிவுகள் 76, 124, 148, 155, 217)

ஒன்றிய சட்டத்திற்கு எதிராகக் குற்றம் இழைத்ததற்காக இராணுவ நீதிமன்றம் அளிக்கும் தண்டனை மற்றும் மரண தண்டனை ஆகியவற்றைச் செயல்படுத்துவதை நிறுத்திவைக்கவோ, தண்டனை அளவைக் குறைக்கவோ,

குற்றவாளியை மன்னித்துத் தண்டனையை முற்றிலுமாக நீக்கிவிடவோ, பிரிவு 72 குடியரசுத் தலைவருக்கு அதிகாரம் அளிக்கிறது. குடியரசுத் தலைவரின் இந்த அதிகாாம் நீதித்துறையுடன் சம்பந்தபபடாதது. மேல் முறையீட்டு நீதிமன்றமாக அவர் செயல்படுவதில்லை. நீதித்துறையில் ஏதேனும் தவறு நேர்ந்துவிட்டால் அதைச் சரிசெய்வதற்காகவே இந்த அதிகாரம் அளிக்கப்பட்டுள்ளது. அத்துடன், மிகவும் கொடிய தண்டனை என்று அவர் கருதினால அதனைக் குறைப்பதற்கும் இது வகை செய்கிறது. எனினும், மனுதாரர் எவரும தன்னுடைய முறையீட்டைக் கேட்குமாறு குடியரசுத் தலைவரைக் கட்டாயப் படுத்த முடியாது. குடியரசுத்தலைவரின் முடிவுகளில் நீதிமன்றங்கள் தலையிட முடியாது. எனினும், சம்பந்தப்பட்ட எல்லா விஷயங்களையும் குடியரசுத் தலைவர் கருத்தில் கொண்டாரா என்று நீதிமன்றங்கள் பரிசீலிக்கலாம். (ஹுகும்சிங் எதிர் பஞ்சாப் அரசு AIR 1975 பஞ்சாப்-ஹரியானா உயர்நீதிமன்றம் 902; ஹர்பன்ஸ் எதிர் உ.பி. அரசு AIR 1982 SC 849; குல்ஜித் எதிர் துணை நிலை ஆளுநர் AIR 1982 SC 774; மாரு எதிர் இந்திய அரசு AIR 1980 SC 2147; கோடசே எதிர் மகாராஷ்டிர அரசு AIR 1961 SC 600; நானாவதி எதிர் பம்பாய் அரசு AIR 1961 SC 122).

இந்தியா முழுவதிலுமோ, ஒரு பகுதியில் மட்டுமோ போர் அல்லது அன்னிய ஆக்கிரமிப்பு அல்லது ஆயுதக் கிளர்ச்சியின் காரணமாக பாதுகாப்புக்கு அச்சுறுத்தல் ஏற்படும் மோசமான நிலை உருவாகியிருக்கிறது என்று குடியரசுத்தலைவருக்கு திருப்தி ஏற்பட்டால் பிரிவு 352-ன் கீழ் இந்தியா முழுமைக்குமோ ஏதேனும் ஒரு பகுதிக்கோ குடியரசுத்தலைவர் அவசரநிலையைப் பிறப்பிக்கலாம். பிரிவு 354-ன்படி, குடியரசுத்தலைவர் வருவாய்ப் பகிர்வினை குறைக்கவோ நிறுத்தவோ செய்யலாம். அவசரநிலைப பிரகடனம் அமலில் இருக்கும்போது, அடிப்படை உரிமைகள் நிலைநாட்டப படுவதைத் தற்காலிகமாக நிறுத்தி வைக்கலாம் (பிரிவு 359). பிரிவு 356-ன் படி, ஏதேனும் ஒரு மாநிலத்தில அரசியலமைப்பு இயந்திரம் செயல்படாத நிலையில் அங்கே குடியரசுத் தலைவரின் ஆட்சியைப் பிரகடனப் படுத்தலாம். நிதி நிலை நெருக்கடியைப் பிறப்பிக்கும் அதிகாரத்தைப் பிரிவு 360 குடியரசுத் தலைவருக்கு வழங்குகிறது. இவ்வாறாக, குடியரசுத் தலைவரின் அவசரநிலை அதிகாரங்கள் மிகவும் கடுமையானவையாகவும், தீவிரமான விளைவை ஏற்படுத்துவனவாகவும் திகழ்கின்றன.

மொத்தத்தில் பார்க்கும்போது (1) குடியரசுத்தலைவர் நேரடியாகவோ, அதிகாரிகள் மூலமாகவோ செயல்படுத்தும் நிர்வாக அதிகாரங்கள் (2) உச்சநீதிமன்ற நீதிபதிகள், உயர்நீதிமன்ற நீதிபதிகள் உள்ளிட்ட நாட்டின் உயர் பதவிகளுக்கு உரியவர்களை நியமிக்கும் அதிகாரம்; (3) போரையும் அமைதியையும் பிரகடனப்படுத்தும் அதிகாரம் உள்ளிட்ட முப்படைகளின் தலைமை ஆணை அதிகாரம்; (4) குற்றவாளிகளை மன்னித்துத் தண்டனையை ரத்து செய்யவும், குறைக்கவும் அதிகாரம் (5) தூதர்களை நியமிப்பது, வெளிநாட்டுத் தூதரகப் பிரதிநிதிகளின் நியமனப்பத்திரங்களை ஏற்றுக் கொள்வது உள்ளிட்ட அதிகாரங்கள்; (6) நாடாளுமன்றத்தின் கூட்டத் தொடரை அழைக்கவும், முடித்துவைக்கவும், மக்களவையைக் கலைக்கவும்,

மசோதாக்களுக்கு ஒப்புதல் அளிக்கவும், அவசரச் சட்டங்களை பிறப்பிக்கவும் உரிய அதிகாரங்கள்; (7) அவசரநிலை அதிகாரங்கள் ஆகியவற்றைக் கொண்டவராகக் குடியரசுத்தலைவர் திகழ்கிறார்.

ஆற்றல் மிக்க இத்தகைய பல அதிகாரங்கள் இருந்தபோதிலும் குடியரசுத் தலைவர், அரசியலமைப்பு ரீதியான நாட்டின் தலைவராக மட்டுமே விளங்குகிறார். நிர்வாக அதிகாரங்களை 'அரசியலமைப்பின் நெறிமுறைக்கு உட்பட்டும்', முப்படைகளின் தலைமை ஆணை அதிகாரத்தை 'சட்டம் விதித்துள்ள முறைப்படியும்'தான் குடியரசுத் தலைவர் பயன்படுத்த வேண்டும் என்று பிரிவு 53 தெளிவுபடுத்துவதை நாம் நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும். (யு.என்.ராவ எதிர் இந்திராகாந்தி AIR 1971 SC 1002; சஞ்சீவ் எதிர் சென்னை அரசு AIR 1970 SC 1102). பிரிவு 60-ன்படி குடியரசுத்தலைவா, "அரசியலமைப்பையும், சட்டத்தையும் பேணி ஆதரவளித்து, பாதுகாப்பதாக" உறுதிகூறி பதவி ஏற்கிறார். குடியரசுத்தலைவர் தமது கடமைகளை நிறைவேற்றும்போது அமைச்சரவையின உதவியுடனும ஆலோசனையுடனும்தான் செயல்பட வேண்டும் என்று பிரிவு 74(1) கூறுகிறது. நாடாளுமன்றத்துக்குக் கட்டுப்பட்ட அமைச்சரவை ஆட்சி முறையை நாம் ஏற்றுக் கொண்டுள்ளதால் குடியரசுத்தலைவர் இவ்வாறு செயல்பட வேண்டியுள்ளது. அரசியலமைப்பின்படி தலைவராக விளங்கும் குடியரசுத்தலைவர் அமைச்சரவையின் ஆலோசனைப்படியே செயல்பட வேண்டும் என்றும, நமது ஆட்சி முறையில் உண்மையான நிர்வாக அதிகாரம் அமைச்சரவையிடம்தான் உள்ளது என்றும் உச்சநீதிமன்றம் பல தீர்ப்புகளில் தெளிவு படுத்தியிருக்கிறது. (சமஷேர் சிங் எதிர் பஞ்சாப் அரசு. AIR 1974 SC 2192; யு.என்.ராவ் எதிர் இந்திராகாந்தி, AIR 1971 SC 1002, பிஷாம்பர் தயாள சந்திரமோகன் எதிர் உ.பி. அரசு AIR 1982 SC 33; ராம் ஜவாயா எதிர் பஞ்சாப்அரசு AIR 1955 SC 544). குடியரசுத்தலைவரின் அதிகாரங்களைச் செயல்படுத்துவதில சாதாரண சூழநிலைக்கும் அவசரநிலைக்கும் எவ்விதமான வேறுபாடும் இருப்பதாக அரசியலமைப்புக் கூறவில்லை. எனவே அவசரநிலையின்போது அதிகாரததை தன் விருப புரிமைப்படி பயன்படுததுவதறகு என்று சிறபபு ஏறபாடு ஏதுமில்லை. சாதாரண சூழ்நிலையில் அமைச்சரவையின் ஆலோசனைபபடி செயல்படுவது போலவே அவசர நிலையிலும குடியரசுத்தலைவர் செயல்பட வேணடுமென பிரிவு 74 தெளிவுபடுத்துகிறது. இறுதியாக இது சம்பநதமான ஐயங்கள் அனைத்திற்கும் முற்றுபபுள்ளி வைப்பதாக அரசியலமைப்பின 44ஆவது திருத்தச் சடடம் நிறைவேற்றப்படடது. அவசரநிலையைப பிரகடனப் படுத்தவேண்டுமென குடியரசுததலைவருக்கு ஆலோசனை அளிப்பதென்று மைய அமைச்சரவை முடிவு செய்துள்ளதாக எழுத்துமூலம தகவல் பெற்ற பின்னரே குடியரசுத் தலைவர் அவசரநிலையைப் பிரகடனப்படுத்தலாம் என்று அத்திருத்தம் தெளிவுபடுத்துகிறது.

அமைச்சரவையின் ஆலோசனையின் பேரிலேயே குடியரசுத்தலைவர் செயல்பட வேண்டுமென்று அரசியலமைப்பு விதிததபோதிலும், சிலவிஷயங்களில் குடியரசுத்தலைவர் தம்முடைய அறிவுககு எட்டிய வகையிலும் அவரே முடிவெடுத்த முறையிலும் செயல்படலாம். அவையாவன:

1. எந்த ஒரு கட்சியும் மக்களவை உறுப்பினர்களின் பெரும்பான்மையான ஆதரவைப் பெற்றிராத சூழ்நிலையில் பிரதமரை நியமனம் செய்வது (பிரிவு75 (1). ஏனெனில் தேர்தலில் தோற்றுப்போன சூழ்நிலையில் அல்லது மக்களவையின் பெரும்பான்மை ஆதரவை இழந்துவிட்ட சூழ்நிலையில் பதவியை இழக்கின்ற பிரதமரின் ஆலோசனையின்பேரில் புதிய பிரதமரை குடியரசுத்தலைவர் நியமிக்க முடியாது.
2. பதவியில் இருக்கும் பிரதமர் திடீரென்று இறந்துவிடும்போது (எடுத்துக் காட்டாக திருமதி இந்திராகாந்தி படுகொலை செய்யப்பட்டபோது) ஆளுமகட்சியைச் சேர்ந்த நாடாளுமன்ற உறுப்பினர்கள் உடனடியாகக் கூடி புதிய பிரதமரைத் தேர்ந்தெடுக்க முடியாத நிலையிலும், கேபினட் அமைச்சர்களிடையே திட்டவட்டமான பணிமூப்புமுறை அமலில் இல்லாத நிலையில் அமைச்சரவைக்கு வெளியில் இருந்து பிரதமர் பதவிக்கு எவரேனும் பரிந்துரைக்கப்படும்போது புதிய பிரதமரை நியமிப்பது.
3. ஓர் அமைச்சரவை மக்களவையில் பெரும்பான்மை ஆதரவை இழந்து விட்ட நிலையில், அல்லது அதற்கு எதிரான நம்பிக்கை இல்லாத தீர்மானம் வெற்றி பெற்றுவிட்ட நிலையில், மக்களவையைக் கலைப்பது (பிரிவு 85 (2) (b).
4. அவையின் நம்பிக்கையை இழந்த பின்னும் பதவி விலக மறுக்கின்ற அமைச்சரவையைப் பதவி நீக்கம் செய்வது (பிரிவு 75(2))

இது மாதிரியான சில சூழ்நிலைகளில் குடியரசுத்தலைவரின் செயல் பங்கும் முக்கியத்துவம் வாய்ந்தது. இதற்கு எடுத்துக்காட்டாக திரு சரண்சிங், திரு ராஜிவகாந்தி, திரு சந்திரசேகர் ஆகியோர் பிரதமர்களாக நியமிக்கப்பட்ட சூழ்நிலைகளைச் சொல்லலாம்.

ஒன்றிய விவகாரங்களை நிர்வகிப்பது சம்பந்தமான தீர்மானங்களையும், சட்டமியற்றுவது குறித்த பிரேரணைகளையும், அவை தொடர்பாக குடியரசுத்தலைவர் கோருகின்ற விவரங்களையும் குடியரசுத்தலைவருக்குத் தெரிவிக்கவேண்டிய பொறுப்பு பிரதமருக்கு உள்ளது என்று பிரிவு78 (a) கூறுகிறது. ஏதேனும் ஓர் அமைச்சரால் ஒரு முடிவு எடுக்கப்பட்டு இருக்குமானால், அதனை அமைச்சரவையில் பரிசீலிக்க வேண்டுமென்று குடியரசுத் தலைவர் கோரலாம். 1978ஆம் ஆண்டில் 44ஆவது திருத்தச் சட்டத்தின் மூலம் சேர்க்கப்பட்ட பிரிவு 74-ன் கட்டுப்பாட்டு விதியின்படி, அமைச்சரவை தமக்கு வழங்கும் ஆலோசனையை மறுபரிசீலனை செய்யுமாறு குடியரசுத் தலைவர் கேட்டுக் கொள்ளலாம். எனினும், மறுபரிசீலனை செய்த பின்னர் வழங்கப்படும் ஆலோசனையின்பேரில் அவர் செயல்பட்டாக வேண்டும். ஆனால் அமைச்சரவை குடியரசுத்தலைவருக்கு வழங்கும் ஆலோசனை இரு தரப்புக்கும் ரகசியமானது; எனவே, எந்த நீதிமன்றத்திலும் அதைப்பற்றி விசாரிக்க முடியாது (பிரிவு 74(2); எஸ்.பி. குப்தா எதிர் இந்திய அரசு AIR 1982 SC 149; ராஜஸ்தான் அரசு எதிர் இந்திய அரசு AIR 1977 SC 1361).

பிரிவு 111-ன் கீழ் குடியரசுத்தலைவரின் ஒப்புதலைப் பெறுவதற்காக

ஒரு மசோதாவை அனுப்பும்போது, அதற்கு ஒப்புதல் அளிப்பதாகவோ, ஒப்புதல் அளிக்காமல் நிறுத்தி வைப்பதாகவோ அவர் அறிவிக்கலாம். குடியரசுத்தலைவர் தமது ஒப்புதலை அளிக்கவோ, ஒப்புதல் அளிக்காமல் நிறுத்திவைப்பதாக அறிவிப்பதற்கோ காலவரம்பு ஏதும் குறிப்பிடப்பட வில்லை. எனினும், அவ்வாறு அனுப்பப்படும் மசோதா நிதிமசோதாவாக இல்லாத பட்சத்தில் நாடாளுமன்றத்தின் மறுபரிசீலனைக்காக கூடிய சீக்கிரத்திலேயே திருப்பி அனுப்பலாம். மறுபரிசீலனைக்குப் பின்னர் திருத்தங்களுடனோ, திருத்தங்கள் இல்லாமலோ அந்த மசோதா மீண்டும் குடியரசுத்தலைவரின் ஒப்புதலுக்காக அனுப்பப்படும்போது அவர் அதற்கு ஒப்புதல் அளிக்காமல் நிறுத்தி வைக்கக்கூடாது.

மசோதாக்களுக்குக் குடியரசுத்தலைவர் ஒப்புதல் அளிக்க வேண்டிய பணி, அமைச்சரவையின் ஆலோசனையின்படி செய்யவேண்டிய ஒன்று என்றாலும், பிரிவு 78(b)-ன் படி பிரதமரிடமிருந்து விளக்கம் கோரவோ, பிரிவு 74(1)-ன்படி அரசின் மறுபரிசீலனைக்காகத் திருப்பியனுப்பவோ, குடியரசுத்தலைவருக்கு உரிமையுண்டு. சர்ச்சைக்குரிய அஞ்சல் மசோதாவை கியானி ஜெயில்சிங்கும், ஓராண்டு மட்டும் நாடாளுமன்றத்தில் உறுப்பினர் களாக இருந்தவர்களுக்கு ஓய்வூதியம் அளிக்க வகைசெய்த மசோதாவை திரு. ஆர். வெங்கட்ராமனும் இந்த விதிகளின்படியே திருப்பி அனுப்பியிருக்க வேண்டும்.

## குடியரசுத்தலைவர் தேர்தல்

குடியரசுத்தலைவரைத் தேர்ந்தெடுக்கும் முறை பற்றி அரசியல் நிர்ணய சபையில் வினா எழுந்தபோது, வயதுற்றோர் அனைவரும் நேரிடையாக வாக்களித்து குடியரசுத்தலைவரைத் தேர்ந்தெடுக்கலாம் என்ற ஓர் ஆலோசனையும் வழங்கப்பட்டது. இதற்கு நேர்மாறாக, நாடாளுமன்றத்தின் இரண்டு அவை உறுப்பினர்கள் மட்டுமே குடியரசுத்தலைவரைத் தேர்ந்தெடுக் கலாம் என்று இன்னொரு யோசனை கூறப்பட்டது. இந்த இரண்டு யோசனைகளுக்கும் நடுவழியான ஒரு தேர்தல் முறையை அரசியல் நிர்ணயசபை உருவாக்கியது.

நாடாளுமன்றத்தின் இரண்டு அவைகளிலும் ஒரே கட்சி ஆதிக்கம் செலுத்தும் வாய்ப்பு உள்ளதால், நாடாளுமன்ற உறுப்பினர்களின் பெரும் பான்மை ஆதரவுடன் தேர்ந்தெடுக்கப்படும் குடியரசுத்தலைவர், பிரதமரைப் போலவே ஆளுங்கட்சியின் பிரதிநிதி போலாகி விடுவதுடன், ஒன்றியத்தில் இடம் பெற்றுள்ள மாநிலங்களின் பிரதிநிதியாக இருக்கமாட்டார். இதற்கு மாறாக, மக்களால் நேரிடையாகத் தேர்ந்தெடுக்கப்படும் குடியரசுத்தலைவர், அமைச்சரவைக்கு எதிரான அதிகாரக் குவியமாகச் செயல்படுவார். பொறுப் புடைய அமைச்சரவையைக் கொண்ட நாடாளுமன்ற ஆட்சிமுறைக்கு அது எதிரானதாக அமையும். எனவே "குடியரசுத்தலைவரை நேரிடையாகத் தேர்ந்தெடுப்பதோ, அவரிடம் உண்மையான அதிகாரங்களை அளிப்பதோ நமக்கு உகந்தது அன்று" என்று அரசியல் நிர்ணயசபையில் நேரு குறிப் பிட்டார்.

அமெரிக்கக் குடியரசுத்தலைவரைப் போலவே நமது குடியரசுத்

தலைவரும் வாக்காளர் தொகுதி ஒன்றிலிருந்துதான் தேர்ந்தெடுக்கப்படுகிறார். ஆனால் நம்நாட்டில் குடியரசுத்தலைவரைத் தேர்ந்தெடுக்கும் வாக்காளர் தொகுதியில் நாடாளுமன்றத்தின் இரு அவைகளிலும், மாநிலச் சட்டமன்றங் களிலும் உள்ள தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள் அங்கம் வகிக்கின்றனர் (பிரிவு54). இத்தகைய வாக்காளர் தொகுதியில் இருந்து குடியரசுத்தலைவர் தேர்ந்தெடுக்கப்படும்போது மாநிலங்களும் தமது எண்ணத்தை வெளிப் படுத்துவதற்கான வாய்ப்பு அமையும் என்று அரசியல் நிர்ணய சபையில் கருதப்பட்டது.

இந்தியக் குடியரசுத்தலைவராக ஒருவர் தேர்ந்தெடுக்கப்பட வேண்டு மானால் அவர், (அ) இந்தியக் குடிமகனாக இருக்கவேண்டும்; (ஆ) முப்பத் தைந்து வயது முடிந்தவராக இருக்கவேண்டும்; (இ) மக்களவை உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்படும் தகுதி உடையவராக இருக்க வேண்டும் என்று பிரிவு 58 கூறுகிறது இந்திய அரசிலோ, எந்த ஒருமாநில அரசிலோ, இந்த இரு வகையான அரசுகளின் கட்டுப்பாட்டில் உள்ள உள்ளாட்சி அமைப்புகளிலோ, ஊதியம் பெறும் பதவி வகிக்கின்ற எவரும் குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுககப்பட முடியாது. எனினும் குடியரசுத்தலைவர், குடியரசுத்துணைத்தலைவர், மாநில ஆளுநர் ஆகிய பதவிகளை வகிப்பவர்கள் ஊதியம் பெறும் பதவியில் இருப்பதாகக் கருதப்பட மாட்டார்கள் 1962ஆம் ஆண்டில் டாக்டர் இராதாகிருஷ்ணனும், 1967ஆம் ஆண்டில் டாக்டர் ஜாகிர் ஹுசேனும் அப்போது தாம் வகித்துவந்த குடியரசுத்துணைத்தலைவர் பதவியில் இருந்து விலகாமலேயே குடியரசுத்தலைவர் பதவிக்குப் போட்டியிட்டனர். எனினும், 1969ஆம் ஆண்டு நடைபெற்ற குடியரசுத் தலைவர் தேர்தலில், அப்போது குடியரசுத் துணைத்தலைவராக இருந்த திரு.வி.வி. கிரியும், மக்களவைத் தலைவராக இருந்த டாக்டர் என். சஞ்சீவ ரெட்டியும் தமது பதவியில் இருந்து விலகிய பின்னரே வேட்பு மனு தாக்கல் செய்தனர். 1987ஆம் ஆண்டில் திரு. ஆர். வெங்கட்ராமனும், 1992ஆம் ஆண்டில் டாக்டர் சங்கர்தயாள் சர்மாவும், குடியரசுத் தலைவர் பதவிக்குப் போட்டியிட்டு, வெற்றி பெற்று, குடியரசுத் தலைவராகப் பதவியேற்கும் வரை தாம் வகித்துவந்த குடியரசுத் துணைத்தலைவர் பதவியில் இருந்து விலகவில்லை.

*தேர்தல் சட்டம்:* இந்தியக குடியரசுத்தலைவர், குடியரசுத் துணைத் தலைவர் ஆகிய இரு பதவிகளுக்குமான தேர்தல் தொடர்பான எல்லா விஷயங்களும் குடியரசுத்தலைவர் மற்றும் குடியரசுத் துணைத்தலைவர் தேர்தல்கள் சட்டம் 1952-ன்படியும், அதன்கீழ் இயற்றப்பட்ட விதிகளின் படியும் முறைப்படுத்தப்படுகின்றன. 1952ஆம் ஆண்டுச் சட்டம், அடுத்தடுத்து நடந்த தேர்தல்களில் பெற்ற அனுபவங்களின் அடிப்படையில், 1974ஆம் ஆண்டில் திருத்தப்பட்டது. அதேபோல குடியரசுத்தலைவர் - குடியரசுத் துணைத்தலைவர் தேர்தல் விதிகள் 1952-ம்கூட 1974ஆம்ஆண்டில் திருத்தியமைக்கப்பட்டன. அந்தச் சட்டத்தின் பிரதான அம்சங்கள் வருமாறு:

1. குடியரசுத்தலைவர் பதவிக்கான வேட்புமனு, வேட்பாளரின் கையொப்பத்துடன், வாக்காளர்களில் பத்துபேர் முன்மொழிய, பத்துபேர் வழிமொழிய, குறிப்பிட்ட படிவத்தில் தாக்கல் செய்யப்பட

வேண்டும். அரசியலமைப்பின 58ஆவது பிரிவில் குடியரசுத் தலைவர் பதவிக்குப் போட்டியிடுவதற்கான தகுதிகள்தான் சொல்லபபட்டுள்ளனவே தவிர, வேட்புமனு செல்லுபடியாவதற்கான தேவைகள் ஏதும் குறிப்பிடப்படவில்லை. எனவே இந்த நிபந்தனைகள் சரியானவையே என்று உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்திருக்கிறது (சரண்லால் சாகு எதிர் நீலம் சஞ்சீவ ரெட்டி AIR 1978 SC 499).

2. ஒவ்வொரு வேட்புமனுவுடனும், வேட்பாளர் தம்மை ஒரு வாக்காளராகப் பதிவுசெய்து கொண்டுள்ள நாடாளுமன்றத் தொகுதியின் வாக்காளர் பட்டியலில் அவர் பெயர் இடம் பெற்றுள்ள பகுதியின சான்றளிக்கப்பட்ட நகல் ஒன்றையும் சேர்த்துத் தாக்கல் செய்ய வேண்டும்.

குடியரசுத்தலைவர் தேர்தலில், பல்வேறு மாநிலங்களுக்குத் தரப்படும் பிரதிநிதித்துவ அளவு இயன்ற வரைக்கும் ஒரே மாதிரியாக இருக்கவேண்டும் என்று பிரிவு 55 கூறுகிறது. இததேர்தல், விகிதாச்சார பிரதிநிதித்துவ முறையில், ஒற்றைமாற்று வாக்கு அடிப்படையில், ரகசிய வாக்குச்சீட்டு மூலமாக நடைபெற வேண்டும். மாநிலங்களின பிரதிநிதித்துவம் ஒரேமாதிரியாக இருப்பதையும் மாநிலங்கள் அனைத்தையும் ஒருபுறத்திலும், ஒன்றியத்தை மற்றொரு புறத்திலும் வைத்துப்பார்க்கும்போது இருபுறமும் சமமான பிரதிநிதித்துவம் இருப்பதையும் உறுதி செய்வதற்காக, மாநிலச் சட்டப்பேரவைகள் மற்றும் நாடாளுமன்றத்தின் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர் ஒவ்வொருவரும் அளிக்கக்கூடிய வாக்குகளின் எண்ணிக்கை கீழ்க்கண்டவாறு தீர்மானிக்கப்படுகிறது

அ. ஒரு மாநிலத்தின மொத்த மக்கள் தொகையை, அம்மாநிலச் சட்டப் பேரவைக்குத் தேர்ந்தெடுக்கப்படும் உறுப்பினர்களின் எண்ணிக்கையால் வகுத்துப் பெறப்படும் ஈவுத்தொகையில் உள்ள ஆயிரத்தின மடங்குகளுக்குச் சமமான எண்ணிக்கையிலான வாக்குகள் அம்மாநிலச் சட்டப்பேரவையின் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர் ஒவ்வொருவருக்கும் உண்டு.

ஆ. ஆயிரத்தின் மடங்குகளைப் பெற்றபின்னர் எஞ்சியுள்ளது ஐநூறுக்கும் குறையாமல் இருந்தால் மேலே (அ)வில சொல்லப்பட்டுள்ள உறுப்பினர் ஒவ்வொருவருக்கும் உள்ள வாக்கு எண்ணிக்கையில் மேலும் ஒருவாக்கு சேர்த்துக் கொள்ளப்படும்.

விளக்கம்

| | | | |
|---|---|---|---|
| மாநிலத்தின் மொத்த மக்கள்தொகை | : | 4,35,02,708 | |
| மாநிலச்சட்டப்பேரவையில் உள்ள தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களின் எண்ணிக்கை | : | 294 | |
| ஒவ்வோர் உறுப்பினருக்கும் உள்ள வாக்குகளின் எண்ணிக்கை | : | $\frac{4,35,02,708}{1000 \times 294}$ | = 147.96 அதாவது 148 |

(இ) மாநிலச் சட்டப்பேரவைகள் அனைத்திலும் உள்ள தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள் எல்லாருக்கும் உரியதாக மேலே (அ) மற்றும் (ஆ) மூலம் பெறப்பட்ட மொத்த வாக்குகளின் எண்ணிக்கையை, நாடாளுமன்றத்தின் இரண்டு அவைகளின் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களின் எண்ணிக்கையால் வகுத்துப் பெறப்படும் ஈவுக்குச் சமமான எண்ணிக்கையில் நாடாளுமன்றத்தின் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள் ஒவ்வொருவருக்கும் வாக்குகள் உண்டு. ஈவுத்தொகையில் வரும் பின்னம் பாதிக்கும்மேல் இருந்தால் ஒன்று எனக்கொள்ளப்படும்; பாதிக்குக் குறைவான பின்னம் விட்டுவிடப்படும்.

1987ஆம் ஆண்டுநடைபெற்ற குடியரசுத்தலைவர் தேர்தலில் இருந்த மொத்த வாக்காளர்களின்எண்ணிக்கை 4695 ஆகும். அதாவது,

| | | |
|---|---|---|
| (அ) | மாநிலங்களவை | 233 |
| (ஆ) | மக்களவை | 543 |
| (இ) | மாநிலச் சட்டப்பேரவைகள் | 3,919 |
| | மொத்தம் | 4,695 |

நாடாளுமன்ற உறுப்பினர் ஒவ்வொருவருக்கும் (மாநிலங்களவை மற்றும் மக்களவை) அப்போதிருந்த வாக்குகளின் எண்ணிக்கை 702. மாநிலச் சட்டப்பேரவை உறுப்பினர்களின் வாக்குகளின் எண்ணிக்கை, அந்தந்த மாநிலங்களின் சட்டப்பேரவை உறுப்பினர்களின் எண்ணிக்கை, 1971ஆம் ஆண்டு கணக்கெடுப்பின்படி அந்தந்த மாநிலங்களின் மக்கள் தொகை ஆகியவற்றின் அடிப்படையில் மாறுபட்டது. சிக்கிம் மாநிலச் சட்டப்பேரவை உறுப்பினர்களின் வாக்கு எண்ணிக்கை மிகக் குறைவாகவும் (7), உத்தரப் பிரதேச மாநில சட்டப்பேரவை உறுப்பினர் களின் வாக்கு எண்ணிக்கை மிக அதிகமானதாகவும் (208), அப்போது இருந்தது.

மாநிலங்கள் அனைத்தையும் ஒருபுறத்திலும், ஒன்றியத்தை மற்றொரு புறத்திலும் வைத்துப் பார்க்கும்போது இருபுறமும் சமமான பிரதிநிதித்துவம் இருக்கவேண்டும் என்று வகுக்கப்பட்ட முறையானாலும், மாநிலங்களின் பிரதிநிதிகளுக்கே அது சாதகமாக அமைந்துள்ளது. மாநிலங்களவை உறுப் பினர்களாக ஒருமுறையும், மாநிலச் சட்டமன்ற உறுப்பினர்களாக இன்னொரு முறையும் மாநிலங்களின் பிரதிநிதிகளுக்கு இரட்டைப் பிரதிநிதித்துவம் கிடைக்கிறது. நாடு முழுவதில் இருந்தும், அதன் அங்கமாகிய மாநிலங்களில் இருந்தும் பெரும்பான்மை ஆதரவு பெற்றவராகக் குடியரசுத்தலைவர் திகழவேண்டும் என்ற நோக்கத்தில், தெரிந்தே இந்த ஏற்பாடு செய்யப்பட்டது. பல்வேறு மாநிலங்களின் பிரதிநிதித்துவமும் ஒரே மாதிரியாக இருக்க வேண்டும் என்ற கருத்து, மக்கள் தொகை அடிப்படையில் பிரதிநிதித்துவம் தரப்படவேண்டும் என்ற எண்ணத்திலும், ஆளுக்கு ஒரு வாக்கு, ஒற்றைக் குடியுரிமை, குடிமக்களிடையே சமத்துவம், ஆகிய கோட்பாடுகளை மதித்து நடக்கும் எண்ணத்திலும் சேர்க்கப்பட்டது.

குடியரசுத்தலைவர் தேர்தலில், ஒற்றைமாற்று வாக்குமூலம் விகிதாச்சார பிரதிநிதித்துவ முறையைப் பின்பற்றுவதன் நோக்கம், இந்த முறை, சிறு

பான்மையினருக்குப் பிரதிநிதித்துவம் அளிக்கும் என்ற எண்ணத்தில்தான். இந்தத் தேர்தல்முறை குறித்து அரசியல் நிர்ணயசபையில் எந்தவிதமான விவாதமும் நடைபெறாமலேயே பிரேரணை அப்படியே ஏற்றுக் கொள்ளப் பட்டது. ஒற்றை உறுப்பினர் வாக்காளர் தொகுதியில் இந்தமுறை ஏற்புடையதாக இருக்காது. ஒரே தேர்தலில் ஒன்றுக்கும் மேற்பட்ட உறுப் பினர்களை அதே வாக்காளர்கள் தேர்ந்தெடுக்க வேண்டிய சூழ்நிலையில் தான் இந்த முறை மிகவும் பொருத்தமானதாக இருக்கும். சொல்லப்போனால், இந்த முறையை, ஒற்றைமாற்று வாக்குமூலமான விகிதாச்சார பிரதிநிதித்துவ முறை என்று கூறுவது தவறானதாகும். மாறாக, மாற்றுவாக்கு முறையாக இத்தேர்தல் அமைவதால் இதனை மாற்றுவாக்கு முறை என்று கூறுவதே பொருத்தமானதாகும்.

இதுவரை பத்து முறை குடியரசுத்தலைவர் தேர்தல்கள் நடை பெற்றுள்ளன. போட்டியில்லாமல் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரே குடியரசுத் தலைவர் டாக்டர் சஞ்சீவரெட்டி. திரு.வி.வி.கிரி குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட தேர்தலில்தான் மிகவும் கடுமையான போட்டி நிலவியது. அப்போது இரண்டாவது விருப்ப வாக்குகளையும் எண்ண வேண்டிய தேவை ஏற்பட்டது. இரண்டு முறை குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரே நபர் டாக்டர் இராஜேந்திர பிரசாத்.

1987ஆம் ஆண்டு நடைபெற்ற குடியரசுத் தலைவர்தேர்தலில் திரு.ஆர். வெங்கட்ராமன், நீதிபதி கிருஷ்ண ஐயர் ஆகிய இருவரையும் தவிர மூன்றாவதாக ஒரு வேட்பாளரும் களத்தில் இருந்ததால், அரசியல் வட்டாரங் களில் மிகுந்த பரபரப்பும் சுவாரஸ்யமும் ஏற்பட்டது.

குடியரசுத் தலைவர் தேர்தல்களில் மிகவும் குறிப்பிடத்தக்க ஓர் அம்சம் என்னவென்றால், பெரும்பாலான சமயங்களில், பல வேட்பு மனுக்கள் தாக்கல் செய்யப்படுவதே ஆகும். இவற்றில் பெரும்பாலானவை தீவிரமான போட்டி எண்ணம் இன்றித் தாக்கல் செய்யப்பட்டவையாக இருப்பதுடன், பரிசீலனையின்போது செல்லாதவையாகவும் அறிவிக்கப் பட்டுவிடுகின்றன. நம்முடைய மக்களாட்சி அமைப்பில் சாதாரண குடிமகன் கூட குடியரசுத்தலைவர் பதவிக்குப் போட்டியிட முடியும் என்பதையே இவை பறைசாற்றுகின்றன.

**தேர்தல் தகராறுகள்:** குடியரசுத் தலைவர் மற்றும் குடியரசுத் துணைத்தலைவர் தேர்தல்கள் சம்பந்தமான எல்லா ஐயங்களும் தகராறு களும் உச்சநீதிமன்றத்தால் விசாரிக்கப்பட்டு தீர்ப்பளிக்கப்பட வேண்டும் என்று அரசியலமைப்பின் 71ஆவது பிரிவு கூறுகிறது. இந்த விஷயத்தில் உச்சநீதிமன்றத்தின் தீர்ப்பே இறுதியானது.

குடியரசுத்தலைவர் அல்லது குடியரசுத்துணைத்தலைவரைத் தேர்ந் தெடுக்கும் வாக்காளர் தொகுதியில் ஏதேனும் ஓர் உறுப்பினர் இடம் நிரப்பப்படாமல் காலியாக இருக்கின்ற காரணத்தினால், அந்தத் தேர்தல் செல்லுபடியாகாது என்று கூறமுடியாது.

குடியரசுத் தலைவர் தேர்தலில் ஒரு வேட்பாளராகவோ, வாக்காள ராகவோ இல்லாத எந்த நபரும், அந்தத் தேர்தல் செல்லுபடியாகாது என்று வழக்குத் தொடுக்க முடியாது (என்.பி.காரே எதிர் இந்தியத் தேர்தல்

ஆணையர், AIR 1958 SC 139).

சில மாநிலங்களின் சட்டப் பேரவைகள் கலைக்கப்பட்டதால், குடியரசுத்தலைவர் தேர்தலுக்கான வாக்காளர் தொகுதி முழுமையற்றதாக இருக்கின்றது எனக் கூறி தேர்தலை ஒத்திவைக்கவோ, செல்லாததாக்கவோ முடியாது என்று குடியரசுத்தலைவர் தேர்தல் வழக்கில் (AIR 1974 SC 1632) உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்தது.

## குடியரசுத் தலைவரின் பதவிக்காலம்

குடியரசுத் தலைவரின் பதவிக்காலம் முடிவடைவதால் ஏற்படும் காலி யிடத்தை நிரப்புவதற்காக, அந்தப் பதவிக்காலம் முடிவடையும் முன்னரே தேர்தல் நடத்தப்படவேண்டும் என்று பிரிவு 62(1) கூறுகிறது.

குடியரசுத்தலைவர், அப்பதவியை ஏற்கின்ற நாளில் இருந்து ஐந்து ஆண்டுகளுக்குப் பதவி வகிப்பார் என்று பிரிவு 56(1) கூறுகிறது. குடியரசுத் துணைத்தலைவருக்குத் தமது கைப்பட பதவி விலகல் கடிதம் எழுதி அனுப்புவதன் மூலம் குடியரசுத்தலைவர் தமது பதவியில் இருந்து விலகி விடலாம். குடியரசுத்தலைவர் ஒருவரின் பதவிக்காலம் முடிந்த பின்னரும், புதிய குடியரசுத் தலைவர் பதவியேற்கும்வரை அவர் தமது பதவியில் நீடிக்கலாம்.

## குற்றச்சாட்டுக்கான நடைமுறை

அரசியலமைப்பை மீறிய காரணத்திற்காக குடியரசுத்தலைவர்மீது குற்றச்சாட்டு சுமத்தி பதவி நீக்கம் செய்யலாம் என்று பிரிவு 61 கூறுகிறது. நாடாளுமன்றத்தின் ஏதேனும் ஓர் அவையில், அவையின் மொத்த உறுப்பினர் களில் குறைந்தபட்சம் நான்கில் ஒரு பங்கு உறுப்பினர்களின் கையெழுத்துடன் குற்றச்சாட்டுத் தீர்மானத்தைக் கொண்டு வந்து, அவை உறுப்பினர்களில் மூன்றில் இரண்டு பங்கு பெரும்பான்மையுடன் அதனை நிறைவேற்ற வேண்டும். ஓர் அவையில் இவ்வாறு நிறைவேற்றப்படும் தீர்மானத்தை, இன்னொரு அவை ஆராய்ந்து அல்லது ஆராயச் செய்து அவையின் மொத்த உறுப்பினர்களின் மூன்றில் இரண்டு பங்கு பெரும்பான்மையின் ஆதரவுடன் ஒரு தீர்மானத்தை நிறைவேற்றினால், தீர்மானம் நிறை வேற்றப்பட்ட தேதியில் இருந்து, குடியரசுத்தலைவர்பதவி இழக்கிறார்.

# குடியரசுத் துணைத் தலைவர்

இந்தியக் குடியரசுத்தலைவருக்கு அடுத்தபடியாக நமது அதிகாரப்பூர்வ பதவி வரிசைமுறையில் குடியரசுத் துணைத்தலைவருக்கு இடம் அளிக்கப்பட்டிருக்கிறது. எனவே குடியரசுத் துணைத்தலைவர் பதவியும் மிகவும் மதிப்புடையதாகும். இந்தியக் குடியரசுக்குத் துணைத்தலைவர் ஒருவர் இருப்பார் என்று அரசியலமைப்பின் 63ஆவது பிரிவு கூறுகிறது. குடியரசுத் துணைத்தலைவரே மாநிலங்களைவையின் தலைவராகவும் இருப்பார் (பிரிவு 64). இந்த ஏற்பாடு அமெரிக்க நடைமுறையைப் பின்பற்றியதாகும். மாநிலங்களவையின் தலைவராக அவை நடவடிக்கை

களைத் தலைமையேற்று நடத்தும் விஷயத்தில் மக்களைவைத் தலைவர் போலவே குடியரசுத் துணைத்தலைவரும் செயல்படுவார். ஆனால் குடியரசுத் துணைத் தலைவர் என்ற முறையில் அவருக்கு என்று எவ்விதமான செயல்பாடுகளையும் அரசியலமைப்பு விதிக்கவில்லை. எனினும் தூதுவர்கள் மற்றும் இந்தியாவுக்கு வருகின்ற வெளிநாட்டுத் தலைவர்களைச் சந்திப்பது போன்ற சம்பிரதாய விழாக்களில் அவர் கலந்துகொள்வார். குடியரசுத் தலைவர் மரணமடைவதாலோ, பதவி விலகுவதாலோ, பதவி நீக்கம் செய்யப்படுவதாலோ, வேறு காரணங்களினாலோ அப்பதவி காலியாக இருக்கின்ற சமயத்தில் குடியரசுத் துணைத்தலைவரே குடியரசுத் தலைவராகப் பொறுப்பு வகிப்பார். குடியரசுத்தலைவர் தலைநகரில் இல்லாத சமயங்களிலும், நோயுற்ற சமயங்களிலும், அல்லது வேறு காரணங்களினால் தமது பணியைச் செய்ய இயலாத சூழ்நிலைகளிலும் .குடியரசுத துணைத்தலைவர் அப்பணிகளை நிறைவேற்றுவார். குடியரசுத் தலைவர் பொறுப்பினை வகிக்கும் போதும, அப்பதவிக்குரிய பணிகளை நிறை வேற்றும் போதும் குடியரசுத் துணைத்தலைவர், மாநிலங்களவைத் தலைவருக்குரிய பொறுப்புகளைக் கவனிக்க மாட்டார் (பிரிவு 64).

நமது குடியரசுத் தலைவர்களில் இரண்டு பேர் பதவியில் இருக்கும் போது இறந்தனர். டாக்டர் ஜாகிர் ஹுசேன் இறந்தபோது குடியரசுத் துணைத்தலைவராக இருந்த திரு.வி.வி. கிரியும், திரு பக்ருதீன் அலி அகமது இறந்தபோது, அப்போதைய குடியரசுத் துணைத்தலைவர் திரு பி.டி.ஜாட்டியும் குடியரசுத் தலைவர்களாகப பொறுப்பு வகித்தனர். எனவே இது போன்ற எதிர்பாராத சூழ்நிலைகளில் குடியரசுத் துணைத்தலைவருக்குள்ள பொறுப்பு பெரிதும் முக்கியத்துவம் வாய்நததாகும்.

நாடாளுமன்றத்தின இரணடு அவைகளிலும உள்ள உறுப்பினர்களால், விகிதாச்சார பிரதிநிதித்துவ முறையில் ஒற்றை மாற்று வாக்குமூலம் குடியரசுத் துணைத்தலைவர் தேர்ந்தெடுக்கப்படுகிறார் (பிரிவு 66). நாடாளு மன்றத்தின் இரண்டு அவைகளின் நம்பிக்கையைப் பெற்றவராக அவர் திகழவேண்டும் என்பதற்காகவே இந்த ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

குடியரசுத் துணைத் தலைவரின் பதவிக்காலம் ஐந்தாண்டுகளாகும். அவருடைய பதவிக்காலம் முடிவடையும் முன்னரே அடுத்த தேர்தல் நடத்தப்படவேண்டும். குடியரசுத் துணைத்தலைவர் தேர்தல் சம்பந்தமான எல்லா ஐயங்களையும் தகராறுகளையும் உச்சநீதிமன்றமே விசாரித்துத் தீர்ப்பளிக்கும். குடியரசுத் துணைத்தலைவர் பதவி விலக விரும்பினால் தமது கைப்பட பதவி விலகல் கடிதத்தை எழுதி குடியரசுத்தலைவருக்கு அனுப்பி, பதவி விலகலாம். மாநிலங்களவையில் உள்ள உறுப்பினர்களின் பெரும்பான்மை ஆதரவுடன் ஒரு தீர்மானத்தை நிறைவேற்றி, அதனை மக்களவையில் ஏற்றுக் கொள்வதன் மூலம் அவரைப்பதவி நீக்கம் செய்யலாம் (பிரிவுகள் 67, 68, 71). நாடாளுமன்றத்தின் ஏதேனும் ஓர் அவையில் அல்லது ஏதேனும் ஒரு மாநிலச் சட்டப்பேரவையில் குடியரசுத் துணைத்தலைவர் உறுப்பினராக இருக்க முடியாது (பிரிவு 66).

குடியரசுத் தலைவராக ஒருவர் தேர்ந்தெடுக்கப்படுவதற்கு உரிய தகுதிகளே, குடியரசுத் துணைத்தலைவராகத் தேர்ந்தெடுக்கப்படுவதற்கும்

அவசியமானவை. ஆனால், குடியரசுத் துணைத்தலைவர் பதவிக்கு மாநிலங் களவைக்கு உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்படும் தகுதியும் தேவை.

## அமைச்சரவை

குடியரசுத்தலைவருக்கு உதவி புரியவும், ஆலோசனை வழங்கவும் பிரதமரின் தலைமையிலான அமைச்சரவை ஒன்று இருக்கும் என்றும், அந்த ஆலோசனையின்படியே குடியரசுத்தலைவர் செயல்படுவார் என்றும் அரசியலமைப்பின் 74ஆவது பிரிவு கூறுகிறது. அமைச்சரவை வழங்கும் ஆலோசனையை மறுபரிசீலனை செய்யுமாறு குடியரசுத் தலைவர் கேட்டுக் கொள்ளலாம். ஆனால் மறுபரிசீலனைக்குப் பின்னர் வழங்கப்பட்ட ஆலோசனையின்படி குடியரசுத் தலைவர் செயல்பட்டாக வேண்டும்.

அமைச்சரவை ஒன்று இருக்கும் என்றால், அது எப்போதும் இருக்கும் என்று பொருள்கொள்ள வேண்டும். பிரதமர் அல்லது அமைச்சரவை எதுவுமே இல்லாத ஒரு நிலையை அரசியலமைப்புக் கூறவில்லை. பிரிவு 356-ன்படி மாநிலங்களில் அரசியலமைப்பு இயந்திரம் செயலற்ற நிலை ஏற்படும்போது குடியரசுத்தலைவர் ஆட்சிக்கு வகை செய்திருப்பது போல, ஒன்றியத்தில் நேரிடையான குடியரசுத் தலைவர் ஆட்சிக்கு வகையேதும் செய்யப்பட வில்லை.

அமைச்சரவையின் ஆலோசனைகளை ஏற்றுக்கொண்டு குடியரசுத் தலைவர் செயல்பட்டாக வேண்டும் என்பது, 42 மற்றும் 44ஆவது திருத் தங்களுக்குப் பின்னர் மிகவும் திட்டவட்டமாகத் தெளிவுபடுத்தப்பட்டு விட்டது. இந்தத் திருத்தங்களுக்கு முன்னரேகூட, அமைச்சரவையின் ஆலோசனை, குடியரசுத்தலைவரை எல்லா வகையிலும் கட்டுப்படுத்தக் கூடியதே என்று உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்திருக்கிறது. (சம்ஷேர் எதிர் பஞ்சாப் அரசு AIR 1974 SC 2192).

மக்களவை கலைக்கப்பட்டதற்குப் பின்னரும்கூட அமைச்சரவையின் ஆலோசனை இல்லாமல் குடியரசுத்தலைவர் தாமே ஏதேனும் அதிகாரத்தைப் பயன்படுத்தினால் அது பிரிவு 74(1)க்கு முரணாக அமையுமாதலால், அரசியலமைப்பை மீறியதாகும் என்று யு.என்.ராவ் எதிர் இந்திராகாந்தி என்ற வழக்கில் (AIR 1971 SC 1002) உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்தது.

எனினும், அமைச்சரவை வழங்கும் ஆலோசனையை அப்படியே குடியரசுத்தலைவர் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பதில்லை. குடியரசுத் தலைவர் தம்முடைய அறிவைக்கொண்டு அந்த ஆலோசனைகளைப் பரிசீலனை செய்யும் உரிமை பெற்றவராவார். குடியரசுத்தலைவர் தம்முன் வைக்கப்பட்டுள்ள ஆலோசனைகளை ஏற்றுக் கொண்டு ஒப்புதல் அளிப் பதற்கு முன்னர், அமைச்சரவைக்கு அறிவுரை வழங்கவும், எச்சரிக்கை விடுக்கவும் ஆலோசனைகளை மறுபரிசீலனை செய்யுமாறு கோரவும் அரசியலமைப்பின் நாற்பத்து நான்காவது திருத்தச் சட்டம் குடியரசுத் தலைவருக்கு ஒரு வாய்ப்பளிக்கிறது.

அமைச்சரவை எடுக்கின்ற முடிவுகள் ரகசியமாகவே மேற்கொள்ளப் படுவதால், குடியரசுத் தலைவருக்கு வழங்கப்படும் ஆலோசனையும்

இருதரப்புக்கும் ரகசியமாகவே இருக்கும். எனவே இவை பற்றி எந்த நீதி மன்றத்திலும் விசாரணை நடத்த முடியாது. எனினும் அந்த ஆலோசனைகள் நீதிமன்றத்தின் முன் தாக்கல் செய்யப்பட்டால் அவற்றை ஆராய்வதற்கு நீதிமன்றத்திற்குத் தடையேதும் இல்லை (எஸ்.பி.குப்தா எதிர் இந்திய அரசு AIR 1982 SC 149; ராஜஸ்தான்அரசு எதிர் இந்திய அரசு AIR 1977 SC 1361; ம.பி. அரசு எதிர் நந்தலால் AIR 1987 SC 251; சௌத்ரி எதிர் பீகார் அரசு AIR 1980 SC 383).

பிரிவு 75-ன்படி, பிரதமரை குடியரசுத்தலைவர் நியமிக்கிறார். பிதரமரின் ஆலோசனையின்படி மற்ற அமைச்சர்களையும் அவரே நியமிக் கிறார். குடியரசுத்தலைவர் விரும்பும்வரை அமைச்சர்கள் பதவியில் இருப் பார்கள். மக்களவைக்கு அமைச்சரவை கூட்டுப்பொறுப்புடையது.

பிரதமரின் தலைமையிலான அமைச்சரவையின் ஆலோசனையின் படியே குடியரசுத்தலைவர் தமது பணிகள் யாவற்றையும் செய்கிறார். ஆனால் மிகவும் முக்கியமான பணியாகிய, பிரதமரை நியமிக்கும் பணியை யாருடைய ஆலோசனையின்பேரில் செய்கிறார் என்பது தெளிவாகச் சொல்லப்படவில்லை. அரசியலமைப்பில் கூறப்பட்டுள்ளபடி பார்த்தால், எவரை வேண்டுமானாலும் பிரதமராகக் குடியரசுத்தலைவர் நியமிக்கலாம்; ஆனால் அதற்குள்ள ஒரே நிபந்தனை, அவ்வாறு நியமிக்கப்படுபவர் மக்களவை உறுப்பினர்களில் பெரும்பான்மையினரின் ஆதரவைப்பெற வேண்டும். ஏதேனும் ஓர் அரசியல் கட்சிக்கு மக்களவையில் அறுதிப் பெரும்பான்மை இருந்தால் பிரதமரை நியமிப்பதில் சிரமம் ஏதுமில்லை. ஏனெனில், அதுபோன்ற சந்தர்ப்பங்களில், நாடாளுமன்ற நடைமுறை களையும், மரபுகளையும் பின்பற்றி, பெரும்பான்மை பலம் பெற்றுள்ள கட்சியின் தலைவரைப் பிரதமராகப் பதவியேற்று அரசு அமைக்குமாறு கேட்டுக் கொள்ளலாம். ஆனால் எந்த ஒரு கட்சியும் சுயமாக ஓர் அரசை அமைக்க முடியாத நிலையில், சில பிரிவினரின் ஆதரவுகள் மாறவும், பல வகையான கூட்டணிகள் அமைவதற்கும் சாத்தியமுள்ள சூழ்நிலையில், பிரதமரைத் தெரிவு செய்யும் பணிமிகவும் சிக்கலாகவும், சிரமமாகவும் மாறி விடும். அந்தச் சூழ்நிலையில் குடியரசுத்தலைவர் தம்முடைய ஆற்றல் அனைத்தையும் பயன்படுத்தி கூடியவரை மக்களவையின் நம்பிக்கையைப் பெறக்கூடிய ஒருவரைத் தெரிவு செய்யவேண்டும்.

அமைச்சர்களையும் குடியரசுத்தலைவரே நியமிக்கிறார் என்றும், குடியரசுத்தலைவர் விரும்பும்வரை அவர்கள் பதவி வகிப்பார்கள் என்றும் சொலலப்பட்டாலும், உண்மையில் அமைச்சர்களைப் பிரதமரே தெரிவு செய்கிறார். பிரதமரால் பரிந்துரைக்கப்படாத எவரையும் குடியரசுத் தலைவர் அமைச்சராக நியமிக்க முடியாது. ஏதேனும் ஓர் அமைச்சரின்பால் பிரதமர் அதிருப்தி கொண்டாரென்றால் அவரைப் பதவி விலகுமாறு பிரதமர் கோரலாம்; அல்லது அவரைப் பதவி நீக்கம் செய்யுமாறு குடியரசுத் தலைவரைக் கோரலாம்; அல்லது தனது அமைச்சரவையை முழுமையாகப் பதவி விலகச் செய்து, அதிருப்தி கொண்ட அமைச்சரை மட்டும் நீக்கிவிட்டு, புதியதாக அமைச்சரவையைத் திருத்தி அமைத்துக் கொள்ளலாம்.

இங்கிலாந்தில் அமைச்சர்களுக்குத் தனிப் பொறுப்பும், கூட்டுப்

பொறுப்பும் உண்டு. ஆனால் நமது அரசியலமைப்பின்படி அமைச்சர்களுக்குக் கூட்டுப் பொறுப்பு மட்டுமே உண்டு. அதாவது, எவரேனும் ஓர் அமைச்சர் மீது மட்டும் நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டுவர முடியாது. அரசின் நடவடிக்கைகளுக்காக அமைச்சரவை முழுமையுமே நாடாளுமன்றத்திற்குக் கூட்டுப் பொறுப்புடையது. எனவே அமைச்சரவை ஒட்டுமொத்தமாகவே நிலைத்து நிற்கும்; அல்லது வீழும். அவையின் நம்பிக்கையை அமைச்சரவை இழந்தால் ஒட்டுமொத்தமாக அது பதவி விலகவேண்டும். அத்துடன் கூட்டுப் பொறுப்பு என்றால், பொது மேடைகளில் அமைச்சர்கள் தங்கள் சொந்தக் கருத்துக்களைப் பேசக் கூடாது என்றும் பொருளுண்டு. அமைச்சரவை எடுத்த தீர்மானத்தைப் பற்றியோ, கொள்கை முடிவைப்பற்றியோ, எவரேனும் ஓர் அமைச்சருக்கு உடன்பாடு இல்லாவிட்டால் அவர் பதவி விலக வேண்டும்; அல்லது அமைச்சரவையுடன் சேர்ந்து அம்முடிவுக்குக் கூட்டுப் பொறுப்பு ஏற்கவேண்டும்.

இங்கிலாந்தில், அமைச்சரவையின் பொறுப்பு என்பதை வரலாற்றுக் கண்ணோட்டத்தில் பார்க்கும்போது, மன்னன் தவறிழைக்க மாட்டான் என்ற கோட்பாட்டின்படியே இது தோன்றியுள்ளது புலனாகும். அரசின் தவறான செயல்களுக்கு அரசனைப் பொறுப்பாளியாக்க முடியாதாகையால் பொறுப்புகளைச் சுமத்துவதற்கு அமைச்சர்களே அகப்பட்டார்கள். அரசின் ஒவ்வொரு செயலுக்கும் அமைச்சர் ஒருவர் பொறுப்பாளியாக இருப்பார். எனவே ஆட்சி சம்பந்தப்பட்ட அரசனின் ஒவ்வொரு ஆணைக்கும் அமைச்சர் ஒருவர் சான்றொப்பம் இட வேண்டும்.

ஆனால் இந்தியாவிலோ அமைச்சரவையின் பொறுப்பு என்பது, பிரதிநிதித்துவ மக்களாட்சியின் உயர்ந்த நெறிகளின் அடிப்படையில், மக்களால் நேரிடையாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களவை உறுப்பினர்களுக்கு அரசாங்கம் பொறுப்புள்ளதாக இருக்க வேண்டும் என்று உருவாக்கப் பட்டுள்ளது. இன்னும் சொல்லப்போனால் இந்தியாவில் குடியரசுத் தலைவரின் பெயரால் மேற்கொள்ளப்படும் அரசின் நடவடிக்கைகளில் அமைச்சர்களுக்குச் சட்டப்படியான பொறுப்பு ஏதுமில்லை. அரசு ஆணைகளில் அமைச்சர்கள் சான்றொப்பம் இடுவதில்லை; அரசின் செயலாளர்தான் (அல்லது அங்கீகாரம் பெற்ற அதிகாரி) சான்றொப்பம் இடுகிறார்.

அமைச்சர்கள் என்று பொதுப்படவே அரசியலமைப்பில் கூறப் பட்டுள்ளது. கேபினட் அமைச்சர்கள், இணை அமைச்சர்கள் துணை அமைச்சர்கள் என்று எவ்விதமான பாகுபாட்டையும் அது குறிப்பிடவில்லை. அத்துடன், பிரிவு 352-ல் (1979ஆம் ஆண்டில் திருத்தப்பட்டபடி) கேபினட் என்பது, கேபினட் அந்தஸ்துள்ள அமைச்சர்களின் அவை என்று வரையறுக்கப்பட்டுள்ளதைத் தவிர, வேறு எந்த இடத்திலும் கேபினட் என்று குறிப்பிடாத அரசியலமைப்பு, அமைச்சரவை என்றே எல்லா இடத்திலும் குறிப்பிடுகிறது. நடைமுறையில் பார்த்தால், கேபினட்தான் எல்லாவிதமான கொள்கை முடிவுகளையும் எடுத்து, குடியரசுத்தலைவருக்கு ஆலோசனை அளிக்கிறது. மேலே குறிப்பிட்ட மூன்று வகையான அமைச்சர்கள் அனைவரும் சேர்ந்த அமைச்சரவை, எந்தவிதமான முடிவெடுப்பதற்காகவும், ஒருபோதும் கூடியதில்லை.

## பிரதமர்

நிர்வாகம், சட்டம் இயற்றல் சம்பந்தமான எல்லா முடிவுகளையும் குடியரசுத் தலைவருக்குத் தெரிவிக்க வேண்டும் என்றும், இவை சம்பந்தமாகக் குடியரசுத்தலைவர் கேட்கக் கூடிய விவரங்களை அவருக்குத் தெரிவிக்க வேண்டும் என்றும், ஏதேனும் ஒரு விஷயத்தில் ஓர் அமைச்சர் மேற்கொண்ட முடிவை அமைச்சரவையின் முன் வைக்கவேண்டுமென குடியரசுத்தலைவர் கோரும்போது அப்படிச் செய்ய வேண்டும் என்றும் பிரதமருக்குக் கடமை விதிக்கப்பட்டுள்ளது (பிரிவு 78).

ஒரு நாடாளுமன்ற ஆட்சிமுறையில், நாடாளுமன்றத்தையும், நிர்வாக அமைப்பையும் ஒரு சேரக் கட்டுப்படுத்தக்கூடிய அதிகாரம் மிக்கவராகப் பிரதமர் திகழ்கிறார். நாடாளுமன்ற ஆட்சிமுறை படிப்படியாக பிரதமர் ஆட்சிமுறை என்று அழைக்கப்படும் நிலை தற்போது உருவாகி வருகிறது. அமைச்சரவையின் தலைவராக இருப்பதால், அரசின் தலைவராகவும் பிரதமர் திகழ்கிறார். நாடாளுமன்றத்தின் மக்களவையில் தம்முடைய கட்சியின் தலைவராகவும் அவர் விளங்குகிறார். எனவே மொத்தத்தில் பார்க்கும்போது, நாட்டின் மக்களிடையேயும், தனது கட்சியிலும், நாடாளுமன்றத்திலும், பிரதமர் எந்த அளவுக்கு ஏற்றுக் கொள்ளப்பட்டு ஆதரவைப் பெற்றிருக்கிறார் என்பதைப் பொறுத்தே, அனைத்தும் உள்ளன. பிரதமருக்கு மிகப்பெரும் அதிகார பலம் உள்ளது. அமைச்சர்கள் அனைவரும் அவருடைய பரிந்துரையின் பேரிலேயே நியமிக்கப்படுகின்றனர். அவர் சொன்னால் பதவியில் இருந்து நீக்கப்படுகின்றனர். அமைச்சர்களுக்கான துறைகளை பிரதமர்தான் ஒதுக்கீடு செய்கிறார். அவர் விருப்பப்படும்போது அமைச்சர் களின் பொறுப்புகளை மாற்றுகிறார். குடியரசுத்தலைவருக்கும் அமைச்ச ரவைக்கும் இடையே தகவல் பரிமாற்றத்திற்கு வாயிலாகவும் பிரதமர் விளங்குகிறார்.

பிரதமருக்கும் குடியரசுத்தலைவருக்கும் இடையேயும், பிரதமருக்கும் ஏனைய அமைச்சர்களுக்கும் இடையேயும், எந்த விதமான உறவு நிலவ வேண்டும் என்பது குறித்து, அரசியலமைப்பு அமலுக்கு வந்ததில் இருந்தே பலத்த சர்ச்சைகள் தோன்றிவிட்டன. உள்துறை அமைச்சராக இருந்த சர்தார் படேலுக்கும் பிரதமர் பண்டித நேருவுக்கும் இடையே கருத்து வேறுபாடுகள் நிலவின. அதேபோல, முதலாவது குடியரசுத்தலைவர் டாக்டர் இராஜேந்திர பிரசாத்துக்கும், முதலாவது பிரதமர் ஜவகர்லால் நேருவுக்கும் இடையே அடிப்படையான வேறுபாட்டு எண்ணங்கள் இருந்தன. குடியரசுத்தலைவரானவர் அரசியலமைப்பு ரீதியான தலைவர் மட்டுமே என்று பல திருத்தங்களும், நீதிமன்றத் தீர்ப்புகளும் தெளிவுபடுத்திய பின்னரும்கூட, அண்மையில் குடியரசுத தலைவராக இருந்த ஜைல்சிங், பிரதமர் ராஜிவ்காந்திக்கு எதிராக மோதல் நடவடிக்கையில் ஈடுபட்டு, பிரதமரைப் பதவி நீக்கம் செய்துவிடுவதாக அச்சுறுத்துகின்ற அளவுக்குச் செயல்பட்டார் என்பதையும் இங்கே குறிப்பிட்டாகவேண்டும்.

# இந்திய அரசுத் தலைமை வழக்கறிஞர் (அட்டர்னி-ஜெனரல்)

அரசாங்கத்திற்கு சட்ட சம்பந்தமான விஷயங்களில் ஆலோசனை வழங்கவும், சட்ட சம்பந்தமாக இடப்படும் பிற பணிகளைச் செய்யவும், உச்சநீதிமன்ற நீதிபதியாக நியமிக்கப்படுவதற்கான தகுதிகளை உடைய ஒருவரை இந்தியாவின் தலைமை வழக்கறிஞராக குடியரசுத் தலைவர் நியமிக்க, அரசியலமைப்பில் "நிர்வாக அமைப்பு" என்ற அத்தியாயத்தின் கீழ் ஓர் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது (பிரிவு 76).

குடியரசுத் தலைவர் விரும்பும்வரை அரசுத்தலைமை வழக்கறிஞர் பதவி வகிப்பார். எனினும், அரசாங்கத்தின் ஆலோசனையின் பேரிலேயே அவர் நியமிக்கப்படுவதால், ஆட்சி மாறியவுடன் அட்டர்னி-ஜெனரலும் பதவி விலகுவது ஒரு மரபாக உருவாகிவிட்டது.

அரசாங்கத்தின் தலைமைச் சட்ட அதிகாரியாக அட்டர்னி-ஜெனரல் விளங்குகிறார். இந்தியாவில் உள்ள நீதிமன்றங்கள் அனைத்திலும் முதலில் தன்னுடைய கருத்தைக் கேட்குமாறு கூறும் உரிமை அவருக்கு உண்டு. நாடாளுமன்றத்தின் இரண்டு அவைகளிலுமே, கூட்டத்தொடரின் நடவடிக்கைகளில் பங்குகொண்டு பேசுகின்ற உரிமையும் அவருக்கு உண்டு; எனினும் தீர்மானங்களின்மீது வாக்களிக்கும் உரிமை கிடையாது. அவர் நாடாளுமன்ற அவைகளின் முழு நேர அலுவலர் அல்லர்; இங்கிலாந்தில் இருப்பதுபோன்று அவர் கேபினட் உறுப்பினரும் அல்லர். இருந்தபோதிலும், இந்திய அரசாங்கத்திற்கு எதிரான வழக்குகளில் ஆலோசனைகள் கூறுவதைத் தவிர மற்ற வழக்குகளுக்கு வழக்குரைஞராக அவர் தொழில் நடத்துவதற்குத் தடையேதும் இல்லை.

# 12

# ஒன்றிய சட்டமியற்றும் அவை
## (நாடாளுமன்றம்)

(பகுதி V அத்தியாயங்கள் II & III, பிரிவுகள் 79-123)

இந்திய ஒன்றியத்தின் உயரதிகாரம் பெற்ற சட்டமியற்றும் அவைககு நாடாளுமன்றம் என்று பெயர். நாடாளுமன்ற மக்களாட்சி முறையின் இயல்புக்கு ஏற்றவாறு, நாட்டை ஆட்சிபுரிவதில் இந்திய நாடாளுமன்றம் மிக உயரிய இடத்தைப் பெற்றிருக்கிறது.

## நாடாளுமன்றத்தின் ஆக்க அமைப்பு

குடியரசுத்தலைவர், மாநிலங்களவை மற்றும் மக்களவை என்ற இரண்டு அவைகள், ஆகியவற்றைக் கொண்டதாக இந்திய நாடாளுமன்றம் அமைந் துள்ளது. ஒன்றியத்துக்கு நாடாளுமன்றம் ஒன்றிருக்கும் எனக் கூறி பிரிவு 79 தொடங்குகிறது. ஒன்றியத்துக்கு எப்போதுமே நாடாளுமன்றம் ஒன்று இருக்கும் என்று அதற்குப் பொருள். நாடாளுமன்றத்தின் மூன்று அங்கங் களில் மக்களவை மட்டுமே கலைக்கப்படக்கூடிய ஒன்றாகும். மாநிலங்களவை நிரந்தரமான அல்லது தொடர்ந்து நீடிக்கின்ற அவையாகும்; குடியரசுத் தலைவர் என்று ஒருவர், அல்லது குடியரசுத் தலைவரின் பணிகளைச் செய்கின்ற ஒருவர் எப்போதும் இருப்பார்.

*குடியரசுத்தலைவர்:* நாடாளுமன்றத்தின் ஓர் அங்கமாகக் குடியரசுத் தலைவர் விளங்கிய போதும் அவர், எந்த அவையின் நடவடிக்கைகளிலும் பங்கு பெறுவதோ விவாதங்களில் கலந்து கொள்வதோ கிடையாது. எனினும் இரண்டு அவைகளையும் அவ்வப்போது கூடுமாறு குடியரசுத் தலைவரே ஆணை பிறப்பிக்கிறார். இரண்டு அவைகளின் கூட்டத் தொடரையும் அவர் முடித்து வைக்கலாம்; அவர் நினைத்தால் மக்களவையைக் கலைத்துவிடலாம். முடித்துவைப்பது என்பதற்கு, ஒரு குறிப்பிட்ட கூட்டத்தொடரை நிறுத்திவைப்பது என்றும், கலைத்து விடுவது என்பதற்கு, அவைக்கு உயிரில்லாமல் செய்துவிடுவது என்றும் பொருள். இரண்டு 'அவைகளிலும் நிறைவேற்றப்பட்ட மசோதா, சட்டமாவதற்கு குடியரசுத்தலைவரின் ஒப்புதல் தேவையாகும். அதுமட்டுமின்றி, நாடாளுமன்றத்தில் இரண்டு அவைகளின் கூட்டத்தொடர் நடைபெறாத

போது, குடியரசுத் தலைவர் உடனடியாகச் செயல்படவேண்டிய அவசியமான சூழ்நிலை இருப்பதாக அவர் திருப்தியடைந்தால், நாடாளு மன்றத்தால் இயற்றப்படும் சட்டத்தைப் போலவே செயல்வீச்சுடைய அவசரச் சட்டத்தைக் குடியரசுத்தலைவர் பிறப்பிக்கலாம் (பிரிவுகள் 85, 111, 123).

மக்களவைக்கு பொதுத்தேர்தல் நடந்த பின்னர் தொடங்கும் முதலாவது கூட்டத்தொடரின் ஆரம்பத்திலும், ஒவ்வோராண்டின் முதலாவது கூட்டத் தொடரின் ஆரம்பத்திலும், நாடாளுமன்றத்தின் இரண்டு அவை உறுப்பினர் களும் ஒரு சேரக் கூடியுள்ள கூட்டத்தில் குடியரசுத் தலைவர் உரை யாற்றுவார். அந்தக் கூட்டத்தொடர்களின் காரணங்களை அப்போது அவர் நாடாளுமன்றத்திற்குத் தெரிவிப்பார். மேலும், நாடாளுமன்றத்தின் ஏதேனும் ஓர் அவையிலோ, இரண்டு அவைகளிலுமோ அவர் எப்போது வேண்டுமானாலும் உரையாற்றலாம். அதற்காக உறுப்பினர்கள் கட்டாயம் ஆஜராக வேண்டுமென அவர் கேட்கலாம். நாடாளுமன்றத்தில் நிலுவையில் உள்ள ஒரு மசோதாவைப் பற்றி அல்லது வேறு விஷயங்களைப் பற்றி, எந்த அவைக்கு வேண்டுமானாலும் குடியரசுத் தலைவர் செய்தி அனுப்பலாம். அவ்வாறு குடியரசுத் தலைவர் அனுப்பிய செய்தியில் குறிப்பிட்டுள்ள விஷயத்தைப் பற்றி சம்பந்தப்பட்ட அவை பரிசீலனை செய்ய வேண்டும் (பிரிவுகள் 86 & 87). குடியரசுத் தலைவரின் பரிந்துரையைப் பெற்ற பின்னரே, சில வகையான மசோதாக்களை நாடாளுமன்றத்தில் அறிமுகப்படுத்தி விவாதிக்க முடியும் (பிரிவுகள் 117 & 274(1)). (11ஆவது அத்தியாயத்தின் கீழும் காண்க).

*மாநிலங்களவை:* மாநிலங்களவை என்பது, அதன் பெயரே குறிப்பிடுவதுபோல, மாநிலங்களின் பிரதிநிதிகளைக் கொண்ட அவையாகும். ஒன்றியத்தின பல்வேறு அங்கங்களாகிய மாநிலங்கள் மற்றும் ஒன்றிய நேரடி ஆட்சிபபகுதிகளில் உள்ள மக்களின் மறைமுக பிரதிநிதித்துவ அமைப்பாக மாநிலங்களவை திகழ்கிறது. மாநிலச் சட்டப்பேரவைகளில் உள்ள தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களால், விகிதாச்சார பிரதிநிதித்துவ முறையில், ஒற்றைமாற்று வாக்கு மூலம், மாநிலங்களவையின் உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். (பிரிவு80(4). ஒன்றியத்தில் உள்ள பல்வேறு மாநிலங்களுக்கும், மாநிலங்களவையில் சமமான பிரதிநிதித்துவம் அளிக்கப் படவில்லை. ஒவ்வொரு மாநிலத்தில் இருந்தும் மாநிலங்களவைக்குத் தேர்ந்தெடுக்கப்படும் உறுப்பினர்களின் எண்ணிக்கை, அந்தந்த மாநிலங் களின் மக்கள் தொகையைப் பொறுத்து அமையும். அதன்படி மக்கள்தொகை அதிகமுள்ள உத்தரப்பிரதேச மாநிலத்தில் இருந்து மிக அதிகபட்சமாக 34 உறுப்பினர்களும், மணிப்பூர், மிஜோரம், சிக்கிம், திரிபுரா போன்ற சிறிய மாநிலங்களில் இருந்து தலா ஓர் உறுப்பினரும் மாநிலங்களவைக்குத் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். அந்தமான்-நிகோபர் தீவுகள், சண்டிகர், தத்ரா-நாகர் ஹவேலி, டாமன்-டையூ, லட்சத் தீவுகள் போன்ற ஒன்றிய ஆட்சிப் பகுதிகளின் மக்கள் தொகை மிகவும் குறைவாக இருப்பதால் அவற்றுக்கு மாநிலங்களவையில் பிரதிநிதித்துவம் கிடையாது. அரசிய லமைப்பின்படி மாநிலங்களவையில் 250-க்கும் மிகாத உறுப்பினர்கள்

இருப்பர். இவர்களில் 12 பேர் குடியரசுத் தலைவரால் நியமிக்கப்படுவர்; 238 பேர் மாநிலங்களில் இருந்தும், நேரடி ஆட்சிப் பகுதிகளில் இருந்தும் தேர்ந்தெடுக்கப்படுவர் (பிரிவு 80(1)).

தற்பொழுது மாநிலங்களவையில் 254 உறுப்பினர்கள் உள்ளனர். அவர்களின் விவரம் வருமாறு:

ஆந்திரப் பிரதேசம் - 18, அருணாசலப்பிரதேசம் - 1, அசாம் - 7, பீகார்- 22, கோவா - 1, குஜராத் - 11, ஹரியானா - 5, ஹிமாசலப்பிரதேசம் - 3, ஜம்மு கஷ்மீர் - 4, கர்நாடகம் - 12, கேரளம் - 9, மத்தியப்பிரதேசம் - 16, மகாராஷ்டிரம் - 19, மணிப்பூர் - 1 , மேகாலயா - 1, மிஜோரம் - 1, நாகலாந்து - 1, ஒரிசா - 10, பஞ்சாப் - 7, ராஜஸ்தான் -10, சிக்கிம் - 1, தமிழ்நாடு - 18, திரிபுரா - 1, உத்தரப்பிரதேசம் - 34, மேற்கு வங்கம் - 16, தில்லி - 3, புதுச்சேரி - 1, நியமன உறுப்பினர்கள் 12.

மக்களவை, ஒரு குறிப்பிட்ட பதவிக் காலத்தை உடையது என்றாலும் அதனை எந்த நேரத்தில் வேண்டுமானாலும் குடியரசுத் தலைவர் கலைத்து விடலாம். ஆனால் மாநிலங்களவையோ நிரந்தரமான அமைப்பாகும்; அதனைக் கலைக்க முடியாது. மாநிலங்களவை உறுப்பினர் ஒவ்வொருவரின் பதவிக்காலம் ஆறாண்டுகள். எனினும், நாடாளுமன்றம் இயற்றியுள்ள சட்டத்தின்படி மாநிலங்களவை உறுப்பினர்களில் கிட்டத்தட்ட மூன்றில் ஒரு பங்கு உறுப்பினர்கள் ஒவ்வோர் இரண்டாண்டு முடிவிலும் ஓய்வு பெறுவார்கள் (பிரிவு 83(1)). நாடாளுமன்றத்தின் இரண்டு அவைகளின் உறுப்பினர்களாலும் தேர்ந்தெடுக்கப்படும் குடியரசுத் துணைத்தலைவரே மாநிலங்களவையின் தலைவருமாவார். மாநிலங்களவையின் உறுப்பினர்கள தமக்குள்ளே ஒரு துணைத்தலைவரைத் தேர்ந்தெடுப்பார்கள் (பிரிவுகள் 64, 66, 89).

**மக்களவை:** இன்னொரு அவையான மக்களவை, மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளைக் கொண்டது. 18 வயது நிரம்பிய இந்தியக் குடிமகன் ஒவ்வொருவரும், சட்டத்தின்படி தகுதியிழப்புச் செய்யப்படாத பட்சத்தில், மக்களவைத் தேர்தலில் வாக்களிக்கும் உரிமை பெற்றவராவார் (பிரிவு 326). மாநிலங்களில் உள்ள தொகுதிகளில் இருந்து நேரிடையாகத் தேர்ந்தெடுக்கப்படும் உறுப்பினர்கள் 530-க்கு மிகாமலும், நேரடி ஆட்சிப்பகுதிகளில் இருந்து நேரிடையாகத் தேர்ந்தெடுக்கப்படும் உறுப்பினர்கள் 20-க்கு மிகாமலும் கொண்டதாக மக்களவை இருக்க வேண்டும் என்று அரசியலமைப்புக் கூறுகிறது (பிரிவு 81(1)). மேலும், ஆங்கிலோ இந்திய சமுதாயத்தைச் சேர்ந்த இரண்டு உறுப்பினர்களைக் குடியரசுத் தலைவர் மக்களவைக்கு நியமனம் செய்யலாம் (பிரிவு 331). இவ்வாறாக, மக்களவையில் அதிகபட்சமாக 552 உறுப்பினர்கள் இருக்கலாம் என்று அரசியலமைப்புக் கூறுகிறது. ஒவ்வொரு மாநிலத்திற்கும் ஒதுக்கப்படும் இடங்களின் எண்ணிக்கை விகிதமும், மாநிலங்களுக்கு இடையேயான மக்கள்தொகை விகிதமும் கிட்டத்தட்ட சமமாக இருக்கின்ற வகையில் மக்களவை இடங்களின் எண்ணிக்கை மாநிலங்களுக்கு இடையே பகிர்ந்தளிக்கப்பட்டுள்ளது (பிரிவு 81(2) (a). இங்கே மக்கள்தொகை என்பது, 1971 ஆம் ஆண்டின் மக்கள்தொகைக் கணக்கெடுப்பின்படியான மக்கள்

தொகையைக் குறிக்கும். கி.பி. 2000ஆவது ஆண்டுவரையில் மக்களவை இடங்களின் எண்ணிக்கையில் எந்தவித மாற்றமும் இருக்காது (பிரிவு 81(3).

மக்களவையில், மாநிலவாரியாக மக்கள்தொகை விகிதப்படி ஆதிதிராவிடர்களுக்கும், பழங்குடி இனத்தவருக்கும் இடங்கள் ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளன. தொடக்கத்தில் பத்தாண்டுகளுக்கு மட்டுமே இந்த ஒதுக்கீடு இருந்தது. எனினும் பத்தாண்டு முடிவில் ஒவ்வொரு முறையும் அடுத்த பத்தாண்டுகளுக்கு இட ஒதுக்கீடு நீட்டிக்கப்பட்டு வருகிறது (பிரிவுகள் 330 & 334).

அமெரிக்க ஐக்கிய நாடுகளின் பிரதிநிதிகளின் சபையைப் போலவும், இங்கிலாந்தின் பொதுமக்கள் சபையைப் போலவும் இந்தியாவின் மக்களவைக்கும் பதவிக்காலம் நிர்ணயிக்கப்பட்டுள்ளது. பிரதிநிதித்துவ மக்களாட்சியில் அரசாங்கம் தொடர்ந்து ஆட்சி புரிய வேண்டுமென்றால் குறிப்பிட்ட கால இடைவெளியில் அது மக்களின் ஆதரவைப் பெற்றாக வேண்டும் என்ற காரணத்தின் அடிப்படையிலேயே இந்த ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. மக்களவை முதன்முதலாகக் கூடுகின்ற நாளில் இருந்து அதன் பதவிக்காலம் ஐந்தாண்டுகளாகும். ஐந்தாண்டுகள் முடிந்தவுடன் மக்களவை கலைக்கப்பட்டுவிடும். சில சந்தர்ப்பங்களில், பதவிக்காலம் முடிவடைவதற்கு முன்னரே மக்களவை கலைக்கப்படலாம். அவசரநிலைப் பிரகடனம் அமலில் இருக்கும்போது நாடாளுமன்றம் மக்களவையின் பதவிக்காலத்தை ஒரு சமயத்தில் ஓராண்டுக்கு மிகாமல் நீட்டிக்கலாம்; எனினும், அவசரநிலைப் பிரகடனம் முடிவுக்கு வந்த பின்னர், ஆறு மாதங்களுக்குமேல் மக்களவையின் பதவிக்காலத்தை நீட்டிக்க முடியாது (பிரிவு 83). ஆனால் முதலாவது மக்களவையில் தொடங்கி, அனைத்துமே அவற்றின் பதவிக்காலம் முடிவதற்கு முன்னரே கலைக்கப்பட்டுவிட்டன. அவசரநிலைப் பிரகடனம் அமலில் இருந்தபோது ஒரே ஒரு தடவை மட்டும் மக்களவையின் பதவிக்காலம் நீட்டிக்கப்பட்டது. எனினும் நீட்டிக்கப்பட்ட காலக்கெடு முடிவதற்கு முன்னரே அவை கலைக்கப்பட்டுவிட்டது.

## நாடாளுமன்ற உறுப்பினர்கள்

***உறுப்பினராவதற்குத் தகுதிகள்:*** நாடாளுமன்றத்தின் இரண்டு அவைகளிலும் உறுப்பினராவதற்குரிய தகுதிகளை பிரிவு 83 கூறுகிறது. ஒரு நபர் நாடாளுமன்றத்திற்கு உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமானால் அவர் இந்தியக் குடிமகனாக இருக்க வேண்டும். மாநிலங்களவைக்கு உறுப்பினராக வேண்டுமானால் 30 வயது நிறைந்தவராகவும், மக்களவைக்கு உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட 25 வயது நிறைந்தவராகவும் இருக்க வேண்டும். கூடுதல் தகுதிகள், பிற சட்டத்தின் மூலம் நிர்ணயிக்கப்படலாம்.

***உறுப்பினர் தகுதியிழப்பு:*** (1) ஒருவர் இந்தியக் குடிமகனாக இல்லை என்றாலும், அல்லது ஏதேனும் வெளிநாட்டுக்கு விசுவாசியாக இருந்தாலும், (2) பட்ட கடனைத் தீர்க்காமல் திவாலாகிப் போனவராக இருந்தாலும், அல்லது ஒரு நீதிமன்றத்தால் புத்தி சுவாதீனம் இல்லாதவர் என்று அறிவிக்கப்பட்டு இருந்தாலும், (3) அமைச்சர் பதவி அல்லது

சட்டத்தால் விலக்களிக்கப்பட்ட பதவியைத் தவிர மத்திய அரசிலோ, மாநில அரசிலோ ஊதியம் பெறும் ஒரு பதவியை வகிப்பவராக இருந்தாலும், (4) நாடாளுமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டத்தால் வேறுவகையில் தகுதியிழப்புச் செய்யப்பட்டிருந்தாலும், நாடாளுமன்றத்தின் எந்த ஓர் அவைக்கும் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட முடியாது என்றும், ஏற்கெனவே உறுப்பினராக இருந்தால் தொடர்ந்து பதவியில் நீடிக்க முடியாது என்றும் பிரிவு 102 கூறுகிறது.

அத்துடன், 52ஆவது திருத்தச் சட்டத்தின் மூலம் சேர்க்கப்பட்ட பத்தாவது அட்டவணையின்படி, கட்சி தாவுகின்ற உறுப்பினரும் பதவியிழக்க நேரிடும்.

நாடாளுமன்றத்தின் இரண்டு அவைகளிலும் உள்ள ஏதேனும் ஓர் உறுப்பினர் பதவியிழக்க வேண்டுமென்ற சர்ச்சை தோன்றுமானால், தேர்தல் ஆணையத்திடம் இருந்து கருத்துக் கேட்ட பின்னர் அவ்விஷயத்தில் குடியரசுத் தலைவர் முடிவு செய்வார். கட்சி மாறல் காரணமாகப் பதவி யிழப்பு சர்ச்சை தோன்றினால், அதனை மக்களவைத் தலைவர் அல்லது மாநிலங்களவைத் தலைவர் தீர்மானிப்பார்.

**இடத்தைக் காலி செய்தல்:** நாடாளுமன்றத்தின் ஏதேனும் ஓர் அவையில் உறுப்பினராக உள்ள ஒருவர், இன்னொரு அவைக்கு அல்லது ஏதேனும் ஒரு மாநிலச் சட்டப்பேரவைக்கு உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப் பட்டால் ஏதேனும் ஓர் இடத்தை அவர் விட்டுவிட வேண்டும் என்று பிரிவு 101 கூறுகிறது. மாநிலச் சட்டமன்றத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டு, சட்டமன்ற உறுப்பினர் பதவியில் இருந்து விலகவில்லை என்றால் நாடாளுமன்றத்தில் அவருடைய இடம் காலியாகி விட்டதாக அறிவிக்கப்படலாம். உறுப்பினர் எவரேனும் தகுதியிழக்க நேரிட்டாலும், தாமே முன்வந்து பதவி விலகினாலும் நாடாளுமன்றத்தில் அவருடைய இடம் காலியாகிவிடும். உறுப்பினர் எவரேனும் முன் அனுமதியின்றி அறுபது நாட்களுக்கு மேல் அவை நடவடிக்கைகளில் பங்கு பெறாமல் இருந்தாலும் அவருடைய இடம் காலியானதாக அவை அறிவிக்கலாம்.

**உறுப்பினர்களின் பதவிப் பிரமாணம்:** பொதுத் தேர்தலுக்கு பின்னர் முதன்முதலாக நடைபெறும் மக்களவைக் கூட்டத்தொடரின் முதலாவது அமர்வில், உறுப்பினர்கள் அனைவருக்கும் பதவிப் பிரமாணம் செய்து வைக்கப்படும். 'இந்திய அரசியலமைப்பின்பால் உண்மையான நம்பிக்கையும், விசுவாசமும் கொள்வதாகவும், இந்தியாவின் இறையாண்மையையும் ஒருமைப்பாட்டையும் பேணிக் காப்பதெனவும், நாடாளுமன்ற உறுப் பினராகத் தமது கடமையை உரிய முறையில் நிறைவேற்றுவதாகவும்' உறுப்பினர் ஒவ்வொருவரும் உறுதிமொழி எடுத்துக் கொள்வர். நாடாளுமன்றத்தின் எந்த ஓர் அவையிலும் உறுப்பினராவதற்கு இவ்வாறு உறுதிமொழி எடுத்துக் கொள்ள வேண்டியது முன் நிபந்தனை ஆகும் (பிரிவு 99 மற்றும் மூன்றாவது அட்டவணை).

**ஊதியமும் படிகளும்:** நாடாளுமன்றம் அவ்வப்போது சட்டத்தின் மூலம் தீர்மானிக்கின்றபடி இரண்டு அவைகளின் உறுப்பினர்களுக்கும் ஊதியமும் படிகளும் உண்டு (பிரிவு 106). ஆனால் ஓய்வூதியம் வழங்குவது

பற்றி இந்தப் பிரிவில் எதுவும் சொல்லப்படவில்லை என்பதை நாம் கவனிக்க வேண்டும். எனினும், நாடாளுமன்ற உறுப்பினர்கள் (ஊதியம், படிகள், ஓய்வூதியம்) சட்டத்தின்படி, உறுப்பினர்களுக்கு ஓய்வூதியம் வழங்கப் படுகிறது. நாடாளுமன்றத்தில் ஓராண்டு மட்டுமே உறுப்பினராக இருந்தவர் களுக்கும் ஓய்வூதியம் வழங்க வகை செய்யும் மசோதா ஒன்றை, ஒன்பதாவது மக்களவையின் போது இரண்டு அவைகளும் நிறைவேற்றின. ஆனால் அந்த மசோதாவிற்குக் குடியரசுத் தலைவர் ஒப்புதல் அளிக்கவில்லை.

## அவைகளின் அதிகாரிகள்

மக்களவைக்கும், மாநிலங்களவைக்கும் தலைவர் ஒருவரும், துணைத்தலைவர் ஒருவரும் இருக்க வேண்டும் என அரசியலமைப்புக் கூறுகிறது. இந்தியாவின் குடியரசுத் துணைத்தலைவரே மாநிலங்களவையின் தலைவரும் ஆவார். மாநிலங்களவையின் துணைத் தலைவராக தமக்குள்ளேயே ஒருவரை அந்த அவையின் உறுப்பினர்கள் தேர்ந்தெடுத்துக் கொள்வர். மக்களவையின் தலைவரையும் (சபாநாயகர்), துணைத்தலைவரையும் (துணை சபாநாயகர்), தமக்குள்ளேயே அந்த அவையின் உறுப்பினர்களே தேர்ந்தெடுப்பர். மக்களவைத் தலைவர் அவையில் இல்லாத நேரங்களில், அவருடைய பணியைத் துணைத் தலைவர் செய்வார். இது போலவே, மாநிலங்களவைத் தலைவர் இல்லாத நேரங்களில் அவருடைய பணிகளை அவையின் துணைத்தலைவர் நிறைவேற்றுவார். அவைத்தலைவரின் பணிகளைத் துணைத்தலைவர்கள் செய்யும் போது, அவைத் தலைவருக்குரிய அனைத்து அதிகாரங்களையும் அவர்கள் செயல்படுத்துவார்கள் (பிரிவு 64, 89, 91, 93, 94, 95)

பொதுவாகப் பார்க்கும்போது, இந்திய மக்களவைத் தலைவரின் நிலைமை கிட்டத்தட்ட, இங்கிலாந்து பொதுமக்கள் சபை சபாநாயகரின் நிலையோடு ஒத்திருப்பதைக் காணலாம். மக்களவைத் தலைவர் பதவி மிகவும் கௌரவமும், சிறப்பும், அதிகாரமும் கொண்ட ஒன்றாகும். மக்க ளவையின் நடவடிக்கைகளை சுமுகமாகவும் ஒழுங்காகவும் நடத்திச் செல்லவேண்டியது அவருடைய பொறுப்பாகும். அவையின் உள்ளேயும், அவை தொடர்பான அனைத்து விஷயங்களிலும் அவருடைய முடிவே இறுதியானதாகும். அவருடைய ஊதியமும் படிகளும் தேசிய ஒருங்கிணைப்பு நிதியத்தில் இருந்து வழங்கப்படுகின்றன. அதாவது, அந்தச் செலவுகளுக்காக நாடாளுமன்றத்தில் ஒப்புதல் பெற வேண்டியதில்லை. அவருடைய நடத்தையைப் பற்றி முறையாகத் தீர்மானம் கொண்டுவராமல் விமர்சிக்க முடியாது. மக்களவையில் ஏதேனும் விஷயத்தின்மீது வாக்கெடுப்பு நடக்கும்போது ஆதரவு வாக்குகளும் எதிர்ப்பு வாக்குகளும் சமநிலையில் இருக்கும்போது மட்டுமே முடிவைத் தீர்மானிப்பதற்காக மக்களவைத் தலைவர் தம்முடைய வாக்கைச் செலுத்துவார் (பிரிவுகள் 94, 96, 100(1), 112(3)(b)).

நாடாளுமன்றத்தின் இரண்டு அவைகளுக்கும் இடையேயான உறவுகளைப் பொறுத்தவரையில் மக்களவைத் தலைவருக்கு அரசிய லமைப்பு சிறப்பான அந்தஸ்தை வழங்கியுள்ளது. மக்களவையின் வரம்புக்கு

உட்பட்டதான நிதி விஷயங்கள் எவை என்று அவர்தான் தீர்மானிக்கிறார். ஏதேனும் ஒரு மசோதாவை 'பணமசோதா' என்று அவர் சான்றளித்தால் அதில் அவருடைய முடிவே இறுதியானது. ஏதேனும் ஒரு சட்டத்தைப் பற்றி இரண்டு அவைகளுக்கும் கருத்து உடன்பாடு ஏற்படாத நிலையில், இரண்டு அவைகளின் கூட்டுக் கூட்டம் நடைபெறும்போது அதற்கு மக்களவைத் தலைவரே தலைமையேற்று நடத்துவார். அப்போது அவையின் நடைமுறைவிதிகள் அனைத்தும் அவருடைய ஆணையின் பேரிலேயே பின்பற்றப்படும் (பிரிவுகள் 108, 118(4)).

மக்களவைத் தலைவரும், துணைத்தலைவரும், மக்களவையின் உறுப்பினர்களாக நீடிக்க முடியாத நிலையில் பதவி விலக வேண்டும். இருவரில் எவரேனும் பதவி விலக எண்ணினால் மற்றவருக்குத் தமது பதவிவிலகல் கடிதத்தை அனுப்ப வேண்டும். அவர்களைப் பதவி நீக்கம் செய்ய வேண்டும் என்றால், 14 நாட்கள் முன்னறிவிப்புக் கொடுத்துவிட்டு மக்களவையின் பெரும்பான்மை உறுப்பினர்களின் ஆதரவோடு ஒரு தீர்மானத்தை நிறைவேற்ற வேண்டும்(பிரிவு 94). மாநிலங்களவைத் துணைத் தலைவரைப் பதவி நீக்கம் செய்வதற்கான இதே போன்ற ஏற்பாடு பிரிவு 90-ல் சொல்லப்பட்டுள்ளது. மக்களவை கலைக்கப்பட்ட பின்னரும், புதிதாகத் தேர்ந்தெடுக்கப்படும் அவையின் முதலாவது அமர்வு தொடங்கும்வரை, மக்களவைத் தலைவர் தொடர்ந்து பதவியில் இருப்பார் (பிரிவு 94, நிபந்தனை வகையுரை 2).

## நாடாளுமன்றக் கூட்டத் தொடர்கள்

நாடாளுமன்றத்தின் அவைகளைக் கூடுமாறு அவ்வப்போது குடியரசுத் தலைவரே ஆணையிடுவார். எனினும் ஒரு கூட்டத் தொடருக்கும் இன்னொரு கூட்டத் தொடருக்கும் இடையே ஆறுமாத கால இடைவெளி இருக்கக் கூடாது என்று பிரிவு 85(1) கூறுகிறது. பொதுவாக ஒவ்வோராண்டும் மூன்று முறை நாடாளுமன்றத்தின் கூட்டங்கள் நடைபெறும். அவை— பட்ஜெட் கூட்டத் தொடர் (பிப்ரவரி-மே), மாரிக்காலக் கூட்டத்தொடர் (ஜூலை- செப்டம்பர்), குளிர்காலக் கூட்டத்தொடர் (நவம்பர்-டிசம்பர்). ஆனால் மாநிலங்களவையின் பட்ஜெட் கூட்டத்தொடர் மட்டும் மூன்று-நான்கு வாரகால இடைவெளியுடன் இரண்டு பகுதிகளாக நடைபெற்று, ஓராண்டில் நான்கு கூட்டத்தொடர்களாக நடைபெறும்.

## அவை நடவடிக்கைகளும் சட்டமியற்றும் நடைமுறையும்

நாடாளுமன்றத்தின் ஒவ்வோர் அவையும் செயல்படும் முறையில் தனக்குத் தானே எஜமானாகத் திகழ்கின்றன. அரசியலமைப்பின் வகையுரைகளுக்கு உட்பட்டு அவை தத்தம் நடைமுறையை நெறிப்படுத்தும் விதிகளை இயற்றிக் கொள்ளலாம் (பிரிவு 118). நாடாளுமன்றத்தின் எந்த ஒரு நடைமுறையும் முறைப்படியாக இருக்கவில்லை என்று காரணங்காட்டி எந்த ஒரு நீதிமன்றத்திலும் அந்த நடைமுறை செல்லுபடியாகாது என வழக்குத் தொடுக்க முடியாது. நாடாளுமன்ற நடைமுறைகளை முறைப்படுத்துவதில்

அல்லது அவையை நடத்திச் செல்வதில் தன்னுடைய அதிகாரங்களைப் பயன்படுத்தியது சம்பந்தமாக எந்த ஓர் உறுப்பினரையோ, அதிகாரியையோ நீதிமன்றத்தின் விசாரணைக்கு உட்படுத்த முடியாது (பிரிவு 122).

அவையை நடத்திச் செல்வது மற்றும் அவை நடைமுறைகள் பற்றிய சில அடிப்படை விதிகள் அரசியலமைப்பிலேயே இடம் பெற்றுள்ளன (பிரிவு100). அவை: (1) அரசியமைப்பில் வேறுவிதமாகச் சொல்லப்பட்டுள்ள சூழ்நிலைகள் தவிர (எ.கா. அரசியலமைப்புத் திருத்தங்கள், குடியரசுத் தலைவர் மீது குற்றச்சாட்டுத் தீர்மானம், அவைத்தலைவர்கள், நீதிபதிகள் போன்றோரை பதவி நீக்கம் செய்வது போன்றவை) மற்ற அனைத்து விஷயங்களும், அது எந்த ஓர் அவையின் கூட்டமாக இருந்தாலும், அல்லது இரண்டு அவைகளின் கூட்டுக் கூட்டமாக இருந்தாலும், அப்போது அவையில் ஆஜராகி வாக்களிக்கின்ற உறுப்பினர்களின் பெரும்பான்மை ஆதரவைப் பொறுத்தே தீர்மானிக்கப்பட வேண்டும். ஆதரவு வாக்குகளும் எதிர்ப்பு வாக்குகளும் சமநிலையில் இருக்கும்போது மட்டுமே முடிவைத் தீர்மானிப்பதற்காக, அவைத் தலைவர் தம்முடைய வாக்கைச் செலுத்துவார். (2) எந்த ஓர் அவையின் நடவடிக்கைகளானாலும், உறுப்பினர் பதவி யிடங்கள் நிரப்பப்படாமல் இருந்தாலும், விவாதத்தில் அல்லது வாக்கெடுப்பில் எந்த ஓர் உறுப்பினரும் கலந்து கொள்ளாவிட்டாலும் கூட அந்த நடவடிக்கைகள் செல்லுபடியாகும். (3) எந்த ஓர் அவையானாலும், அதனை நடத்திச் செல்வதற்கு அவையின் மொத்த உறுப்பினர்களில் பத்தில் ஒரு பங்கு உறுப்பினர்கள் கட்டாயம் ஆஜராகி இருக்கவேண்டும்.

பண மசோதாக்கள் மற்றும் ஏனைய நிதி மசோதாக்கள் தவிர வேறு எந்த மசோதாவானாலும் அதனை ஏதேனும் ஓர் அவையில் முதலில் அறிமுகப்படுத்தலாம். அவ்வாறு அறிமுகப்படுத்தப்படும் மசோதா, குடியரசுத் தலைவரின் ஒப்புதலுக்கு அனுப்பப்படும் முன்னர், நாடாளுமன்றத்தின் இரண்டு அவைகளிலும், திருத்தங்கள் ஏதுமின்றியோ, இரண்டு அவைகளும் ஒப்புக் கொண்ட திருத்தங்களுடனோ, ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும். பண மசோதாவைத் தவிர, ஏதேனும் ஒரு மசோதா சம்பந்தமாக இரண்டு அவைகளுக்கும் இறுதியாகக் கருத்து வேறுபாடுகள் இருக்குமானால் அவற்றைத் தீர்ப்பதற்காகக் குடியரசுத் தலைவர் இரண்டு அவைகளின் கூட்டுக் கூட்டத்தை அழைக்கலாம் (பிரிவுகள் 107,108).

நிதி மசோதாக்கள்: பண மசோதாக்களுக்கும் நிதி மசோதாக்களுக்கும் உள்ள வேறுபாட்டை அரசியல் சட்டம் விளக்குகிறது. பொதுவாகச் சொல்வதானால், வருவாய் அல்லது செலவு சம்பந்தமான மசோதா, நிதி மசோதா எனப்படும். பண மசோதா சம்பந்தப்பட்ட விஷயங்கள் என்று அரசியலமைப்பில் சொல்லப்பட்டுள்ளவை தவிர மற்ற விஷயங்களைக் கொண்டதாகவும் ஒரு நிதி மசோதா இருக்கலாம். நம்முடைய வசதி கருதி, நிதி மசோதாவை இரண்டு வகையாகப் பிரித்துள்ளனர். வகை (அ): பண மசோதாவுக்கு என்று பிரிவு 110-ல் குறிப்பிட்டுள்ள விஷயங்களைப் பற்றியதாக இருக்கின்ற அதே வேளையில் முழுக்க முழுக்க அந்த விஷயங் களைப் பற்றியதாக மட்டும் இல்லாத மசோதாக்கள்: எ.கா— வரிவிதிப்பு சம்பந்தமான ஒரு ஷரத்தை மட்டும்கொண்டு, முழுக்க முழுக்க வரி

விதிப்புப் பற்றியதாக இல்லாத மசோதா. வகை(ஆ): தேசிய ஒருங்கிணைப்பு நிதியத்தில் இருந்து செலவு செய்வது சம்பந்தமான பிரேரணைகள் அடங்கிய மசோதாக்கள் (பிரிவுகள் 110, 117).

## பண மசோதாக்களுக்கான சிறப்பு நடைமுறை

வரிவிதிப்பு, கடன்வாங்குதல், தேசிய ஒருங்கிணைப்பு நிதியம் மற்றும் எதிர் பாராத செலவு நிதியம் ஆகியவற்றின் பொறுப்பு, நிதி ஒதுக்கீடுகள், ஏதேனும் ஒரு செலவினத்தை தேசிய ஒருங்கிணைப்பு நிதியத்தில் இருந்து மேற்கொண்டதாக அறிவித்தல், தேசிய ஒருங்கிணைப்பு நிதியத்திற்காக பணத்தைப் பெற்று, வைத்துக் கொள்ளுதல், ஒன்றிய (அல்லது ஒரு மாநிலத்தின்) கணக்குகளைத் தணிக்கை செய்தல், அல்லது இவை தொடர்பான பிற விஷயங்கள் ஆகியவற்றை மட்டுமே கொண்டுள்ள மசோதாக்கள் பணமசோதாக்கள் என்று பிரிவு 110 வரையறை செய்கிறது. அபராதம் அல்லது பணம் செலுத்த வேண்டும் எனத் தண்டனை அல்லது உரிமங்களுக்காகக் கட்டணம், அல்லது சேவைகளுக்காகக் கட்டணம், போன்றவற்றை விதிக்கின்ற காரணத்தினாலோ, உள்ளாட்சி அமைப்பின் நோக்கத்திற்காக ஏதேனும் வரி விதிப்பது அல்லது அது தொடர்பான நெறிமுறைகளைக் கொண்டிருக்கின்ற காரணத்தினாலோ ஒரு மசோதா பணமசோதா ஆகிவிடாது. ஒரு மசோதா, பணமசோதாவா என்ற ஐயம் தோன்றினால், அதில் மக்களவைத் தலைவரின் தீர்ப்பே இறுதியானது. பணமசோதாவைக் குடியரசுத் தலைவரின் ஒப்புதலுக்காக அனுப்பும்போது, அது ஒரு பணமசோதா என்று மக்களவைத் தலைவர் சான்றளிக்க வேண்டும் (பிரிவு 110). பணமசோதாவைக் குடியரசுத்தலைவரின் பரிந்துரையின் பேரில், மக்களவையில் மட்டுமே அறிமுகப்படுத்த முடியும். மக்களவையில் ஏற்றுக்கொள்ளப்பட்ட பின்னர் மாநிலங்களவைக்கு அனுப்பப்படும் பணமசோதாவின் மீது ஏதேனும் திருத்தங்களுக்கான பரிந்துரைகள் இருக்குமானால் அவற்றை 14 நாட்களுக்குள் மாநிலங்களவை சொல்லவேண்டும். அந்தத் திருத்தங்களை அப்படியே ஏற்றுக் கொள்ளலாம்; அல்லது ஏதேனும் ஒரு திருத்தத்தையோ, திருத்தங்கள் அனைத்தையுமோ நிராகரித்துவிடலாம். திருத்தங்களை மக்களவை ஏற்றுக் கொண்டால், மக்களவை ஏற்றுக் கொண்டபடியே இரண்டு அவைகளும் அந்த மசோதாவை ஏற்றுக் கொண்டதாகக் கருதப்படும். மாநிலங்களவை பரிந்துரைத்த திருத்தங்களை மக்களவை ஏற்றுக் கொள்ளாவிட்டாலும், அல்லது, மாநிலங்களவையில் இருந்து 14 நாட்களுக்குள் அந்த மசோதா திருப்பி அனுப்பப்படாவிட்டாலும், மக்களவை ஏற்றுக்கொண்ட வடிவத்திலேயே அந்த மசோதா இரண்டு அவைகளிலும் ஏற்றுக்கொள்ளப்பட்டதாகக் கருதப்படும் (பிரிவு 109).

## மசோதாக்களுக்கு ஒப்புதல் அளித்தல்

நாடாளுமன்றதின் இரண்டு அவைகளிலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒரு மசோதா, குடியரசுத் தலைவரின் ஒப்புதலுக்காக அனுப்பப்படும்போது, அவர் அந்த மசோதாவுக்கு ஒப்புதலை அளிக்கலாம்; ஒப்புதல் அளிக்காமல்

நிறுத்தியும் வைக்கலாம். அது பணமசோதாவாக இல்லாவிட்டால், மறு பரிசீலனை செய்யுமாறு கூறி, மீண்டும் நாடாளுமன்றத்திற்கே திருப்பி அனுப்பலாம். அவ்வாறு திருப்பி அனுப்பப்பட்ட மசோதாவைத் திருத்தங்களுடனோ, திருத்தம் இன்றியோ மீண்டும் இரண்டு அவைகளும் ஏற்றுக் கொண்டு குடியரசுத் தலைவரின் ஒப்புதலுக்காக அனுப்பினால், அந்த மசோதாவுக்கு ஒப்புதல் அளிக்காமல் குடியரசுத் தலைவர் நிறுத்தி வைக்க முடியாது (பிரிவு 111). இல்லையென்றால், மசோதா சம்பந்தமான மேலும் சில விவரங்களைத் தருமாறு அவர் கோரலாம்; அல்லது அரசுக்கு, அதாவது அமைச்சரவைக்கு அதனைத் திருப்பி அனுப்பி, அம்மசோதாவுக்கு ஒப்புதல் அளிக்க வேண்டும் என்ற அமைச்சரவையின் ஆலோசனையை மறு பரிசீலனை செய்யுமாறு கோரலாம் (பிரிவுகள் 74(2), 78(b)). அஞ்சல் மசோதாவை குடியரசுத் தலைவர் கியானி ஜெயில்சிங்கும், ஓராண்டு பதவி வகித்த நாடாளுமன்ற உறுப்பினர்களுக்கு ஓய்வூதியம் வழங்க வகை செய்த மசோதாவை குடியரசுத் தலைவர் திரு. வெங்கட்ராமனும் இப்படித்தான் திருப்பி அனுப்பினார்கள் போலும்.

## நிதி சம்பந்தமான விஷயங்களில் நடைமுறை

*பட்ஜெட்:* ஒவ்வொரு நிதியாண்டிலும் எதிர்பார்க்கப்படும் அரசின் செலவுகள் மற்றும் வரவுகள் பற்றிய அறிக்கை ஒன்றை, நாடாளுமன்றத்தின் இரண்டு அவைகளிலும், குடியரசுத் தலைவர் தாக்கல் செய்விக்க வேண்டும். இந்த அறிக்கையே வருடாந்திர நிதிநிலை அறிக்கை அல்லது பட்ஜெட் எனப் படுகிறது.

வருடாந்திர நிதிநிலை அறிக்கையில் இடம்பெறும், எதிர்பார்க்கப்படும் செலவினங்களில் கீழ்க்கண்ட விவரங்கள் தனித்தனியாகக் காட்டப்பட வேண்டும்.

அ- தேசிய ஒருங்கிணைப்பு நிதியததில் இருந்து வழங்கப்பட வேண்டியவை என்று அரசியலமைப்பில் குறிப்பிடப்பட்டுள்ள செலவினங்கள்;

ஆ). தேசிய ஒருங்கிணைப்பு நிதியத்தில் இருந்து செலவிடத் திட்டமிடப்பட்டுள்ள பிற செலவினங்கள்; வருவாய்க் கணக்கிலான செலவுகள், மற்ற செலவுகளில் இருந்து பிரித்துக் காட்டப்பட வேண்டும்.

தேசிய ஒருங்கிணைப்பு நிதியத்தில இருந்து வழங்கப்பட வேண்டிய செலவுகளில் கீழ்க்கண்டவை அடங்கும.

(அ) குடியரசுத் தலைவரின் ஊதியம், படிகள் மற்றும் அவருடைய அலுவலகம் தொடர்பான பிற செலவுகள்.

(ஆ) மாநிலங்களவைத் தலைவர், துணைத்தலைவர் மற்றும் மக்களவைத் தலைவர், துணைத்தலைவர் ஆகியோரின் ஊதியங்களும் படிகளும்.

(இ) வட்டி, மூழ்கும் நிதியச் செலவுகள், கடன்பத்திர மீட்புச் செலவுகள் உள்ளிட்ட இந்திய அரசு செயய வேணடிய கடன் செலவுகள்; மற்றும் கடன்பெறவும், கடன்களை அடைக்கவும் மேற்கொள்ளப் பட வேண்டிய செலவுகள்.

(ஈ) (1) உச்ச நீதிமன்ற நீதிபதிகளுக்கு வழங்கப்படக்கூடிய ஊதியம், படிகள் மற்றும் ஓய்வூதியங்கள்; (2) சமஷ்டி நீதிமன்ற நீதிபதிகளுக்கு வழங்கப்படக்கூடிய ஓய்வூதியங்கள்; (3) இந்திய ஆட்சிப்பகுதிக்குள் சேர்க்கப்பட்டுள்ள ஏதேனும் ஒரு பகுதிக்குள் செயல்படுகின்ற அல்லது அரசியலமைப்பு அமலுக்கு வருவதற்கு முன்னர் இந்திய டொமினியனில் இருந்த கவர்னரின் மாகாணத்தில் செயல்பட்ட உயர்நீதிமன்றங்களின் நீதிபதிகளுக்கான ஓய்வூதியங்கள்;

(உ) இந்தியாவின் தலைமைக் கணக்குத் தணிக்கையருக்கு வழங்கப்படக்கூடிய ஊதியம், படிகள் மற்றும் ஓய்வூதியம்.

(ஊ) எந்த ஒரு நீதிமன்றம் அல்லது மத்தியஸ்த தீர்ப்பாயம் வழங்கும் தீர்ப்புக்காக செலுத்தப்படவேண்டிய தொகை.

(எ) அரசியலமைப்போ அல்லது ஒரு சட்டத்தின்படி நாடாளுமன்றமோ இதிலிருந்து வழங்கப்படவேண்டும் என்று அறிவிக்கின்ற பிற செலவுகள்.

*மதிப்பீடுகளும் மானியக் கோரிக்கைகளும்:* தேசிய ஒருங்கிணைப்பு நிதியத்தில் இருந்து வழங்கப்பட வேண்டிய செலவுகளுக்கான மதிப்பீடுகளை நாடாளுமன்றத்தில் வாக்கெடுப்புக்கு விட வேண்டியதில்லை; ஆனால் அவற்றின் மீது விவாதம் நடத்துவதற்குத் தடையேதும் இல்லை. மற்ற மதிப்பீடுகள் யாவும் மானியக் கோரிக்கைகளாக மக்களவையில் தாக்கல் செய்யப்பட வேண்டும். மக்களவை அவற்றுக்கு ஒப்புதல் அளிக்கலாம்; அல்லது நிராகரிக்கலாம். மானியக் கோரிக்கையில் கேட்கப்படும் தொகையில் ஓரளவு குறைத்துக் கொண்டு அவை ஒப்புதல் அளிக்கலாம். எந்த ஒரு மானியக் கோரிக்கையையும் தாக்கல் செய்வதற்கு முன்னர் குடியரசுத் தலைவரின் பரிந்துரையைப் பெறவேண்டும் (பிரிவு 113).

*நிதி ஒதுக்கீடு மசோதாக்கள்:* மக்களவையில் மானியக் கோரிக்கைகளுக்கு ஒப்புதல் பெறப்பட்ட பின்னர், தேசிய ஒருங்கிணைப்பு நிதியத்தில் இருந்து நிதி ஒதுக்கீடு பெறுவதற்கான மசோதா தாக்கல் செய்யப்படும். மானியங்களுக்குத் தேவையான தொகையைப் பெறுவதற்கு அவை ஒப்புதல் அளித்தவுடன் அச்செலவு தேசிய ஒருங்கிணைப்பு நிதியத்தில் இருந்து வழங்கப்படும். தொகையை மாற்றியமைப்பதற்கோ, மானியம் வழங்கப்பட்ட தலைப்பில், ஒதுக்கீடுகளைத் திருத்தியமைப்பதற்கோ, வழங்கப்பட்ட செலவுத் தொகையை மாற்றியமைப்பதற்கோ வகை செய்யும் எந்தத் திருத்தமும் அனுமதிக்கப்பட மாட்டாது. நிதி ஒதுக்கீடு சட்டத்தை இயற்றுவதன் மூலம் நாடாளுமன்றத்தின் ஒப்புதலைப் பெறாமல் தேசிய ஒருங்கிணைப்பு நிதியத்தில் இருந்து பணமேதும் எடுக்க முடியாதாகையால், ஒதுக்கீடு மசோதா அவசியமாகும். கூடுதல் மானியக் கோரிக்கைகளும் துணை மானியக் கோரிக்கைகளும், இதே நடைமுறைப்படி தனியாக ஒப்புதல் பெறவேண்டும் (பிரிவுகள் 114, 115).

பிரிவு 116, பட்ஜெட்டுக்கு ஒப்புதல் அளிக்கப்பட்டு எல்லா நடவடிக்கைகளும் முடியும் முன்னர் முன்கூட்டியே மானியங்களைப் பெறுவதற்கும் (கணக்குக்கு ஒப்புதல்); எந்த ஒரு நிதியாண்டிற்கும்

தொடர்பில்லாத நடப்பு சேவைக்காக விதிவிலக்காக மானியத்தைப் பெறவும்; எதிர்பாராமல் ஏற்பட்ட மிகப் பெரும் செலவுக்காகவோ, முடிவேயில்லாத தன்மையுடைய செலவுகளுக்காகவோ மானியத்தைப் பெறவும்; வழி வகுக்கிறது.

நிதி சம்பந்தமான நடவடிக்கைகளை உரிய காலத்திற்குள் நிறைவேற்றுவதற்கான நடைமுறையைச் சட்டத்தின் மூலம் நாடாளுமன்றம் நெறிப்படுத்தலாம் (பிரிவு119)

## நாடாளுமன்றத்தில் மொழி

நாடாளுமன்றத்தின் நடவடிக்கைகளை மேற்கொள்வதற்கு இந்தியும ஆங்கிலமும் பின்பற்றப்படும் என்று அரசியலமைப்புக் கூறுகிறது. இவ்விரண்டு மொழிகளிலும் பரிச்சயமில்லாத எந்த உறுப்பினரையும் அவையில் அவருடைய தாய்மொழியில் பேசுவதற்கு அவைத் தலைவர் அனுமதி அளிக்கலாம் (பிரிவு 120).

## நாடாளுமன்றச் சிறப்புரிமைகள்

நாடாளுமன்றத்தின் அவைகளுக்கும், உறுப்பினர்களுக்கும், குழுக்களுக்குமுள்ள அதிகாரங்கள், சிறப்புரிமைகள் போன்றவற்றை அரசியலமைப்பின் 105 ஆவது பிரிவு வழங்குகிறது.

'சிறப்புரிமை' என்றால் ஒரு பிரிவினர் அல்லது சிலர் மட்டும் அனுபவிக்கக் கூடிய விசேஷமான அல்லது விதிவிலக்கான உரிமை அல்லது சுதந்திரம் ஆகும். சட்டப்பூர்வமாக பார்த்தால், மற்றவர்களுக்கு உரிய கடமை, சுமை, ஆஜர், பொறுப்பு போன்ற சிலவற்றில் இருந்து விதி விலக்கு அளிப்பதே சிறப்புரிமையாகும் மற்றவர்களுக்கு இல்லாத உரிமையே சிறப்புரிமை என்றும் கூறலாம். நாடாளுமன்றச் சிறப்புரிமைகள் என்றால் நாடாளுமன்ற அவைகளுக்கும், அவற்றின் உறுப்பினர்களுக்கும் குழுக் களுக்கும் உள்ள விசேஷமான உரிமைகளாகும். இந்தச் சிறப்புரிமைகள் இல்லாமல் எதிர்பார்க்கின்றபடி அவற்றால் செயல்பட முடியாது.

நாடாளுமன்ற அவைகளும், அவற்றின் குழுக்களும், உறுப்பினர்களும் கண்ணியமாகவும் சுதந்திரமாகவும் தலையீடுகள இல்லாமலும் செயல் படுவதற்காக சிறப்புரிமைகள் வழங்கப்பட்டுள்ளன. நடைமுறையில், இந்தச் சிறப்புரிமைகள் சில அதிகாரங்களையும், விதிவிலக்குகளையும் அளித்துள்ளன. எனினும், நாடாளுமன்றத்தின் நலனைப் பாதுகாக்க வேண்டுமென்ற காரணங்கள் இருந்தால் அன்றி, உறுப்பினர்களின் இந்தச் சிறப்புரிமை அவர்களை மற்ற சாதாரணக் குடிமக்களைக் காட்டிலும் சட்டத்தின் முன் மாறுபட்டவர்களாக ஆக்காது. நாடாளுமன்ற உறுப் பினர்கள் உள்பட குடிமக்கள் அனைவரும் சட்டத்தின்முன் ஒரே மாதிரியாக நடத்தப்பட வேண்டும் என்பதுதான் அடிப்படைச் சட்டம். நாடாளு மன்றத்தின் கடமைகளைச் செய்யும்போது தவிர, மற்ற நேரங்களில் சாதாரணக் குடிமக்களுக்கு உ ' ப உரிமைகளும் பொறுப்புகளும் அவர் களுக்கும் உண்டு. மக்கள் பிரதி · திகளாக அவர்கள் நாடாளுமன்றத்தில்

செயல்படும் போதும், நாடாளுமன்ற பொறுப்புகளை நிறைவேற்றும்போதும் மட்டுமே அவர்களுக்கு இந்தச் சிறப்புரிமைகள் கிடைக்கும். நாடாளுமன்ற உறுப்பினர்கள் சமுதாயத்திற்கு ஆற்றவேண்டிய கடமைகளில் இருந்து, இந்தச் சிறப்புரிமைகள் அவர்களுக்கு விலக்கு அளிக்காது. மற்றவர்களைப் போலவே, இன்னும் சொல்லப்போனால் மற்றவர்களைக் காட்டிலும் ஒருபடி மேலாகவே, இந்தக் கடமைகளை அவர்கள் நிறைவேற்ற வேண்டும். ஏனென்றால், மற்றவர்கள் மீது கடமைகளைச் சுமத்துகின்ற பொறுப்பைச் செய்பவர்களாகவும் அவர்கள் இருக்கிறார்கள்.

சிறப்புரிமைகளில் மிகவும் முக்கியமானவையான, நாடாளுமன்றத்தில் பேச்சுச் சுதந்திரம், நாடாளுமன்றத்தில் பேசியது அல்லது வாக்களித்தது சம்பந்தமாக எந்த நீதிமன்றத்தின் விசாரணைக்கும் உட்பட வேண்டாத பாதுகாப்பு ஆகியவை பிரிவு 105-ல் குறிப்பிட்டுள்ளன.

1. நாடாளுமன்ற நடவடிக்கைகளை முறைப்படுத்துகின்ற விதிகளுக்கும், நிலையாணைகளுக்கும், அரசியல் சட்ட வகையுரைகளுக்கும் உட்பட்டு, நாடாளுமன்றத்தில் பேச்சுச் சுதந்திரம் இருக்க வேண்டும்.
2. நாடாளுமன்றம் அல்லது நாடாளுமன்றக் குழுக்களில் ஓர் உறுப்பினர் பேசியவை குறித்தோ வாக்களித்தது குறித்தோ எந்த ஒரு நீதிமன்ற விசாரணைக்கும் அவரை உட்படுத்த முடியாது. நாடாளுமன்றத்தின் நடவடிக்கைகள் பற்றியோ அதன் அறிக்கைகளையோ நாடாளுமன்ற அவைகளின் அதிகாரம் பெற்றுப் பிரசுரிக்கின்ற எந்த நபரையும்கூட நீதிமன்ற விசாரணைக்கு உட்படுத்த முடியாது (தேஜ்கிரண் எதிர் சஞ்சீவா AIR 1970 SC 1573; சுதீஷ் எதிர் ஹரிசதன் (1956) 6CWN 971 AIR 1961 SC 613).
3. மற்ற விஷயங்களைப் பொறுத்தவரையில், நாடாளுமன்றத்தின் இரண்டு அவைகள், நாடாளுமன்றக் குழுக்கள், உறுப்பினர்கள் ஆகிய அனைவருக்கும் உள்ள அதிகாரங்களும், சிறப்புரிமைகளும் அவ்வப்போது நாடாளுமன்றம் இயற்றும் சட்டங்களின் மூலம் வரையறுக்கப்படும். அவ்வாறு சட்டம் இயற்றப்படாத வரை நாற்பத்திரண்டாவது திருத்தச் சட்டம் 1978-ன் 15ஆவது பிரிவு அமலுக்கு வருவதற்கு முன் இருந்த அனைத்துச் சிறப்புரிமைகளும் அவர்களுக்கு உண்டு.
4. அரசியலமைப்பில் குறிப்பிட்டுள்ளபடி நாடாளுமன்றத்திலும் அதன் குழுக்களிலும் பேசுவதற்கும் நடவடிக்கைகளில் பங்கு பெறுவதற்கும் உரிமை உள்ளவர்களுக்கு, மற்ற உறுப்பினர்களுக்கு உள்ளது போன்றே, 1, 2, 3 ஆகிய விதிகளில் சொல்லப்பட்ட சிறப்புரிமைகள் கிடைக்கும்.

வேறுவிதமாகச் சொல்வதென்றால், நாடாளுமன்றத்தின் இரண்டு அவைகளின் உறுப்பினர்கள், அவற்றின் குழுக்கள், உறுப்பினர்கள், அரசிய

லமைப்பில் சொல்லப்பட்ட சிறப்புரிமைகள் தவிர, 1950 ஜனவரி 26ஆம் தேதியன்று பிரிட்டிஷ் பொதுமக்கள் சபைக்கு எந்தெந்த அதிகாரங்களும் சிறப்புரிமைகளும் இருந்தனவோ, அவையனைத்தையும் பெற்றவர்களாக விளங்குகின்றனர்.

நாடாளுமன்றச் சிறப்புரிமைகளில் மிகவும் முக்கியமானது நாடாளுமன்றக் கடமைகளை நிறைவேற்றும்போது உள்ள பேச்சுச் சுதந்திரமாகும். ஒவ்வொரு குடிமகனுக்கும் சுதந்திரமான பேச்சுரிமையை பிரிவு 19 வழங்குகின்றது என்றாலும், சட்டமியற்றும் அவை உறுப்பினர்களின் சுதந்திரமான பேச்சுரிமையை பிரிவு 105 மற்றும் பிரிவு 194 ஆகியவை பெரிதும் வலியுறுத்துகின்றன. பிரிவு 19-ன் கீழ் குடிமக்கள் அனைவருக்கும் வழங்கப்பட்டுள்ள சுதந்திரமான பேச்சுரிமையானது அவதூறு சட்டம் போன்ற நியாயமான கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டது. சாதாரண ஒரு குடிமகன் அவதூறாகப் பேசினால் அவருக்கு எதிராக வழக்குத் தொடுக்க முடியும். ஆனால் நாடாளுமன்றத்தின் அவைகளிலும், குழுக்களிலும் பேசும்போது ஓர் உறுப்பினர் அவதூறாகப் பேசினார் என்ற காரணம்காட்டி அவர்மீது வழக்குத் தொடுக்க முடியாது.

நாடாளுமன்ற உறுப்பினர்கள் அவைகளில் பேசும்போது பொதுமக்களின் குறைகளையும் பொதுமக்கள் சம்பந்தப்பட்ட முக்கியமான பிரச்சினைகளையும் எடுத்துரைக்க வேண்டும். இவ்வாறு செய்யும்போது அவர்கள் எந்தவிதமான தடைகளுக்கும ஆட்படாமல் தமது மனதில் உள்ள கருத்துக்களை வெளிப்படையாக எடுத்துரைப்பது அவசியமாகும. எனவே நாடாளுமன்றத்தின் அவைகளிலோ, குழுக்களிலோ ஓர் உறுப்பினர் பேசும் போது, அவை அல்லது குழுவின் கட்டுப்பாடுகளுக்கு மட்டும் உட்பட்டு, அவர் விரும்பிய எதைப்பற்றி வேண்டுமானாலும் பேசுவதற்கு அவருக்கு முழுச் சுதந்திரமும் உரிமையும் உண்டு; வெளியிலிருந்து எவரும் அதில் தலையிடுவதற்கு உரிமையில்லை. நாடாளுமன்ற அவைகளிலும் குழுக்களிலும் ஓர் உறுப்பினர் சுதந்திரமாகச் செயல்படுவதற்கு சுதந்திரமான பேச்சுரிமை அவசியத் தேவையாகும். ஓர் உறுப்பினர் பேசுகின்ற கருத்துக்களுக்கு சட்டப்படியான பாதுகாப்பு இல்லை என்றால், அவர் மனந்திறந்து வெளிப்படையாகப் பேசுவார் என்று எதிர்பார்க்க முடியாது. எனவேதான், நாடாளுமன்றத்தின் அவைகளிலும், குழுக்களிலும், ஓர் உறுப்பினர் பேசியது குறித்தோ, வாக்களித்தது குறித்தோ, நாடாளுமன்றத்தைத் தவிர வேறு எந்த அதிகார அமைப்பிலோ அல்லது நீதிமன்றத்திலோ எந்தவிதமான நடவடிக்கையும் மேற்கொள்ள முடியாது என்று அரசியல் சட்டம் விதித்துள்ளது. நாடாளுமன்ற உறுப்பினர் ஒருவருக்குத் தொந்தரவு கொடுப்பதும், நாடாளுமன்ற அவையில் அல்லது குழுவில் அவர் கூறிய கருத்துக்கு எதிராக அவர்மீது நடவடிக்கை எடுப்பதும்கூட சிறப்புரிமையை மீறியதாகும். அதேபோல நாடாளுமன்றத்தில் அல்லது அதன் குழுவில் ஓர் உறுப்பினர். பேசியது சம்பந்தமாக நீதிமன்றத்தில் அவருக்கு எதிராக வழக்குத் தொடுப்பதும் சிறப்புரிமையை மீறியதாகும்.

105ஆவது பிரிவின்கீழ் நாடாளுமன்ற உறுப்பினர்களுக்கு அளிக்கப்பட்டுள்ள பேச்சுச் சுதந்திரம், நாடாளுமன்ற நடவடிக்கைகளை

நெறிப்படுத்துகின்ற அரசியல் சட்ட விதிகளுக்கும், அவையின் விதிகளுக்கும் நிலையாணைகளுக்கும் மட்டுமே கட்டுப்பட்டது; சாதாரண குடிமகனின் பேச்சுரிமையைக் கட்டுப்படுத்துவதற்காக பிரிவு 19(2)-ன் கீழ் இயற்றப்படும் சட்டத்தின்படி விதிக்கப்படும் கட்டுப்பாடுகள் நாடாளுமன்ற உறுப்பினர்களுக்குப் பொருந்தாது என்று சர்ச்லைட் வழக்கில் உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்தது. நாடாளுமன்றக் கடமைகளை நிறைவேற்றுகின்றபோது உறுப்பினர்கள் கூறியது பற்றியோ, செய்தது பற்றியோ நாடாளுமன்றத்திற்கு வெளியே புலனாய்வு செய்வது, நாடாளுமன்ற உறுப்பினர்களின் உரிமைகளில் தலையிடுவதாகும். நாடாளுமன்றத்திற்குள் ஓர் உறுப்பினர் பேசிய பேச்சு நீதிமன்றத்தை அவமதிப்பதாக இருந்தாலும்கூட, எந்த ஒரு நீதிமன்றமும் அவர் மீது நடவடிக்கை எடுக்க முடியாது. நாடாளுமன்றத்திற்கு வெளியே உள்ள அமைப்பு ஆதலால், நீதிமனறத்திறகு அந்த விஷயத்தைப் பற்றிப் புலனாய்வு செய்யும் அதிகாரம் கிடையாது. நாடாளுமன்ற நடவடிக்கைகள் பற்றி நீதிமன்றங்கள் விசாரணை ஏதும் நடத்தக்கூடாது என்று பிரிவு 122 குறிப்பாகத் தடை விதிக்கிறது.

இவ்வாறாக, ஒரு விஷயத்தில் உரிமை மீறல் இருக்கிறதா இல்லையா என்று தீர்மானிக்கும் அதிகாரம் நாடாளுமன்றத்திற்கும், சட்டப் பேரவைக்குமே உண்டு என்று இந்திய நீதிமன்றங்கள் ஏற்றுக் கொண்டுள்ளன அவமதிப்புக் குற்றத்திற்காகத் தண்டனை அளிக்கும் அவையின் அதிகாரம், பிரிட்டிஷ் பொதுமக்கள் சபையின் அதிகாரத்தைப் போன்றது என்றும். அந்த அதிகாரத்தைப் பயன்படுத்தியது பற்றி ஆராய்வதற்கு நீதிமன்றங்களுக்கு உரிமையில்லை என்றும தீர்ப்புரைக்கப்பட்டுள்ளது.

வெளியார் தலையீடும் தாக்குறவும் இல்லாமல், நாடாளுமன்றத்திற்குள் பேசுவதற்குக் காப்புரிமை இருக்கின்றது என்பதற்காக, நாடாளுமன்றத்தின் நான்கு சுவர்களுக்குள் எதைவேண்டுமானாலும் பேசலாம் எனக் கட்டுப்பாடு ஏதுமற்ற உரிமை வழங்கப்பட்டுள்ளதாகவும் நினைத்துக் கொள்ளக்கூடாது. நாடாளுமன்றத்தின் அவைகளுக்கும், குழுக்களுக்கும், உறுப்பினர்களுக்கும் அளிக்கப்பட்டுள்ள சிறப்புரிமையானது, அரசியல் சட்ட விதிகளை இணக்கமாகப் பொருள் கொள்வதைப் பொறுத்தே அமைந்துள்ளது என்பதை நாம் மறந்துவிடலாகாது. எனவே, 118 மற்றும் 121ஆவது பிரிவுகளின்படி இயற்றப்பட்ட நாடாளுமன்ற அவை நடைமுறை விதிகள், நீதிபதிகளைப் பதவி நீக்கம் செய்வதற்கான தீர்மானத்தின் மீது பேசும்போது தவிர மற்ற சமயங்களில், அவர்களின் நடத்தையை விமர்சிக்கக் கூடாது என்று தடைவிதித்துள்ளன (எம்.எஸ். சர்மா எதிர் ஸ்ரீகிருஷ்ண சின்ஹா, AIR 1959 SC 395).

உச்சநீதிமன்றத்தின் விசேஷப் பார்வைக்காக அனுப்பப்பட்ட 1964ஆம் ஆண்டு வழக்கில் (கேசவ் சிங் வழக்கு), 1965ஆம் ஆண்டு தனது ஆலோசனைக் கருத்தைக் கூறும்போது நீதிமன்றம் இவ்வாறு குறிப்பிட்டது:

> "சர்ச்லைட் வழக்கில் பெரும்பான்மை நீதிபதிகள் கூறிய கருத்தினை, அரசியலமைப்பின் பிரிவு 194 (3)-ன் பிற்பகுதி வகையுரைகளுக்கும் மூன்றாவது பகுதியில் உத்தரவாதம் அளிக்கப்பட்டுள்ள அடிப்படை உரிமைகளுக்கும் முரண்பாடு தோன்றும் போதெல்லாம், அடிப்படை

உரிமைகளை விட்டுக்கொடுத்து பிரிவு 194 (3)-ன் வகையுரைகள் மேலோங்கியதாக இருக்க வேண்டுமென்ற ஒரு பொதுவான கோட்பாட்டை உருவாக்கியிருப்பதாகக் கொள்வது தவறானதாகும். பிரிவு 19(1) (a) பொருந்தாது என்றும் பிரிவு 21 மட்டுமே பொருந்தும் என்றும்தான் பெரும்பான்மை நீதிபதிகள் கூறியிருப்பதாகக் கொள்ள வேண்டும்.

பிரிவு 194-ன்(3)ஆவது வகையுரையில் சொல்லப்பட்டுள்ள வற்றின் விளைவினைப் பற்றி ஆராயும்போது, அதில் சொல்லப் பட்டுள்ளவற்றுக்கும் அடிப்படை உரிமைகளில் சொல்லப்பட்டுள்ள வற்றுக்கும் முரண்பாடு இருப்பதாகத் தோன்றினால், இணக்க விளக்கக் கோட்பாட்டின்படி அந்த முரண்பாட்டினைக் களைவதற்கு முயல வேண்டும்."

கேசவ் சிங் வழக்கில் அலகாபாத் உயர்நீதிமன்றம் 1965 மார்ச் 10ஆம் தேதி தீர்ப்பளிக்கும்போது (உச்சநீதிமன்றத்தின் ஆலோசனையைக் கேட்ட பின்னர்) கீழ்க்கண்டவாறு கருத்துத் தெரிவித்தது.

1. அரசியல் சட்டம் சம்பந்தப்பட்ட வகையுரைகளின் அடிப்படையிலும், அவற்றில் வழங்கப்பட்டுள்ள அதிகாரங்களின் படியும் பார்க்கும்போது, சட்டப்பேரவையை அவமதித்ததற்குத் தண்டனை அளிக்கும் அதிகாரம் இங்கிலாந்தின் பொதுமக்கள் சபைக்கு உள்ளது போன்றே, பிரிவு 194 (3)-ன்படி சட்டப்பேரவைக்கும் உண்டு என்று இந்த நீதிமன்றம் கருதுகிறது.
2. சம்பந்தப்பட்ட அதிகார அமைப்பின் மூலம் விதிக்கப்பட்ட சிறைத் தண்டனையின்படி காவலில் வைக்கப்பட்டதற்கு பிரிவு 22(2)-ன் வகையுரைகள் பொருந்தாது என்றும் இந்த நீதிமன்றம் கருதுகிறது.
3. சட்டப்பேரவையை அவமதித்ததற்காக மனுதாரருக்குத் தண்டனை அளிக்கும் அதிகாரம் சட்டப்பேரவைக்கு உள்ளது என்று ஏற்கெனவே இந்த் நீதிமன்றம் தீர்ப்பளித்துள்ளதாலும், சட்டப் பேரவை தனது நடைமுறைகளுக்கான நடவடிக்கை விதிகளை அரசியலமைப்பின் 208(1)ஆவது பிரிவின் கீழ் இயற்றியுள்ளதாலும், மனுதாரருக்குத் தண்டனை அளித்ததும், அவருடைய தனிப்பட்ட சுதந்திரத்தைப் பறித்ததும், 21ஆவது பிரிவில் சொல்லியுள்ளபடி சட்டப்பிரகாரமே நடந்துள்ளது என்றே தீர்ப்பளிக்க வேண்டியுள்ளது.
4. சட்டப்பேரவையை அவமதித்ததற்காக மனுதாரருக்குத் தண்டனை அளிப்பதற்கும் அந்தத் தண்டனையை நிறைவேற்றுவதற்கும் சட்டப்பேரவைக்கு அதிகாரமும் நீதிவரம்பும் உள்ளது என்று முடிவுக்கு வந்த பின்னர், அவ்வாறு தண்டனை அளிக்கப்பட்டது சட்டப்படி சரியானதுதானா என்று இந்த நீதிமன்றம் ஆராய முடியாது. எனவே சட்டப்பேரவையை அவமதித்தற்காகப் பேரவை விதித்த தண்டனையை எதிர்த்து, பிரிவு 226-ன்கீழ் தாக்கல் செய்த மேல்முறையீட்டு மனுவை இந்த நீதிமன்றம் விசாரிக்க முடியாது. சட்டப் பேரவைக்கு அவமதிப்பு செய்யப்பட்டதா இல்லையா என்று தீர்மானிப்பதிலும் அதனுடைய நடைமுறைகளிலும் சட்டப்பேரவையே உயரதிகாரம் பெற்றதாகும்."

எனவே அரசியலமைப்பைத் திருத்த வேண்டிய அவசியம் இல்லை என்று அரசு தீர்மானித்தது. உச்சநீதிமன்றம் தெரிவித்த கருத்தின்படியும்,

அலகாபாத் உயர்நீதிமன்றம் அளித்த தீர்ப்பின்படியும், நீதித்துறையும் சட்டமியற்றும் துறையும் தமக்குரிய மரபுகளை உருவாக்கிக் கொள்ள வேண்டும் என்று கூறப்பட்டது.

ஆகவே, சிறப்புரிமைகளைப் பொறுத்தவரையில், சர்ச்லைட் வழக்கில் உச்சநீதிமன்றம் அளித்த தீர்ப்பே இன்றுவரை இறுதித் தீர்ப்பாக இருந்து வருகிறது.

*சிறப்புரிமைகளைத் தொகுத்தல்:* அரசியலமைப்பில் சொல்லப் பட்டுள்ள சிறப்புரிமைகளைத் தவிர, அவ்வப்போது நாடாளுமன்றமும் சட்டம் இயற்றி, தனது சிறப்புரிமைகளை வரையறை செய்யலாம் என்று, 105(3)ஆவது பிரிவு கூறுகிறது. எனினும் இந்தப் பிரிவின்படி நாடாளுமன்றத்தின் அவைகள், குழுக்கள், உறுப்பினர்கள் ஆகியோரின் அதிகாரங்களையும், சிறப்புரிமைகளையும் வரையறுப்பதற்காக இதுவரை எந்தச் சட்டமும் இயற்றப்படவில்லை.

"சட்டத்தின் மூலம் நாடாளுமன்றத்தால் வரையறுக்கப்படுகின்ற வரை" என்று அரசியலமைப்பில் விதிக்கப்பட்டுள்ளது குறித்தும், நாடாளுமன்ற சிறப்புரிமைகளை வரையறை செய்வது அல்லது தொகுப்பது குறித்தும் பலவிதமான கருத்துக்கள் நிலவுகின்றன.

## குடியரசுத் தலைவரின் சட்டமியற்றும் அதிகாரங்கள்

நாடாளுமன்றத்தின் இரண்டு அவைகளின் கூட்டத்தொடர் நடைபெறாத சமயத்தில் உடனடியாகச் செயல்பட வேண்டியதொரு சூழ்நிலை உருவாகி யுள்ளது என்று குடியரசுத் தலைவர் திருப்தி அடைந்தால், அவசரச் சட்டத்தைப் பிரகடனப்படுத்தும் அதிகாரத்தைப் பிரிவு 123 குடியரசுத் தலைவருக்கு வழங்குகிறது. அவ்வாறு பிரகடனப்படுத்தப்படும் அவசரச் சட்டங்கள் நாடாளுமன்றத்தால் இயற்றப்படும் சட்டங்களைப் போலவே செயல்வீச்சுடையவை. எனினும் நாடாளுமன்றம் மீண்டும் கூடியதிலிருந்து ஆறு வாரங்களுக்குப் பின்னர் அவசரச்சட்டங்கள் செயல் இழந்துவிடும்; அல்லது அதற்கு முன்னரே இரண்டு அவைகளும் அவசரச்சட்டத்தை நிராகரித்தாலும் அது செயல் இழந்து விடும்.

உடனடியாகச் செயல்பட வேண்டுமென்ற நிலை உருவாகியுள்ளது என்று குடியரசுத் தலைவர் 'திருப்தி' அடைவது, நீதிப்புனராய்வுக்கு அப்பாற்பட்டது. ஆனால், அமைச்சரவையின் உதவியின் பேரிலும், ஆலோசனையின் பேரிலுமே அவர் அந்தத் 'திருப்தியை' அடைய வேண்டும். (ஏ.கேராய் எதிர் இந்திய அரசு AIR 1982 SC 710; கூப்பர் எதிர் இந்திய அரசு AIR 1970 SC 564; சத்பால் எதிர் துணைநிலை ஆளுநர் AIR 1979 SC 1550; வெங்கடா எதிர் ஆபி. அரசு AIR 1985 SC 725; நாகராஜா எதிர் ஆபி. அரசு AIR 1985 SC 55; ராஜஸ்தான் அரசு எதிர் இந்திய அரசு AIR 1977 SC 136).

அவசரச்சட்டத்தை பிரகடனப்படுத்திய பின்னர் மீண்டும் அவை கூடியதும் அதற்குரிய மசோதாவை அவையில் தாக்கல் செய்து ஒப்புதல் பெறாமல் அது காலாவதியானதும் அதே அவசரச் சட்டத்தை மீண்டும்

பிறப்பிப்பதும், ஓர் அவசரச் சட்டத்தைப் பிறப்பிப்பதற்காகவே அவையின் கூட்டத்தொடரை முடித்துவைப்பதும், அரசியலமைப்பினை வைத்துச் செய்கின்ற மோசடி என்று பீகார் ஆளுநர் வழக்கில் (டிசி. வாத்வா எதிர் பீகார் அரசு AIR 1987 SC 579) தீர்ப்பளிக்கப்பட்டுள்ளது. இந்தத் தீர்ப்பு குடியரசுத்தலைவர் பிறப்பிக்கும் அவசரச்சட்டங்களுக்கும் அப்படியே பொருந்தும்.

அவசரச்சட்டம் பிறப்பிக்கும் குடியரசுத்தலைவரின் அதிகாரத்தை எதிர்த்துப் பல முறை வழக்குகள் தொடுக்கப்பட்டுள்ளன. அரசியலமைப்பு ரீதியாக அவசரச்சட்டங்கள்செல்லுபடியாகும் என்றும், ஆனால் அவசரச் சட்டத்தைப் பிறப்பிக்கும் குடியரசுத்தலைவரின் அதிகாரம், நாடாளு மன்றத்தின் சட்டமியற்றும் அதிகாரத்திற்குள்ள அதே கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டது என்றும் தீர்ப்பளிக்கப்பட்டது. கட்டுபபாடுகள் என்றால், நீதிப்புனராய்வுக்கு உட்படுவது, அடிப்படை உரிமைகளை மீறாமல் இருப்பது, ஏழாவது அட்டவணையில் உள்ளபடி சட்டமியற்றும் அதிகாரப் பகிர்வினை மீறாமல் இருப்பது போன்றவையாகும் (பஞ்சாப் அரசு எதிர் மோகர்சிங் AIR 1955 SC 84; ஒரிசா அரசு எதிர் பூபேந்திரா AIR 1962 SC 945; நாகராஜ் எதிர் ஆபி. அரசு AIR 1985 SC 551; வெங்கடா எதிர் ஆபி. அரசு AIR 1985 SC 724; ஆர்.கே. கர்க் எதிர் இந்திய அரசு AIR 1981 SC 2139; ஏ.கே.ராய் எதிர் இந்திய அரசு AIR 1982 SC 710).

## இரண்டு அவைகளுக்கும் இடையேயான உறவுநிலைச் செயல்பாடு

நிதி விஷயங்கள், அமைச்சரவையின் பொறுப்பு ஆகிய இரண்டையும் தவிர, நாடாளுமன்றத்தின் இரண்டு அவைகளும் சமமான அதிகாரமும் அந்தஸ்தும் கொண்டு விளங்குகின்றன. விதிவிலக்கான இரண்டு விஷயங்களும் மக்க ளவையின் ஏகபோக உரிமையாகும். எனவே மாநிலங்களவையின் அதிகாரங் களுக்குக் கீழ்க்காணும் வரம்புகள் உண்டு.

1. பணமசோதா எதனையும் மாநிலங்களவையில் அறிமுகப்படுத்த முடியாது.
2. எந்த ஒரு பணமசோதாவையும் நிராகரிக்கவோ, திருத்தவோ மாநிலங்களவைக்கு அதிகாரம் இல்லை. பணமசோதாவின்மீது பரிந்துரைகளை மட்டுமே மாநிலங்களவை வழங்கலாம். மாநிலங் களவையில் இருந்து 14 நாட்களுக்குள் பணமசோதா திருப்பி அனுப்பப்படாவிட்டால், அந்தக் காலக்கெடு முடிந்ததும், மக்களவை இயற்றிய வடிவத்திலேயே அந்த மசோதா இரண்டு அவைகளிலும் ஏற்றுக் கொள்ளப்பட்டதாகக் கருதப்படும் (பிரிவு 109).
3. ஒரு மசோதா பண மசோதாவா இல்லையா என்பதை மக்களவைத் தலைவரே தீர்மானிக்க வேண்டும் (பிரிவு 110(3).
4. வருடாந்திர நிதிநிலை அறிக்கையின்மீது மாநிலங்களவை விவாதம் நடத்தலாம் (பிரிவு 113). ஆனால் மானியக் கோரிக்கைகள்மீது

வாக்களிக்கும் உரிமை மாநிலங்களவைக்குக் கிடையாது.

5. அமைச்சரவை மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டுவர மாநிலங்களவைக்கு அதிகாரம் இல்லை (பிரிவு 75(3).

நிதி சம்பந்தமில்லாத ஒவ்வொரு விஷயமும் சட்டமாவதற்கு முன்னர் இரண்டு அவைகளிலும் தனித்தனியாக தீர்மானிக்கப் பெற வேண்டும். குடியரசுத்தலைவர் மீது குற்றச்சாட்டு கொண்டு வருதல், குடியரசுத் துணைத்தலைவரைப் பதவி நீக்கம் செய்தல், அரசியலமைப்புத் திருத்தங்கள், உச்சநீதிமன்ற-உயர்நீதிமன்ற நீதிபதிகள் ஆகியோரைப் பதவி நீக்கம் செய்தல் போன்ற முக்கியமான விஷயங்களில் மக்களவையைப் போலவே மாநிலங்களவைக்கும் சம அதிகாரங்கள் உண்டு (பிரிவுகள் 56, 61, 67, 124(1), 217(1) (b)). குடியரசுத்தலைவர் பிறப்பிக்கும் அவசரச்சட்டங்கள், அவசரநிலைப் பிரகடனம், மாநிலங்களில் அரசியலமைப்பு இயந்திரம் செயல்படாமல் போனதான பிரகடனம் (குடியரசுத்தலைவர் ஆட்சி அமலாக்கம்), ஆகியவை நாடாளுமன்றத்தின் இரண்டு அவைகளிலும் தாக்கல் செய்யப்பட வேண்டும் (பிரிவுகள் 123, 352(4), 356(4). பணமசோதாவைத் தவிர பிற மசோதாக்களிலும், அரசியலமைப்புத் திருத்த மசோதாக்களிலும் இரண்டு அவைகளுக்கும் இடையே இறுதியான கருத்தொற்றுமை ஏற்படவில்லை என்றால், இரண்டு அவைகளின கூட்டுக்கூட்டத்தில் பெரும்பான்மை வாக்குகளின் அடிப்படையில் அவற்றுக்குத் தீர்வு காணப்படும். ஏற்கெனவே குறிப்பிட்டதுபோல், அத்தகைய கூட்டுக் கூட்டங்களுக்கு மக்களவைத் தலைவரே தலைமை வகிப்பார் (பிரிவுகள் 108, 118(4)).

அரசியலமைப்பு, மாநிலங்களவைக்குச் சில சிறப்பு அதிகாரங்களை அளித்திருக்கிறது. மாநிலப் பட்டியலில் உள்ள ஒரு விஷயம் குறித்து, தேசிய நலன் கருதி நாடாளுமன்றம் சட்டம் இயற்ற வேண்டும் என்று அறிவிக்கும் அதிகாரம் மாநிலங்களவைக்கே உண்டு. மூன்றில் இரண்டு பங்கு பெரும் பான்மையுடன் மாநிலங்களவையில் இதற்கென ஒரு தீர்மானம் இயற்றப் பட்டால், மாநிலப்பட்டியலில் உள்ள விஷயத்தைப் பற்றியும் நாடு முழு வதற்குமோ, ஏதேனும் சில பகுதிகளுக்கு மட்டுமோ பொருந்துகின்ற சட்டத்தை நாடாளுமன்றம் இயற்ற வேண்டும். அதே போல தேசிய நலன கருதி, ஒன்றியம் - மாநிலங்களுக்கான பொதுவான அனைத்திந்திய பணித் தொகுதிகளை உருவாக்க வேண்டும் என்று மாநிலங்களவையில் மூன்றில் இரண்டு பங்கு உறுப்பினர்கள் ஆஜராகி வாக்களித்துப் பெரும்பான்மை ஆதரவுடன் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டால், அதன்படி அனைத்திந்திய பணித்தொகுதிகளை உருவாக்கும் சட்டத்தை இயற்றும் அதிகாரமும் நாடாளுமன்றத்திற்கு உண்டு.

## நாடாளுமன்றமும் நிர்வாக அமைப்பும்

புதிதாக ஒரு மககளவை தேர்ந்தெடுக்கப்பட்டு அமைக்கப்பட்டவுடன், அவையின் பாதிக்கும் மேற்பட்ட உறுப்பினர்களின் ஆதரவைப் பெற்றுள்ள

கட்சியின் தலைவரை அரசு அமைக்குமாறு குடியரசுத்தலைவர் அழைப்பு விடுப்பார்.

பொதுவாக, பிரதமர் மக்களவையின் உறுப்பினராகவே இருப்பார்; ஆனால் அமைச்சர்கள் இரண்டு அவைகளில் இருந்தும் தெரிவு செய்யப் படுவர். நாடாளுமன்றத்தின் உறுப்பினராக இல்லாத ஒருவரைக்கூட அமைச்சராக நியமிக்கலாம். ஆனால் ஆறுமாதங்களுக்குள் இரண்டு அவைகளில் ஏதேனும் ஒன்றுக்கு உறுப்பினராக அவர் தேர்ந்தெடுக்கப்படா விட்டால் அமைச்சர் பதவியை விட்டு விலகிவிட வேண்டும். அமைச்சரவை, மக்களவைக்குக் கூட்டுப் பொறுப்பு உடையதாகையால் (பிரிவு 75), மக்களவையின் நம்பிக்கையை இழந்தவுடனேயே அமைச்சரவை ஒட்டு மொத்தமாகப் பதவி விலக வேண்டும்.

உச்சநிலையில் உள்ள நிர்வாக அதிகாரத்திற்கும் சட்டமியற்றும் அதிகாரத்திற்கும் உண்மையானதோர் இணைப்பை ஏற்படுத்துவதாக நமது அரசியலமைப்பு விளங்குகிறது நிர்வாக அமைப்புக்கும், சட்டமியற்றும் அமைப்புக்கும் இடையேயான உறவு மிகவும் நெருக்கமானதாகவும், பிரிவினையையோ பகைமையையோ அனுமதிக்காத ஒன்றாகவும் திகழ்கிறது. இவையிரண்டும் ஒன்றுக்கொன்று போட்டியிட்டுக் கொள்கின்ற அதிகார மையங்களாக இல்லாமல் அரசை நடத்திச் செல்வதில் பொறுப்புள்ள, இணைபிரியாத பங்காளிகளாக அமைந்துள்ளன. நாடாளுமன்றம் ஒரு மாபெரும் அமைப்பாகும். ஆனால் அதனால் மட்டுமே அரசை நடத்திச் செல்ல முடியாது. நாடாளுமன்றத்தின சார்பாக அரசை நடத்திச் செல்கின்ற பொறுப்புடையதான நாடாளுமன்றததின் நிர்வாகக் குழுவாக, அமைச்சரவை விளங்குகினறது என்று சொல்லலாம். வேறுவிதமாகச் சொல்வதென்றால், நிர்வாக அமைப்பு எனபது தனியான அமைப்போ, நாடாளுமன்றத்தைச் சாராத அமைப்போ அன்று. அமைச்சர்கள் நாடாளு மன்றத்தில் இருந்து தெரிவு செய்யப்படுபவர்களாகவும், அதன் உறுப் பினர்களாக நீடிப்பவர்களாகவும், மக்களவைக்குப் பொறுப்புடையவர் களாகவும் இருப்பதால் அந்த உறவு முழுமையின் ஓர் அங்கமாகவும், ஒன்றை ஒன்று சார்ந்திருப்பதாகவும் உள்ளது என்று கூறலாம். இருந்த போதிலும் நிர்வாகத்தின் செயல்பாடும் நாடாளுமன்றத்தின செயல்பாடும் தனித்தனியாகப் பிரித்துக் கூறப்பட்டுள்ளன (பிரிவு 75). சட்டம் இயற்றுவது, ஆலோசனை கூறுவது, விமர்சனம் செய்வது, பொதுமக்களின் குறைகளை வெளிப்படுத்துவது போன்றவை நாடாளுமன்றத்தின் செயல்பாடுகளாகும். நிர்வாகத்தின் செயல் ஆட்சிபுரிவது என்றாலும், நாடாளுமன்றத்தின் சார்பிலேயே அது ஆட்சியை நடத்திச் செல்ல வேண்டும்.

சட்டமியற்றுதல், நிதி சம்பந்தமான பிரேரணைகளை உருவாக்கி நாடாளுமன்றத்தின் முன்வைத்தல். நாடாளுமன்றத்தால் ஒப்புதல் அளிக்கப் பட்ட கொள்கைகளை எவ்விதமான தலையீடும் தடங்கலும் இன்றிச் செயல்படுத்தல் என, நிர்வாகத்திற்கு வரம்பில்லாத உரிமைகள் இருக்கின்றன; அதேபோல நிர்வாகத்திடமிருந்து தகவல்களைக் கோரிப் பெறவும் நிர்வாகம் முன்வைத்த பிரேரணைகளை அலசி ஆராய்ந்து விவாதித்துத் தனது ஒப்புதலை அளிப்பதற்கும் நாடாளுமன்றத்திற்கு வரம்பில்லாத அதிகாரம்

உள்ளது. நாடாளுமன்றத்திற்குப் பதில் அளிக்கும் பொறுப்புள்ளதாக நிர்வாகம் திகழ்கிறது. நிர்வாகத்தின் மீது அரசியல் மற்றும் நிதிக் கட்டுப் பாடுகளைச் செயல்படுத்துவதாகவும், நாடாளுமன்ற கண்காணிப்பை உறுதிப் படுத்துவதாகவும் நாடாளுமன்றத்தின் பணிகள் அமைந்துள்ளன.

## நாடாளுமன்றமும் நீதித்துறையும்

நீதிமன்றங்களின் அமைப்பு, உருவாக்கம், நீதிவரம்பு, அதிகாரங்கள் ஆகியவை பற்றி சட்டங்கள் இயற்றி முறைப்படுத்தும் அதிகாரம் நாடாளு மன்றத்திற்கு உண்டு. உச்சநீதிமன்றத்தில் தலைமை நீதிபதியைத் தவிர மற்ற நீதிபதிகளின் எண்ணிக்கை ஏழுக்கு மிகக் கூடாது என்று அரசியல் சட்டம் விதிக்கிறது. எனினும் சட்டத்தின் மூலம் நீதிபதிகளின் எண்ணிக்கையை அதிகரிக்க நாடாளுமன்றத்திற்கு அதிகாரம் உண்டு (பிரிவு 124). அரசிய லமைப்பின்படி, சட்டமியற்றுவதன் மூலம் நாடாளுமன்றம் கீழ்க்கண்ட வற்றைச் செய்வதற்கு அதிகாரம் உள்ளது.

1. ஓர் உயர்நீதிமன்றத்தின் நீதிவரம்பை ஏதேனும் ஒரு ஒன்றிய நேரடி ஆட்சிப்பகுதிக்கு நீட்டிக்கவோ, ஏதேனும் நேரடி ஆட்சிப் பகுதியில் இருந்து ஓர் உயர்நீதிமனறத்தின நீதிவரம்பை விலக்கவோ செய்யலாம்.
2. இரண்டு அல்லது அதற்கும் அதிகமான மாநிலங்களுக்குப் பொது வாகவோ, இரண்டு அல்லது அதற்கும் அதிகமான மாநிலங்களுக்கும் ஒரு நேரடி ஆட்சிப் பகுதிக்கும் பொதுவாகவோ ஓர் உயர்நீதி மன்றத்தை அமைக்கலாம்.
3. ஒரு நேரடி ஆட்சிப் பகுதிக்காக உயர்நீதிமன்றம் ஒன்றை உருவாக் கலாம்; அல்லது அந்த ஆட்சிப்பகுதிக்குள் செயல்படும் ஏதேனும் ஒரு நீதிமன்றத்தை அரசியலமைப்புக் காரணங்கள் அனைத்திற்கும் உயர்நீதிமன்றமாக அறிவிக்கலாம்.

உச்சநீதிமன்றம் அல்லது உயாநீதிமன்றத்தின் நீதிபதி எவரேனும் பதவி விலக விரும்பினால், அவர் தம் கைப்பட குடியரசுத்தலைவருக்குப் பதவிவிலகல் கடிதத்தை எழுதி அனுப்ப வேண்டும். நாடாளுமன்றத்தின் இரண்டு அவைகளிலும் அறுதிப் பெரும்பான்மையுடன் (அதாவது, அவையில் ஆஜராகி வாக்களித்த மொத்த உறுப்பினர்களில் மூன்றில் இரண்டு பங்கு ஆதரவு) நீதிபதிகளைப் பதவிநீக்கம் செய்ய வேண்டும் எனறு ஒரு கூட்டுத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டால் அவர்களைக் குடியரசுத் தலைவர் பதவிநீக்கம் செய்துவிடலாம் (பிரிவுகள் 124(4) & 218). உச்சநீதிமன்றம் அ;ல்லது உயர்நீதிமன்ற நீதிபதி எவரையேனும் பதவி நீக்கம் செய்யவேண்டுமென்ற தீர்மானத்தில் பேசும்போது தவிர மற்ற சந்தர்ப்பங்களில் அவர்களுடைய நடத்தையைப் பற்றி விவாதிப்பதற்கு நாடாளுமன்றத்திற்கு அதிகாரம் இல்லை (பிரிவு 121).

ஒன்றியத்துக்காக நிர்வாகத் தீர்ப்பாயம் ஒன்றையும், ஒவ்வொரு மாநிலங்களுக்கும் தனித்தனியாகவோ, இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட

மாநிலங்களுக்கு என்று பொதுவாகவோ, நிர்வாகத் தீர்ப்பாயங்களைச் சட்டத்தின் மூலமாக நாடாளுமன்றம் உருவாக்கலாம். அவ்வாறு இயற்றப் படும் சட்டங்கள் ஒவ்வொரு தீர்ப்பாயத்தின் நீதிவரம்பையும் அதிகாரங் களையும் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டும். மேலும் அத்தகைய சட்டங்கள் சில குறிப்பிட்ட விஷயங்களில் பிரிவு 136-ன்படி உச்சநீதிமன்றத்தைத் தவிர மற்ற நீதிமன்றங்களின் நீதி வரம்பை விலக்கிவிடலாம். (பிரிவுகள் 323A & 323B). அனைத்திந்திய நீதித்துறைப் பணித்தொகுதி ஒன்றை உருவாக்கவும் நாடாளுமன்றத்திற்கு அரசியலமைப்பு அதிகாரம் அளிக்கிறது. அந்தப் பணித்தொகுதியில் மாவட்ட நீதிபதி பதவிக்குக் குறைவான எந்தப் பதவியும் இடம் பெறலாகாது (பிரிவுகள் 312(1) & 312(3).

நாடாளுமன்றத்தின் எந்த ஓர் அவை நடவடிக்கைகளும் முறைப் படியாக நடைபெறவில்லை என்ற காரணம் காட்டி, அந்நடவடிக்கைகளின் செல்லுபடியாகும் தன்மை பற்றி எந்த ஒரு நீதிமன்றத்திலும் வழக்குத் தொடுக்க முடியாது (பிரிவுகள் 122(1) & 212(1). நாடாளுமன்றத்தின் இரண்டு அவைகளின் தலைவர்கள் அல்லது அவை நடவடிக்கைகளை நடத்திச் செல்லவும், அவையில் மேற்கொள்ளப்பட்ட முடிவுகளை நிறை வேற்றுவதற்கும் அதிகாரம் அளித்து நியமிக்கப்பட்ட உறுப்பினர்களை அல்லது அதிகாரிகளை, அந்த அதிகாரங்களைப் பயன்படுத்தியதற்காக எந்த ஒரு நீதிமன்றத்திலும் விசாரணைக்கு உட்படுத்த முடியாது (பிரிவுகள் 122(2) & 105(3).

ஒரு சட்டம் அரசியலமைப்பு ரீதியாகச் செல்லுபடியாகாது என்று இந்தியாவில் வழக்குத் தொடுக்க வேண்டுமானால்,

1. சட்டத்தை இயற்றிய அவைக்கு அதை இயற்ற சட்டப்படியான உரிமை இல்லை என்றாலும்;
2. அரசியல் சட்ட வகையுரைகளுக்கு அது முரணாக இருந்தாலும்:
3. அடிப்படை உரிமைகளில் ஏதேனும் ஒன்றை அது மீறுவதாக இருந்தாலும் மட்டுமே நடவடிக்கை மேற்கொள்ள முடியும்.

உச்சநீதிமன்றத்தின் தீர்ப்புக்கு எதிராக மேல்முறையீட்டுக்கு வாய்ப்பு இல்லை. அந்தத் தீர்ப்பை உச்சநீதிமன்றமே மறு பரிசீலனை செய்தாலன்றியும், மாற்றியமைத்தாலன்றியும், நாடாளுமன்றத்தால் அரசியலமைப்பை ஏற்புடைய வகையில் திருத்தியமைத்தாலன்றியும், அந்தத் தீர்ப்பே இந்த நாட்டின் சட்டமாகத் தொடர்ந்து நீடிக்கும். நாடாளுமன்றத்தால் இயற்றப்பட்ட ஏதேனும் ஒரு சட்டத்தைச் செல்லுப்படியாகாது என்று நீதிமன்றம் அறிவித்தால், என்ன காரணங்களுக்காக அவ்வாறு அறிவிக்கப்பட்டதோ, அந்தக் குறைபாடுகளைக் களைந்துவிட்டு மீண்டும் அச்சட்டத்தை நாடாளு மன்றம் நிறைவேற்றலாம். அதைத்தவிர, நாடாளுமன்றம் தனக்குள்ள அரசியல் நிர்ணய அதிகாரங்களுக்கு உட்பட்டு, செல்லாதென அறிவிக்கப் பட்ட சட்டம் செல்லுபடியாகின்ற வகையில் அரசியலமைப்பையே திருத்தலாம்.

பிரிட்டிஷ் நாடாளுமன்றம் இயற்றும் சட்டங்களை நீதிப்புனராய்வு செய்ய வகையே இல்லாமல் நாடாளுமன்றம் உச்ச அதிகார அமைப்பாக

இருப்பதுபோல், இந்திய நாடாளுமன்றம் உச்ச அதிகார அமைப்பாக விளங்கவில்லை. அதேபோல அமெரிக்க ஐக்கிய நாடுகளின் உச்சநீதி மன்றத்தில் நீதிப்புனராய்வுக்கு வரம்பே இல்லாமல் உச்சநீதிமன்றம் உச்ச அதிகார அமைப்பாக விளங்குவதுபோல், இந்திய உச்சநீதிமன்றம் உச்ச அதிகார அமைப்பாகத் திகழவில்லை.

நாடாளுமன்றத்தின் இறையாண்மையைப் பற்றி உச்சநீதிமன்றமே பல்வேறு கருத்துக்களை வெளியிட்டுள்ளது (ஏ.கே.கோபாலன் எதிர் சென்னை அரசு (1950) SCR 88; தில்லி சட்டங்கள் வழக்கு (1951) SC 747; சங்கரி பிரசாத் எதிர் இந்திய அரசு AIR 1951 SC 458 ஆகியவற்றைக் காண்க). எனினும், நாடாளுமன்றத்தின் குறிப்பிட்ட அதிகார வரம்புக்குள் அதுவே உச்ச அதிகார அமைப்பாகும் என்று கோபாலன் வழக்கில் தீர்ப்பளிக்கப்பட்டது.

## நாடாளுமன்றத்தின் பணிகள்

*சட்டமியற்றல்:* அவையின் பிரதான பணியாக சட்டம் இயற்றுவதே நீண்ட காலமாக வழக்கில் இருந்து வருகிறது. ஏழாவது அட்டவணையில் பகிர்ந்தளிக்கப்பட்டுள்ளபடி— ஒன்றியத்துக்கும் மாநிலங்களுக்கும் இடையே சட்டமியற்றும் அதிகாரம் உள்ள - தனது வரம்புக்கு உட்பட்ட விஷயங்களில் இந்தியா முழுமைக்குமோ, ஒரு சில பகுதிகளுக்கு மட்டுமோ பொருந்துமாறு சட்டங்களை இயற்ற அரசியலமைப்பின் 245, 246ஆவது பிரிவுகள் நாடாளுமன்றத்திற்கு அதிகாரம் அளிக்கின்றன. ஒன்றியப் பட்டியலைப் பொறுத்தவரையில் நாடாளுமன்றததிற்கு மட்டுமே சட்டமியற்றுவதற்கு அதிகாரம் உண்டு. பொதுப்பட்டியலில் இடம் பெற்றுள்ள விஷயங்களில ஒன்றியமும் மாநிலங்களும் சட்டமியற்றுவதற்கு அதிகாரம் பெறறுள்ளன. அவ்வாறு இயற்றப்படும் சட்டங்களில் ஒன்றிய சட்டத்திற்கும் மாநிலச சட்டத்திற்கும் இடையே முரண்பாடு தோன்றினால், ஒன்றிய சட்டமே மேலோங்கி நிற்கும் (பிரிவு 254). பட்டியல்களில் சொல்லப்படாத விஷயங்கள் குறித்துச் சட்டம் இயற்றும் அதிகாரமும் நாடாளுமன்றத்திற்கே உண்டு (பிரிவு 248 மற்றும் ஒன்றியப் பட்டியலில் 97ஆவது குறிப்பு). இவை தவிர அரசியலமைப்பில் பல இடங்களிலும் 'நாடாளுமன்றத்தின் மூலம் சட்டப்படி விதிக்கின்ற வகையில் அல்லாமல்' என்றும், 'சட்டத்தின் மூலம் நாடாளுமன்றம்...' என்றும், 'சட்டத்தின்மூலம் நாடாளுமன்றம் வரையறுக் கின்ற வரையில்...' என்றும், பலவாறாக நாடாளுமன்றம் சட்டம் இயற்று வதற்கு அதிகாரங்கள் அளிக்கப்பட்டுள்ளன. பிரிவுகள் 2, 3, 4 ஆகியவற்றின் படி, சட்டம் இயற்றுவதன் மூலம் நாடாளுமன்றம், மாநிலங்களின் பெயரையும் எல்லைகளையும் மாற்றியமைக்கலாம்; அல்லது புதிய மாநிலங்களை உருவாக்கலாம் என்று கூறப்பட்டுள்ளது. மேலும் சட்டம் இயற்றுவதன்மூலம் உச்சநீதிமன்ற நீதிபதிகளின் எண்ணிக்கையைக் கூட்டவும், புதிதாக நீதிமன்றங்களை உருவாக்கவும் நாடாளுமன்றத்திற்கு அதிகாரம் உண்டு. அரசியலமைப்பின் 249ஆவது பிரிவின்படி, மாநிலப் பட்டியலில் உள்ள விஷயம் குறித்தும் சட்டமியற்றுவதற்கு நாடாளுமன்றம் அதிகாரம் பெற்றுள்ளது. பிரிவு 253-ன்படி வெளிநாட்டுடன் மேற்கொள்ளப்

பட்ட ஒப்பந்தம் அல்லது உடன்படிக்கையை நிறைவேற்றுவதற்காக - அந்த விஷயம் மாநிலப்பட்டியலில் இருந்தாலும்கூட - சட்டம் இயற்றும் அதிகாரம் நாடாளுமன்றத்திற்கு உண்டு. குடியரசுத்தலைவர் ஆட்சியின்போதும் (பிரிவு 356) அவசரநிலைப் பிரகடனத்தின் போதும் (பிரிவு 352), மாநிலப் பட்டியலில் உள்ள விஷயங்கள் குறித்து நாடாளுமன்றம் சட்டம் இயற்றலாம்.

**அரசியல் நிர்ணய அதிகாரங்கள்:** பல்வேறு வகையான அரசியலமைப்புத் திருத்தங்களுக்கு விதிக்கப்பட்டுள்ள முறைப்படி பிரிவு 368-ன் கீழ் அரசியல் நிர்ணய அதிகாரங்களை நாடாளுமன்றம் செயல்படுத்துகிறது. பெரும்பாலான பிரிவுகளை அறுதிப் பெரும்பான்மை பலத்துடன் நாடாளு மன்றமே திருத்த முடியும்; எனினும் சில விஷயங்களில் அரசியலமைப்புத் திருத்தத்திற்கு மாநிலங்களின் ஏற்பளிப்பு அவசியமாகும். (அரசியலமைப்பைத் திருத்துதல் என்ற தலைப்பின் கீழ்க் காண்க).

**அரசாங்கத்தின் மீது நாடாளுமன்றத்தின் கட்டுப்பாடு:** நமது அரசியலமைப்பின் கீழ் நாடாளுமன்ற ஆட்சிமுறையில், அமைச்சரவையின் பொறுப்பு, நிதிக்கட்டுப்பாடு, நிர்வாகப் பொறுப்பு ஆகியவற்றை நாடாளு மன்றமே உறுதி செய்யவேண்டும்.

நாடாளுமன்றத்திற்கு அமைச்சரவை பொறுப்புடையதாக இருப்பது, அல்லது அரசாங்கத்தின்மீது நாடாளுமனறம் தனது கட்டுப்பாடடைச் செலுத்துவது, என்று நாம் சொல்லுவது இரணடு விஷயங்களின அடிப் படையில் அமைந்ததாகும்: (1) நாடாளுமன்றத்தின மக்களவைக்கு அமைச் சரவை கூட்டுப் பொறுப்புடையதாக இருக்க வேண்டும் என்று அரசியலமைப்பில் விதித்திருப்பது; (2) பட்ஜெட்டின் மீது நாடாளுமனறம் தனது கட்டுப்பாட்டைச் செலுத்துவது (பிரிவுகள் 75, 114, 115, 116, 265).

அரசாங்கத்தின் மீது நாடாளுமன்றம தனது கட்டுப்பாட்டைச் செலுத்துவதென்பது அரசியல் சார்ந்ததாகும். நிர்வாகத்தின் பதிலளிக்கும் பொறுப்பு என்பது நேரிடையாக, தொடர்ந்து, அன்றாடம் உள்ள ஒன்றாகும். நாடாளுமனறத்தின் கூட்டத்தொடர் நடந்து கொண்டிருக்கும்போது, அரசாங்கம் தொடர்ந்து பதவியில் நீடிப்பதென்பது, ஒவ்வொரு கண நேரமும் அது மக்களவையின் நம்பிக்கையைத் தொடர்ந்து பெற்றிருப்பதைப் பொறுத்தே அமைந்துள்ளது. பெரும்பான்மை வாக்குகளுடன் அரசைப் பதவி இறக்குவதென்று எந்த நேரத்திலும் மக்களவை தீர்மானிக்கலாம். அதாவது, அவையின் பெரும்பான்மை உறுப்பினர்களின் ஆதரவை ஆளுங் கட்சி இழக்கும்போது அரசு கவிழ்ந்து விடுகிறது. அதற்கு எந்தவிதமான காரணமோ, விவாதமோ, நிருபணமோ, நியாயமோ தேவையில்லை. இன்றைக்கு இருக்கின்ற அரசு, அவையின் ஆதரவைப் பெற்றிருக்கவில்லை என்று திட்டவட்டமாகவும் முடிவாகவும் அவையில் உறுதி செய்யப்பட்டால் அரசு உடனடியாகப் பதவி விலகியாக வேண்டும். அரசின்மீது நாடாளு மன்றத்திற்கு நம்பிக்கையில்லை என்பதை மக்களவை நான்கு விதமாக வெளிப்படுத்தலாம்: (அ) அமைச்சரவையின்மீது நம்பிக்கையில்லாத் தீர் மானத்தை நிறைவேற்றுதல், (ஆ) முக்கியமான கொள்கை விஷயத்தில் அரசைத் தோற்கடித்தல், (இ) ஓர் ஒத்திவைப்புத் தீர்மானத்தை நிறை வேற்றுதல், (ஈ) வழங்கல் கோரிக்கைகளுக்கு ஒப்புதல் அளிக்க மறுத்தல்

அல்லது நிதி சம்பந்தமான விஷயத்தில் அரசைத் தோற்கடித்தல்.

அரசாங்க நிதியில் நாடாளுமன்றத்தின் கட்டுப்பாடு - அதாவது வரி விதிப்பது அல்லது வரிவிதிப்பை மாற்றியமைப்பதும், மானியக் கோரிக்கைகளுக்கு ஒப்புதல் அளிப்பதும் நிர்வாகத்தின் தன்னிச்சையான போக்கைக் கட்டுப்படுத்தும் முக்கியமான அதிகாரங்களாகும். நாடாளுமன்றத்தில் இயற்றப்படும் சட்டத்தின்படி அங்கீகாரம் பெறாமல் எந்த ஒரு வரியையும் விதிக்கவோ, அரசின் நிதியிலிருந்து எந்த ஒரு செலவையும் மேற்கொள்ளவோ முடியாது (பிரிவுகள் 114, 115, 116, 265).

பட்ஜெட் மீது நாடாளுமன்றம் விதிக்கும் கட்டுப்பாடு அல்லது நம்பிக்கையில்லாத் தீர்மானம் இயற்றுவது போன்ற கோட்பாட்டளவிலானவற்றைத் தவிர அரசின் மீது நாடாளுமன்றம் கட்டுப்பாட்டை விதிப்பது என்பது 'நாடாளுமன்றங்களின் தாய்' எனப்படுகின்ற இங்கிலாந்து நாடாளுமன்றத்தில்கூட இனிமேலும் செல்லுபடியாகாது. அவையில் பெரும்பான்மை பலமும் குடியரசுத்தலைவர்மூலம் அவையைக் கலைத்துவிட்டு புதிய தேர்தல்களுக்கு உத்தரவிடும் அதிகாரமும் அரசின் கையில் இருப்பதால் நடைமுறையில் பார்க்கும்போது அரசாங்கம்தான் நாடாளுமன்றத்தைக் கட்டுப்படுத்துகிறது.

சட்டமியற்றுவது, நாடாளுமன்றத்தில் கேள்வி எழுப்புவது, பல்வேறு தீர்மானங்களின் மீது விவாதம் நடத்துவது, குழுக்களின் மூலம் கூர்ந்தாய்வு செய்வது, நாடாளுமன்றத்தின் சார்பாக தனது துறையைக் கட்டுப்படுத்துகின்ற அமைச்சர் நாடாளுமன்றத்தின் பிரதிநிதியாகவும் இருப்பது, போன்ற வழிமுறைகளால் நிர்வாகப் பொறுப்பு உறுதி செய்யப்படுகிறது.

*பிற செயல்பாடுகள்:* இவை தவிர பலதரப்பட்ட பிற பணிகளையும் நாடாளுமன்றம் செய்கிறது. எடுத்துக்காட்டாக, குடியரசுத் தலைவர் மீது குற்றச்சாட்டு, உச்சநீதிமன்ற - உயர்நீதிமன்ற நீதிபதிகள், இந்தியத் தலைமை கணக்குத் தணிக்கையர், தேர்தல் ஆணையர், இரண்டு அவைகளின் தலைவர்கள், ஆகியோரைப் பதவி நீக்கம் செய்வது போன்ற விஷயங்களில் நாடாளுமன்றமே முக்கியப் பணியாற்றுகிறது (பிரிவுகள் 61, 124, 217, 148, 324, 90) (சம்பந்தப்பட்ட அத்தியாயங்களின் கீழும் காண்க).

## கட்சித்தாவல் தடைச்சட்டம்

நாடாளுமன்ற உறுப்பினர் பதவியில் இருந்தும், மாநிலச் சட்டப்பேரவை உறுப்பினர் பதவியில் இருந்தும் இடத்தைக் காலிசெய்வது சம்பந்தமாக ஐம்பத்திரண்டாவது திருத்தச் சட்டம் 1985, அரசியலமைப்பின் 101, 102, 190, 191 ஆகிய பிரிவுகளைத் திருத்தியதுடன், புதிய அட்டவணை ஒன்றையும் (பத்தாவதுஅட்டவணை) சேர்த்தது. கட்சித் தாவல் காரணமாக உறுப்பினர்கள் பதவியிழப்பது சம்பந்தமான சில வகையுரைகள் இந்தத் திருத்தத்தின் மூலம் சேர்க்கப்பட்டன. பத்தாவது அட்டவணையின் முக்கிய அம்சங்களாவன:

(1) நாடாளுமன்றம் அல்லது மாநிலச் சட்டமன்றத்திற்கு ஓர் அரசியல் கட்சியின் சார்பில் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினரும், நாடாளுமன்றம் அல்லது மாநிலச் சட்டமன்றத்திற்கு நியமிக்கப்பட்ட ஓர்

அரசியல் கட்சியின் உறுப்பினரும் தாம் சார்ந்துள்ள அரசியல் கட்சியின் உறுப்பினர் பதவியைத் தாமே முன்வந்து துறந்தாலும், அல்லது தாம் சார்ந்துள்ள கட்சியின் கட்டளைக்கு மாறாக அவையில் வாக்களித்தாலும், அல்லது வாக்கெடுப்பில் கலந்து கொள்ளாமல் இருந்தாலும், கட்சித்தாவல் காரணமாக அவை உறுப்பினர் பதவி வகிக்கும் தகுதியை இழப்பார்.

(2) நாடாளுமன்றம் அல்லது மாநிலச் சட்டமன்றத்தில் உள்ள சுயேட்சை உறுப்பினர் தன்னுடைய தேர்தலுக்குப் பின்னர் ஏதேனும் அரசியல் கட்சியில் சேர்ந்தால் அவை உறுப்பினர் பதவியை வகிக்கும் தகுதியை இழப்பார்.

(3) நாடாளுமன்றம் அல்லது சட்டப்பேரவையின் நியமன உறுப்பினர், அவர் நியமனம் செய்யப்பட்டபோது எந்த ஓர் அரசியல் கட்சியையும் சாராதவராக இருந்து, பின்னர் நியமன உறுப்பினராகப் பதவி ஏற்ற ஆறு மாதங்களுக்குள் எந்த ஓர் அரசியல் கட்சியிலும் சேராமல் இருந்துவிட்டு, ஆறுமாதங்களுக்குப் பின்னர் ஏதேனும் அரசியல் கட்சியில் சேர்ந்தால் அவை உறுப்பினர் பதவி வகிக்கும் தகுதியை இழப்பார்.

(4) ஓர் அரசியல் கட்சியில் ஏற்பட்ட பிளவினால் ஒரு புதிய கோஷ்டி உருவாகும் போதும், ஓர் அரசியல் கட்சியுடன் இன்னோர் அரசியல் கட்சி இணைவதாலும், அதில் உள்ள உறுப்பினர் எவரும் பதவியிழக்க மாட்டார்கள்; ஆனால் ஒரு கட்சி பிளவுபடும்போது அவையில் உள்ள அந்தக் கட்சியின் மொத்த உறுப்பினர்களில் குறைந்தபட்சம் மூன்றில் ஒரு பங்கினர் தனி கோஷ்டியாக உருவாக வேண்டும்; அதே போல் இன்னொரு கட்சியுடன் இணையும்போது குறைந்தபட்சம் மூன்றில் இரண்டு பங்கினர் இணைய வேண்டும்.

(5) அரசியல் கட்சியைச் சார்ந்த ஓர் உறுப்பினர் மக்களவைத் தலைவ ராகவோ, மக்களவைத் துணைத்தலைவராகவோ, மாநிலங்களவைத் துணைத்தலைவராகவோ, மாநில சட்டப் பேரவைத் தலைவ ராகவோ, மாநிலச் சட்டப்பேரவைத் துணைத்தலைவராகவோ, மாநிலச் சட்டமன்ற மேலவைத தலைவராகவோ, மாநிலச் சட்டமன்ற மேலவைத் துணைத் தலைவராகவோ தேர்ந்தெடுக்கப்பட்டு, பின்னர் அவர், தாம் சார்ந்துள்ள கட்சியுடன் உள்ள உறவைத் துண்டித்துக் கொண்டாலும் அவர் அவை உறுப்பினராக இருக்கும் தகுதியை இழக்க மாட்டார்.

(6) நாடாளுமன்றம் அல்லது மாநிலச் சட்டமன்றத்தின் ஓர் உறுப்பினர், பதவி வகிக்கும் தகுதியை இழந்து விட்டாரா என்பதை, சம்பந்தப் பட்ட அவைத் தலைவரே தீர்மானிப்பார். சம்பந்தப்பட்ட அவைத் தலைவரே பதவி வகிக்கும் தகுதியை இழந்து விட்டாரா என்ற கேள்வி எழும்போது, சம்பந்தப்பட்ட அவையில் இருந்து அதற்கென நியமிக்கப்படும் ஓர் உறுப்பினர் அந்த விஷயத்தில் முடிவெடுப்பார்.

(7) இந்த அட்டவணையில் சொல்லப்பட்டுள்ளவற்றுக்குச் செயல் வடிவம் கொடுக்கும் விதிகளை இயற்ற சம்பந்தப்பட்ட அவைத் தலைவருக்கு அதிகாரம் உண்டு. அவ்வாறு இயற்றப்படும் விதிகள், சம்பந்தப்பட்ட அவையின் முன் வைக்கப்படவேண்டும். அந்த விதிகளைத் திருத்தவோ, நிராகரிக்கவோ அவைக்கு அதிகாரம் உண்டு.

(8) இந்த அட்டவணைப்படி ஓர் உறுப்பினரைத் தகுதியிழக்கச் செய்யும் அவை நடவடிக்கைகள் அனைத்தும், நாடாளுமன்றமானால் 122 ஆவது பிரிவின் படி நாடாளுமன்ற நடவடிக்கைகளாகவும், சட்ட மன்றமானால், 212 ஆவது பிரிவின்படி சட்டமன்ற நடவடிக்கை களாகவும் கருதப்படும்.

(9) ஓர் அவையின் உறுப்பினரைத் தகுதியழக்கச் செய்வது பற்றி எந்த ஒரு நீதிமன்றமும் அரசியலமைப்பின் எந்த விதிப்படியும் விசாரணை நடத்த முடியாது.

கட்சித்தாவல் தடைசசட்டம் என்று இப்போது பிரபலமாகி விட்ட அரசியலமைப்பு (ஐம்பத்திரண்டாவது திருத்தச்) சட்டம் 1985, தொடக்கத்தில் இருந்தே பலத்த சர்ச்சைக்கு உள்ளாகியிருக்கிறது. அரசியலமைப்பின் அடிப்படைக் கட்டமைப்பையே மீறியது என்றும், நாடாளுமன்றத்தின் அதிகார வரம்புக்கு அப்பாற்பட்டது என்றும், கொள்கைகளைக் காட்டிலும் சௌகரியத்திற்கே அது முன்னுரிமை அளிக்கிறது என்றும் , பல காரணங்களுக்காக இந்தச் சட்டம் தொடர்பாக வழக்குகள் தொடுக்கப்பட்டிருக்கின்றன.

உறுப்பினர்களின் தகுதியழப்புப் பற்றி நீதிமன்றங்கள் ஏதும் விசாரணை நடத்த முடியாது என்று பத்தாவது அட்டவணையின் ஏழாவது பத்தியில் விதிக்கப்பட்டுள்ள தடை, அரசியலமைப்புக்கு முரணானது என்று பஞ்சாப்-ஹரியானா உயர்நீதிமன்றம் அளித்த தீர்ப்பினை எதிர்த்து, அரசு உச்ச நீதிமன்றத்தில் மேல் முறையீடு செய்தது. இந்த அரசியலமைப்புத் திருத்தச் சட்டம் செல்லுபடி ஆகாதென்றும், அரசியலமைப்புக்கு முரணானது என்றும் கூறி பல ரிட் மனுக்கள் உச்சநீதிமன்றத்திலும், பல்வேறு உயர்நீதி மன்றங்களிலும் தாக்கல் செய்யப்பட்டன. அரசு கேட்டுக் கொண்டதற்கு இணங்க, இது சம்பந்தமான அனைத்து வழக்குகளையும் உச்சநீதிமன்றம் தானே விசாரிப்பதென்று, பல்வேறு உயர்நீதிமன்றங்களிலும் நிலுவையில் இருந்த வழக்குகளையும் தன்னுடைய விசாரணைக்கு மாற்றிவிட்டது.

கட்சித்தாவலுக்குத் தடைவிதிக்கின்ற அரசியலமைப்புத் திருத்தச் சட்டத்தை குடியரசுத் தலைவரின் ஒப்புதலுக்கு அனுப்பும் முன்னர், தேவையான அளவுக்கு மாநிலச் சட்டப்பேரவைகளால் ஏற்பளிப்புத் தரப் படவில்லை என்று கூறி, அதை இயற்றியதில் சட்டரீதியான குறைபாடுகள் உள்ளதென, உச்சநீதிமன்றம் கண்டறிந்துள்ளது (கிஹோடோ ஹொலோகான் எதிர் ஜாகில்ஹு மற்றும் ஏனையோர், SC CWP 17, 1991). மேலும், பத்தாவது அட்டவணைப்படியான அவைத் தலைவரின் செயல்பாடுகளில்

சட்ட சம்பந்தமானவற்றில் நீதிமன்றமே இறுதித் தீர்ப்பு அளிக்க வேண்டும். பதவியிழக்கச் செய்யும் நடவடிக்கைகளை அரசியலமைப்பினடிப்படையான அவை நடவடிக்கைகளின் அங்கமாகக் கொள்ளமுடியாது எனவே, அவற்றை நீதிப் புனராய்வு செய்ய முடியும். கட்சித்தாவல் தடைச் சட்டத்தைச் செயல் படுத்தும்போது, ஒரு தீர்ப்பாயம் போலவே அவைத் தலைவர் செயல்படுகிறார் என்றும், எனவே தீர்ப்பாயங்களின் முடிவுகள் நீதிப்புனராய்வுக்கு உட்படுவதுபோல, அவைத்தலைவரின் முடிவும் நீதிமன்றங்களின் மறு விசாரணைக்கு உட்பட்டதே என்றும்கூறி, நீதி மன்றங்களின் விசாரணை வரமபைத் தடை செய்த பத்தாவது அட்டவணையின் ஏழாவது பத்தியை உச்சநீதிமன்றம் தனது தீர்ப்பின் மூலம் நீக்கிவிட்டது.

கட்சி தாவுகின்றவர்களைப் பதவி இழக்கச செய்யவேண்டும் என்ற நோக்கத்தில் 52ஆவது திருத்தத்தை வரைந்தவர்கள், பின்னர் தோன்றககூடிய சில சிக்கல்களை முனகூட்டியே உய்த்துணரவில்லை போல் தோன்றுகிறது. மேலும் பத்தாவது அட்டவணையில் இடம் பெற்றுள்ள சில வகையுரைகளை அவைத்தலைவர்கள பலரும் பலவிதமாகப் பொருள கொண்டு, முறறிலும் வெவ்வேறான தீர்ப்புகளைக் கூறியதால், அந்தச் சட்டத்தின்படி செயல் படுவதில் நிச்சயமற்ற சூழ்நிலைகள் பலவும் தோன்றி, அச்சட்டத்தில் உள்ள மேலும் பல குறைபாடுகள் வெளிச்சத்திற்கு வந்துள்ளன.

மத்தியில் இரண்டு அரசுகள்-திருவி.பி. சிங் அரசும், திரு சநதிரசேகர் அரசும்-அடுததடுத்துக் கவிழ்ந்தன. திரு சநதிரசேகர் ஜனதா தள் (எஸ்) கட்சியின் தலைமையில் ஓர் அரசை அமைத்து மக்களவையில் கொணடு வந்த நம்பிக்கைத் தீர்மானத்தில் வெற்றிபெற்ற போதிலும், ஆளும் ஜனதாதள் (எஸ்) கட்சியின் உறுப்பினர்கள் அனைவரும், திரு. வி.பி. சிங்கால் கட்சியில் இருந்து வெளியேற்றப்பட்டவர்களாகவோ, மககளவைத் தலைவர் திரு. ரபிரேயால் எந்தக் கட்சியையும் சாராதவர்கள் என்று அறிவிக்கப்பட்டவர் களாகவோ, கட்சித் தாவல் தடைச் சட்டத்தின்படி ஏன் தகுதியிழப்புச் செய்யக்கூடாது என்று காரணம் கூறுமாறு மக்களவைத் தலைவர் திரு ரபிரேயால் அறிவிப்புத் தரப்பட்டவர்களாகவோ இருந்தனர். திரு சந்திரசேகர் தலைமையிலான அமைச்சரவை உறுப்பினர்கள் அனைவரின் மீதும் அவைத்தலைவர் நடவடிக்கை எடுக்க வேண்டியதிருந்தது. இந்த விவகாரம் 1991 ஜனவரி 11ஆம் தேதி வரை இழுபட்டது. இறுதியில் சந்தேகத்தின் பலனை ஆளுங்கட்சிக்கு அளிப்பதென்று தீர்மானித்த அவைத்தலைவர், 1990 ஆம் ஆண்டு நவம்பர் மாதம் ஐந்தாம் தேதியன்று கட்சியில் பிளவு தொடங்கி அன்றே முடிவடைந்ததாக அந்தப் பிளவை அங்கீகரித்தார். 54 உறுப்பினர்களைக் கொண்ட ஓர் அரசியல் கட்சியாக ஜனதா தள் (எஸ்) அங்கீகரிக்கப்பட்டது. பிளவுக்குப் பின்னர் கட்சியில் சேர்ந்த ஏழு உறுப்பினர்களும் தகுதியிழப்புச் செய்யப்பட்டனர்.

ஜனதா தள் பிளவுபட்ட இன்னொரு வழக்கில், மக்களவையில் இருந்த ஜனதா தள் கட்சியின் 59 உறுப்பினர்களில் 20 பேர் 1992 ஆகஸ்ட் ஏழாம் தேதியன்று மக்களவைத்தலைவர் திரு சிவராஜ் பாடீல் முன் ஆஜராகி, தாங்கள் தனியொரு பிரிவாகிவிட்டதாகவும், திரு. வி.பி.சிங் தலைமையிலான ஜனதா தள் உறுப்பினர்களிடம் இருந்து விலகித் தனியாக

அமர்வதற்கு மக்களவையில் இடம் ஒதுக்குமாறும் கேட்டுக் கொண்டனர். அந்த இருபது பேரில் எட்டுப்பேரை ஜனதா தள் தலைமை ஏற்கெனவே இரண்டு கட்டங்களில் கட்சியில் இருந்து நீக்கிவிட்டிருந்தபோதிலும், அவர்கள் அனைவருக்கும் மக்களவையில் தனியிடம் ஒதுக்க அவைத் தலைவர் உத்தரவிட்டார். எனினும் மக்களவையின் அனைத்துப் பதிவேடு களிலும் அவர்கள் இருபது பேரும் ஜனதா தள் கட்சியின் 59 உறுப் பினர்களைச் சேர்ந்தவர்களாகவே காட்டப்பட்டு வந்தனர். இறுதியாக 1993 ஜூன் முதல் தேதியன்று அவைத்தலைவர் சிவராஜ்பாடீல் தமது தீர்ப்பை அறிவித்தார். அதன்படி (1) ஒரு குறிப்பிட்ட கட்சியின் சார்பாக நாடாளுமன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் என்ற அரசியலமைப்பு ரீதியான அந்தஸ்தைப் பறிக்கின்ற வகையில் எந்த ஓர் உறுப்பினரையும் தனது கட்சியில் இருந்து நீக்குவதற்கு அரசியலமைப்பு ரீதியாக அரசியல் கட்சிகளுக்கு எந்தவிதமான உரிமையும் கிடையாது (பத்தாவது அட்ட வணையில் பத்தி 2(1) க்கு விளக்கம்(அ)) என்றும், (2) 1992 ஆகஸ்ட் ஏழாம் தேதியன்று உள்ளபடி ஜனதா தள் கட்சியில் இருந்து பிரிந்து வந்த 20 உறுப்பினர்களும், கட்சியின் மொத்த நாடாளுமன்ற உறுப்பினர்களில் மூன்றில் ஒரு பங்குக்குக் குறையாமல் இருந்ததால், அது செல்லுபடியாகக் கூடிய பிளவு என்றும், அதனால் அவர்களைத் தகுதியிழக்கச் செய்யமுடியாது என்றும் அந்தத் தீர்ப்பில் அவைத்தலைவர் கூறியிருந்தார். பிரிந்து வந்த 20 உறுப்பினர் களில் நான்குபேரை, அவர்களுடைய கட்சிக் கொறடாவுக்கு வேண்டுமென்றே கீழ்ப்படியாததற்காக அவைத்தலைவர் தகுதியிழக்கச் செய்தார். எனினும் தகுதியிழப்பு உத்தரவு பிறப்பிக்கப்பட்டதில் இருந்தே அவர்களின் பதவியிழப்பு அமலுக்கு வரும். இந்த வழக்கில் தீர்ப்பளிக்கும் போது, கட்சித் தாவல் தடைச் சட்டம் குறைபாடு உள்ளது என்றும், அதனை மறுபரிசிலனை செய்து சீர்திருத்தம் செய்யவேண்டும் என்றும் மக்களவைத் தலைவர் ஒப்புக் கொண்டார். பத்தாவது அட்டவணைப்படி உறுப்பினர் களைத் தகுதியிழக்கச் செய்யும் பொறுப்பை நீதிமன்றங்களிடம் விட்டு விடுவதே மேலானதாக இருக்கும் என்றும் அவர் அப்போது கருத்துத் தெரிவித்தார்.

கட்சித்தாவல் தடைச் சட்டத்தை உள்ளடக்கிய அரசியலமைப்பின் பத்தாவது அட்டவணையில் பல குறைபாடுகளும் ஓட்டைகளும் இருப்ப தாகவும், அதன் காரணமாக, நமது அரசாங்க முறைக்குப் பெருத்த சேதம் ஏற்பட்டுள்ளதாகவும், எனவே உடனடியாகத் திருத்தங்களை மேற்கொள்வது மிகவும் அவசியம் என்றும், எல்லாத்தரப்பினரும் ஒப்புக்கொண்டுள்ளனர். எடுத்துக்காட்டாக, 'அரசியல் கட்சிகள்' 'பிளவு' 'இணைப்பு' போன்றவை இந்தச் சட்டத்தில் வரையறுக்கப்படவில்லை.

'நாடாளுமன்றக் கட்சி' என்பதையும் 'மூல அரசியல் கட்சி' என்பதையும், அரசியல் கட்சி என்பதன் அடிப்படையிலேயே பத்தாவது அட்டவணை வரையறை செய்தாலும், 'அரசியல் கட்சி' என்பதைத் தனியாக அது வரையறுக்கவில்லை. ஓர் அரசியல் கட்சி என்பதை வரையறை செய்வதும், கட்சித்தாவல் தடைச்சட்டத்தின் நோக்கங்களுக்காக அதனை அங்கீகரிப் பதற்கான நிபந்தனைகளை வரையறுப்பதும் அவசியமானதாகும். அதிலும்

குறிப்பாக, ஒரு பிளவினை அடுத்துப் பிரிந்து செல்லும் கோஷ்டி, பத்தி 2(1) குறிப்பிட்டுள்ள நோக்கங்களுக்காக ஓர் அரசியல் கட்சியாகவே கருதப்படும் என்று பத்தாவது அட்டவணையின் மூன்றாவது பத்தியில் குறிப்பிட்டுள்ளதற்கு ஏற்ப இந்த வரையறை மிகவும் அவசியமானதாகும். (இதுபற்றி மேலும் அறிய இந்நூலாசிரியரின் மற்றொரு நூலான, 'கட்சித் தாவல் சட்டம் மற்றும் நாடாளுமன்ற சிறப்புரிமைகள்' என்பதைக் காண்க).

# 13

# நீதித்துறை

## (பிரிவுகள் 124-147, மற்றும் 214-237)

இந்தியாவின் நீதித்துறை பற்றிய செய்திகள், நமது அரசியல் சட்டத்தில் ஒன்றியத்தைப் பற்றிய நான்காவது பகுதியில் 'ஒன்றிய நீதித்துறை' என்ற தலைப்பின் கீழும், மாநிலங்களைப் பற்றிய ஆறாவது பகுதியில் 'மாநிலங்களில் உயர்நீதிமன்றங்கள்', மற்றும் 'கீழ்நிலை நீதிமன்றங்கள்' ஆகிய தலைப்புகளின் கீழும் இடம் பெற்றுள்ளன. எனினும் மற்ற கூட்டரசு அமைப்புகளில் உள்ளது போல் - எடுத்துக்காட்டாக அமெரிக்காவில் உள்ளது போல் - கூட்டரசு நீதிமன்றங்கள் என்றும், மாநில நீதிமன்றங்கள் என்றும் தனித் தனியான அதிகார அடுக்குமுறை நமது நாட்டில் இல்லை என்பதை வலியுறுத்திக் கூறியாக வேண்டும்.

இந்தியக் குடியரசு முழுமைக்கும் ஒரே அதிகார அடுக்குமுறை கொண்ட நீதித்துறைதான் உள்ளது. உச்சநீதிமன்றமே இந்த அதிகார அடுக்கின் தலைமை நீதிமன்றமாகும். ஒன்றியத்துக்கும் மாநிலங்களுக்கும் இடையேயும், மாநிலங்களுக்கு இடையேயும் எழும் பூசல்களைத் தீர்த்துவைக்கும் ஒரே நீதிமன்றம் உச்சநீதிமன்றம்தான்.

## உச்சநீதிமன்றம்

### உச்சநீதிமன்றத்தின் ஆக்க அமைப்பும் நீதிபதிகளின் பதவிநிலையும்

தலைமை நீதிபதி ஒருவரும், பிற நீதிபதிகள் எழுவரையும் கொண்டதாக உச்சநீதிமன்றம் ஒன்று உருவாக்கப்பட வேண்டும் என்று அரசியல் சட்டத்தின் 124ஆவது பிரிவு கூறுகிறது. எனினும் ஏனைய நீதிபதிகளின் எண்ணிக்கையைச் சட்டம் இயற்றுவதன் மூலம் அதிகரிக்க நாடாளுமன்றத்திற்கு அதிகாரம் அளிக்கப்பட்டுள்ளது. 1986ஆம் ஆண்டு இயற்றப்பட்ட சட்டத்தின் படி, தலைமை நீதிபதியைத் தவிர உச்சநீதிமன்றத்தின் மற்ற நீதிபதிகளின் எண்ணிக்கை 25 ஆக நிர்ணயிக்கப்பட்டுள்ளது. உச்சநீதிமன்ற நீதிபதிகள் மற்றும் உயர்நீதிமன்ற நீதிபதிகள் போன்றோரைக் கலந்தாலோசித்து உச்சநீதிமன்ற நீதிபதிகளைக் குடியரசுத் தலைவர் நியமனம் செய்கிறார்.

தலைமை நீதிபதி நியமனம் தவிர மற்ற நீதிபதிகளை நியமிக்கும் போது கட்டாயமாகத் தலைமை நீதிபதியைக் கலந்தாலோசிக்க வேண்டும். கலந்தாலோசிப்பது என்றால் கருத்துக்களைப் பரிமாறிக் கொள்வதுடன் தகுதிகளைப் பரிசீலிப்பதும் ஆகும். எனினும் ஒப்புதலைப் பெறுதல் என அதற்குப் பொருளல்ல என உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்திருக்கிறது. உச்சநீதி மன்றத் தலைமை நீதிபதியை நியமனம் செய்வதற்கான பெயரைப் பரிந் துரைக்கக் குழு ஒன்றை அமைக்கலாம் என நீதிபதி பகவதி கருத்துக் கூறியிருக்கிறார் (எஸ்.பி. குப்தா எதிர் இந்திய அரசு AIR 1982 SC 149).

உச்சநீதிமன்ற நீதிபதியாக ஒருவர் நியமிக்கப்பட வேண்டுமென்றால் அவர் இந்தியக்குடிமகனாக இருப்பதுடன், உயர்நீதிமன்ற நீதிபதியாகக் குறைந்தபட்சம் ஐந்தாண்டுகளுக்குப் பதவி வகித்தவராக அல்லது உயர்நீதிமன்ற வழக்குரைஞராகக் குறைந்தபட்சம் பத்தாண்டுகளுக்குத் தொழில்புரிந்தவராக அல்லது மேன்மை வாய்ந்த நீதித்துறை வல்லுநராக இருக்கவேண்டும்.

ஆழ்ந்த பரிசீலனைக்குப் பின்னர் தலைமை நீதிபதி வழங்கும் கருத்தை அமைச்சரவை (உண்மையில் கேபினட்) ஆராய்ந்து, நீதிபதிகளாக நியமிக்கப்பட வேண்டியவர்கள் குறித்துக் குடியரசுத் தலைவருக்கு ஆலோசனை வழங்கும். பொதுவாக, உச்சநீதிமன்றத்தின் மிகவும் மூத்த நீதிபதியே தலைமை நீதிபதியாக நியமிக்கப்படுவார். எனினும் 1970களில் சிறிது காலம் இந்த மரபு மீறப்பட்டு, மூத்த நீதிபதிகளைப் புறக்கணித்து விட்டு ஓரிரண்டு நீதிபதிகள் தலைமை நீதிபதிகளாக நியமிக்கப்பட்டனர். மூத்த நீதிபதியையே தலைமை நீதிபதியாக நியமிக்கும் மரபு விரைவிலேயே திரும்பவும் உருவானது.

உச்சநீதிமன்ற நீதிபதி ஒவ்வொருவரும் 65 வயதுவரை பதவியில் இருக்கலாம். குடியரசுத் தலைவரின் ஆணையின் பேரிலேயே உச்சநீதிமன்ற நீதிபதி ஒருவரைப் பதவியிலிருந்து நீக்க முடியும். குடியரசுத்தலைவர் அத்தகைய ஆணையைப் பிறப்பிக்க வேண்டுமானால் சம்பந்தப்பட்ட நீதிபதிக்குத் திறமை இல்லை என்றோ, அவர் முறைகேடாக நடந்து கொண்டார் என்றோ காரணம் காட்டி, நாடாளுமன்றத்தின் இரண்டு அவைகளிலும் மூன்றில் இரண்டு பங்கு உறுப்பினர்கள்ஆஜராகி வாக்களித்துப் பெரும்பான்மை ஆதரவுடன், தனித்தனியாக ஒரு தீர்மானத்தை நிறைவேற்ற, அதனை நாடாளுமன்றத்தின் அந்தக் கூட்டத் தொடரிலேயே குடியரசுத்தலைவரிடம் சமர்ப்பிக்க வேண்டும். இதற்கான நடைமுறையை, பிற சட்டம் இயற்றுவதன் மூலம் நாட ாளுமன்றம் நெறிப்படுத்த முடியும் (பிரிவு 124). அண்மையில் நீதிபதி இராமசாமியைப் பதவி நீக்குவதற்காகக் குடியரசுத் தலைவரிடம் சமர்ப்பிக்கப்பட வேண்டிய தீர்மானத்திற்கு, மக்களவையில் பெரும்பான்மை ஆதரவு கிடைக்காததால், அம்முயற்சி தோல்வியடைந்தது.

நாம் பொதுவாக நம்பிக் கொண்டிருப்பதுபோல, நீதிபதி ஒருவர் மீது குற்றச்சாட்டு சுமத்திப் பதவி நீக்குவதற்கான வழிவகை எதுவும் நமது அரசியலமைப்பில் இல்லை. குடியரசுத்தலைவர் மீது மட்டுமே குற்றச்சாட்டு சுமத்திப் பதவி நீக்க வழியுள்ளது. வேறு எந்தப் பதவியில் உள்ளவரையும்

இதுபோல் பதவி நீக்கம் செய்ய முடியாது. நீதிபதியைப் பதவிநீக்கும் முறைக்கும், குடியரசுத் தலைவர் மீது குற்றச்சாட்டு சுமத்தும் முறைக்கும், அடிப்படையான வேறுபாடு உள்ளது. குடியரசுத்தலைவர்மீது குற்றச்சாட்டு சுமத்தும் தீர்மானத்தை நாடாளுமன்றத்தின் இரண்டு அவைகளும் நிறை வேற்றிய உடனேயே குடியரசுத்தலைவர் அவரது பதவியில் இருந்து நீக்கப்பட்டு விடுகிறார். ஆனால் நீதிபதியைப் பதவிநீக்கம் செய்யும் தீர்மானம் நிறைவேற்றப்பட்ட பின்னர் அதன்மீது ஆணை பிறப்பிப்பது பற்றிக் குடியரசுத் தலைவர் பரிசீலனை செய்ய வேண்டும்.

உச்சநீதிமன்ற நீதிபதியாக நியமிக்கப்படும் ஒவ்வொருவரும், அரசியல் சட்டத்தில் குறிப்பிட்டுள்ளபடி, குடியரசுத்தலைவரின் முன்பு அல்லது அதற்கென நியமிக்கப்பட்ட வேறு நபரின் முன்பு பதவிப்பிரமாணம் எடுத்துக்கொள்ள வேண்டும். உச்சநீதிமன்றத்தின் நீதிபதியாகப் பதவி வகித்த ஒருவர், இந்தியாவிற்குள் எந்த ஒரு நீதிமன்றத்திலும் வழக்கறைஞராகத் தொழில் புரியக் கூடாது என்று அரசியலமைப்பு தடை விதித்துள்ளது (பிரிவு 124(6) & 124(7).

நாடாளுமன்றம் இயற்றும் சட்டத்தின்படி, உச்சநீதிமன்ற நீதிபதிகளுக்கு ஊதியமும் ஏனைய படிகளும் வழங்கப்படும். அவ்வாறு சட்டம் இயற்றப் படாதவரை, இரண்டாவது அட்டவணையில் உள்ளபடி வழங்கப்படும் (பிரிவு 125). தற்போது உச்சநீதிமன்றத் தலைமை நீதிபதிக்கு, மாதமொன்றுக்குப் பத்தாயிரம் ரூபாயும், ஏனைய நீதிபதிகளுக்கு ஒன்பதாயிரம் ரூபாயும், ஊதியமாக வழங்கப்படுகிறது. ஊதியம் தவிர ஏனைய படிகள், இலவசக் குடியிருப்பு, நாடுமுழுவதும் பயணம் செய்ய பயணச் செலவுகள், ஓய்வூதியம் போன்ற பிற சலுகைகளும் அவர்களுக்கு உண்டு.

இந்தியத் தலைமை நீதிபதியின் பதவி காலியாக இருக்கும்போதும், அல்லது அவர் தலைமையிடத்தில் இல்லாதபோதும், தலைமை நீதிபதியின் பொறுப்புகளை நிறைவேற்றுவதற்காக, உச்சநீதிமன்றத்தின் ஏனைய நீதிபதிகளிலிருந்து ஒருவரை தற்காலிகத் தலைமை நீதிபதியாகக் குடியரசுத் தலைவர் நியமிப்பார் (பிரிவு 126).

ஏதேனும் ஒரு சமயத்தில் உச்சநீதிமன்ற நடவடிக்கைகளை மேற் கொள்வதற்குப் போதிய நீதிபதிகள் இல்லை என்றால், நீதிமன்ற நடவடிக்கைகளைத் தொடர்ந்து நடத்துவதற்காக, உயர்நீதிமன்ற நீதிபதி களிடையே உச்சநீதிமன்ற நீதிபதியாக நியமனம் பெறும் தகுதியுடைய வர்களை; தேவையான காலத்திற்குத் தற்காலிக நீதிபதிகளாக நியமிக்கும் அதிகாரம் தலைமை நீதிபதிக்கு உண்டு. எனினும், சம்பந்தப்பட்ட உயர்நீதி மன்றத்தின் தலைமை நீதிபதியைக் கலந்தாலோசித்த பின்னரும், குடியரசுத் தலைவரின் முன் அனுமதியைப் பெற்ற பின்னருமே இத்தகைய தற்காலிக நியமனங்களைச் செய்யலாம். அவ்வாறு நியமிக்கப்படும் நீதிபதியும், உச்சநீதி மன்றம் தொடர்பான கடமைகளுக்கே முன்னுரிமை அளிக்க வேண்டும். இதேபோல, உச்சநீதிமன்றத்தின் ஓய்வு பெற்ற நீதிபதியையும் அல்லது உயர்நீதிமன்றத்தின் ஓய்வு பெற்ற நீதிபதியையும், அவர்களுக்கு உச்சநீதிமன்ற நீதிபதியாக நியமிக்கப்படுவதற்கான தகுதிகள் இருந்தால் தேவையான

காலத்திற்கு உச்சநீதிமன்றத்தின் தற்காலிக நீதிபதியாகப் பொறுப்பு வகிக்கும் படி அழைக்க தலைமை நீதிபதிக்கு அதிகாரம் உண்டு. இவ்வாறு நியமிப்ப தற்கும், குடியரசுத்தலைவரின் முன் அனுமதியும், நியமிக்கப்படக் கூடியவரின் ஒப்புதலும் அவசியமாகும் (பிரிவுகள் 127 & 128).

**உச்சநீதிமன்றத்தின் அதிகாரமும் நீதிவரம்பும்:** உச்சநீதிமன்றம் ஓர் ஆவண நீதிமன்றமாகத் திகழும் என்றும், அதற்குரிய அனைத்து அதிகாரங் களையும் பெற்றதாக விளங்கும் என்றும் பிரிவு 129 கூறுகிறது. நாட்டின் தலைமை நீதிமன்றமாகத் திகழும் உச்சநீதிமன்றத்தின் நடவடிக்கைகளும், செயல்பாடுகளும், முடிவுகளும் எப்போதும் நிலைத்திருக்கும் ஆவணமாகத் தொகுக்கப்பட்டு, தேவை ஏற்படும்போது சட்டத்திற்கு ஆதரவான சாட்சியமாகச் சமர்ப்பிப்பதற்காகப் பேணிக் காக்கப்படுகின்றன. ஆவண நீதிமன்றம் என்றால், அதன் ஆணைகளின் நம்பகத்தன்மை பற்றி எவ்வித கேள்வியும் கேட்காமல் எந்த ஒரு நீதிமன்றத்திலும் அதனைச் சாட்சியாக ஏற்றுக் கொள்ள வேண்டும். (குப்தாரி எதிர் குப்தா AIR 1971 SC 1132; நம்பூதிரிபாட் எதிர் நம்பியார் AIR 1970 SC 2015).

ஆவண நீதிமன்றம் என்றால், தன்னை அவமதிப்பவர்களுக்கு அதுவே தண்டனை அளிக்கலாம். ஆனால் இது ஒரு குறுகுமுறை அதிகாரமாகும். இதனை மிகவும் நெருக்குதலான சூழ்நிலைகளில் மிக அரிதாகவே பயன் படுத்த வேண்டும் நீதிமன்றத்தைப் பற்றியும் அதன் செயல்பாடு பற்றியும் நல்லெண்ணத்துடன் செய்யப்படும் விமர்சனங்களுக்குத் தடையேதும் இல்லை. பொதுநலன் கருதி, நீதித்துறையின் செயல்பாடு குறித்துச் சொல்லப் படும் நியாயமான விமர்சனம் எதுவும் நீதிமன்ற அவமதிப்பு ஆகாது.

மூலவழக்கு விசாரணை, மேல்முறையீடு, ஆலோசனை வழங்கல் ஆகிய மூன்று நீதிவரம்புகளும் உச்சநீதிமன்றத்திற்கு உண்டு. மூல வழக்கு விசாரணை வரம்பு என்பது முதன் முறையாக ஒரு வழக்கை விசாரித்துத் தீர்ப்பளிக்கும் அதிகாரமாகும். (அ) இந்திய அரசாங்கத்திற்கும் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட மாநிலங்களுக்கும் இடையேயான தகராறுகள், (எ.கா. மேற்கு வங்க அரசு எதிர் இந்திய அரசு AIR 1963 SC 1241), (ஆ) ஒரு புறத்தில் இந்திய அரசும், ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட மாநிலங்களுக்கும் மறுபுறத்தில் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட மாநிலங்களுக்கும் இடையேயான தகராறுகள், (இ) இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மாநிலங்களுக்கு இடையேயான தகராறுகள் ஆகிய மூன்றுவிதமான வழக்குகளிலும் மூலவழக்கு விசாரணை வரம்பு உச்சநீதிமன்றத்திற்கே உண்டு. எனினும் அமலில் இருக்கும் ஓர் உடன்படிக்கை அல்லது ஒப்பந்தம் இந்த விசாரணை வரம்பை விலக்கியிருந்தால், அவற்றின் காரணமாகத் தோன்றும் எந்தவிதமான தகராறுக்கும் இந்த நீதிவரம்பு பொருந்தாது (பிரிவு 131). மாநிலங்களுக்கு இடையேயான நதி நீர்த்தகராறுகள் (பிரிவு 262), நிதிக் கமிஷனின் ஆய்வுக்கு விடப்பட்ட விஷயங்கள் (பிரிவு 280), ஒன்றியத்துக்கும் மாநிலங்களுக்கும் இடையே சிலவகையான செலவுகள், ஓய்வூதியங்கள் போன்றவற்றைச் சரிசெய்து கொள்வது (பிரிவு 290), போன்ற வேறு சில விஷயங்களிலும் உச்சநீதி மன்றத்தின் மூலவழக்கு விசாரணை வரம்பு பொருந்தாது. இந்திய

அரசிடமிருந்து இழப்பீடு பெறுவதற்காக, பிரிவு 131-ன் கீழ் மாநில அரசு உச்சநீதிமன்றத்தில் வழக்குத்தொடர முடியாது. ஒன்றியத்துக்கும் மாநிலங்களுக்கும் இடையேயான அதுபோன்ற சாதாரண விஷயங்கள் இந்தப்பிரிவின் கீழ் வாரா (இந்திய அரசு எதிர் ராஜஸ்தான் அரசு (1984) 4 SCC 238). மேலும் உச்சநீதிமன்றத்தின் முன் கொண்டு வரப்படும் எந்த ஒரு வழக்கானாலும் அது சட்டம் அல்லது பொருண்மை பற்றிய வினா சம்பந்தப்பட்டதாகவும், அப்பொருண்மை அல்லது சட்டம் உளதாயிருப்பதைப் பொறுத்தே சட்டப்பூர்வமான உரிமை தோன்றுவதாகவும் இருக்க வேண்டும்.

அரசியலமைப்பின் 44ஆவது திருத்தச் சட்டம் மூலம் 1978ஆம் ஆண்டில் புதியதாகச் சேர்க்கப்பட்ட விதி 139A-ன்படி, ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட உயர்நீதிமன்றங்களில் விசாரணையில் உள்ள வழக்குகள் சட்டம் பற்றிய வினா எழுப்புபவையாக இருந்தாலும், அல்லது மிகமுக்கியத்துவம் வாய்ந்த விஷயங்களாக இருந்தாலும், அந்த வழக்குகள் அனைத்தையும் உச்சநீதிமன்றம் தனக்கே மாற்றிக் கொண்டு விசாரணை நடத்தலாம். நீதி பரிபாலன நோக்கத்தில், ஓர் உயர்நீதிமன்றத்தில் உள்ள வழக்கை வேறொரு உயர்நீதிமன்றத்திற்கு மாற்றிவிடும் அதிகாரமும் உச்சநீதிமன்றத்திற்கு உண்டு.

தனி நபர்களின் அடிப்படை உரிமைகள் மீறப்படுவது தொடர்பான வழக்குகளிலும் மூல விசாரணை வரம்பு உச்சநீதிமன்றத்திற்கு உண்டு. அந்த உரிமைகளை நிலைநாட்டுவதற்காக உச்சநீதிமன்றம் பல்வேறு நீதிப் பேராணைகளைப் பிறப்பிக்கலாம் (பிரிவு 32). தன்னுடைய அடிப்படை உரிமைகள் பாதிக்கப்படும்போது நேரிடையாகவே ஒருவர் உச்சநீதிமன்றத்தை அணுகலாம் என்பது நமது அரசியலமைப்பில் உள்ள தனிச் சிறப்பான அம்சமாகும்.

உச்சநீதிமன்றத்தின் மேல்முறையீட்டு விசாரணை வரம்பு, உரிமையியல் வழக்குகள், குற்றவியல் வழக்குகள், அரசியலமைப்பு சம்பந்தப்பட்ட வழக்குகள் ஆகிய அனைத்திற்கும் பொருந்தும். உரிமையியல் சம்பந்தப்பட்ட வழக்குகளில் ஓர் உயர்நீதிமன்றம் இறுதித் தீர்ப்பளிக்கும்போது, ஏதேனும் ஒரு வழக்கில் அரசியலமைப்புக்கு விளக்கமுரைப்பதில் அனைத்துத் தரப்பிற்கும் முக்கியத்துவம் வாய்ந்த சட்ட வினா சம்பந்தப்பட்டுள்ளது என்றும், அதனை உச்சநீதிமன்றமே தீர்த்து வைக்க முடியும் என்றும் (பிரிவு 133) பிரிவு 134A-ன்படி உயர்நீதிமன்றம் ஒரு சான்றளித்தால், அவ்வழக்குப் பற்றி உச்சநீதிமன்றத்தில் மேல்முறையீடு செய்யலாம்.

குற்றவியல் வழக்குகளில், (அ) ஓர் உயர்நீதிமன்றம், குற்றம் சாட்டப்பட்ட ஒருவரின் விடுதலைத் தீர்ப்பை மாற்றி அவருக்கு மரண தண்டனை அளித்தாலும், (ஆ) உயர்நீதிமன்றத்தின் அதிகார வரம்புக்குக் கீழ் நிலையில் உள்ள ஏதேனும் நீதிமன்றத்திலிருக்கும் வழக்கைத் தனக்கு மாற்றிக் கொண்டு, அந்த வழக்கின் விசாரணை முடிவில் குற்றம் சாட்டப்பட்டவருக்கு மரண தண்டனை அளித்தாலும், அந்தத் தீர்ப்புகளை எதிர்த்து உச்சநீதிமன்றத்தில் மேல்முறையீடு செய்யலாம் (பிரிவு 134; ராம்குமார் எதிர் ம.பி. அரசு AIR 1975 SC 1026; பட்ட நாராயணா எதிர் உ.பி. அரசு AIR 1975 SC 1252).

ஓர் உயர்நீதிமன்றத்தில் தீர்ப்பளிக்கப்பட்ட ஒரு வழக்கு, உச்சநீதி

மன்றத்தில் மேல் முறையீடு செய்வதற்கு உகந்த வழக்கு என்று பிரிவு 134Aன்படி அந்த உயர்நீதிமன்றம் சான்றளித்தால், உயர்நீதிமன்றத்தின் தீர்ப்பை எதிர்த்து, பிரிவு 134(1) (C)இன் கீழ் உச்சநீதிமன்றத்தில் மேல் முறையீடு செய்யலாம். எனினும், உச்சநீதிமன்றத்தின் விதிமுறைகளுக்கு உட்பட்டும், உயர்நீதிமன்றம் விதிக்கின்ற நிபந்தனைகளுக்கு உட்பட்டும்தான் அத்தகைய மேல்முறையீடுகளைச் செய்யலாம். குற்றவியல் வழக்குகளில் முக்கியமான சட்ட வினா ஏதேனும் தோன்றி, அதற்கு உடனடியாக உச்சநீதி மன்றம் விளக்கம் அளிக்க வேண்டிய சூழ்நிலை இருக்கிறதா என்றும், உயர் நீதிமன்றத் தீர்ப்பை எதிர்த்து உச்சநீதிமன்றத்தில் மேல்முறையீடு செய்ய வாய்ப்பு மறுக்கப்பட்டால், குற்றம் சாட்டப்பட்டவருக்குப் பெரும் அநீதி இழைக்கப் பட்டதாகிவிடும் என்ற சூழ்நிலை இருக்கிறதா என்றும், உயர்நீதி மன்றம் மதிப்பிட்டு, அத்தகைய சூழ்நிலைகள் இருக்கும் பட்சத்தில். மேல் முறையீடு செய்ய சான்றளிக்கும்.

இந்தியாவில் இருக்கும் எந்த ஒரு நீதிமன்றம் அல்லது தீர்ப்பாயம் வழங்கிய எந்த ஒரு தீர்ப்பு அல்லது தீர்ப்பாணை அல்லது தண்டனை அல்லது உத்தரவினையும் எதிர்த்து உச்சநீதிமன்றத்தில் மேல் முறையீடு செய்ய பிரிவு 136-ன் கீழ் உச்சநீதிமன்றம் தனனுடைய தீர்ப்புரிமைப்படி விசேஷ அனுமதி (Special leave) வழங்கலாம். மேல்முறையீட்டுக்காக விசேஷ அனுமதி வழங்கும் உச்சநீதிமன்றத்தின் அதிகாரம், பிரிவு 134-ன் கீழ் சான்று வழங்கும் உயர்நீதிமன்ற அதிகாரத்தைக் காட்டிலும் மிகவும் விரிவானது. இராணுவ நீதிமன்றங்களைத் தவிர நாட்டில் உள்ள எந்த நீதிமன்றம் அல்லது தீர்ப்பாயத்தில் வழங்கப்படும் உரிமையியல் அல்லது, குற்றவியல் அல்லது. வருவாய்த்துறை சம்பந்தப்பட்ட எந்த வழக்கின் மீதான தீர்ப்பிலும், உச்சநீதிமன்றம் விசேஷ அனுமதி வழங்கலாம். எனினும் நீதிபரிபாலனம் முற்றிலுமாகச் சரியில்லாத வழக்குகளுக்கு மட்டுமே இத்தகைய விசேஷ அனுமதி வழங்கப்படும் என்று உச்சநீதிமன்றமே கூறியுள்ளது (ஹரிபத டே எதிர் மேற்கு வங்க அரசு, AIR 1965 SC 757; மர்து எதிர் உ.பி. அரசு AIR 1971 SC 1050, ராமசரண் எதிர் சிடிஓ. AIR 1962 SC 1326).

ஆலோசனை வழங்கும் நீதிவரம்பை அரசியலமைப்பின் 143ஆவது பிரிவு உச்சநீதிமன்றத்துக்கு வழங்குகிறது. பொது முக்கியத்துவம் வாய்ந்த சட்டம் தொடர்பான அல்லது பொருண்மை சம்பந்தமான வினாவுக்கு உச்சநீதிமன்றத்தின் ஆலோசனையைப் பெறுவது உசிதமானது என்று குடியரசுத்தலைவர் கருதினால், அவர் உச்சநீதிமன்றத்தின் கருத்தைக் கேட்டறியலாம். குடியரசுத்தலைவரிடமிருந்து அப்படிப்பட்ட செய்தி உச்ச நீதிமன்றத்திற்கு அனுப்பப்பட்டால் நீதிமன்றமும் தேவையான விசாரணை களை நடத்திய பின்னர் தனது கருத்துக்களைக் குடியரசுத்தலைவருக்கு அறிவிக்கும். அவ்வாறு உச்சநீதிமன்றம் அளிக்கின்ற கருத்து, ஆலோசனை வழங்குவது போன்றதால், குடியரசுத்தலைவர் விரும்பினால் அதனை ஏற்றுக் கொள்ளலாம், ஏற்றுக் கொள்ளாமலும் போகலாம். முதன்முறையாக தில்லிச் சட்டங்கள் வழக்கில் இதுபோன்று உச்சநீதிமன்றத்தின் கருத்தைக் குடியரசுத் தலைவர் கேட்டறிந்தார் (1951; SCR 747).

அரசியலமைப்பு நடைமுறைக்கு வருவதற்கு முன்னர் நிறைவேற்றப் பட்டு அதற்குப் பின்னரும் தொடர்ந்து அமலில் இருக்கின்ற ஒப்பந்தம், உடன்படிக்கை, பட்டயம் அல்லது அதுபோன்ற சாசனங்கள் பற்றியும் உச்ச நீதிமன்றத்தின் கருத்தைக் குடியரசுத்தலைவர் கேட்டறியலாம்.

இந்திய அரசின் அதிகாரப் பட்டியலில் உள்ள பிற விஷயங்கள் எவற்றைப் பற்றியேனும் நாடாளுமன்றம் சட்டம் இயற்றி உச்சநீதிமன்றத் திற்கு நீதிவரம்பு அளித்தால் அவைபற்றியும் உச்சநீதிமன்றம் விசாரணை நடத்தும் அதிகாரம் பெறும் என பிரிவு 138 கூறுகிறது. இந்திய அரசாங்கமும் ஏதாவது ஒரு மாநில அரசாங்கமும் ஓர் உடன்படிக்கையின்படி எந்த ஒரு விஷயத்தைப் பற்றியேனும் உச்சநீதிமன்றம் நீதிவழங்கும் அதிகாரம் பெற்ற தெனக்கூறி, அந்த அதிகாரம் நாடாளுமன்றச் சட்டத்தின்படி உச்சநீதிமன்றத் திற்கு வழங்கப்பட்டால், அந்த விஷயங்கள் குறித்த நீதிவரம்பும் உச்சநீதிமன்றத் திற்கு உண்டு. இந்த ஏற்பாடு உச்சநீதிமன்றத்தின் நீதிவரம்பை விரிவாக்குவ துடன், உடனடியாகத் தீர்க்கப்பட வேண்டிய அவசரமான வழக்குகளை உச்சநீதிமன்றம் தனது மூலவிசாரணை வரம்பில் நேரிடையாக விசாரிக்கவும் வகை செய்கிறது.

உச்சநீதிமன்றத்தின் முடிவுகளையும். நெறிமுறைகளையும் செயல் படுத்துவதற்காக இந்தியாவில் உள்ள சிவில் மற்றும் நீதித்துறை அதிகார அமைப்புகள் அனைத்தும் 'உச்சநீதிமன்றத்திற்கு உதவியாகச் செயல்பட' வேண்டியுள்ள அளவிற்கு அவை உச்சநீதிமன்றத்திற்குக் கீழ்படிந்துள்ளதாக அமைக்கப்பட்டுள்ளன (பிரிவு 144). உசசநீதிமன்றத்தின் வழக்குங்களையும், நடைமுறைகளையும் ஒழுங்குபடுத்துவதற்காக குடியரசுததலைவரின் ஒப்புதலைப் பெற்று அவ்வப்போது உச்சநீதிமன்றம் விதிகளை இயற்றிக் கொள்ளலாம். உச்சநீதிமன்றத்தின் அதிகாரிகளும், ஏனைய அலுவலர்களும் தலைமை நீதிபதியால் அல்லது அவர் சொற்படி பிற நீதிபதியால் அல்லது அதிகாரியால் நியமிக்கப்படுகிறார்கள் (பிரிவுகள் 145 & 146).

**நீதிப்புனராய்வு:** அமெரிக்க ஐக்கிய நாடுகளில் தோன்றி வளர்ந்த 'நீதிப்புனராய்வு' என்னும் கருத்து, ஒரு சட்டம் அந்நாட்டில் அடிப்படைச் சட்டமான அரசியல் சட்டத்துக்கு ஒத்திசைவாக உள்ளதா இல்லையா என்பதை அந்நாட்டின் தலைமை நீதிமன்றம் விசாரித்துத் தீர்ப்பளிப்பதைக் குறிக்கும். இந்த விஷயத்தில் நமது அரசியலமைப்பு அமெரிக்காவில் உள்ள நடைமுறையையே பெரிதும் பின்பற்றுகிறது. ஒன்றியம் அல்லது மாநிலங் களால் இயற்றப்படும் எந்த ஒரு சட்டமானாலும், அது நம் நாட்டின் அடிப்படைச் சட்டமான அரசியல் சட்டத்துக்கு ஒத்திசை வானதாக இருக்க வேண்டும். ஆனால் ஏதேனும் ஒரு சட்டம் அரசியல் சட்டத்துக்குப் புறம்பானது என்று நீதிமன்றத்தால் அறிவிக்கப்பட்டால், பெரும்பாலான சமயங்களில் நம்நாட்டில், அந்தச் சட்டத்தை அரசியலமைப்புக்கு உட்பட்டதாக ஆக்குகின்ற வகையில் அரசியல் சட்டம் திருத்தப்படுகிறது.

ஒரு குறிப்பிட்ட சட்டத்தை இயற்றும்போது சம்பந்தப்பட்ட அரசு, ஏழாவது அட்டவணையில் உள்ள தனது அதிகார வரம்பை மீறிவிட்டதாக ஒரு மாநில அரசு அல்லது பாதிக்கப்பட்ட ஒரு நபர் அல்லது பாதிக்கப்பட்ட ஒரு குழுவினர் உச்சநீதிமன்றத்தில் வழக்குத் தொடருவது நம்நாட்டில்

வாடிக்கையாக உள்ளது. அத்தகைய சட்டங்களைப் புனராய்வு செய்யும்போது, அதிகார வரம்புகள் மீறப்பட்டனவா என்பது குறித்தும் உச்சநீதிமன்றம் ஆராயும். நமது அரசியலமைப்பில் அடிப்படை உரிமைகள் பற்றிய ஓர் அத்தியாயம் சேர்க்கப்பட்டுள்ளதால், நீதிப்புனராய்வு மிகவும் முக்கியத்துவம் பெறுகிறது. அரசின் அனைத்துவிதமான நடவடிக்கைகளுக்கும் எதிராக அடிப்படை உரிமைகளை நிலைநாட்டுவதற்கு, பிரிவு 12 உத்தரவாதம் அளிக்கிறது. இங்கே 'அரசு' என்பதில் இந்திய அரசாங்கம், நாடாளுமன்றம், மாநில அரசாங்கம், மாநிலச் சட்டமன்றங்கள், இந்திய ஆட்சிப் பகுதிக்குள் உள்ள அனைத்து உள்ளாட்சி மற்றும் அதிகார அமைப்புகள், அரசின் கட்டுப்பாட்டில் உள்ள அமைப்புகள் ஆகிய அனைத்தும் அடங்கும்.

அடிப்படை உரிமைகளுடன் ஒத்திசையாத அல்லது அவ்வுரிமைகளை ஒடுக்குகின்ற எல்லாச்சட்டங்களும், ஒத்திசையாத அளவிற்குச் செல்லுபடியாகா என்று பிரிவு 13 கூறுகிறது. அரசியலமைப்பைத் திருத்துகின்ற சட்டம், பிரிவு 12(2)இல் கூறப்படும் 'சட்டம்' என்ற வரையறைக்குள் வராது என்று 1967ஆம் ஆண்டுவரை உச்சநீதிமன்றம் ஏற்றுக் கொண்டிருந்தது. ஆனால் கோலக்நாத் வழக்கில் உச்சநீதிமன்றம் தீர்ப்புரைக்கும்போது, அரசியலமைப்பைத் திருத்துகின்ற சட்டமும் இந்த வரையறையின்படி ஒரு சட்டமே என்றும், எனவே அது நீதிப்புனராய்வுக்கு உட்பட்டது என்றும் பெரும்பான்மை நீதிபதிகள் தீர்ப்பு வழங்கினர். எனவே அரசியலமைப்பின் இருபத்து நான்காவது திருத்தச்சட்டம் 1971-ன்படி பிரிவு 13(4) என்ற புதிய விதி சேர்க்கப்பட்டு, அரசியலமைப்பைத் திருத்தும் சட்டம் பிரிவு 13(2)இல் சொல்லப்பட்டுள்ளபடி ஒரு சட்டமாகாது என்று வகைசெய்யப் பட்டது. இது சரியே என்று கேசவானந்த பாரதி வழக்கில் உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்தது.

அடிப்படை உரிமைகள் அத்தியாயத்தில் உள்ள பிரிவு 32, நீதிப் புனராய்வு அதிகாரத்தைக் குறிப்பாக உச்சநீதிமன்றத்திடம் அளிக்கிறது. இப்பிரிவின்படி, மூன்றாவது அத்தியாத்தில் வழங்கப்பட்டுள்ள உரிமைகளை நிலைநிறுத்துவதற்காக, உரிய நடைமுறைகளின்படி நேரிடையாக உச்சநீதிமன்றத்தை அணுக, ஒவ்வொரு குடிமகனுக்கும் உரிமை உண்டு. அவ்வாறு தாக்கல் செய்யபபடும் மனுவை, உச்சநீதிமன்றம் தனது மூலவிசாரணை வரம்பிற்குள் விசாரிக்கலாம். அடிப்படை உரிமைகளை நிலைநாட்டுவதற்காக, ஆட்கொணர்வித்தல் (Habeas Corpus), செயலுறுத்தல் (Mandamus), தடையுறுத்தல் (Prohibition), நெறிமுறை உறுத்தல் (Quo-warranto), தகுதிமுறை வினவல் (Certiorari), ஆகிய நீதிப்பேராணைகளில் ஒன்றையோ, பிற ஆணைகளையோ பிறபபிக்கும் அதிகாரம் உச்சநீதிமன்றத்திற்கு வழங்கப்பட்டுள்ளது.

இதே அதிகாரங்கள், பிரிவு 226-ன் கீழ், மாநில உயர்நீதிமன்றங்களுக்கும் அளிக்கப்பட்டுள்ளன. அதாவது, அடிப்படை உரிமைகளை நிலைநாட்டு வதற்காக, தனது நீதிவரம்புக்குட்பட்ட எந்த ஒரு நபருக்கோ, அதிகார அமைப்புக்கோ ஆணைகளையும், ஆட்கொணர்வித்தல், செயலுறுத்தல், தடையுறுத்தல், நெறிமுறை உறுத்தல், தகுதிமுறை வினவல் ஆகிய நீதிப் பேராணைகளையும் பிறப்பிக்க உயர்நீதிமன்றத்திற்கு அதிகாரம் அளிக்கப்

பட்டுள்ளது. (நீதிப்பேராணைகள் பற்றிய விளக்கத்திற்கு உயர்நீதிமன்றங்கள் என்ற தலைப்பின் கீழ்க் காண்க).

*சட்டப்படியான வழிமுறையும் சட்டத்தால் நிர்ணயிக்கப்பட்ட நடைமுறையும்:* சட்டப்படியான வழிமுறையைத் தவிர்த்துப் பிற வழிகளில் எந்த ஒரு மனிதனின் உரிமையையும் உடமையையும் பறிக்கக்கூடாது என்று அமெரிக்க அரசியல் சட்டம் (அரசியலமைப்புத் திருத்தங்கள்) கூறுகிறது. ஆனால் இந்திய அரசியலமைப்போ, சட்டத்தால நிர்ணயிக்கப்பட்ட நடைமுறைக்கு மாறாக எந்த ஒரு மனிதனுடைய சுதந்திர உரிமையையும் பறிக்கலாகாது என்று கூறுகிறது.

சட்டப்படியான வழிமுறை என்பது, குடிமக்களின் உரிமைகளுக்குப் பாதுகாப்பு அளிக்க உச்சநீதிமன்றத்திற்குப பரவலான வாய்பபை அளிக்கிறது. இதன்படி உரிமைகளை மீறுகின்ற சட்டங்கள், சட்டம் ஒவ்வாத காரணத்தால் மட்டுமின்றி, நியாயமற்றவை என்ற காரணததாலும் செல்லுபடியாகா என்று நீதிமன்றம் அறிவிக்கலாம. ஆனால் நமது உச்சநீதிமனறமோ, ஒரு சட்டம் அரசியலமைப்புக்கு உட்பட்டதா எனறு தீர்மானிக்கும்போது, அசசட்டம் உரிய அதிகாரங்களுக்கு உடபட்டு இயற்றப்பட்டதுதானா என்ற எழுவினாவின அடிப்படையிலேயே ஆராய்ந்து தீர்ப்பளிக்கிறது. அந்தச் சட்டம் நியாயமானதுதானா என்றோ, ஏற்புடையதுதானா என்றோ, அந்தச் சட்டத்தால் ஏற்படும் கொள்கை விளைவுகளைப் பற்றியோ ஆராயவேண்டிய அவசியம நீதிமன்றததிற்கு இல்லை.

தனித்த ஒரு வழககில், தனித்த ஒரு மனுவின் அடிப்படையில உசசநீதி மன்றம் தீர்ப்பளிக்கும். பொதுபபட வரும் விஷயங்களில் அது தனது கருத்தையோ, ஆலோசனையையோ வழங்குவதில்லை. ஒரு சட்டம் தனது உரிமைகளைப் பாதித்துவிட்டதாககூறி, அச்சட்டம் அரசியலமைப்புக்கு முரணானது எனறு பாதிககப்பட்ட நபரோ நீதிமன்றத்தில் மனு தாக்கல் செய்யவேண்டும். அந்தச சட்டம் அமல்படுத்தப்படுவதால் அந்த நபர் பாதிப்பு அடைந்துள்ளதாகவோ, நேரிடையாகப் பாதிக்கப்படும் வாய்ப்பு உள்ளதாகவோ காட்டி, அநதப் பாதிப்புக்கு நிவாரணம் கோர வழி உள்ளது என்று மனு தாக்கல் செய்யவேண்டும்.

*பொதுநல வழக்காடல்:* வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த 'நீதிபதிகள இடமாற்றல் வழக்கில்' தீர்ப்பளித்த உச்சநீதிமன்றத்தின் ஏழு நீதிபதிகள் நீதி ஆயம், ஒரு விஷயத்தில் ஒருவருக்கு நேரடியாகத் தொடர்பு இல்லா விட்டாலும் 'போதிய அக்கறை' இருந்தாலேயே பிரிவு 226-ன் கீழ் உயர்நீதி மன்றத்தை அணுகலாம் என்றும், "வறுமை, உதவியின்மை, இயலாமை, அலலது சமூக ரீதியாகவோ, பொருளாதார ரீதியாகவோ பிரதிகூலமான நிலைமை" போன்ற காரணங்களால் எந்த ஒரு நபரும், அல்லது பிரிவினரும், தமது அடிப்படை உரிமைகள் மீறப்படுவதை நிவர்த்திப்பதற்காக நீதிமன்றத் திற்குச் சென்று வழக்காட முடியாத நிலையில், அவர்களுக்காக உசசநீதி மன்றத்தில் பிற எவரேனும் வழக்குத் தொடரலாம் என்றும் தீர்ப்பளித்தது. இம்மாதிரியான வழக்குகளுக்காக, ஒரு கடிதம் எழுதுவதன் மூலமே உச்ச நீதிமன்றத்தை அணுகலாம் (எஸ்பிகுப்தா எதிர் இந்தியக் குடியரசுத்தலைவர் AIR 1982 SC 149). இந்தத் தீர்ப்புக்குப் பின்னர், பொதுநலன் நாடும்

குடிமக்களும், சமூக அமைப்புகளும் பொது மக்களின் நலனுக்காக நீதிமன்றங் களில் நிவாரணம் தேடும் வாய்ப்பு உருவானது.

கொத்தடிமைத் தொழிலாளர்களை விடுவிக்கும் பணியில் ஈடுபட்டிருந்த ஓர் அமைப்பு, ஹரியானா மாநிலத்தின் ஃபரிதாபாத் மாவட்டத்தில் அமைந்துள்ள கல்லுடைக்கும் இடங்களில் ஓர் ஆய்வினை மேற்கொண்டதாகவும், அந்த இடங்களில் பெரும் எண்ணிக்கையிலான தொழிலாளர்கள் மனிதாபிமானமற்ற மிகவும் மோசமான சூழ்நிலைகளில் வேலை செய்வதாகவும், அவர்களில் பெரும்பாலோர் கொத்தடிமைத் தொழிலாளர்கள் எனவும் கண்டறிந்ததாகவும், உச்சநீதிமன்றத்திற்கு ஒரு கடிதம் மூலம் தெரியப்படுத்தியது (பந்துவா முக்தி மோர்ச்சா எதிர் இந்திய அரசு AIR 1984 SC 803). அந்தத் தொழிலாளர்களின் அவலநிலைக்கும் இன்னலுக்கும் முடிவுகட்ட அரசியல் சட்டம் மற்றும் பல்வேறு சட்டங்களில் இடம் பெற்றுள்ள வகையுரைகளைச் சரிவர நடைமுறைப்படுத்துவதற்கு, நீதிப் பேராணை ஒன்றைப் பிறப்பிக்க வேண்டுமென அம்மனுதாரர்கள் கோரியிருந் தனர். அந்தக் கடிதத்தை ரிட்மனுவாக ஏற்றுக்கொண்ட உச்சநீதிமன்றம், வழக்குரைஞர்கள் இருவரைக் கொண்ட ஒரு குழுவை நியமித்து, கல் லுடைக்கும இடங்களைப் பார்வையிட்டு, விசாரணை நடத்தி, நீதிமன்றத் திற்கு ஓர் அறிக்கையைத் தருமாறு உத்தரவிட்டது.

லக்ஷ்மிகாந்த் பாண்டே எதிர் இந்திய அரசு என்ற வழக்கில், வெளி நாட்டவர்களுக்கு இந்தியக் குழந்தைகளைத் தத்துக் கொடுக்கும் விஷயத்தில், சில சமூக அமைப்புகளும் தன்னார்வ நிறுவனங்களும், பல முறைகேடுகளில் ஈடுபட்டதாக கடிதத்தின் அடிப்படையில், ஒரு ரிட்மனு தாக்கல் செய்யப் பட்டது. தத்துக் கொடுத்தல் என்ற பெயரில், பிஞ்சுக் குழந்தைகளின் உயிருக்கு அபாயம் விளைவிக்கின்ற வகையில், அவர்களைத் தொலைதூர நாடுகளுக்கு நெடும்பயணம் மேற்கொள்ளச் செய்வதுடன், எதிர்காலத்தில் அந்தக் குழந்தைகளின் இருப்பிடம் பற்றி நிச்சயமற்ற தன்மையும் நிலவுகின்றது என, அம்மனுவில் குற்றம் சாட்டப்பட்டிருந்தது. அந்த வழக்கை விசாரித்த தலைமை நீதிபதி பி என். பகவதி, தத்துக்கொடுக்கப்படும் குழந்தைகளின் நலனை உறுதி செய்வதற்காக சில வழிமுறைகளை வகுத்து, இந்திய அரசும், தத்துக் கொடுப்பதில் ஈடுபட்டுள்ள அமைப்புகளும் அவற்றைப் பின்பற்ற வேண்டுமெனக் கூறினார் (1987 1 SCC 667).

***அரசியலமைப்புக்குச் சார்பாக துணிபு:*** எந்த ஒரு சட்டமானாலும் அது அரசியலமைப்புக்கு உட்பட்டது என்றே துணியப்படும். அச்சட்டம் அரசியலமைப்புக்கு முரணானது என்று நிரூபிப்பதற்கான எல்லாப் பொருண்மைகளையும் தாக்கல் செய்யவேண்டிய பொறுப்பு மனுதாரர்களையே சேரும்.

***இணைபிரிப்புக் கோட்பாடு:*** ஒரு சட்டத்திற்கு விளக்கமுரைக்கும் போது, அந்தச் சட்டம் முழுவதும் அரசியலமைப்புக்கு முரணானதா அல்லது சட்டத்தின் ஒரு பகுதி மட்டும் முரணானதா என்று உச்சநீதிமன்றம் தீர்மானிக்க வேண்டும். பொருண்மைகளின தேவையைக் கருதி, ஒரு சட்டத்தின் ஒரு பகுதி மட்டும் செல்லாது எனவும் உச்சநீதிமன்றம் அறிவிக்கலாம்.

*முன்னேற்றநிலை விளக்கமுரைக்கும் கோட்பாடு:* அரசிய லமைப்புக்கு உச்சநீதிமன்றம் விளக்கமுரைக்கும்போது, முன்னேற்றநிலைக் கோட் பாட்டைப் பின்பற்ற வேண்டும். அதாவது, தொடர்ந்து மாறிவருகின்ற சமுதாய-சட்டச் சூழ்நிலையைக் கருத்தில் கொண்டு, அரசியலமைப்புக்கு விளக்கமுரைக்க வேண்டும்.

*அரசியலமைப்புக்கு முரணானது என அறிவிக்கப்பட்ட சட்டத்தின் நிலை:* உச்சநீதிமன்றம் பிறப்பிக்கும் சட்டம், இந்தியாவில் உள்ள அனைத்து நீதிமன்றங்களையும் கட்டுப்படுத்தும் என பிரிவு 141 கூறுகிறது. எனவே ஒரு சட்டம், அது இயற்றப்பட்ட விதத்தில் குறைபாடு உள்ள காரணத்தாலோ, அடிப்படை உரிமைகளை மீறுகின்ற காரணத் தினாலோ, அரசியலமைபபுக்கு முரணானது என உச்சநீதிமன்றம் தீர்ப் பளித்தால் இந்தியாவில் உள்ள அனைத்து நீதிமன்றங்களையும் அத்தீர்ப்பு கட்டுப்படுத்தும். அந்தச் சட்டம் முற்றிலுமாகப் புறக்கணிக்கப்பட்டு, அடுத் தடுத்து வரும் நீதிமன்ற நடவடிக்கைகளில் அது செயல்படுத்தப்பட மாட்டாது (ஸ்டார் கம்பெனி எதிர் இந்திய அரசு AIR 1987 SC 179; உதவி கலெக்டர் எதிர் டன்லப் (1985) 1SCC 260; கௌரியா எதிர் தாக்கூர் AIR 1986 SC 1440).

*நீதித்துறையின் சுதந்திரம்:* நிர்வாகத் தலையீட்டுக்கு எதிராகவும், சட்டமன்றத் தலையீட்டுக்கு எதிராகவும் தனிநபர்களின உரிமைகள் பாதுகாக்கப்பட வேண்டியிருப்பதால் பிரதிநிதித்துவ மக்களாட்சி அமைப்பில் நீதிபரிபாலனம் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது. அரசாங்கத்தின் மற்ற இரண்டு உறுப்புகளிடமிருந்தும் சுதந்திரம் பெற்ற அமைப்பாகவும் அவற்றினும் உயரதிகாரம் பெற்ற அமைப்பாகவும் நீதித்துறையை ஆக்குவதன் மூலம் அந்த உரிமைகள் பாதுகாக்கப்படுகின்றன. கூட்டரசுக்கும் அதன் அங்கங் களின் அரசுகளுக்கும், அரசியலமைப்பு ரீதியாக அதிகாரங்கள் பகிர்ந்தளிக்கப் பட்டும், நிர்வாகம் - சட்டமியற்றும் அவைகள் - நீதித்துறை ஆகியவற்றுக்கு தனித்தனியே செயல்முறை அதிகாரங்கள் பகுக்கப்பட்டும் இருப்பதால், சுதந்திரமானதும் உயரதிகாரம் பெற்றதுமான நீதித்துறை மிகவும் அவசிய மாகிறது. மனித உரிமைகளை நிலைநாட்டவும், மக்க ளாட்சியைப் பேணிக் காக்கவும்கூட, சுதந்திரமானதும் பாரபட்சமற்றதுமான நீதித்துறை அத்தியாவசியமாகிறது. சுதந்திரமான நீதித்துறையே, தனிமனித உரிமைகள் மற்றும் அரசியலமைப்பின் பாதுகாவலனாகச் செயல்பட முடியும். நீதிமன்றங்களின் சுதந்திரமான போக்கை உறுதி செய்வதற்காக, நமது அரசியலமைப்பில் பல ஏற்பாடுகள் உள்ளன. அரசியலமைப்பு ரீதியான நீதிபதிகளின் நியமனம் மற்றும் பதவி நீக்கம், அவர்களுடைய பதவிக்காலம், ஊதியம், பணிநிலைமை கள் ஆகியவற்றுக்கு உத்தரவாதம், நீதிபதிகளின் ஊதியம் மற்றும் படிகளை தேசிய ஒருங்கிணைப்பு நிதியத்தில் இருந்து வழங்க வேண்டும் என்ற ஏற்பாடு, உச்சநீதிமன்றம் தனது பணியாளர் களைத்தானே நியமனம் செய்து கொள்ளுதல், உச்சநீதிமன்ற நீதிபதிகள் பதவி ஓய்வுக்குப் பின்னர் எந்த ஒரு நீதிமன்றத்திலும் வழக்குரைஞராகச் செயல்படுவதற்குத் தடை, நீதிமன்ற அவமதிப்புக்குத் தண்டனை அளிக்கும் அதிகாரம், போன்றவற்றை எடுத்துக்காட்டாகக் கூறலாம்.

# உயர்நீதிமன்றங்கள்

ஒவ்வொரு மாநிலத்திற்கும் ஓர் உயர்நீதிமன்றம் இருக்கவேண்டுமென அரசியலமைப்பு விதிக்கிறது. எனினும் சட்டம் இயற்றுவதன் மூலம், இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மாநிலங்களுக்குப் பொதுவானதாகவும், அல்லது இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மாநிலங்களுக்கும் ஒரு நேரடி ஆட்சிப் பகுதிக்கும் பொதுவானதாகவும், ஓர் உயர்நீதிமன்றத்தை நாடாளுமன்றம் உருவாக்கலாம் (பிரிவுகள் 214 & 231).

உச்சநீதிமன்றத்தைப் போலவே ஒவ்வோர் உயர்நீதிமன்றமும் ஓர் ஆவண நீதிமன்றமாகத் திகழ்வதுடன், மூலவிசாரணை வரம்பு, மேல்முறையீட்டு விசாரணை வரம்பு ஆகியவற்றுடன், நீதிமன்ற அவமதிப்புக்காகத் தண்டனை அளிக்கும் அதிகாரமும் உடையதாகத் திகழ்கிறது (பிரிவு 215).

உச்சநீதிமன்றத் தலைமை நீதிபதியையும், சம்பந்தப்பட்ட மாநில ஆளுநரையும் கலந்தாலோசித்து, உயர்நீதிமன்ற நீதிபதிகளைக் குடியரசுத் தலைவர் நியமனம் செய்கிறார். உயர்நீதிமன்றத்தின் தலைமை நீதிபதியைத் தவிர மற்ற நீதிபதிகளை நியமிக்கும்போது, உயர்நீதிமன்ற தலைமை நீதிபதியையும், குடியரசுத்தலைவர் கலந்தாலோசித்து முடிவெடுப்பார். நீதிபதி நியமன விஷயத்தில் கலந்தாலோசனை செய்யும்போது மூன்று தரப்பிற்கும் சம அளவிலான முக்கியத்துவம் அளிக்க வேண்டுமென, எஸ்.பி. குப்தா எதிர் இந்திய அரசு (AIR 1982 SC 149) என்ற வழக்கில் தீர்ப்பளிக்கப்பட்டது. உயர்நீதிமன்ற நீதிபதியாக ஒருவர் நியமிக்கப்பட வேண்டுமென்றால், அவர் இந்தியக் குடிமகனாக இருப்பதுடன், நீதித்துறை சம்பந்தப்பட்ட பதவியில் பத்தாண்டு காலம் அனுபவம் பெற்றவராகவோ, உயர்நீதிமன்ற வழக்குரைஞராகப் பத்தாண்டுகள் தொழில் செய்தவராகவோ இருக்க வேண்டும். உயர்நீதிமன்ற நீதிபதியாக ஒருவர் நியமிக்கப்பட்டவுடன், அவர் பதவிப் பிரமாணம் எடுத்துக் கொள்ள வேண்டும். அவர் 62 வயதாகும் வரை உயர்நீதிமன்ற நீதிபதியாகப் பதவியில் இருக்கலாம். உச்சநீதிமன்ற நீதிபதியைப் பதவிநீக்கம் செய்வதற்கான நடைமுறையைப் பின்பற்றுவதன் மூலமே உயர்நீதிமன்ற நீதிபதியையும் பதவிநீக்கம் செய்யமுடியும். உயர்நீதிமன்ற நீதிபதிகள் சுதந்திரமாகச் செயல்படுவதை உறுதி செய்வதற்காக, ஒருவர் ஓர் உயர்நீதிமன்றத்தில் நிரந்தரமான நீதிபதியாகப் பதவி வகித்த பின்னர், உச்ச நீதிமன்றத்திலும் ஏனைய உயர்நீதிமன்றங்களிலும் தவிர, பிற நீதிமன்றங்களில் வழக்குரைஞராகத் தொழில் புரியத் தடை விதிக்கப்பட்டுள்ளது. உயர்நீதிமன்ற நீதிபதி ஒவ்வொருவருக்கும், நாடாளுமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டத்தில் நிர்ணயித்துள்ளபடி அல்லது அரசியலமைப்பின் இரண்டாவது அட்டவணையில் உள்ளபடி, ஊதியமும் பிற படிகளும் வழங்கப்படும். உயர்நீதிமன்ற நீதிபதிகள் (பணிநிலைமை) சட்டத்தின்படி, தற்சமயம் அவர்களுக்கு மாதமொன்றுக்கு எட்டாயிரம் ரூபாயும், உயர்நீதிமன்றத் தலைமை நீதிபதிக்கு மாதமொன்றுக்கு ஒன்பதாயிரம் ரூபாயும், ஊதியமாக வழங்கப்படுகிறது. இந்த ஊதியம் தவிர அதிகாரப் பூர்வமான இருப்பிடத்தை இலவசமாகப் பயன்படுத்திக் கொள்ளவும், மட்டாகச் செய்கின்ற செலவுகளுக்கு (sumptuary) ஏற்றவாறு பிற படிகளைப் பெறவும் வழிசெய்யப்பட்டுள்ளது.

உச்சநீதிமன்றத் தலைமை நீதிபதியைக் கலந்தாலோசித்து, ஓர் உயர்நீதி மன்றத்திலிருந்து இன்னோர் உயர்நீதிமன்றத்திற்கு நீதிபதிகளைக் குடியரசுத் தலைவர் இடமாற்றம் செய்யலாம். எனினும் உயர்நீதிமன்ற நீதிபதி ஒருவரை அவருடைய ஒப்புதல் இன்றி இடமாற்றம் செய்யக்கூடாது என்று உச்சநீதி மன்றம் தீர்ப்பளித்திருக்கிறது (இந்திய அரசு எதிர் சங்கலசந்த், AIR 1977 SC 2328). ஓர் உயர்நீதிமன்றத்திற்குத் தற்காலிகத் தலைமை நீதிபதியாகக் கூட ஒருவரைக் குடியரசுத்தலைவர் நியமிக்கலாம். தேவை ஏற்பட்டால் இரண்டாண்டு காலத்திற்கு மிகாமல் உயர்நீதிமன்றங்களுக்குக் கூடுதல் நீதிபதிகளையும், பொறுப்பு நீதிபதிகளையும்கூட குடியரசுத்தலைவர் நியமிக்கலாம். குடியரசுத் தலைவரின் ஒப்புதலைப் பெற்று, ஓய்வுபெற்ற நீதிபதி ஒருவரை உயர்நீதிமன்றத்தில் பொறுப்பு நீதிபதியாக உயர்நீதிமன்றத் தலைமை நீதிபதி நியமிக்கலாம் (பிரிவுகள் 215, 217-224A).

ஒவ்வோர் உயர்நீதிமன்றத்திலும் தலைமை நீதிபதி ஒருவரும், குடியரசுத் தலைவரால் அவ்வப்போது தேவை என்று கருதப்படுகின்ற அளவுக்கு ஏனைய நீதிபதிகளும் இருப்பர் (பிரிவு 216). ஒவ்வோர் உயர்நீதிமன்றமும், தன்னுடைய அதிகார வரம்புக்குள் அமையும் முப்படைகள் சம்பந்தப்பட்ட நீதிமன்றங்கள் தவிர, மற்ற நீதிமன்றங்கள், தீர்ப்பாயங்கள் அனைத்தையும் மேற்பார்வையிடும் அதிகாரத்தைப் பெற்றதாகும் (பிரிவு 227).

கீழ்நிலை நீதிமன்றங்களில் நிலுவையில இருக்கும் ஏதேனும் ஒரு வழக்கில் அரசியலமைப்பு சம்பந்தப்பட்ட முக்கியமான சட்டம் பற்றிய எழுவினாவிற்குத் தீர்வு காணப்பட வேண்டும் என்று உயர்நீதிமன்றம் கருதினால், அந்த வழக்கைக் கீழ் நீதிமன்றத்திலிருந்து உயர்நீதிமன்றத்திற்கு மாற்றிக் கொண்டு, தானே அதற்குத் தீர்ப்பளிக்கலாம; அல்லது சட்டம் பற்றிய எழுவினாவிற்குத் தீர்வு கண்டு, கீழ்நீதிமன்றமே அதற்குத் தீர்ப்பளிக் கட்டும் என, அந்த வழக்கைத் திருப்பி அனுப்பிவிடலாம் (பிரிவு 228).

ஒவ்வோர் உயர்நீதிமன்றத்திற்கும் தன்னுடைய அலுவலர்கள் மீது முழுமையான கட்டுப்பாடு இருக்கும். நீதிபதிகள் மற்றும் ஏனைய அலுவலர் களின் ஊதியமும் மற்ற படிகளும், அந்தந்த மாநிலத்தின் ஒருங் கிணைப்பு நிதியத்திலிருந்து வழங்கப்படுகின்றன. உயர்நீதிமன்றத்தின் அதிகாரிகளையும் ஏனைய ஊழியர்களையும் தலைமை நீதிபதி அல்லது அவரால் குறிப்பிடப் படும் நீதிபதி அல்லது நீதிமன்ற அதிகாரி நியமனம் செய்வார். உயர்நீதி மன்றத்தின் அதிகாரிகள் மற்றும் ஊழியர்களின் பணி நிலைமையை உரிய விதிகள் இயற்றி முறைப்படுத்த வேண்டும். இவ்விதிகளைத் தலைமை நீதிபதி இயற்ற, அவற்றுககுக் குடியரசுத் தலைவரின் ஒப்புதல் பெற வேண்டும் (பிரிவு 229). ஓர் உயர்நீதிமன்றத்தின் அதிகார வரம்பினை தேவைப்பட்டால் வேறு ஒரு நேரடி ஆட்சிப் பகுதிக்கும் நீட்டிக்கலாம்; ஏற்கெனவே அவ்வாறு நீட்டிக்கப்பட்டிருந்தால் தேவைக்கேற்ப அந்த அதிகார வரம்பினை நீக்கியும் விடலாம் (பிரிவு 230).

ஒவ்வோர் உயர்நீதிமன்றமும் தன்னுடைய அதிகார வரம்புக்கு உட்பட்ட நிலப்பகுதியில் உள்ள எந்த ஒரு நபர் அல்லது அதிகார அமைப் புக்கு அடிப்படை உரிமைகளை நிலைநாட்டுவதற்காகவோ, பிற காரணங் களுக்காகவோ ஆணைகளையும், ஆட்கொணர்வித்தல், தடையுறுத்தல்,

செயலுறுத்தல், நெறிமுறை உறுத்தல், தகுதிமுறை வினவல் ஆகிய நீதிப்பேராணைகளையும் பிறப்பிக்கும் அதிகாரம் பெற்றது என பிரிவு 226 கூறுகிறது. நீதிப்பேராணை பிறப்பிக்கும் உச்சநீதிமன்றத்தின் அதிகாரம், அடிப்படை உரிமைகள் மீறப்படுகின்ற வழக்குகளுக்கு மட்டுமே பொருந்த, பிரிவு 226-ன் கீழ் உயர்நீதிமன்றங்களுக்கு வழங்கப்பட்டுள்ள நீதிப்பேராணை பிறப்பிக்கும் அதிகாரம், எல்லாவிதமான உரிமைகளையும் மீறுகின்ற வழக்குகளுக்கும் பொருந்துகின்றவாறு மிகவும் பரவலானதாகத் திகழ்கிறது. 'வேறு ஏதேனும் காரணங்களுக்காவும்' நீதிப்பேராணைகளை உயர்நீதிமன்றங்கள் பிறப்பிக்கலாம் என்று பிரிவு 226-ல் சொல்லப்பட்டுள்ளதே இதைத் தெளிவாக்கும். சட்டப்புறம்பான ஓர் ஆணையைச் செல்லாதது என உயர் நீதிமன்றம் அறிவிக்கலாம், ஒரு சட்டம் சரியானதுதானா, இல்லை தவறானதா எனத் தெளிவுபடுத்தலாம்; நிவாரணம் வழங்குமாறு, (எ.கா. சட்டப்புறம்பாக வசூலிக்கப்பட்ட வரித்தொகையைத் திருமபிச் செலுத்துமாறு) உத்தர விடலாம். உச்சநீதிமன்றம் வழங்கும் ஒரு தீர்ப்பு நாட்டில் உள்ள அனைத்து நீதிமன்றங்களையும் கட்டுப்படுத்துவதுபோல, ஓர் உயர்நீதிமன்றம் வழங்கும் தீர்ப்பு அம்மாநிலத்தில் உள்ள அனைத்து நீதிமன்றங்களையும், அல்லது, அந்த உயர்நீதிமன்றத்தின் அதிகார வரம்பு செல்லுபடியாகின்ற ஆட்சிப்பகுதி முழுவதும் உள்ள நீதிமன்றங்களையும் கட்டுப்படுத்தும் (ஒரிசா அரசு எதிர் மதன்கோபால் (1952) SCR 28; ராமபத்ரய்யா எதிர் செயலாளர் AIR 1981 SC 1653; தேசாய் எதிர் ரோஷன் AIR 1976 SC 578; ம.பி. அரசு எதிர் பைலால் AIR 1964 SC 1006).

அடிப்படை உரிமைகளை மீறியதற்காக பிறப்பிக்கப்படும் நீதிப் பேராணைகள் தவிர, மற்ற விஷயங்களுக்காக சாதாரண வழக்கமாக நீதிப் பேராணைகள் வழங்கப்பட மாட்டாது என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும். மிகவும் அசாதாரணமான அந்தத் தீர்வழி விசேஷமான சந்தர்ப் பங்களில் மட்டும் உயர்நீதிமன்றத்தின தீர்ப்புரிமைப்படி வழங்கப் படும் (ஹிம்மத்லால் ஷா எதிர் உ.பி. அரசு AIR 1954 SC 403; ஆப்ரகாம் எதிர் வருமானவரி அலுவலர் AIR 1961 SC 609; போபால் சர்க்கரை ஆலை எதிர் வருமானவரி அலுவலர் AIR 1967 SC 549; ராஜஸ்தான் அரசு எதிர் கரம்சந்த் AIR 1965 SC 913).

சட்டப்படியான எவ்வித பாதிப்பும் இல்லாமல், ஒருவருடைய அடிப்படை உரிமைகள் மீறப்படும்போது, அவருக்கு ஏற்படும் ஈடுசெய்ய முடியாத இழப்பிற்கு உடனடியாக நிவாரணம் வழங்குவதற்கு ஏற்றவாறு துரிதமாக நீதி கிடைப்பதை உறுதி செய்வதற்காக, நீதிப்பேராணைகளைப் பிறப்பிக்கும் அதிகாரம், உச்சநீதிமன்றத்திற்கும், உயர்நீதிமன்றங்களுக்கும் வழங்கப்பட்டுள்ளது. பிரபலமான இந்த நீதிப் பேராணைகள் ஐந்து வகைப்படும். அவை:

ஆட்கொணர்விக்கும் நீதிப்பேராணை: ஒருவரை நேரில் கொண்டு வந்து நிறுத்துவது என்று இதற்கு நேரடிப்பொருள். சட்டப்புறம்பாக ஒருவர் அடைத்து வைக்கப்பட்டுள்ளார் என்று சொல்லப்படுகின்ற வழக்குகளில் இந்த நீதிப்பேராணை பயன்படுத்தப்படும். அடைத்து வைக்கப்பட்டிருக்கின்ற ஒரு நபரை நேரிடையாக நீதிமன்றத்தில் கொண்டு வந்து நிறுத்தி, அவரை

அடைத்து வைத்திருப்பதற்கான காரணம் சரியானதுதானா என்று நீதிமன்றம் தீர்மானிப்பதற்கு ஏற்றவாறு அந்தக் காரணத்தை நீதிமன்றம் முன் எடுத்து வைக்க வேண்டும் என்று, அந்த நபரை அடைத்து வைத்திருக்கும் அதிகார அமைப்பிற்கோ, தனி நபருக்கோ நீதிமன்றம் பிறப்பிக்கும் ஆணையே ஆட்கொணர்விக்கும் நீதிப்பேராணையாகும். சட்டப்புறம்பாக அவர் அடைத்து வைக்கப்பட்டிருக்கிறார் என்று தெரியவந்தால் உடனடியாக அவர் விடுதலை செய்யப்படுவார். தனி மனிதர்களின் சுதந்திரத்தைப் பாதுகாக்க உதவும் இந்த நீதிப்பேராணை மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததால், அவசரநிலைப் பிரகடனத்தின்போதுகூட பிரிவு 21-ன் கீழ் வழங்கப் பட்டுள்ள அடிப்படை உரிமையைத் தற்காலிகமாக நிறுத்தி வைக்கமுடியாது என்று, அரசியலமைப்பின் நாற்பத்து நான்காவது திருத்தம் மூலம் வகை செய்யப்பட்டுள்ளது.

அடிப்படை உரிமைகளை மீறியதற்காக அரசுக்கு எதிராக மட்டுமே ஆட்கொணர்விக்கும் நீதிப்பேராணையை உச்சநீதிமன்றம் பிறப்பிக்க முடியும். ஆனால் உயர்நீதிமன்றம், சட்டப்புறம்பாகவோ, தன்னிச்சையாகவோ ஒரு நபரை அடைத்து வைத்திருக்கும் மற்ற தனி நபருக்கு எதிராகவும் இந்த நீதிப்பேராணையைப் பிறப்பிக்க முடியும்.

**செயலுறுத்தும் நீதிப்பேராணை:** சட்டப்படியாக ஒரு செயலைச் செய்ய வேண்டும் என்றும், சட்டவிரோதமான அச்செயலைத் தொடர்ந்து செய்யாதிருக்க வேண்டும் என்றும் உத்தரவிடுவதே செயலுறுத்தும் நீதிப்பேராணை. 'ஆ' என்பவர் சட்டப்பூர்வமான சில கடமைகளைச் செய்யவேண்டுமென 'அ' என்பவருக்குச் சட்டப்படியான உரிமை இருக்கு மானால், 'ஆ' என்பவர் தனது கடமைகளைச் செய்ய வேண்டுமென வலியுறுத்தி, 'அ' என்பவர் செயலுறுத்தும் நீதிப்பேராணையைப் பிறப்பிக்கக் கோரலாம். பொதுவான ஒரு கடமை, அல்லது சட்டப்படியான ஒரு கடமையைச் செய்ய மறுக்கின்ற எந்த ஓர் அதிகார அமைப்பானாலும் அதிகாரியானாலும், அரசு ஆனாலும், நீதித்துறை அமைப்பானாலும்கூட, அவற்றுக்கு எதிராக செயலுறுத்தும் நீதிப்பேராணையைப் பிறப்பிக்கலாம். தனி மனிதர் ஒருவருடைய அடிப்படை உரிமைகளை மீறுவதாக ஓர் அரசாங்க ஆணையோ, நடவடிக்கையோ அமையும்போது, அந்த அடிப்படை உரிமைகளை நிலைநாட்டுவதற்காக உச்சநீதிமன்றம் செயலுறுத்தும் நீதிப் பேராணையைப் பிறப்பிக்கலாம். ஓர் அதிகாரியை, அவருடைய அரசிய லமைப்பு அதிகாரங்களையும், சட்டப்பூர்வமான அதிகாரங்களையும் செயல் படுத்த வேண்டும் என்றும் அரசியலமைப்பின்படி அல்லது வேறு சட்டப்படி ஒருவருக்கு விதிக்கப்பட்டுள்ள கடமைகளை அவர் நிறைவேற்ற வேண்டும் என்றும், அரசியலமைப்புக்கு முரணான எந்த ஒரு சட்டத்தையும் அரசாங்கம் அமல்படுத்தக்கூடாது என்றும் ஆணையிடுவதற்காக உயர்நீதிமன்றம் செயலுறுத்தும் நீதிப்பேராணையைப் பிறப்பிக்கலாம்.

**தடையுறுத்தும் நீதிப்பேராணை:** கீழ்நிலை நீதிமன்றம் அல்லது தீர்ப்பாயம் அதன் நீதிவரம்பினை மீறிச் செயல்படக்கூடாது என்று தடை விதிக்கும் நோக்கத்தில் மேல்நிலையில் உள்ள நீதிமன்றம் பிறப்பிக்கும் ஆணையே தடையுறுத்தும் நீதிப்பேராணையாகும். நிர்வாகத் துறைகளுக்கு

எதிராகத் தடையுறுத்தும் நீதிப்பேராணைகள் பிறப்பிக்கப்படுவதில்லை. நீதித்துறை மற்றும் ஓரளவுக்கு நீதித்துறை சம்பந்தப்பட்ட பணிகளை ஆற்று கின்ற துறைகளுக்கு எதிராக மட்டுமே இந்தப் பேராணை பிறப்பிக்கப்படும்.

நெறிமுறை உறுத்தும் நீதிப்பேராணை: நீதித்துறை மற்றும் ஓரளவுக்கு நீதித்துறை சம்பந்தப்பட்ட பணிகளை ஆற்றுகின்ற துறைகளுக்கு எதிராக-அதாவது நீதிமன்றங்களுக்கும் தீர்ப்பாயங்களுக்கும் எதிராக-பிறப்பிக்கப்படும் இந்த நீதிப்பேராணைக்கு 'தகவல் அறிவிக்க வேண்டும்' என்று பொருள். எடுத்துக்காட்டாக ஒரு தீர்ப்பாயம் தனது நீதி வரம்பை மீறி சட்டப்புறம்பான ஓர் உத்தரவைப் பிறப்பித்தால், நெறிமுறை உறுத்தும் நீதிப்பேராணையைப் பிறப்பிப்பதன் மூலம் அந்த உத்தரவைச் செல்லாதது என அறிவிக்கலாம்.

தகுதிமுறை வினவும் நீதிப்பேராணை: 'எந்த அதிகாரத்தின்படி அல்லது ஆணையின்படி' என்று வினவுவதே தகுதிமுறை வினவும் நீதிப் பேராணையாகும். அரசுப்பதவி ஒன்றை வகிக்க உரிமை கோரும் ஒருவருக்குச் சட்டப்படியான தகுதி உள்ளதா எனறு பொதுநலன் கருதித் தெளிவுபடுத்து வதற்காக இந்த நீதிப் பேராணையைப் பிறப்பிக்கலாம். ஒரு பதவி, அரசியல மைப்பின்படி அல்லது பிற சட்டத்தின்படி ஏற்படுத்தப்பட்ட நிரந்தரமான பதவியாக இருப்பதுடன், அப்பதவியை வகிப்பவர் உரிய தகுதி ஏதுமில்லாமல் அரசியலமைப்புக்குப் புறம்பாகவோ, சட்டத்திற்குப் புறம்பாகவோ நியமிக்கப் பட்டிருக்கும் பட்சத்திலேதான் தகுதிமுறை வினவும் நீதிப்பேராணையைப் பிறப்பிக்குமாறு கோரி மனு தாக்கல் செய்யலாம்.

நீதிப்பேராணைகளைத் தவிர, பொதுமக்களுக்கு நீதி கிடைக்க வேண்டும் என்ற நோக்கத்தில் பிரிவு 226-ன் கீழ், பிற உத்தரவுகளையும் நெறி முறைகளையும்கூட உயர்நீதிமன்றங்கள் பிறப்பிக்கலாம் (டிசி. பஸப்பா எதிர் நாகப்பா AIR 1954 SC 440). (பொதுநல வழக்காடுதல் பற்றி அறிய உச்சநீதிமன்றம் என்ற தலைப்பின் கீழ்க் காண்க).

## கீழ்நிலை நீதிமன்றங்கள்

உயர்நீதிமன்றத்துடன ஆலோசனை கலந்து, மாவட்ட நீதிபதிகளை ஆளுநர் நியமிக்கிறார். ஏற்கெனவே அரசுப் பதவியில் இல்லாத ஒருவர் மாவட்ட நீதிபதியாக நியமிக்கப்பட வேண்டுமானால், குறைந்தபட்சம் ஏழாண்டுகள் வழக்குரைஞராகத் தொழில்புரிந்த அனுபவம் பெற்றிருக்க வேண்டும் (பிரிவு 233).

அரசியலமைப்பின் இருபதாவது சட்டத் திருத்தம் மூலம் சேர்க்கப் பட்ட பிரிவு 233A, மாவட்ட நீதிபதிகள் சிலருடைய நியமனத்தையும் அவர்கள் வழங்கிய தீர்ப்புகளையும் செல்லுபடியாக்குகிறது (பிரிவு 233 A).

மாவட்ட நீதிபதிகள் தவிர, ஒரு மாநிலத்தின மற்ற நீதித்துறைப் பதவி களுக்கும் அவற்றுக்கென இயற்றப்பட்ட விதிகளின்படி நபர்களை ஆளுநர் நியமிப்பார். அது போன்ற நியமனங்களில் மாநில அரசுப்பணியாளர் தேர்வாணையத்துடன், உயர்நீதிமன்றத்தையும் கலந்தாலோசிக்க வேண்டும் (பிரிவு 234).

மாவட்ட நீதிமன்றங்கள் மற்றும் ஏனைய கீழ்நிலை நீதிமன்றங்களின்

மீது உயர்நீதிமன்றத்திற்கு முழுமையான நிர்வாகக் கட்டுப்பாடு உள்ளது. நீதிபதி பதவிக்குக் குறைவான அந்தஸ்துடைய நீதித்துறை பதவி வகிக்கும் அனைவருடைய பணியமர்த்தம், பதவி உயர்வு, விடுப்பு வழங்கல், போன்ற எல்லா விஷயங்களையும் கவனிக்கும் அதிகாரம் உயர்நீதிமன்றத்திடமே உள்ளது (பிரிவு235; தேஜ்பால் எதிர் உ.பி. அரசு (1985) 3 SCC 604; அசாம் அரசு எதிர் ரங்க முகமது AIR 1967 SC 903). மாவட்ட நீதிபதி, நீதித்துறைப்பணி போன்ற சொற்களுக்கு விளக்கமுரைப்பதாக பிரிவு 236 அமைந்துள்ளது.

# 14

# மாநிலங்களும் நேரடி ஆட்சிப் பகுதிகளும்

(பகுதி IV, பிரிவுகள் 152-213; பகுதி VIII, பிரிவுகள் 239-240)

இந்தியாவின் அரசியலமைப்பில் ஒன்றிய அரசியலமைப்பு மட்டுமின்றி, மாநிலங்களுக்கான அரசியலமைப்பும் இடம் பெற்றுள்ளது. இன்னும் சொல்லப்போனால், குறிப்பிட்ட சில மாநிலங்களுக்கு சிறப்பு ஏற்பாடுகள் செய்யப்பட்டிருப்பதால் இந்திய அரசியலமைப்பில் மாநில அரசிய லமைப்புகள் பல இருக்கின்றன என்று கூடச் சொல்லலாம். பொதுவாகப் பார்த்தால் மாநிலங்களின் அரசியலமைப்பு ஒன்றிய அரசியலமைப்புப் போலவே இருக்கும். அரசியலமைப்புத் தலைவரைக் கொண்டதாகவும், சட்டமியற்றும் அவைக்கு அமைச்சரவை பொறுப்புடையதாகவும் இருக் கின்ற நாடாளுமன்ற ஆட்சிமுறையே மாநிலங்களிலும் பின்பற்றப்படுகிறது. உண்மையான நிர்வாக அதிகாரங்களை அமைச்சர்களே செயல்படுத்து கிறார்கள். ஆளுநரின் 'திருப்தி' என்பது அமைச்சரவையின் திருப்தியையே குறிக்கும் (ராம்ஜவாயா கபூர் எதிர் பஞ்சாப் அரசு, AIR 1955 SC 549; சம்ஷேர் சிங் எதிர் பஞ்சாப் அரசு AIR 1974 SC 2192).

இந்தியாவின் ஒருங்கிணைந்த பகுதியாகத் திகழும் ஜம்மு-கஷ்மீர் மாநிலம் மட்டும்தான் தனக்கென்று ஒரு மாநில அரசியலமைப்பைக் கொண்டுள்ளது. இருந்த போதிலும், மேலும் பல மாநிலங்களும் அவற்றுக்கு மட்டுமே உரிய தனித்தன்மையான விசேஷ அந்தஸ்துகளைக் கொண்டவையாய்த் திகழ்கின்றன. எ.கா. மகாராஷ்டிராவும் குஜராத்தும் (பிரிவு 371), நாகலாந்து (பிரிவு 371 A); அசாம் (பிரிவு 371 B), மணிப்பூர் (பிரிவு 371 C), ஆந்திரப் பிரதேசம் (371 D & 371 E), சிக்கிம் (371 F), மிஜோரம் (371 G), அருணாசலப் பிரதேசம் (371 H ), கோவா (371 I).

## மாநிலத்தின் நிர்வாக முறை

### ஆளுநர் நியமனமும் அவர் நிலையும்

ஒவ்வொரு மாநிலத்திற்கும் ஓர் ஆளுநர் இருப்பார் என்று அரசியல் சட்ட 153 ஆவது பிரிவு கூறுகிறது. சில சமயங்களில் ஒருவரே, இரண்டு அல்லது

அதற்கு மேற்பட்ட மாநிலங்களுக்கும் ஆளுநராக நியமிக்கப்படலாம். ஆளுநரை குடியரசுத்தலைவர் நியமிக்கிறார் (பிரிவு 155). ஆளுநரி[illegible] பதவிக் காலம் ஐந்தாண்டுகளாகும். எனினும் கு[illegible] தலைவர் 'விரும்புகின்ற' வரையில் மட்டுமே அவர் [illegible] இருப்பார். (பிரிவு 156) குடியரசுத் தலைவரின் 'வி[illegible]த்தை' நீதிமன்றங்களில் விசாரணைக்கு உட்ப[illegible]டியாது. ஆளுநர் தமது பதவிக்காலம் முழுவதும் பதவியில் இருப்பார்என்று உறுதியாகக் கூற முடியாது. எப்போது வேண்டுமானாலும் குடியரசுத் தலைவர் அவரைப் பதவிநீக்கம் செய்துவிடலாம் (சூர்யநாராயண எதிர் இந்திய அரசு AIR 1982 ராஜஸ்தான் உயர்நீதி மன்றம் 1).

ஒருவர் ஆளுநராக நியமிக்கப்பட வேண்டுமென்றால் அவர் இந்தியக் குடிமகனாகவும், 35 வயது நிரம்பியவராகவும் இருக்க வேண்டும் (பிரிவு 157). நாடாளுமன்றம் அல்லது மாநிலச் சட்டமன்றங்களில், ஆளுநர் உறுப்பினராக இருக்க முடியாது. அப்படி ஏதேனும் ஓர் உறுப்பினர் ஆளுநராக நியமிக்கப் பட்டால், ஆளுநராக அவர் பதவியேற்றுக் கொண்ட நாளில் இருந்து சட்டமன்றம் அல்லது நாடாளுமன்றத்தில் அவருடைய உறுப்பினர் இடம் காலியாகிவிட்டதாகக் கருதப்படும். ஊதியம் பெறும் வேறு எந்தப் பதவியையும் ஆளுநர் வகிக்க முடியாது ஆளுநரின் அதிகாரப் பூர்வமான இருப்பிடம் இலவசமாகத் தரப்படுவதுடன். சட்டத்தின் மூலம் நாடாளுமன்றம் நிர்ணயிக்கின்றபடி, அல்லது அரசியல் சட்டத்தின் இரண்டாவது அட்டவணையில் உள்ளபடி, ஊதியமும் ஏனைய படிகளும் அவருக்கு வழங்கப்படும். 1987 ஆம் ஆண்டு இயற்றப்பட்ட சட்டத்தின்படி. ஆளுநரின் மாத ஊதியம் ரூ. 11,000 ஆக நிர்ணயிக்கப்பட்டுள்ளது (பிரிவு 188). எனினும் ஆளுநரின் பதவி, அரசின் கீழ் ஊதியம் பெறும் பதவியன்று என ஹர்கோவிந்த் எதிர் ரகுகுல் (AIR 1979 SC 1109) என்ற வழக்கில் உச்ச நீதிமனறம் தீர்ப்பளித்திருக்கிறது.

ஒவ்வோர் ஆளுநரும், அல்லது ஆளுநரின் பணிகளை நிறைவேற்றும் பொறுப்பு வகிக்கின்ற ஒவ்வொருநபரும், தமது பணிகளை நிறைவேற்றுவதில் உண்மையாக நடந்துகொள்வதாகவும், நமது அரசியலமைப்பைப் பேணிப் போற்றித் தற்காத்துக் கொள்வதாகவும் பதவிப பிரமாணம் எடுத்துக் கொள்ளவேண்டும் (பிரிவு 159).

## ஆளுநரின் அதிகாரங்களும் செயல்பாடுகளும்

ஆளுநர் தமது பணிகளை நிறைவேற்றும்போது, ஒருசில விதிவிலக்குகள் தவிர, அனைத்திலும் அமைச்சரவையின் உதவியுடனும் ஆலோசனை யுடனும் செயல்படவேண்டும் என்று அரசியலமைப்புக் கூறுகிறது (பிரிவு 163).

இந்தியக் குடியரசுத் தலைவரும், மாநில ஆளுநரும் அரசியலமைப்பின் படியான தலைவர்கள் என்றாலும், குடியரசுத் தலைவரின் நிலைக்கும் ஆளுநரின் நிலைக்கும் அடிப்படையான சில வேறுபாடுகள் உள்ளன. அவை: (1) குடியரசுத் தலைவர் மக்கள் பிரதிநிதிகளால் தேர்ந்தெடுக்கப் படுபவர்; ஆளுநரோ நியமிக்கப்படுபவர். (2) குடியரசுத் தலைவரைப் பதவி நீக்கம் செய்யவேண்டுமானால் மிகவும் சிக்கலான குற்றச்சாட்டு நடவடிக்

கையைப் பின்பற்ற வேண்டும்; ஆனால் ஆளுநரோ குடியரசுத் தலைவர் விரும்புகின்ற வரையில் மட்டுமே பதவியில் இருக்க முடியும். (3) குடியரசுத் தலைவரின் அனைத்துச் செயல்பாடுகளும் அமைச்சரவையின் ஆலோசனைப்படியே அமைய வேண்டும், ஆனால் ஆளுநர் தன் விருப் புரிமைப்படி செயல்பட வேண்டிய தருணங்களைத் தவிர மற்ற சமயங்களில் மட்டும் அமைச்சரவையின் உதவியுடனும் ஆலோசனைப்படியும் செயல்பட வேண்டும் (பிரிவு 163). அரசியலமைப்பின் 42ஆவது திருத்தச் சட்டத்தின் மூலம், அமைச்சரவையின் 'ஆலோசனைப்படியே' குடியரசுத் தலைவர் செயல்பட வேண்டும் என்று பிரிவு 74-ல் திருத்தம் செய்யப்பட்டது. அதே போலவே ஆளுநரும் செயல்பட வேண்டும் என்று பிரிவு 163-ல் உரிய திருத் தங்கள் செய்யப்படவில்லை. எனினும் பொதுவாக, 'தமது அமைச்சர்களின் ஆலோசனைபடி அல்லாமல்' ஆளுநர் செயல்படக் கூடாது என்று தீர்ப்பளிக்கப்பட்டுள்ளது (சஞ்சீவி எதிர் சென்னை அரசு AIR 1970 SC 1102; உ.பி. சர்வீஸ் கமிஷன் எதிர் சுரேஷ் AIR 1987 SC 1953; சுனித் குமார் எதிர் மேற்குவங்க அரசு AIR 1950 கல்கத்தா உயர்நீதிமன்றம் 274).

ஆளுநர் தமது சொந்த அறிவையும் தன்விருப்புரிமையையும் பயன் படுத்திச் செயல்பட வேண்டிய சந்தர்ப்பங்கள் சில உள்ளன. அவை; (அ) சட்டப்பேரவையில் எந்த ஒரு கட்சிக்கும் அல்லது தலைவருக்கும் பெரும் பான்மை ஆதரவு இல்லாத சூழ்நிலையில் புதிய முதலமைச்சரை நியமிப்பது; (ஆ) சட்டப்பேரவையில் பெரும்பான்மை ஆதரவை இழந்தபிறகும், அல்லது நம்பிக்கையில்லாத் தீர்மானத்தின் மூலம் தோற்கடிக்கப்பட்ட பிறகும் பதவி விலக மறுக்கின்ற அமைச்சரவையைப் பதவியிலிருந்து நீக்குவது; (இ) சட்டப் பேரவையில் பெரும்பான்மை ஆதரவை இழந்துவிட்ட முதலமைச் சரின் ஆலோசனைப்படி பேரவையைக் கலைப்பது; (ஈ) அசாமின் பழங்குடியினர் பகுதியில் வழங்கப்பட்ட கனிம உரிமங்களுக்காக மாவட்டக் கவுன்சில்களுக்குரிய ராயல்டி தொகையைத் தீர்மானிப்பது; (உ) மாநிலத்தில் அரசியலமைப்பு இயந்திரம் செயல்படாதநிலை உருவாகிவிட்டது பற்றிக் குடியரசுத் தலைவருக்கு எடுத்துரைத்து, குடியரசுத்தலைவர் ஆட்சியைப் பிறப்பிக்க ஆலோசனை வழங்குவது; (ஊ) மசோதாக்களுக்கு ஒப்புதல் அளிப்பது; ஆகியவையாகும். ஆளுநர்களில் சிலர் பிரிவு 371 முதல் பிரிவு 371 (I) வரை சொல்லப்பட்டுள்ள சில விசேஷப் பொறுப்புகளையும் நிறைவேற்ற வேண்டும்.

*நிர்வாக அதிகாரங்கள்:* மாநிலத்தின் நிர்வாக அதிகாரம் ஆளுநரின் கையிலேயே உள்ளது; அந்த அதிகாரங்களை அரசியலமைப்பில் சொல்லப்பட் டுள்ளவாறு அவரே நேரிடையாகவோ, தமக்குக் கீழ்ப்படிந்துள்ள அதிகாரி கள் மூலமாகவோ செயல்படுத்த வேண்டும் (பிரிவு 154). மாநிலத்தின் நிர்வாக அதிகாரம் அதன் சட்டமியற்றும் அதிகாரத்துடன் சேர்ந்தே இருக்கும். பொதுப்பட்டியலில் உள்ள விஷயத்தைப் பொறுத்தவரையில், அரசியல் சட்டத்தின்படி அல்லது வேறு ஏதேனும் சட்டத்தின்படி ஒன்றியத்துக்கு அளிக்கப்பட்டுள்ள அதிகாரத்திற்கு உட்பட்டே மாநில நிர்வாகத்தின் அதிகாரம் இருக்கும். (பிரிவு 246 & 162; ம.பி. அரசு எதிர் ஜெயின் AIR 1981 SC 2045).

மாநிலத்தின் அட்வகேட் ஜெனரல், மாநில அரசுப்பணியாளர் தேர்வாணையத்தின் தலைவர் மற்றும் உறுப்பினர்கள், சார்நிலை நீதி மன்றங்களின் நீதிபதிகள் ஆகியோரை ஆளுநர் நியமனம் செய்வார் (பிரிவுகள் 165, 316, 283, 284).

முதலமைச்சரையும், முதலமைச்சரின் ஆலோசனையின்பேரில் ஏனைய அமைச்சர்களையும் ஆளுநர் நியமிக்கிறார். அமைச்சர்கள் அனைவரும் ஆளுநர் விரும்பும் வரை பதவியில் நீடிப்பார்கள்; ஆனால் அமைச்சரவை, மாநிலச் சட்டப்பேரவைக்குக் கூட்டுப் பொறுப்புடையது; அதாவது சட்டப் பேரவையின் பெரும்பான்மை ஆதரவைப் பெற்றவரே முதலமைச்சராக நியமிக்கப்பட வேண்டும் என்றும், பேரவையின் நம்பிக்கையைப் பெற்றிருக்கும் வரை மட்டுமே அமைச்சரவை பதவியில் நீடிக்க முடியும் என்றும் இதற்குப் பொருளாகும் (பிரிவு 164).

நிர்வாகச் செயல்கள் அனைத்தும் ஆளுநரின் பெயராலேயே மேற்கொள்ளப்பட வேண்டும். மாநிலத்தின் நிர்வாகப் பணிகளை எளிதாக மேற்கொள்ளவும், அமைச்சர்களிடையே பொறுப்புகளை ஒதுக்கீடு செய்வதற்கும், தேவையான விதிகளை ஆளுநர் உருவாக்கலாம். அமைச்சரவை மேற்கொள்ளும் ஒரு முடிவு, முறையாக அங்கீகரிக்கப்பட்டு, ஆளுநரின் பெயரால் வெளியிடப்படாதவரை, நடைமுறைக்கு வராது (பிரிவு 166; கேரள அரசு எதிர் லக்ஷ்மிகுட்டி, AIR 1987 SC 331; பி.எல். காட்டன்மில்ஸ் எதிர் மேற்கு வங்க அரசு AIR 1967 SC 1145).

*சட்டமியற்றும் அதிகாரங்கள்:* மாநிலத்தில் சட்ட மன்ற மேலவை இருந்தால் அதன் உறுப்பினர்களில் ஆறில் ஒரு பங்கினரை, இலக்கியம், கலை, அறிவியல், கூட்டுறவு இயக்கம், சமூகசேவை போன்ற துறைகளில் சிறப்பறிவும், பழுத்த அனுபவமும் வாய்ந்தவர்களில் இருந்து ஆளுநர் நியமிக்க வேண்டும் என பிரிவுகள் 171(3)(e) மற்றும் 175(5) ஆகியவை கூறுகின்றன. ஆங்கிலோ - இந்திய சமுதாயத்தினருக்குச் சட்டப்பேரவையில் போதிய பிரதிநிதித்துவம் இல்லை என்றும், அதற்குப் பிரதிநிதித்துவம் தேவை என்றும் ஆளுநர் கருதினால், அந்தச் சமூகத்தில் இருந்து ஒருவரை பேரவைக்கு அவர் நியமனம் செய்யலாம் (பிரிவு 333).

மாநிலச் சட்டமன்றத்தின் அங்கமாகவே ஆளுநர் திகழ்கிறார் (பிரிவு 168). சட்டமன்றத்தின் இரண்டு அவைகளையும் (பேரவை, மேலவை என ஈரடுக்கு முறையுள்ள மாநிலங்களில்) கூடுமாறு ஆணையிடுவதும், கூட்டத் தொடரை முடித்து வைப்பதும் ஆளுநரே. அவர் நினைத்தால் பேரவையைக் கலைத்துவிட முடியும். (பிரிவு 174). மாநிலச் சட்டமன்ற உறுப்பினர் களிடையே அவர் உரையாற்றுவதுடன், சட்ட மன்றத்திற்குச் செய்திகளையும் அனுப்பலாம் (பிரிவுகள் 175 & 176). சட்டமன்றத்தின் இரண்டு அவை களிலும் ஒரு மசோதா நிறைவேற்றப்பட்டாலும், ஆளுநரின் ஒப்புதல் இல்லாமல் அது சட்டமாகாது (பிரிவு 200).

சட்டப்பேரவையும், மேலவை இருந்தால் அதுவும், ஒரு மசோதாவை நிறைவேற்றிய பின்னர், அதற்கு ஒப்புதல் அளிக்கலாம் என்ற அமைச் சரவையின் ஆலோசனையுடன், அது ஆளுநருக்கு அனுப்பப்படும். அந்த மசோதாவுக்கு ஆளுநர் (1) தம்முடைய ஒப்புதலை அளிக்கலாம்;

(2) ஒப்புதல் அளிக்காமல் நிறுத்தி வைக்கலாம்; (3) குடியரசுத்தலைவரின் பரிசீலனைக்காக அதனை அனுப்பலாம்; (4) பண மசோதாவைத் தவிர வேறு மசோதாவாக இருந்தால், தம்முடைய கருத்தையும் கூறி அதனை மறுபரிசீலனை செய்யுமாறு அமைச்சரவைக்குத் திருப்பியனுப்பலாம் (பிரிவு 200). ஐந்தாவதாக ஒரு நடவடிக்கையையும் ஆளுநர் மேற்கொள்ளலாம்; அது பற்றிப் பெரும்பாலும் யாரும் குறிப்பிடுவதில்லை. அதாவது, மசோதாவைப் பற்றிச் சில தகவல்கள் அல்லது விவரங்கள் வேண்டுமென்று கேட்டு, மசோதாவுக்கு ஒப்புதல் அளிக்கின்ற ஆலோசனையை மறுபரிசீலனை செய்யுமாறு அமைச்சரவைக்கே திருப்பியனுப்பலாம் (பிரிவு 167).

ஆளுநர் தமது கருத்தைக் கூறி ஒரு மசோதாவை சட்டமன்றத்திற்கே திருப்பி அனுப்பினால் அவருடைய கருத்தின்படியே அந்த மசோதா பரிசீலிக்கப்பட்டு திருத்தங்களுடனோ, திருத்தங்கள் இல்லாமலோ மீண்டும் நிறைவேற்றப்பட்டால், ஆளுநர் அதற்கு ஒப்புதல் அளித்தாக வேண்டும். ஒரு மசோதாவை மறுபரிசீலனை செய்யுமாறு அரசுக்கு அவர் திருப்பி அனுப்புகின்ற சந்தர்ப்பத்தைத் தவிர மற்ற சமயங்களில், மேலே குறிப்பிட்ட நான்கு விதமான நடவடிக்கைகளில் ஏதாவது ஒன்றின்படிதான் ஆளுநர் செயல்படுவதாகக் கொள்ள வேண்டும்.

சட்டப்பேரவையின் கூட்டத்தொடர், அல்லது மேலவை இருந்தால் இரண்டு அவைகளின் கூட்டத்தொடர், நடைபெறாத காலத்தில் பிரிவு 213-ன்படி ஆளுநர் அவசரச் சட்டங்களைப் பிறப்பிக்கலாம். பிரிவு 123ன் கீழ் குடியரசுத் தலைவருக்கு உள்ள அதிகாரம் போன்றதே இது. சட்டமன்றம் இயற்றி, ஆளுநர் ஒப்புதல் அளித்த சட்டங்களைப்போலவே அவசரச் சட்டங்களும் செயல் வீச்சுடையவை. எனினும், சட்டமன்றத்தில் இயற்றப்படும் சட்டங்களுக்கு உள்ள அதே கட்டுப்பாடுகள் அவசரச் சட்டங்களுக்கும் உண்டு. எனவே (1) ஒரு மசோதாவை அறிமுகப்படுத்துவதற்கு முன்னர் குடியரசுத் தலைவரின் முன்னொப்புதல் பெறவேண்டியிருந்தாலும், (2) ஒரு மசோதாவின் உள்ளடக்கத்தைப் பொறுத்து அதனைக் குடியரசுத்தலைவரின் பரிசீலனைக்காக ஆளுநர் அனுப்ப வேண்டியிருந்தாலும், (3) குடியரசுத் தலைவரின் ஒப்புதல் இல்லாமல் செல்லுபடியாகாமல் போய்விடக் கூடியதாக அந்த மசோதா இருந்தாலும்-- இந்த மூன்று இனங்களிலும், குடியரசுத் தலைவரின் உத்தரவு இல்லாமல் ஆளுநர் அவசரச் சட்டத்தைப் பிறப்பிக்க முடியாது.

ஆளுநர் பிறப்பிக்கின்ற அவசரச் சட்டங்கள் மாநிலச் சட்டப்பேரவை முன் (மேலவை இருந்தால் இரண்டு அவைகளின் முன்) வைக்கப்பட வேண்டும். சட்டப்பேரவை மீண்டும் கூடியதும் ஆறுவாரங்களுக்குப் பின்னர் அவசரச் சட்டம் செயல் இழந்துவிடும். அதற்கு முன்னரே அதனை நிராகரிக்கும் தீர்மானத்தைச் சட்டமன்றம் நிறைவேற்றினால் அப்போதே அவசரச்சட்டம் செயலற்றுப் போய்விடும். அவசரச் சட்டத்தை எந்த நேரத்தில் வேண்டுமானாலும் ஆளுநர் திரும்பப் பெற்றுக் கொள்ளலாம். (பிரிவு 213). அவசரச் சட்டம் பிறப்பிக்கும் ஆளுநரின் அதிகாரத்தை மிகவும் தவறாகப் பயன்படுத்தியதை டி.சி. வாத்வா எதிர் பீகார் அரசு என்ற

வழக்கில் (1987,1 SCC378) உச்சநீதிமன்றம் கடுமையாகக் கண்டித்திருக்கிறது. 1967 முதல் 1981 வரை பீகார் மாநில ஆளுநர் 256 அவசரச் சட்டங்களைப் பிறப்பித்திருந்தார். அந்த அவசரச்சட்டங்கள் யாவும் காலாவதியானவுடன் சட்டப்பேரவை மூலமாக முறையான சட்டமாக இயற்றப்படாமல், மீண்டும் மீண்டும் அவசரச் சட்டங்களாகவே இயற்றப்பட்டன. அந்த நடவடிக்கை யானது,'மக்களாட்சி நடைமுறையின் வீழ்ச்சி' என்றும்,'அரசியலமைப்பின் மூலம் செய்த மோசடி' என்றும், நீதிமன்றம் கூறியது. அவசரச் சட்டம் பிறப்பிக்கும் அதிகாரத்தை, அசாதாரணமான சூழ்நிலைகளைச் சமாளிப் பதற்கு மட்டும் மிக அரிதாகவே பயன்படுத்த வேண்டும் என்றும், அரசியல் காரணங்களுக்காகத் தகாத முறையில் அதனைப் பயன்படுத்தக்கூடாது என்றும், நீதிமன்றம் தனது தீர்ப்பில் கருத்துரைத்தது

**நிதி அதிகாரங்கள்:** பட்ஜெட் என்னும் வருடாந்திர நிதிநிலை அறிக்கையை மாநிலச் சட்டமன்ற அவை அல்லது அவைகளின் முன் ஆளுநர் தாக்கல் செய்விக்க வேண்டும் என்று பிரிவு 202 கூறுகிறது பண மசோதாவையும், மானியக் கோரிக்கைகளையும் ஆளுநரின் பரிந்துரை இல்லாமல் தாக்கல் செய்ய முடியாது. இவை சம்பந்தமான திருத்தங் களுக்குக்கூட ஆளுநரின் பரிந்துரை அவசியமானதாகும்.

**மன்னிப்பு அளிக்கும் அதிகாரம் போன்றவை:** மாநில நிர்வாகத்தின அதிகாரம் சம்பந்தப்பட்ட சட்டத்திற்கு எதிராகக் குற்றம் இழைத்தவருக்கு அளிக்கப்பட்ட தண்டனையைத் தற்காலிகமாக நிறுத்திவைக்கவோ, குறைக்கவோ, முழுமையாக மன்னிப்பு அளிக்கவோ ஆளுநருக்கு அதிகாரம் உண்டு (பிரிவு 161). ஒரு வழக்கு உச்சநீதிமன்றத்தில நிலுவையில் இருக்கும் போது அதில் சம்பந்தப்பட்ட குற்றவாளிக்கு ஆளுநர் முழுமையாக மன்னிப்பு அளிக்கலாம் என்றும், ஆனால் தண்டனையைத் தற்காலிகமாக நிறுத்திவைக்க முடியாது என்றும் கே.எம்.நானாவதி எதிர் பம்பாய் அரசு என்ற வழக்கில் (AIR 1961 SC 99) உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்தது. தண்டனையைத் தற்காலிகமாக நிறுத்திவைக்கும ஆளுநரின அதிகாரம உச்சநீதிமன்றத்தின் விதிகளுக்கு உட்பட்டது என்றும் நீதிமன்றம் கூறியது.

## மாநில சட்டமன்றம்

ஆளுநரும் சட்டப்பேரவையும் சேர்ந்ததுதான் மாநில சட்டமன்றமாகும். சில மாநிலங்களில் பேரவை, மேலவை என்ற இரண்டு அவைகள் இருக்கும் போது மேலவையும் சட்டமன்றத்தின் அங்கமாகும் தற்போது, பீகார், உத்தரப்பிரதேசம் மகாராஷ்டிரம், கர்நாடகம் ஆகிய மாநிலங்களில் மட்டுமே மேலவைகள் உள்ளன (பிரிவு 168).

மேலவை இருக்கின்ற இடங்களில் அதனை ஒழித்துவிடலாம் என்றோ, மேலவை இல்லாத இடங்களில அதனை உருவாக்க வேண்டும் என்றோ சட்டப்பேரவை தீர்மானம் இயற்றி, நாடாளுமன்றத்திற்குப் பரிந்துரைக்கலாம் (பிரிவு 169).

ஒரு மாநில சட்டப்பேரவையில் 500க்கு மிகாமலும், 60க்குக்

குறையாமலும் மாநிலத்தின் தொகுதிகளில் இருந்து நேரிடையாகத் தேர்ந் தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள் இருக்க வேண்டும். பேரவை உறுப்பினர்களின் எண்ணிக்கையில் மூனறில் ஒரு பங்கிற்குக் குறையாமலும், குறைந்த பட்சம் நாற்பது உறுப்பினர்களைக் கொண்டதாகவும் அம்மாநிலத்தின் மேலவை அமைய வேண்டும். மேலவை உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கையில், நகராட்சிகள், மாவட்ட வாரியங்கள், ஏனைய உள்ளாட்சி அமைப்புகள் போன்றவற்றில் இருந்து மூன்றில் ஒரு பங்கினரும், பட்டதாரிகள் தொகுதியில் இருந்து பன்னிரண்டில் ஒரு பங்கினரும், ஆசிரியர்கள் தொகுதியில் இருந்து பன்னிரண்டில் ஒரு பங்கினரும், சட்டப்பேரவையில் இருந்து மூன்றில் ஒரு பங்கினரும், தேர்ந்தெடுக்கப்படுவர். எஞ்சிய ஆறில் ஒரு பங்கினரை ஆளுநர் நியமிப்பார். மேலவைத் தேர்தல்கள் விகிதாச்சார பிரதிநிதித்துவப்படி, ஒற்றைமாற்று வாககுமூலம நடைபெறவேண்டும் (பிரிவுகள 170 & 171).

சட்டப்பேரவையின் பதவிக்காலம் ஐந்தாண்டுகளாகும். மேலவையோ கலைக்க முடியாத, தொடர்ந்து நீடிக்கும அவையாக விளங்கும. எனினும் மேலவையின் மூனறில் ஒரு பங்கு உறுப்பினர்கள் ஒவ்வோர் இரணடாண்டு முடிவிலும் பதவி விலகுவார்கள் (பிரிவு 172).

மாநில சட்டமன்றத்திற்கு உறுப்பினராக வேணடுமானால் ஒருவர் இந்தியக் குடிமகனாக இருப்பதுடன் அரசியல் சட்டப்படி பதவிப்பிரமாணம் எடுத்துக் கொள்ளவும் வேண்டும். மேலும், பேரவையில் உறுப்பினராக வேண்டுமானால் வேட்புமனு தாக்கல் செய்கின்ற அனறு 25 வயதுக்குக் குறையாதவராகவும், மேலவையில் உறுப்பினராக வேண்டுமானால் 30 வயதுக்குக் குறையாதவராகவும் இருக்கவேண்டும் (பிரிவு 173; ஹுசேன் எதிர் நிஜலிங்கப்பா AIR 1969 SC 1034).

மாநிலப் பட்டியலில் உளள விஷயங்கள் குறித்துச் சட்டம் இயற்றும் முழு அதிகாரமும் மாநிலச் சட்டமனறத்திற்கு உண்டு பொதுப்பட்டியலில் (பட்டியல்-3) உள்ள விஷயங்களில் நாடாளுமனறமும், மாநில சட்டமன்றமும சட்டங்களை இயற்றலாம் (பிரிவுகள் 245 & 246). (ஒன்றிய மாநில உறவுகள் என்ற தலைப்பின் கீழ்க் காண்க)

மாநில மேலவையின நிலை, நாடாளுமன்ற மாநிலங்களவையின் நிலையைப் போன்றதே அவையின் சிறப்புரிமைகள், உறுப்பினர்களின் தகுதியிழப்பு, இரண்டு அவைகளுக்கும் இடையேயான உறவு, அவை நடவடிக்கைகள், பண மசோதாவின் அறிமுகம் போன்ற விஷயங்கள் அனைத்திற்கும் இது பொருந்தும்.

பேரவைக்குத் தலைவர் (சபாநாயகர்) ஒருவரும், துணைத்தலைவர் (துணை சபாநாயகர்) ஒருவரும் அவை உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப் படுவர். மக்களவைத் தலைவர், துணைத்தலைவர் போலவே இவர்களுடைய நிலையும் செயல்பாடும் இருக்கும். மேலவைத் தலைவரும் மேலவைத் துணைத்தலைவரும் மேலவை உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப்படுவர் (பிரிவுகள் 178 முதல் 187வரை).

## நேரடி ஆட்சிப் பகுதிகள்

ஒன்றியத்தால் நேரிடையாக நிர்வகிக்கப்படுகின்ற பகுதிகள் நேரடி ஆட்சிப் பகுதிகள் எனப்படும். தற்போது ஏழு நேரடி ஆட்சிப்பகுதிகள் உள்ளன. அவை: (1) தில்லி, (2) அந்தமான்-நிகோபார் தீவுகள், (3) லட்சத் தீவுகள், (4) தத்ரா-நாகர் ஹவேலி, (5) டாமன்-டையூ, (6) புதுச்சேரி, (7) சண்டிகர், (முதலாவது அட்டவணை). முன்பிருந்த தில்லி ஆட்சிப்பகுதிக்கு பெருநகரக் கவுன்சிலும், நிர்வாகக் கவுன்சிலர்களும் இருந்தனர். தற்போது அது ஒரு சட்டமன்றமும், அமைச்சரவையும் கொண்டதாக 'தேசியத் தலைநகர் ஆட்சிப் பகுதி' எனப் பெயர்மாற்றம் பெற்றிருக்கிறது. (பிரிவுகள் 239AA& 239AB).

நேரடி ஆட்சிப் பகுதிகளின் நிர்வாகத்திற்காக நாடாளுமன்றம் சட்டம் இயற்றலாம். அந்தச் சட்டத்திற்கு உட்பட்டு, செயலாட்சியர் ஒருவரை நியமித்து அவர் மூலமாகக் குடியரசுத்தலைவரே நிர்வாகத்தைக் கவனிப்பார். செயலாட்சியரைத் துணைநிலை ஆளுநர் என்று கூறுவர். நேரடி ஆட்சிப் பகுதியின் அண்டை மாநில ஆளுநரையே அதன் செயலாட்சிய ராகவும் குடியரசுத்தலைவர் நியமிக்கலாம். அவ்வாறு நியமிக்கப்படும் ஆளுநர் அம்மாநில அமைச்சரவையின் ஆலோசனை ஏதுமின்றி சுயமாகவே செயலாட்சியர் பொறுப்புகளை நிறைவேற்ற வேண்டும் (பிரிவு 239). ஏதேனும் ஒரு நேரடி ஆட்சிப் பகுதிக்குச் சட்டமன்றத்தையும், அமைச்சரவை யையும் உருவாக்க வழிசெய்யும் சட்டத்தை நாடாளுமன்றம் இயற்றலாம். புதுச்சேரி ஆட்சிப் பகுதிக்கும், தில்லி தேசியத் தலைநகர் ஆட்சிப் பகுதிக்கும் அதுபோன்ற சட்டமன்றமும் அமைச்சரவையும் உள்ளன. அநதமான்-நிகோபார் தீவுகள் ஆட்சிப் பகுதிக்கு, சட்டமன்றத்திற்குப் பதிலாக, நியமன அமைப்பு ஒன்று உள்ளது (பிரிவு 239A). மாநில ஆளுநர்களைப் போலவே ஒன்றிய செயலாட்சியர்களுக்கும், அவசரச் சட்டத்தைப் பிறப்பிக்கும் அதிகாரம் உண்டு (பிரிவு 239B). சட்டமன்றங்கள் செயல்படுகினற நேரடி ஆட்சிப் பகுதிகள் தவிர மற்றவற்றின் அமைதிக்கும், முன்னேற்றத்திற்கும், நல்லாட்சிக்கும் நெறிமுறைகளை விதிக்கும் அதிகாரம் குடியரசுத் தலைவருக்கு உண்டு. ஒரு நேரடி ஆட்சிப் பகுதிக்காக உயர்நீதிமன்றம் ஒன்றை உருவாக்கவும், அல்லது ஏதேனும் நீதிமன்றத்தை உயர்நீதிமன்றமாக அறிவிக்கவும், சட்டமியற்றும் அதிகாரம் நாடாளுமன்றத்திற்கு உண்டு (பிரிவு 241).

# 15

## ஒன்றிய - மாநில உறவுகள்

### (பகுதி - XI, பிரிவுகள் 245-263)

"மாநிலங்களின் ஒன்றியமாக" இந்தியா திகழ்கிறது என்று நமது அரசியல் சட்டத்தின் முதலாவது பிரிவு கூறுகிறது. இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி தோற்றுவிக்கப்பட்டபோது, அது மையத்தில் அதிகாரம் குவிந்த ஆட்சியாகவும், ஓரடுக்கு ஆட்சிமுறையாகவும் விளங்கியது. பேரரசின் அதிகாரத்திற்குக் கட்டுப்பட்டதாக இந்தியாவை வைத்திருப்பதற்காக, மையத்தில் அதிகாரம் குவிந்திருக்க வேண்டும் என்பதில் அவர்கள் உறுதியாக இருந்தார்கள். பிரிட்டிஷாருக்கு, மத்தியில் உள்ள அதிகார அமைப்பு வலுவாக இருக்க வேண்டியது பேரரசின் தேவையாகவும் நிர்வாகத்தின் தேவையாகவும் இருந்தது. 1833ஆம் ஆண்டின் சாசனச் சட்டம், மத்தியில் அதிகாரங்களைக் குவிக்கும் நடவடிக்கையில் மிகவும் அளவுகடந்து, சென்னை மற்றும் பம்பாய் மாகாண அரசுகளின் சட்டமியற்றும் அதிகாரங்கள் அனைத்தையும் பறித்து, கல்கத்தாவில் இருந்த கவர்னர்- ஜெனரலின் கவுன்சிலில் சேர்ப்பித்தது. இந்திய அரசாங்கத்தின் சிவில் மற்றும் இராணுவக் கட்டுப்பாட்டினையும் கண்காணிப்பினையும்கூட, கவர்னர்-ஜெனரலின் கவுன்சிலுக்கே அந்தச் சட்டம் அளித்தது.

பின்னர், 1919ஆம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டம், மாகாணங்களுக்குக் குறிப்பிடத்தக்க அளவுக்கு அதிகாரங்களைப் பகிர்ந்தளிக்கும் ஏற்பாடுகளைச் செய்தது. அரசியலமைப்புச் சீர்திருத்தங்கள் பற்றி ஆராய்வதற்காக 1934ஆம் ஆண்டில் நியமிக்கப்பட்ட கூட்டுக் கமிட்டி கீழ்க்கண்டவாறு கருத்து வெளியிட்டது:

> "1919ஆம் ஆண்டுச் சட்டத்தின்படி மாகாண அரசுகளுக்கு அதிகாரங்கள் பகிர்ந்தளிக்கப்பட்டுள்ள போதிலும், இந்திய அரசாங்கம் ஓரடுக்கு அமைப்பாக, மத்தியில் பலம் வாய்ந்ததாகத் திகழ்கிறது. அரசியலமைப்பின் அஸ்திவாரமாக கவர்னர் ஜெனரலின் கவுன்சில் விளங்குகிறது."

பிரிட்டிஷ் பொதுமக்கள் சபையில், இந்தியக் காமன்வெல்த் மசோதா விவாதத்திற்கு வந்தபோது, அரசின் சார்பில் அப்போது பேசிய திரு. மால்கம் ஹெய்லி இறுதியான நோக்கத்தைக் கருத்தில் கொண்டு பார்க்கும்

போது ஏதேனும் ஒரு வகையான கூட்டரசு அமைப்பு தவிர்க்க முடியாத தாகிறது என்று குறிப்பிட்டார். பிரிட்டிஷ் ஆட்சியாளர்களின் நேரடிக் கட்டுப்பாட்டில் வலுவான மைய அதிகார அமைப்பு இருக்க வேண்டிய அவசியத்தை சுதேசி சமஸ்தானங்களும், பிரிட்டிஷாரின் வாணிக நலன்களும் உருவாக்கின. சைமன் கமிஷனும் (1927-29), பட்லர் கமிட்டியும் (1927-30)கூட, இந்தியா முழுமைக்கும் சமஷ்டி யூனியன் அமைப்பே ஏற்றது எனக் கூறின.

இந்திய அரசாங்கச் சட்டம் 1935, இந்தியாவிற்கு ஒரு கூட்டரசு முறையை ஏற்படுத்தத் திட்டமிட்டது. அதன்படி, மத்திய அரசும் மாகாண அரசுகளும், தம்முடைய அதிகாரத்தையும் ஆட்சி வரம்பையும், பிரிட்டிஷ் பேரரசியிடம் இருந்து நேரிடையாகப் பெறுவதென்று ஏற்பாடு செய்யப்பட்டது. எனினும், அந்தச் சட்டத்தில் உத்தேசிக்கப்பட்டிருந்த கூட்டரசு அமைப்பு உருவாகவே இல்லை. 1935ஆம் ஆண்டுச் சட்டத்தில் இடம் பெற்றிருந்த மாகாண சுயாட்சித் திட்டம் மட்டும் செயல் படுத்தப்பட்டது. மாகாணங்களின் மட்டத்தில் மட்டும் பொறுப்புடைய அரசுகள் ஏற்படுத்தப்பட்டதால், மாகாணச சட்டமன்றங்களுக்கு மேலும் பல அதிகாரங்கள் வேண்டுமென தேசியவாதிகள் கோரினர். எனினும் அந்தப் பரிசோதனை முயற்சி நீண்டகாலம் நீடிக்கவில்லை. எவ்வாறாயினும், மொத்தத்தில் இந்த நாடு 1919ஆம் ஆண்டுச் சட்டத்தின்படி ஒரு மத்திய அதிகார அமைப்பினாலேயே ஆளப்பட்டது.

அரசியல் நிர்ணயசபை முதன்முறையாக 1946ஆம் ஆண்டிலும் பின்னர் 1947ஆம் ஆண்டின் தொடக்கத்திலும் கூடியபோது, மத்தியில் ஓரளவு அதிகாரங்களைக்கொண்ட ஒரு கூட்டரசு அமைப்பை உருவாக்கலாம என்ற கருத்து வெளிப்படுத்தப்பட்டது. அரசியலமைப்புக் குழு உருப்படியாக ஒரு காரியத்தை நிறைவேற்றுவதற்கு முன்னர் 1947 ஜூன் மூன்றாம் தேதி மௌண்ட் பேட்டன் திட்டம் அறிவிக்கப்பட்டது. இந்தியாவின் ஒற்றுமையைப் பேணிக்காக்க வேண்டுமென்ற நம்பிக்கை தவிடுபொடியாகி, மத அடிப்படையில் இந்தியாவை இரண்டாகப் பிரிக்கும் யோசனை திட்ட வட்டமான முடிவாகிவிட்டது. எதிர்பார்த்தபடியே, வலுவான மைய அமைப்பு உருவாக வேண்டும் என்ற கருத்தும் வலுப்பட்டது. ஒன்றிய அரசியலமைப்புக் குழுவும் மாகாண அரசியலமைப்புக் குழுவும் 1947 ஜூன் ஐந்தாம் தேதி ஒன்று கூடி, ஜூன் மூன்றாம் தேதி அறிவிக்கப்பட்ட மௌண்ட்பேட்டன் திட்டத்தினால், ஏற்கெனவே கேபினட் மிஷன் நமது அரசியலமைப்பு இவ்வாறுதான் இருக்க வேண்டும் என்று விதித்த கட்டுப்பாடுகள் இனிமேலும் தொடர்ந்து நீடிக்கவில்லை எனத் தீர்மானித்தன. நாடு துண்டாடப்படுவது உறுதியாகிவிட்ட பின்னர், முஸ்லீம் லீகை சமாதானப்படுத்த வேண்டிய தேவையும் இல்லை; ஒன்றிய அரசின் அதிகாரங்களைக் கட்டுப்படுத்த வேண்டிய அவசியமும் இல்லை. பின்னர் 1947 ஜூன் ஆறாம் தேதி கூடிய ஒன்றிய அரசியலமைப்புக் குழு, நமது அரசியலமைப்பு வலுவான மைய அமைப்புடைய கூட்டரசாக இருக்க வேண்டும் எனவும், விரிவான மூன்று அதிகாரப் பட்டியல்கள் இருக்க வேண்டும் எனவும், எஞ்சிய அதிகாரங்கள் ஒன்றியத்திடம் இருக்க வேண்டும்

எனவும், தற்காலிகமாகத் தீர்மானித்தது.

1947 ஜூலை ஐந்தாம் தேதியன்று, அரசியல் நிர்ணயசபைத் தலைவரிடம் தனது அறிக்கையைச் சமர்ப்பித்த ஒன்றிய அதிகாரக் குழு, "நமது அரசியலமைப்பு திடகாத்திரமான கூட்டமைப்பாக இருக்க வேண்டுமானால் வலுவான மைய அமைப்புடைய கூட்டரசு முறையே ஏற்புடையது" என்று வலியுறுத்தியது. முஸ்லீம் லீகின கருத்துக்கு இடமளிப்பதற்காகவே, நாட்டின் நிர்வாகத் தேவைகளைப் பற்றி அரசியல் நிர்ணயசபை மதிப்பிட்டிருந்ததற்கு மாறாக, கேபினட் தூதுக்குழு திட்டப்படி, மைய அதிகார வரமபைக் குறைத்துக் கொள்வதென விட்டுக்கொடுக்க வேண்டியிருந்தது என்று குழு தனது அறிக்கையில் கூறியிருந்தது மைய அதிகார அமைப்பைப் பலமற்றதாக ஆக்கினால், நாட்டில் அமைதியை நிலைநாட்ட முடியாமலும், அனைவருக்கும் பொதுவான முக்கிய விஷயங்களை ஒருங்கிணைக்க இயலாமலும், சர்வதேச அரங்குகளில் நம்நாட்டின் சார்பாக ஆணித்தரமாகக் கருததுக்களை எடுத்துவைக்க இயலாமலும் போய், நாட்டின நலனுக்குக் குந்தகம் ஏற்பட்டு விடும் என்று அக்குழு ஏகமனதாகக் கருத்துக் கூறியிருந்தது. இதற்கிடையில் சுமார் 600-க்கும் மேற்பட்ட சுதேசி சமஸ்தானங்கள், உருவாகி வந்த இந்திய ஒன்றியத்துடன் சேர்ந்துவிட்டன அதன விளைவாக, இந்தியாவில் இருந்த மாநிலங்களின் எண்ணிக்கை. எளிதாக நிர்வகிக்கக் கூடிய அளவுக்குக் குறைந்துவிட்டது.

இந்தப் பின்னணியில், இந்தியாவின்அரசியலமைப்பு கூட்டரசு அமைப்பாக இருப்பினும், அதனை ஒரு ஒன்றியம் என்றே அழைப்பதென வரைவுக்குழு தீர்மானித்தது. 'இந்தியா ஒரு யூனியன்' ஆகத் திகழ்கிறது என்று வலியுறுத்துவதற்குக் காரணம, இதில் இடம் பெற்றுள்ள மாநிலங்கள் ஓர் உடன்படிக்கையின் பேரிலோ, ஒப்பந்தத்தின் பேரிலோ ஒன்றியத்தில் சேராமல், இறையாண்மையுடைய இந்திய மக்களிடமிருந்து அதிகாரத்தைப் பெற்ற அரசியல் நிர்ணய சபையால் நேரடியாகவே ஒன்றியம் என்று அறிவிக்கப்பட்டவை என்ற உண்மையை நிலைநிறுத்துவதற்கே ஆகும். ஆட்சிமுறை கூட்டரசு அமைப்பிலானது எனினும், அமைப்பிலும் செயல் முறையிலும் ஒன்றியமே உயரதிகாரம் பெற்றதாகவும், அதற்குக் கீழ்ப்படிந்த நிலையிலேயே மாநிலங்கள் இருக்கும் என்பதைத் தெளிவுபடுத்துவதற்காகவும் இவ்வாறு அறிவிக்கப்பட்டது. மேற்கு வங்கம் எதிர் இந்திய அரசு (AIR 1963 SC 1241) என்ற வழக்கில் உச்சநீதிமன்றம் இந்தக் கருத்தை உறுதி செய்தது.

நமது அரசியலமைப்பை உருவாக்கியவர்களின் பிரதான நோக்கம், இந்தியாவின் ஒற்றுமையையும் ஒருமைப்பாட்டையும் பேணிக்காப்பதே ஆகும். நாடு சுதந்திரமடைந்ததற்குப் பின்னர் மாநிலங்களைத் திருத்தி யமைப்பதற்கும் ஒன்றிய - மாநில உறவுகள் பற்றி பரிசீலிப்பதற்கும் அமைக்கப் பட்ட ஜேவிபிகுழு, தர் கமிஷன், மாநிலங்களின் மறுசீரமைப்புக் கமிஷன், இராஜமன்னார் குழு, சர்க்காரியா கமிஷன் போன்ற பல்வேறு ஆய்வுக் குழுக்களின் முக்கிய நோக்கமும், இந்தியாவின் ஒற்றுமையையும் ஒருமைப்பாட்டையும் பேணிக்காப்பதே ஆகும். மாநிலங்களின்

மறுசீரமைப்புக் கமிஷன் தனது அறிக்கையின் முடிவில் இவ்வாறு கூறியிருந்தது.

"நமது தேசியத்தின் அடித்தளமாக விளங்குவது இந்திய ஒன்றியமே. மாநிலங்கள் அதன் அவயவங்களாகும்; மறுசீரமைப்பின்போது அவயவங்களும் ஆரோக்கியமாகவும் வலுவாகவும் இருக்க வேண்டும். ஒன்றியத்தின் வலுவும், ஸ்திரத் தன்மையும், தானே வளர்ந்து முன்னேறும் திறனுமே, நாட்டில் மேற்கொள்ளப்படவிருக்கும் அனைத்து மாற்றங்களுக்கும் அடிப்படையாக இருக்க வேண்டும்."

## சட்டமியற்றும் உறவுகள்

ஒன்றியத்துக்கும் மாநிலங்களுக்கும் இடையே சட்டமியற்றும் அதிகாரங் களைப் பகிர்ந்தளிக்கும் சாசனம் அரசியல் சட்டத்தின் 245-லிருந்து 255 வரையான பிரிவுகளில் இடம்பெறறுள்ளது. இந்தியா முழுவதற்குமோ, ஏதேனும் ஒரு பகுதிக்கு மட்டுமோ, நாடாளுமன்றம் சட்டம் இயற்றலாம். ஒரு மாநிலம் முழுவதற்குமோ, மாநிலத்தின் ஏதேனும் ஒரு பகுதிக்கு மட்டுமோ, மாநிலச் சட்டமன்றம் சட்டம் இயற்றலாம். ஒரு மாநிலச் சட்டம் எல்லை கடந்து செயல்படும் பட்சத்தில், சம்பந்தப்பட்ட விஷயத் திற்கும் அம்மாநிலத்திற்கும் இடையேயான நெருக்கம் நிலைநாட்டப்பட்டா விட்டால், அந்தச் சட்டம் செல்லுபடியாகாது (கொச்சுனி எதிர் சென்னை அரசு AIR 1960 SC 1080; பம்பாய் அரசு எதிர் ஆர்.எம்.டி.சி AIR 1957 SC 699; டாடா இரும்பு எஃகு கம்பெனி எதிர் பீகார் அரசு AIR 1958 SC 452). ஆனால் எல்லை கடந்து செயல்படுவதற்காக நாடாளுமன்றம் இயற்றும் சட்டத்தைச் செல்லாததாக்க முடியாது (பிரிவு 245). அரசியல் சட்டத்தின் ஏழாவது அட்டவணையில், ஒன்றியப் பட்டியல், மாநிலப்பட்டியல், பொதுப் பட்டியல் என்ற மூன்று பட்டியல்கள் உள்ளன. ஒன்றியப் பட்டியலில் 97 விஷயங்களும், மாநிலப் பட்டியலில் 66 விஷயங்களும், பொதுப்பட்டியலில் 47 விஷயங்களும், இடம் பெற்றுள்ளன. ஒன்றியப் பட்டியலில் இடம் பெற்றுள்ள விஷயங்கள் குறித்துச் சட்டம் இயற்றும் அதிகாரம் நாடாளு மன்றத்திற்கே உரியது எனவும், மாநிலப் பட்டியலில் உள்ள விஷயங்கள் குறித்துச் சட்டம் இயற்றும் அதிகாரம் மாநிலங்களுக்கே உரியது என்றும், பொதுப்பட்டியலில் உள்ள விஷயங்கள் குறித்து இரண்டும் சட்டம் இயற்றலாம் என்றும், பிரிவு 246 கூறுகிறது. பொதுப்பட்டியலில் உள்ள ஒரு விஷயத்தில் நாடாளுமன்றம் இயற்றிய சட்டத்திற்கும், மாநிலச்சட்டமன்றம் இயற்றிய சட்டத்திற்கும் இடையே ஏதேனும் முரண்பாடு இருக்குமானால், ஒன்றியத்தின் சட்டமே மேலோங்கி நிற்கும். முரண்பாடுடைய மாநிலச் சட்டம் குடியரசுத்தலைவரின் பரிசீலனைக்காக வைக்கப்பட்டுப் பின்னர் அவருடைய ஒப்புதலைப் பெறும்வரை முரண்பாடுடைய பகுதிகள் செல்லுபடியாகா (பிரிவு 254). மூன்று பட்டியல்களாகப் பிரிக்கப்பட்டுள்ள சட்டமியற்றும் அதிகாரங்களில் இடம்பெறாத எஞ்சிய விஷயங்கள் அனைத்திற்கும் சட்டம் இயற்றும் அதிகாரம் ஒன்றியத்துக்கே உண்டு (பிரிவு 248). சர்வதேச உடன்பாடு அல்லது ஒப்பந்தம் எவற்றுக்கேனும் செயல்வடிவம் கொடுப்பதற்காக இந்தியா முழுவதற்கும் அல்லது ஒரு

குறிப்பிட்ட பகுதிக்கு மட்டும் பொருந்துமாறு சட்டம் இயற்றும் அதிகாரமும் நாடாளுமன்றத்திற்கு உண்டு (பிரிவு 253).

இந்தியா முழுவதும் இயற்றப்படும் சட்டங்களில் ஒத்த தன்மை மிக அவசியமானதாக இருக்க வேண்டிய விஷயங்களும், நாட்டின் பொதுநலன் சம்பந்தப்பட்ட விஷயங்களும், ஒன்றியப் பட்டியலில் இடம் பெற்றுள்ளன. வெவ்வேறாகப் பாவிக்கப்பட வேண்டிய விஷயங்கள் மாநிலப்பட்டியலில் இடம் பெற்றுள்ளன. நாடு முழுவதிலும் இயற்றபபடும் சட்டங்களில் ஒத்த தன்மை இருப்பது விரும்பத்தக்கதாக இருப்பினும், அது அவசியமானதில்லை என்று கருதப்படும் விஷயங்கள் பொதுப்பட்டியலில் இடம் பெற்றுள்ளன. மாநிலப்பட்டியலில் இடம் பெற்றுள்ள விஷயங்கள் குறித்துச் சட்டம் இயற்றும் அதிகாரம் மாநிலங்களுக்கே உரியது என்றாலும். இப்பொது விதிக்கு இரண்டு விதிவிலக்குகள் உள்ளன. பிரிவு 249-ன்படி. மாநிலங்களவை உறுப்பினர்களில் மூன்றில் இரண்டு பங்கினர் ஆஜராகி வாக்களித்துப் பெரும்பான்மை ஆதரவுடன, மாநிலபபட்டியலில் இடம் பெற்றுள்ள ஒரு விஷயத்தைக் குறித்து நாடாளுமன்றம் சட்டம் இயற்றுவது நாட்டின் நலன் கருதி மிகவும் அவசியமானது என ஒரு தீர்மானத்தை நிறைவேற்றினால். அந்த விஷயம் குறித்து நாடு முழுவதற்குமோ, ஏதேனும் ஒரு பகுதிக்கு மட்டுமோ பொருந்துமாறு சட்டம் இயற்றும் அதிகாரம் நாடாளுமன்றத்திற்கு உண்டு. மாநிலங்களவை அவ்வாறு நிறைவேற்றும் தீர்மானம் ஓராண்டுக்குச் செல்லுபடியாகும்; அடுத்து அதுபோல் ஒரு தீர்மானத்தை நிறைவேற்றுவதன் மூலம் மேலும் ஓராண்டுக்கு அதனை நீட்டிக்கலாம். இந்தத் தீர்மானத்தின்படி இயற்றப்படுகின்ற சட்டம், ஓராண்டு முடிந்தபின்னர், அடுத்த ஆறு மாதத்திற்குள் காலாவதியாகிவிடும்.

அவசரநிலைப் பிரகடனம் அமலில் இருக்கும்போது, மாநிலப் பட்டியலில் உள்ள எந்த ஒரு விஷயம் குறித்தும், இந்தியா முழுவதற்குமோ, ஏதேனும் ஒரு பகுதிக்கு மட்டுமோ பொருந்துமாறு சட்டங்கள் இயற்றும் அதிகாரத்தைப் பிரிவு 250 நாடாளுமன்றத்திற்கு வழங்கியுள்ளது.

பிரிவுகள் 49, 250-ன்படி நாடாளுமன்றம் இயற்றும் சட்டங்களுக்கும், மாநிலச்சட்டமன்றம் இயற்றிய சட்டங்களுக்கும் முரண்பாடு இருக்குமானால், நாடாளுமன்றம் இயற்றிய சட்டமே மேலோங்கி நிற்கும்; நாடாளுமன்றம் இயற்றிய சட்டம் அமலில் இருக்கும்வரை மாநிலச் சட்டத்தின் ஒத்திசைவு இல்லாத பகுதிகள் செயலற்றவையாய் இருக்கும் (பிரிவு 251).

பிரிவு 252-ன்படி, இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மாநிலச் சட்டமன்றங்கள் தீர்மானம் நிறைவேற்றி, மாநிலப் பட்டியலில் உள்ள எந்த விஷயத்தைப் பற்றியேனும் நாடாளுமன்றம் சட்டம் இயற்ற வேண்டும் எனக்கேட்டுக் கொள்ளலாம். அவ்வாறு இயற்றப்படும் சட்டங்களை மற்ற மாநிலங்களுக்கும் விரிவுபடுத்தலாம் என அந்தந்த மாநிலங்கள் தீர்மானம் நிறைவேற்றினால் அந்தச் சட்டங்களை அவற்றுக்கும் நீட்டிக்கலாம்.

## நிர்வாக உறவுகள்

256லிருந்து 265வரையுள்ள பிரிவுகள், ஒன்றிய - மாநில உறவுகளை முறைப்படுத்துகின்றன. பொதுவாகவே கூட்டரசு அமைப்புகளில்,

ஒன்றியத்துக்கும் மாநிலங்களுக்கும் இடையேயான நிர்வாக உறவுகள் சிரமமான சுமையாகவே இருக்கும். ஆனால் இந்திய அரசியலமைப்போ, இரண்டு மட்டத்திற்கும் இடையே சுமுகமான உறவு நிலவ வகை செய்துள்ளது. நாடாளுமன்றம் இயற்றிய சட்டங்களுக்கு இணக்கமாக மாநில அரசின் நிர்வாகம் செயல்படுமாறு அரசியலமைப்பு அமைந்துள்ளது. இதற்காக இந்திய அரசாங்கத்தால் உகந்தது என்று தோன்றுகின்ற கட்டளைகளைப் பிறப்பிக்கவும் ஒன்றிய நிர்வாகத்திற்கு அதிகாரம் உள்ளது.

ஒன்றியத்தின் நிர்வாக அதிகாரத்தைச் செயல்படுத்துவதைத் தடுப்பதாக இல்லாமல் ஒவ்வொரு மாநிலத்தின் நிர்வாக அதிகாரமும் செயல்படுத்தப்பட வேண்டும் என்றும், தேசிய முக்கியத்துவம் அல்லது இராணுவ முக்கியத்துவம் வாய்ந்த தகவல் தொடர்பு அமைப்புகளையும், இருப்புப் பாதைகளையும் மாநிலங்கள் பாதுகாப்பதற்கு வேண்டிய உத்தரவுகளை இந்திய அரசு பிறப் பிக்கலாம் என்றும், பிரிவு 257 கூறுகிறது. இந்த உத்தரவுகளைச் செயல் படுத்துவதற்காக மாநிலங்களுக்கு ஏற்படும் அதிகப்படியான செலவுகளை ஒன்றிய அரசு மாநிலங்களுக்குத் திருப்பித் தந்துவிடும். இந்திய ஆட்சிப் பகுதியின் எல்லா இடங்களிலும், ஒன்றிய மற்றும் மாநிலங்களின் சட்டங்கள், ஆவணங்கள். நீதித்துறை நடவடிக்கைகள் ஆகியவற்றை நன்னம்பிக்கையுடன் மதித்துப் போற்ற வேண்டும் என்று பிரிவு 261-ல் கூறப்பட்டுள்ளதும் ஒன்றிய மாநில உறவுகள் சுமுகமாக இருக்கப் பெரிதும் வழி செய்கிறது மாநிலங்களுக்கு இடையேயான நதிகள் மீதான நாடாளுமன்றக் கட்டுப் பாடும், மாநிலங்களுக்கு இடையேயான நதிநீர்த் தகராறுகளைத் தீர்ப்பதற்கான வழிமுறையும், ஒன்றியம்-மாநிலங்களுககும. மாநிலங்களுக்கிடையேயும், உருவாகக் கூடிய பல உரசல்களைத் தவிர்த்திருக்கின்றன (பிரிவு 262). எந்த ஒரு விஷயத்திலும் சந்தர்ப்ப சூழ்நிலைகளினால் தவறான முடிவுகள எடுக்கப்பட்டுவிடக்கூடாது என்று நமது அரசியலமைப்பை உருவாக்கிய வர்கள் தெளிவாக இருந்ததால், மாநிலங்களிடைக் கவுன்சிலுக்கான ஏற்பாட் டினையும் செய்திருக்கின்றனர். மாநிலங்களுக்கு இடையேயான தகராறுகளை விசாரித்து ஆலோசனை வழங்கவும், மாநிலங்களுக்கிடையேயும், ஒன்றியம்-மாநிலங்களுக்கு இடையேயும் உளள பொதுவான விஷயங்கள குறித்து ஆராய்ந்து ஆலோசனை வழங்கவும், அரசின் கொள்கைகளைச் சிறப்பாக நடைமுறைப்படுத்துவதற்கு ஏற்ற பரிந்துரைகளை வழங்கவும், மாநிலங் களிடைக் கவுன்சில் ஒன்றை ஏற்படுத்த பிரிவு 263 குடியரசுத்தலைவருக்கு அதிகாரம் அளிக்கிறது.

ஒன்றிய நிர்வாக அதிகாரங்கள் விரிந்துள்ள விஷயங்களில் ஒரு மாநில அரசின் ஒப்புதலுடன், அந்த மாநில அரசிடம் அல்லது, அதன் அதிகாரிகளிடம் ஏதேனும் பணியைக் குடியரசுத்தலைவர் ஒப்படைப்பதற்குப் பிரிவு 258 வகை செய்கிறது. அதேபோல மாநில நிர்வாக அதிகாரங்கள் விரிந்துள்ள விஷயங்களில், ஒன்றியத்தின் ஒப்புதலுடன் ஒன்றிய அரசிடம் அல்லது அதன் அதிகாரிகளிடம் ஏதேனும் பணியை ஆளுநர் ஒப்படைப் பதற்குப் பிரிவு 258A வகை செய்கிறது.

## நிதி உறவுகள்

ஒன்றியம் - மாநிலங்களுக்கு இடையேயான நிதி உறவுகளிலும்கூட, மையமாகத் குவியும் இந்திய கூட்டரசு அமைப்பின் பொது அம்சம் இருப்பதை நாம் காணலாம். நிதி விஷயத்தைப் பொறுத்தவரையில் ஒன்றியத்திடம் அதிகாரம் மிகுந்திருப்பதாகக் கூறலாம். திட்டமிட்ட பொருளாதார நடவடிக்கைகள் வாயிலாக நாட்டின் தேவைகளை நிறைவேற்றவும், முன்னேற்றப்பாதையில் செல்லவும் நிதி அதிகாரம் மிகுந்ததாக ஒன்றியம் இருப்பது விரும்பத்தக்கது மட்டுமில்லாமல், மிகவும் அவசியமானதும் ஆகும். மாநிலங்களுக்கும் அவற்றுக்கான நிதியாதாரங்கள் உள்ளன. மேலும் சில வரிவருவாயில் இருந்து மாநிலங்களுக்குப் பங்குகள் தரப்படுவதுடன, உதவிமானியமாகவும் பெரும்நிதியை மாநிலங்களுக்கு ஒன்றியம் அளிக்கிறது. வரிவருவாயை ஒன்றியமும் மாநிலங்களும் பகிர்ந்து கொள்வது பறறியும், ஒன்றியம் அளிக்கும் உதவி மானியங்களைத் தீர்மானிப்பதற்கான கோட்பாடுகளை வரையறுக்கவும், ஐநதாண்டுகளுககு ஒருமுறை நிதிக் கமிஷன்கள் அமைக்க வகை செய்யும் சிறபபம்சம் இந்திய அரசியலமைப்பிற்கே உரிய கண்டுபிடிபபு எனலாம். ஒன்றியம்-மாநிலங்களுக்கு இடையேயான நிதிநிலை உறவுகள் சுமூகமாக அமைய இந்த ஏற்பாடுகள் பெரிதும் துணை புரிந்துள்ளன.

'ஒன்றிய-மாநில' எனபதை 'மததிய-மாநில' என்று பிழையாகப் பயன் படுத்தியதால், ஒனறிய மாநில உறவுகளுக்குத் தவறான பொருள்கொண்டு உறவுகள் பெரிதும் சீர்கேடு அடையச்செய்துவிட்டனர் அரசியலமைப்பில் 'மத்திய' என்ற சொல் பயன்படுத்தப்படவே இல்லை. 'மத்திய அரசாங்கம்', 'மத்திய சட்டமன்றம்', 'மத்திய சட்டங்கள்' போன்ற சொல்லாடசிகள் யாவுமே காலனி ஆதிக்க ஆட்சியின்போது மைய நிலையில் இருந்து ஆட்சி புரிந்த அரசமைப்பிடமிருந்து தோனறியவை 'மத்திய' என்பதும 'ஒன்றியம்' என்பதும் முற்றிலும் வெவ்வேறான பொருள் தருபவை. 'மத்திய' என்பது ஒரு வட்டத்தின் நடுப்புள்ளியைக் குறிக்கும். ஆனால் 'ஒனறியம்' என்பதோ வட்டம முழுவதையும் குறிக்கும் எனவே ஒன்றியத்துக்கும மாநிலங்களுக்கும் இடையேயான உறவு, 'முழுமைக்கும் அதன் அங்கங்களுக்கும' இடையேயான உறவைக் குறிக்குமே அன்றி, மையமான அதிகார அமைப்புக்கும் அதனைச் சுற்றியுள்ள அங்கங்களுக்கும் இடையேயான உறவைக் குறிப்பதாகாது.

# 16

# நிதி, வாணிகம் போன்றவை தொடர்பான பிரிவுகள்

## (பகுதி V - அத்தியாயம் V மற்றும் பகுதிகள் XII & XIII, பிரிவுகள் 148-151, 264-307)

## இந்தியத் தலைமைக் கணக்குத் தணிக்கையர்

நாடாளுமன்ற மக்களாட்சி முறையின் அரணாக, நிர்வாகத்தின் நிதிக் கட்டுப்பாடுகள் திகழ்கின்றன. நிதிக்கட்டுப்பாட்டைச் செயல்படுத்த, சுயேட்சையான தணிக்கை அமைப்பு, அத்தியாவசியமான முன்தேவையாகும். இந்தியாவின் தலைமைக் கணக்குத் தணிக்கையர் ஒருவரைக் குடியரசுத் தலைவர் நியமிக்க வேண்டுமென நமது அரசியல் சட்டம் கூறுகிறது. ஆட்சியிலிருக்கும் நிர்வாகத்தில் இருந்து எவ்விதமான கட்டுப்பாடும் இன்றி, தலைமைக் கணக்குத் தணிக்கையர் சுதந்திரமாகச் செயல்படுவதை உறுதி செய்வதற்காகவும் அரசியலமைப்பு உத்தரவாதம் அளிக்கிறது. அதன்படி, தலைமைக் கணக்குத் தணிக்கையரைப் பதவி நீக்கம் செய்ய வேண்டுமானால், பிரிவு 124(4)-ன்படி உச்சநீதிமன்ற நீதிபதிகளைப் பதவி நீக்குவதற்கு உரிய வழிமுறை போலவே, அவர் திறமையற்றவர் என்றோ, ஒழுக்கக் கேடான நடத்தையுடையவர் என்றோ காரணம் காட்டி, அவரைப் பதவி நீக்கம் செய்ய வேண்டுமென நாடாளுமன்றத்தின் இரண்டு அவைகளிலும் மூன்றில் இரண்டு பங்கு உறுப்பினர்கள் ஆஜராகி வாக்களிக்க, பெரும்பான்மை ஆதரவுடன் ஒரு தீர்மானத்தை நிறைவேற்றி குடியரசுத் தலைவரிடம் சமர்ப்பித்து பின்னர், அதன்படி குடியரசுத் தலைவர் உத்தரவு பிறப்பித்து, அவரைப் பதவியிலிருந்து நீக்க முடியும். மேலும், இந்தியத்தலைமை கணக்குத் தணிக்கையர் இந்திய அரசாங்கத்தின் கீழோ, பிற மாநில அரசுகளின் கீழோ எந்தவிதமான பதவியையும் வகிக்க முடியாது. அவருடைய ஊதியம் போன்ற விஷயங்களை நாடாளுமன்றமே சட்டம் இயற்றித் தீர்மானிக்கும். தலைமைக் கணக்குத் தணிக்கையர் (கடமைகள், அதிகாரங்கள், பணிநிலைமைகள்) சட்டம் 1971-ன்படி அவருடைய நிலை ஒழுங்கு படுத்தப்பட்டுள்ளது. உச்சநீதிமன்ற நீதிபதிக்குச் சமமாக அவருக்கு ஊதியமும் மற்ற படிகளும் வழங்கப்படுகின்றன.

தணிக்கைத் துறையிலும் கணக்குத் துறையிலும் பணியாற்றுகின்றவர்களின் பணி நிலைமைகளும், தலைமைக் கணக்குத் தணிக்கையாரின் அதிகாரங்களும், தலைமைக் கணக்குத் தணிக்கையாரிடம் கலந்தாலோசித்து, குடியரசுத் தலைவர் வகுக்கின்ற விதிகளின்படி முறைப்படுத்தப்படும். தலைமை கணக்குத் தணிக்கை அலுவலகத்தின் நிர்வாகச் செலவுகள் அனைத்தும் தேசிய ஒருங்கிணைப்பு நிதியத்திலிருந்து வழங்கப்படும் (பிரிவு 148).

ஒன்றியத்தின் கணக்கு வழக்குகளும், மாநிலங்களின் கணக்கு வழக்குகளும் எவ்வாறு பராமரிக்கப்பட வேண்டும் என்பதை, தலைமைக் கணக்குத் தணிக்கையாரின் ஆலோசனையின் பேரில் குடியரசுத் தலைவர் நிர்ணயம் செய்வார், ஒன்றியம் மற்றும் மாநிலங்களின் கணக்கு வழக்குகளைப் பொறுத்தவரையில் தலைமைக் கணக்குத் தணிக்கையாரின் கடமைகளையும் அதிகாரங்களையும் நாடாளுமன்றமே முடிவுசெய்ய வேண்டுமென அரசியல் சட்டம் கூறுகிறது (பிரிவுகள் 149 மற்றும் 150). ஒன்றிய கணக்குகள் பற்றிய அறிக்கைகளை தலைமைக் கணக்குத் தணிக்கையர் குடியரசுத் தலைவரிடம் சமர்ப்பிக்க வேண்டும் என்றும் குடியரசுத் தலைவர் அவற்றை நாடாளு மன்றத்தில் தாக்கல் செய்விப்பார் என்றும் பிரிவு 151 கூறுகிறது. இதைப்போலவே மாநிலங்களின் கணக்குகளைப் பற்றிய அறிக்கைகள் மாநில ஆளுநரிடம் சமர்ப்பிக்கப்பட்டு, பின்னர் மாநில சட்டமன்றத்தில் தாக்கல் செய்யப்படும்.

## நிதி, சொத்து, ஒப்பந்தங்கள், வழக்குகள் ஆகியவை

'பிரதிநிதித்துவம் இல்லாமல் வரிவிதிப்புக் கூடாது' என்ற மக்களாட்சிக் கோட்பாட்டை வலியுறுத்தும் 265 ஆவதுபிரிவு, சட்டப்படியான அதிகாரம் இல்லாமல் எந்தவிதமான வரிவிதிப்பும் கூடாது என்று திட்டவட்டமாகத் தெளிவுபடுத்துகிறது.

*ஒருங்கிணைப்பு நிதியம்:* எதிர்பாராத செலவின நிதியத்தில் சேர்க்க வேண்டியவை மற்றும் மாநிலங்களுக்கான ஒதுக்கீடுகள் தவிர, இந்திய அரசாங்கத்தின் அனைத்து வருவாயும், அது பெறுகின்ற கடன் தொகைகளும் சேர்ந்து, தேசிய ஒருங்கிணைப்பு நிதியம் எனப்படும். இதேபோல் ஒவ்வொரு மாநிலத்திற்கும் ஓர் ஒருங்கிணைப்பு நிதியம் இருக்கும். ஒன்றிய அரசாங்கம் அல்லது மாநில அரசாங்கம் பெறுகின்ற மற்ற நிதி அனைத்தும், அவற்றின் பொதுக் கணக்குகளில் வரவு வைக்கப்படும். சட்டத்தின் அங்கீகாரம் இல்லாமல் ஒருங்கிணைப்பு நிதியத்தில் இருந்து ஒரு பைசாவைக் கூட எடுக்க முடியாது. ஆனால் பொதுக்கணக்கில் இருந்து பணம் எடுப்பதற்கு இந்தக் கட்டுப்பாடு பொருந்தாது (பிரிவு 266).

*எதிர்பாராத செலவு நிதியம்:* எதிர்பாராமல் ஏற்படும் சில சந்தர்ப்பங்களில் உடனடியாகச் செலவு செய்வதற்கு எதுவாக நாடாளு மன்றமும், மாநிலச் சட்டமன்றங்களும் தத்தமது எதிர்பாராத செலவு நிதியங்களை ஏற்படுத்திக் கொள்ள பிரிவு 267 அதிகாரம் அளிக்கிறது. எதிர் பாராமல் ஏற்படும் செலவுகளைச் செய்வதற்காக, நாடாளுமன்றம் அல்லது சட்டமன்றத்தின் ஒப்புதலைப் பின்னர் பெற்றுக்கொள்ளலாம் என்ற

ஏற்பாட்டுடன் இந்த நிதியங்கள் ஒன்றியத்தின் (குடியரசுத் தலைவர்) கைப்பொறுப்பில், அல்லது மாநில அரசின் (ஆளுநர்) கைப்பொறுப்பில் இருக்கும்.

**ஒன்றியத்துக்கும் மாநிலங்களுக்கும் இடையே வருவாய் பகிர்வு:** வருவாய்களைப் பகிர்ந்து கொள்வதற்கான திட்டம், அரசியலமைப்பின் 268-லிருந்து 273 வரையுள்ள பிரிவுகளில் இடம் பெற்றுள்ளது. மாநில அரசுகள் விதித்து வசூலிக்கும் வரிவருவாய் அனைத்தையும் மாநிலங்களே வைத்துக் கொள்ளலாம். ஒன்றியப் பட்டியலில் விதிக்கப்படும் வரிவசூலில் ஒரு பகுதி மாநிலங்களுக்குப் பகிர்ந்தளிக்கப்படும்.

சுங்க வரி, நிறுவனங்களின் வருமான வரி, மூலதன மதிப்பு வரி, வருமான வரி மீதான மேல்வரி, ஒன்றியப் பட்டியலில் உள்ள விஷயங்கள் மீது விதிக்கப்படும் வரி ஆகியவை முற்றிலும் ஒன்றியத்துக்கு உரியவை.

நிலவருவாய், மாநிலப் பட்டியலில் இடம் பெற்றுள்ள விஷயங்கள் மீதான முத்திரைத் தீர்வை, உள்நாட்டு நீர்வழிகளில் செல்லும் பயணியர் மற்றும் பொருள்கள் மீதான தீர்வை, நிலங்கள்-கட்டிடங்கள மீதான வரி, கனிம உரிமைகள், விலங்குகள் மற்றும் படகுகள் மீதான வரி, வாகன வரி, விளம்பர வரி, மின்சார நுகர்வு வரி, ஆடம்பர வரி, கேளிக்கை வரி, வெளியிலிருந்து மாநிலத்தின் ஒரு பகுதிக்குள் கொண்டு வரப்படும் பண்டங்கள் மீதான தீர்வை, மாநிலச் சுங்க வரி, மாநிலப்பட்டியலில் இடம் பெற்றுள்ள விஷயங்கள் மீது வசூலிக்கப்படும் கட்டணங்கள், ஆண்டொன்றுக்கு ரூ. 250/-க்கு மிகாமல் விதிக்கப்படும் தொழில்வரி, வணிக வரி, பட்டியல் மாற்றுகள் மீதான முத்திரத் தீர்வை ஆகியவை முற்றிலும் மாநிலங்களுக்குச் சொந்தமானவை. ஒன்றியப் பட்டியலில் இடம் பெற்றுள்ள மருத்துவத் தயாரிப்புகள் மற்றும் அழகு சாதனப்பொருள்கள்மீதான கலால் தீர்வையை ஒன்றியமே விதித்தாலும், நேரடி ஆட்சிப்பகுதிகள் தவிர மற்ற மாநிலங்களில் அவற்றை மாநில நிர்வாகமே வசூலித்துத் தமது வருவாயில் சேர்த்துக் கொள்ளும் (பிரிவு268).

விவசாய நிலங்கள் தவிர்த்த மற்ற சொத்துக்களை வாரிசுரிமையாகப் பெறுவோர் மீதான தீர்வை, விவசாய நிலங்கள் தவிர்த்த மற்ற சொத்துக்கள் மீதான மரண வரி, ரயில் மூலமாகவும், கடல்வழியாகவும் செல்லும் பயணியர் மற்றும் பண்டங்கள் மீதான தீர்வை, ரயில்வே பயணக் கட்டணங்கள் மற்றும் சரக்குக் கட்டணங்கள் மீதான வரி, பங்கு சந்தை வியாபாரங்கள் மீதான வரி, செய்தித்தாள்களை விற்பது மற்றும் வாங்குவது மீதான வரி, செய்தித்தாள்களில் விளம்பரம் தருவதற்கும், வெளியிடுவதற்கும் விதிக்கப்படும் வரி, செய்தித்தாள்கள் தவிர்த்த பிற பண்டங்களின் மாநிலங் களுக்கு இடையேயான விற்பனை அல்லது வாங்குதல் மீதான வரி, மாநிலங்களுக்கு இடையே அனுப்பப்படும் சரக்குகள் மீதான வரி, ஆகிய வற்றை மாநிலங்களே விதித்து வசூலித்துக் கொள்ளவும், நாடாளுமன்றச் சட்டத்தால் தீர்மானிக்கப்படுகின்றபடி அந்த வரி வசூலை மாநிலங்களே தமக்குள் பகிர்ந்து கொள்ளவும் வகை செய்யப்பட்டுள்ளது. எனினும், இவற்றிலிருந்து நேரடி ஆட்சிப்பகுதிகளுக்குரிய பங்கு தேசிய ஒருங்கிணைப்பு நிதியத்தில் சேர்க்கப்படும் (பிரிவு 269).

ஒன்றியப் பட்டியலில் உள்ள வருமானவரி, கலால் வரி போன்றவற்றை ஒன்றியமே விதித்து, வசூலிக்கும். எனினும் அந்த வரிகள் மூலம் வசூலாகும் தொகையை ஒன்றியமும் மாநிலங்களும் பகிர்ந்து கொள்ளும். ஒரு நிதிக் கமிஷன் நியமிக்கப்பட்ட பின்னர், அதன் பரிந்துரையைக் கருத்தில் கொண்டு வருமான வரி வசூலில் எத்தனை சதவீதம் மாநிலங்களுக்குப் பகிர்ந்தளிக்கப்பட வேண்டும் என்று குடியரசுத் தலைவர் ஓர் ஆணை மூலம் தெரிவிப்பார். கலால் வரியைப் பொறுத்த வரையில், வரி வசூலைப் பகிர்ந்து கொள்ளும் விதத்தை நாடாளுமன்றச் சட்டத்தின் மூலம் நிர்ணயிக்க வேண்டும் (பிரிவுகள் 270,271, 272)

மாநிலங்களுக்கு ஒன்றியம் வழங்கும் மூன்று வகையான உதவி மானியங்களைப் பற்றியும், எந்தெந்த சூழ்நிலைகளில் அந்த உதவிமானியங்கள் வழங்கப்படும் என்பது பற்றியும், பிரிவுகள் 273, 275, 283 ஆகியவற்றில் சொல்லப்பட்டுள்ளன. சணல் மற்றும் சணல் பொருட்கள் மீதான ஏற்றுமதித் தீர்வைக்குப் பதிலாக அசாம், பீகார், ஒரிசா, மேற்கு வங்கம் ஆகிய மாநிலங்களுக்கு ஒன்றியம் உதவி மானியங்களை வழங்கும் (பிரிவு 273). தேவை ஏற்படும்போது எந்த ஒரு மாநிலத்திற்கும் மானியங்கள் வழங்கப்படும் (பிரிவு275). ஒன்றியம் அல்லது ஒரு மாநிலத்தின் சட்டமியற்றும் வரம்புக்கு அப்பாற்பட்ட பொது நோக்கத்திற்காக ஒன்றியம் அல்லது மாநிலம் மானியம் வழங்கலாம் (பிரிவு282).

மாநிலங்களின் நலனைப் பாதிக்கின்ற வகையில் வரிவிதிப்புக்கு வகைசெய்யும் மசோதாக்களுக்கு குடியரசுத் தலைவரிடம் இருந்து முன் கூட்டியே பரிந்துரை பெறுவது மிகவும்அவசியமானதாகும்.

தொழிலநடத்துவோர், வாணிகம் செய்வோர், வேலை வாய்ப்புப் பெறறோர் ஆகியோர் மீது, சட்டம் இயற்றுவதன மூலம் மாநிலச் சட்ட மன்றங்கள் வரி விதிக்கலாம் ஆயினும் ஒரு நபரிடமிருந்து அவ்வாறு வசூலிக்கப்படும் வரி ஓராண்டுக்கு ரூ. 2.500/- ஐத் தாண்டக் கூடாது. இந்த ஏற்பாடு தொழில் நடத்துவோர் மீது வரி விதிக்க நாடாளுமன்றத்தில் சட்டம் இயற்றுவதைத் தடை செய்யாது.

*நிதிக் கமிஷன்:* தலைவர் ஒருவரும் உறுப்பினர் நால்வரும்அடங்கிய நிதிக்கமிஷன் ஒன்றை, ஐந்தாண்டுகளுக்கு ஒருமுறை குடியரசுத் தலைவர் நியமிக்கவேண்டும் என்று பிரிவு 280 கூறுகிறது. வரி வசூலைப் பகிர்ந்து கொள்வது பற்றியும், தேசிய ஒருங்கிணைப்பு நிதியத்திலிருந்து மாநிலங்களுக்கு உதவி மானியம் வழங்குவதற்காகக் கருத்தில் கொள்ள வேண்டிய அடிப் படைகள் பற்றியும், நிதிக்கமிஷன் குடியரசுத் தலைவருக்குத் தனது பரிந் துரைகளை வழங்கும். நிதிக்கமிஷனின் பரிந்துரைகளையும், அவற்றின் மீது மேற்கொளளப்பட்ட நடவடிக்கைகளையும் நாடாளுமன்றத்தின் இரண்டு அவைகளிலும் குடியரசுத் தலைவர் தாக்கல் செய்விப்பார்(பிரிவுகள்280 மற்றும்281).

*நிதி தொடர்பான இன்னபிற ஏற்பாடுகள்:* ஒருங்கிணைப்பு நிதியம், எதிர்பாராத செலவு நிதியம், பொதுக்கணக்கில் வரவு வைக்கப்பட்ட பணம் ஆகியவற்றை எவருடைய பொறுப்பில் வைத்துக் கொள்வது போன்ற

விஷயங்களை நாடாளுமன்றமும், அந்தந்த மாநிலச் சட்டமன்றங்களும் சட்டம் இயற்றி ஒழுங்குபடுத்திக் கொள்ளும் (பிரிவு 283).

வழக்குத் தொடருவோர் செலுத்தும் பணையத் தொகை, மற்றும் அரசு ஊழியர்களும் நீதிமன்றங்களும் பெறுகின்ற பணமும், ஒன்றியம் அல்லது சம்பந்தப்பட்ட மாநிலத்தின் பொதுக்கணக்கில் வரவு வைக்கப்பட வேண்டும் (பிரிவு 284).

மாநில அரசாங்கத்தின் சொத்துகளுக்கு ஒன்றியத்தின் வரி விதிப்பில் இருந்தும், ஒன்றியத்தின் சொத்துகளுக்கு மாநில வரி விதிப்பில் இருந்தும் விலக்களிக்கப்பட்டுள்ளது (பிரிவுள் 285 மற்றும் 289).

மின்சாரம் அல்லது தண்ணீரின் நுகர்வுக்கும் விற்பனைக்கும் மாநிலங்கள் வரிவிதிப்பதற்கும், மாநிலங்களுக்கு வெளியே பொருள்களை வாங்குவதற்கும் விற்பதற்கும், அல்லது ஏற்றுமதிக்கும் இறக்குமதிக்கும் வரி விதிப்பதற்கும் சில கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டுள்ளன (பிரிவுகள் 286, 287, 288).

எந்த ஒரு நீதிமன்றம் அல்லது கமிஷனுக்கு ஆன சில செலவுகள், அரசியலமைப்பு அமலுக்கு வரும் முன்னர் அரசாங்கப் பதவியில் இருந்த வர்களுக்கு வழங்கும் ஓய்வூதியச் செலவுகளை, ஒன்றியமும் மாநில அரசுகளும் தமக்குள் சரி செய்து கொள்ள பிரிவு 290 வகை செய்கிறது திருவிதாங்கூர் தேவஸம் நிதியத்திற்கும், தமிழ்நாடு தேவஸம் நிதியத்திற்கும், அந்தந்த மாநிலத்தின் ஒருங்கிணைப்பு நிதியத்திலிருந்து ஆண்டுதோறும் ஒரு குறிப்பிட்ட தொகையை வழங்க வேணடுமென பிரிவு 290 A கூறுகிறது.

*கடன் வாங்குதல்:* நாடாளுமன்றச் சட்டம் விதித்த வரம்புககு உட்பட்டு தேசிய ஒருங்கிணைப்பு நிதியத்திலிருந்து கடன்பெற ஒன்றிய நிர்வாகத்திற்கு அதிகாரம் உள்ளது (பிரிவு 292). ஒரு மாநில அரசுட தன்னுடைய ஒருங்கிணைப்பு நிதியத்திலிருந்து, அதன் சட்டமன்றம் இயற்றிய சட்டத்தின் வரம்புக்கு உட்பட்டு, கடன் பெறலாம். இந்திய அரசாங்கம் தனது கடன் பெறும் வரம்புக்கு உட்பட்டு, மாநிலங்களுக்கு கடன வழங்கலாம்; அல்லது மாநிலங்கள் திரட்டும் கடன்களுக்கு உத்தரவாதம் அளிக்கலாம். மாநில அரசுகள் அவ்வாறு பெறும் கடன்தொகை திருப்பிச் செலுத்தப்படாதவரை, இந்திய அரசாங்கத்தின் ஒப்புதலைப் பெறாமல் மேலும் கடன் பெறமுடியாது (பிரிவு 293).

*சொத்து, ஒப்பந்தங்கள், உரிமைகள், பொறுப்புகள், வழக்குகள்:* அரசியலமைப்பு நடைமுறைக்கு வருவதற்கு முன்னர் டொமினியன் அரசு அல்லது மாகாண அரசு, அல்லது சுதேசி சமஸ்தான அரசு ஆகியவற்றைச் சேர்ந்த சொத்துக்கள், உரிமைகள், பொறுப்புகள், கடமைகள் அனைத்தும ஒன்றிய அரசாங்கத்தையோ, சம்பந்தப்பட்ட மாநில அரசாங்கத்தையோ சேரும். இந்தியத் துணைக்கண்டத்தின் எல்லைக்குட்பட்ட கடல் நீர்ப் பரப்பிலும், பொருளாதார வளமண்டலத்திற்குள்ளும் உள்ள விலைமதிப்பு மிக்க அனைத்துப் பொருள்களும் ஒன்றியத்துக்குச் சொந்தமாகும் (பிரிவு 297).

ஒன்றியமும், ஒவ்வொரு மாநிலமும் எந்த ஒரு வர்த்தகத்தையோ, வாணிகத்தையோ மேற்கொள்ளவும், நாடாளுமன்றம் அல்லது மாநிலச்

சட்டமன்றம் இயற்றிய சட்டத்திற்கு உட்பட்டு ஒப்பந்தங்களை ஏற்படுத்திக் கொள்ளவும், அவற்றின் நிர்வாக அமைப்புகளுக்கு அதிகாரம் உண்டு (பிரிவு 298). இந்த நிர்வாக அதிகாரம், பிரிவு 245-ல் சொல்லப் பட்டுள்ளதைத் தவிர்த்துக் கூடுதலாக உள்ள வருவாய் ஆதாரமாகும். பிரிவு 298- ன் கீழ் எந்த ஒரு வர்த்தகத்தையும் மேற்கொள்வதற்கு மாநிலங்களுக்குள்ள அதிகாரத்தின்படி, சம்பந்தப்பட்ட மாநிலத்திற்கு வெளியேயும் வர்த்தகத்தை மேற்கொள்ளலாம் என்று காஜன்சிங் எதிர் உ.பி. அரசு என்ற வழக்கில் (AIR 1974 SC 669) உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்தது. (அன்ராஜ் எதிர் மகாராஷ்டிர அரசு (AIR 1984 SC 781) என்ற வழக்கையும் காண்க).

ஒன்றியம் அல்லது மாநிலத்தின் நிர்வாக அதிகாரத்தைச் செயல் படுத்துவதன் மூலம் மேற்கொள்ளப்படும் ஒப்பந்தங்கள் அனைத்தும், முறையே குடியரசுத் தலைவரின் பெயராலும், ஆளுநரின் பெயராலும் இருப்பதுடன் சம்பந்தப்பட்ட அதிகாரிகளால், உரிய முறைப்படி அந்த ஒப்பந்தங்கள் மேற்கொள்ளப்படவேண்டும். ஆனால் அத்தகைய ஒப்பந்தங்களால் எழும் பொறுப்புகள் எதற்கும் குடியரசுத் தலைவரை அல்லது ஆளுநரை அல்லது அந்த ஒப்பந்தங்களை மேற்கொள்ளும் அதிகாரி களைத் தனிப்பட்ட முறையில் பொறுப்பாளியாக்கக் கூடாது (பிரிவு299). இந்தப் பிரிவில் சொல்லப்பட்டுள்ளபடி செய்து கொள்ளப்படாத ஒப்பந்தங்கள் யாவும் செல்லுபடியாகா (பீகார் எஃப்.ஜி.எஃப். கூட்டுறவு சங்கம் எதிர் சிபாஹிசிங் AIR 1977 SC 2149; முலான்சந்த் எதிர் ம.பி. அரசு AIR 1968 SC 1818; மேற்கு வங்க அரசு எதிர் பி.கே. மண்டல் AIR 1962 SC 779; கரம்ஷி எதிர் பம்பாய் அரசு AIR 1964 SC 1714).

நாடாளுமன்றம் இயற்றும் சட்டத்திற்கு உட்பட்டு அல்லது மாநிலச் சட்டமன்றம் இயற்றும் சட்டத்திற்கு உட்பட்டு இந்திய அரசாங்கமோ, மாநில அரசாங்கமோ, அவற்றின் பெயரில் மற்றவர் மீது வழக்குத் தொடுக்கலாம்; மற்றவரால் வழக்குத் தொடுக்கவும் படலாம். பழைய வழக்குகள் எவற்றிலேனும் இந்திய டொமினியன் ஒரு தரப்பாக இருந்தால் அதற்குப் பதிலாக ஒன்றியமும், மாகாண அரசு அல்லது சுதேசி சமஸ்தான அரசு ஒரு தரப்பாக இருந்தால் அவற்றுக்குப் பதிலாக சம்பந்தப்பட்ட மாநில அரசும் அவற்றை எதிர் கொள்ள வேண்டும் (பிரிவு 300).

சொத்துரிமை: ஆரம்பத்தில் இந்திய அரசியலமைப்பின் 19(f) பிரிவிலும், 31 ஆவது பிரிவிலும், சொத்துரிமை ஓர் அடிப்படை உரிமையாகச் சேர்க்கப்பட்டிருந்தது. ஆனால், அரசியலமைப்பின் 44ஆவது திருத்தச் சட்டம், 19(f) மற்றும் 31 ஆகிய இரண்டு பிரிவுகளையும் 1979 ஆம் ஆண்டு ஜூன் 20 ஆம் தேதியில் இருந்து அரசியலமைப்பில் இருந்து நீக்கிவிட்டது. அதே சமயத்தில் பிரிவு 300A என்ற புதிய பிரிவு சேர்க்கப்பட்டு, "சட்டத்தின் அதிகாரம் இல்லாமல் எந்த ஒரு நபருடைய சொத்துரிமையையும் பறிக்கக் கூடாது" என்று வகை செய்யப்பட்டது. இவ்வாறாக, அடிப்படை உரிமைகளில் இருந்த சொத்துரிமை நீக்கப்பட்டு, அது ஓர் அரசியலமைப்பு உரிமையாகவும், சட்டப்பூர்வ உரிமையாகவும் மாற்றம் பெற்றது. எனவே பிரிவு 300A ல் அளிக்கப்பட்டுள்ள சொத்துரிமை மீறப்பட்டால் பிரிவு 32-ன்படி நீதிப்பேராணை வேண்டி உச்சநீதிமன்றத்தை அணுக முடியாது

என்றாலும், பிரிவு 226-ன்படி உயர்நீதிமன்றத்தை நிச்சயம் அணுகலாம். பிரிவு300A-ன் கீழ் இயற்றப்படும் ஒரு சட்டம், இழப்பீடு வழங்காமல் ஒரு குடிமகனின் சொத்தினைப் பறித்தால், அந்தக் காரணம் காட்டி அச்சட்டம் செல்லுபடியாகாது என வழக்குத் தொடரலாம் (பிஷாம்பர் எதிர் உ.பி. அரசு AIR 1982 SC 33; மேனகா காந்தி எதிர் இந்திய அரசு AIR 1978 SC 597).(அடிப்படை உரிமைகள் என்பதன் கீழும் காணக).

## வர்த்தகம், மற்றும், வாணிகப் போக்குவரத்துச் சுதந்திரம்

இந்திய ஆட்சிப் பகுதிக்குள் வர்த்தகம், வாணிகம், வாணிகப் போக்குவரத்து ஆகியவற்றுக்கு கட்டுப்பாடுகள் ஏதுமில்லை என்று பிரிவு 301 கூறுகிறது. எனினும், பொதுநலன் கருதி, மாநிலங்களுக்கிடையேயான வர்த்தகம் மற்றும் வாணிகப் போக்குவரத்தின் மீது சில கட்டுப்பாடுகளை விதிக்க நாடாளுமன்றம் சட்டம் இயற்றலாம் (பிரிவுகள் 301 & 302). வாணிக விஷயத்தில் ஒரு மாநிலத்தைக் காட்டிலும் இன்னொரு மாநிலத்திற்கு முன்னுரிமை அளிக்கின்ற வகையில் நாடாளுமன்றமோ, மாநிலச் சட்டமன்றமோ சட்டம் எதையும் இயற்றக் கூடாது. ஆனால் இந்தியாவின் ஏதேனும் ஒரு பகுதியில் எந்தப் பொருளுக்காவது தட்டுப்பாடு ஏற்பட்டால் அதைச் சமாளிப்பதற்காகப் பாரபட்சமான போக்கைப் பின்பற்றலாம் என்று நாடாளுமன்றம் சட்டம் இயற்றலாம் (பிரிவு 303).

சுதந்திரமான வாணிக நடவடிக்கைகள் மீது கட்டுப்பாடுகள் விதிப்பது என்றால், தாராளமான வாணிகப்போக்குவரத்தை நேரிடையாகப் பாதிப்பதாக இருக்க வேண்டும். வாணிக நலனுக்காக வரிவிதிக்கும் இழப்பீட்டுச் சட்டமும், பிற ஒழுங்குமுறை நடவடிக்கைகளும் சுதந்திரமான வாணிகத்தை மீறுவதாகக் கொள்ள முடியாது. மாநிலங்களுக்கு இடையேயான வாணிகமும், மாநிலத்திற்குள்ளேயான வாணிகமும், வாணிகச் சுதந்திரத்திற்குள் அடங்கும். வர்த்தகம், வாணிகப் போக்குவரத்து என்பவற்றில் பொருள்கள் மற்றும் நபர்களின் போக்குவரத்தும் அடங்கும் (அட்டியாபாரி தேயிலை கம்பெனி எதிர் அசாம் அரசு AIR 1961 SC 237; ஆடோமொபைல் போக்குவரத்து எதிர் ராஜஸ்தான் அரசு AIR 1962 SC 406; பீகார் அரசு எதிர் ஹரிஹர் பிரசாத் தேபுகா (1989) 2SCC).

பிரிவு 301-ன் கீழ் வழங்கப்பட்டுள்ள வாணிகச் சுதந்திரம், பிரிவு 302 மற்றும் பிரிவு 303 ஆகியவற்றின் கீழ் விதிக்கப்படும் கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டது. ஒரு மாநிலத்தில் ஒரு குறிப்பிட்ட பொருளுக்கு ஏதேனும் வரி விதிக்கப்பட்டால், வெளி மாநிலத்தில் இருந்து அம்மாநிலத்திற்குக் கொண்டு வரப்படும் அதே மாதிரியான பொருள்களுக்கும் அதேபோன்ற வரியை அம்மாநில அரசு விதிக்கலாம் என்று பிரிவு 304 கூறுகிறது மாநிலத்திற்குள்ளேயே தயாரிக்கப்படும் பொருளுக்கும், வெளிமாநிலத்திலிருந்து வருகின்ற அதேமாதிரியான பொருளுக்கும் இடையே பாரபட்சமான போக்கு இல்லாமல் இருக்க இவ்வாறு வரி விதிக்கலாம். பொதுநலன் கருதி, சில கட்டுப்பாடுகளை விதிக்கவும் மாநில அரசு சட்டம் இயற்றலாம். ஆனால் அந்தச் சட்டத்திற்கான மசோதாவைத் தாக்கல் செய்வதற்கு

முன்னர் குடியரசுத் தலைவரின் ஒப்புதலைப் பெறவேண்டும். பிரிவு 301 மற்றும் பிரிவு 303-ல் உள்ள எந்த வகையுரையும் ஏற்கெனவே உள்ள சட்டங் களையும், அரசின் ஏகபோக வாணிகத்திற்கு வகைசெய்யும் சட்டங்களையும் பாதிக்காது (பிரிவு305).

301ஆம் பிரிவில் இருந்து 304ஆம் பிரிவு வரை உள்ள வகையுரைகளை அமலாக்குவதற்கு என அதிகார அமைப்புகளை நியமிக்க பிரிவு 307 நாடாளுமன்றத்திற்கு அதிகாரம் அளிக்கிறது.

# 17

# அவசரநிலை பற்றிய பகுதிகள்

## (பகுதி XVIII பிரிவுகள் 352-360)

அவசரநிலை என்பது "திடீரென்று உருவாகும் நெருக்கடிநிலை" என்றும், அரசியலமைப்பினால் அதற்கென வழங்கப்பட்ட அதிகாரங்களின்படியோ அத்தகைய சூழ்நிலைகளை எதிர்கொள்வதற்கான பிற அதிகாரங்களின் படியோ, அரசின் அதிகார அமைப்பு உடனடியாகச் செயல்பட வேண்டிய நிர்ப்பந்தமான நிலை என்றும் வரையறை செய்யலாம்.

எதிர்காலத்தில் அசாதாரணமான சூழ்நிலைகள் உருவாகலாம் என்றும், அத்தகைய சந்தர்ப்பங்களில் நமது அரசியலமைப்பு இயல்பான முறையில் செயல்பட முடியாது என்றும், நாட்டின் சுதந்திரத்தையும் பாதுகாப்பையும் பேணிக்காப்பதுடன், அரசியலமைப்பையும் மக்களாட்சி முறையையும் உரிய முறையில் போற்றிக்காக்க சில ஷரத்துக்களைத் தற்காலிகமாகச் செயல்படாமல் நிறுத்திவைப்பது அவசியமானது என்றும் நமது அரசிய லமைப்பை உருவாக்கியவர்கள் எண்ணினர்.

நமது அரசியலமைப்பு, மற்ற அரசியலமைப்புகளைப்போல் அல்லாமல், அவசரநிலை அமலில் உள்ள சமயங்களில் முற்றிலும் ஒரடுக்கான அரசாங்கமாகத் தன்னைத்தானே மாற்றிக்கொள்ளும் தனிச்சிறப்பு வாய்ந்தது என்று டாக்டர் அம்பேத்கர் கூறியிருக்கிறார். இந்த நிலை சரியானதே என்று, குலாம் சர்வர் எதிர் இந்திய அரசு (AIR 1967 SC 1335) என்ற வழக்கில் உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்தது.

நமது அரசியலமைப்பு இரண்டு விதமான அவசரநிலைகளைக் குறிப் பிடுகின்றது. அவை (1) போர் அல்லது அன்னியப்படையெடுப்பு அல்லது ஆயுதக் கிளர்ச்சி ஆகியவற்றால் ஏற்படும் அச்சுறுத்தல்களுக்காக பிரிவு 352-ன்படி பிறப்பிக்கப்படும் தேசிய அவசரநிலை; (2) பிரிவு 360-ன் கீழ பிறப்பிக்கப்படும் நிதிநிலை நெருக்கடி; மூன்றாவது வகையான அவசரநிலை, அதாவது பிரிவு 356-ன்படி எந்த ஒரு மாநிலத்திலாவது அரசியலமைப்பு இயந்திரம் செயல்படாத நிலையில் குடியரசுத்தலைவர் ஆட்சியைப் பிரகடனப்படுத்துகின்றநிலை, 'அவசரநிலை ஏற்பாடுகள்' என்ற பகுதியில் சேர்க்கப்பட்டிருந்தாலும் உண்மையாகப் பார்க்கப்போனால் அது ஓர் அவசரநிலை ஆகாது.

## தேசிய அவசரநிலைப் பிரகடனம்

போர் அல்லது அன்னியப்படையெடுப்பு அல்லது ஆயுதக் கிளர்ச்சியின் காரணமாக இந்தியா முழுவதற்குமோ, ஏதேனும் ஒரு பகுதிக்கோ பாதுகாப்புக்கு அச்சுறுத்தல் நேர்ந்துள்ள அவசரநிலை உருவாகியுள்ளது என்ற கேபினட் தீர்மானம்பற்றி குடியரசுத்தலைவருக்கு எழுத்து மூலம் தகவல் கிடைத்து, அதில் அவர் திருப்தி அடைந்தால், இந்தியா முழு வதற்குமோ, ஒரு சில பகுதிகளுக்கு மட்டுமோ ஓர் அவசரநிலையை அவர் பிரகடனப் படுத்தலாம். பல்வேறு காரணங்களுக்காக வெவ்வேறு பிரகடனங்களையும் அவர் வெளியிடலாம். அவசரநிலைப் பிரகடனங்கள் நாடாளுமன்றத்தின் இரண்டு அவைகளிலும் தாக்கல் செய்யப்பட வேண்டும். நாடாளுமன்றத்தின் இரண்டு அவைகளும் பிரகடனங்களுக்கு ஒப்புதல் அளிக்காவிட்டால் பிரகடனம் வெளியிடப்பட்டதிலிருந்து ஒரு மாதம் முடிந்தவுடன் அவை செயலிழந்து விடும். நாடாளுமன்றத்தால் ஒப்புதல் அளிக்கப்பட்டாலும் இன்னொரு பிரகடனத்தால் குடியரசுத்தலைவர் அதனை ரத்து செய்யாதவரை, அதிகபட்சம் ஆறுமாதங்களுக்கு மட்டுமே அவசரநிலைப்பிரகடனம் அமலில் இருக்கும். ஆறுமாதங்களுக்கு மேல் அவசரநிலைப் பிரகடனம் தொடர வேண்டுமானால் ஒவ்வோர் ஆறு மாத்திற்கும் அதனை நீட்டிக்கின்ற வகையில் நாடாளுமன்றம் ஒப்புதல் அளிக்க வேண்டும். அவசரநிலைப் பிரகடனத்திற்கு ஒப்புதல் அளிக்கின்ற தீர்மானங்கள், அல்லது நீட்டிக்க வகை செய்கின்ற தீர்மானங்கள், நாடாளு மன்றத்தின் இரண்டு அவைகளிலும் மூன்றில் இரண்டு பங்கு உறுப்பினர்கள் ஆஜராகி வாக்களித்துப் பெரும்பான்மை ஆதரவுடன் நிறைவேற்றப்பட வேண்டும். அவசரநிலைப்பிரகடனம் வெளியிடப்பட்டதையோ, அது தொடருவதையோ நிராகரிக்கும் தீர்மானத்தை மக்களவை நிறைவேற்றினால் உடனடியாக அவசரநிலைப் பிரகடனம் ரத்து செய்யப்பட வேண்டும். அவசரநிலை தொடர்பான ஒரு தீர்மானம் பற்றிய அறிவிப்பை அவையின் மொத்த உறுப்பினர்களில் பத்தில் ஒரு பங்குக்குக் குறையாத உறுப்பினர்கள் கையெழுத்திட்டுக் குடியரசுத் தலைவரிடமோ மக்களவைத் தலைவரிடமோ சமர்ப்பித்தால், அத்தீர்மானம் பற்றிப் பரிசீலிக்க, 14 நாட்களுக்குள் அவையின் சிறப்புக் கூட்டத்தை நடத்த வேண்டும்.

பிரிவு 352-ல் உள்ள அவசரநிலைப் பிரகடனம் பற்றிய வகையுரைகள், 1979ஜூன் 20ஆம் தேதி முதல் அமலுக்கு வந்த 44 ஆவது திருத்தச்சட்டம் 1978-ன்படிமேலும் கடுமையாக்கப்பட்டன. 'உள்நாட்டு நெருக்கடி' என்ற காரணத்தின் பேரில் 1975 ஜூன் 25ஆம் தேதி பிறப்பிக்கப்பட்ட அவசர நிலைப் பிரகடனத்தால் ஏற்பட்ட மிகவும் மோசமான அனுபவங்களை அடுத்து, இந்நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டது. அவசரநிலை ஏற்பாடுகளைத் தவறாகப் பயன்படுத்துவதைத் தடுப்பதற்காக, 'உள்நாட்டு நெருக்கடி' என்ற சொற்களுக்குப் பதிலாக 'ஆயுதக்கிளர்ச்சி' என்ற சொற்கள் சேர்க்கப்பட்டன; அவசரநிலையைப் பிரகடனப்படுத்த வேண்டுமானால் அதுபற்றிய கேபினட்டின் தீர்மானம் எழுத்து மூலமாகக் குடியரசுத் தலைவருக்குச் சமர்ப்பிக்கப்பட வேண்டும் என்பது அத்தியாவசியமான முன்நிபந்தனையாக்கப்பட்டது; நாடாளுமன்றத்தின் ஒப்புதல், அதிலும்

குறிப்பாக மக்களவையின் ஒப்புதலைப் பெறுவது அவசியமாகின்ற வகையில் அவசரநிலையைப் பிரகடனப்படுத்தும் நடைமுறை சீராக்கப்பட்டது.

பிரிவு 353ஐயும், பிரிவு 365ஐயும் சேர்த்துப் பார்க்கும்போது, அவசர நிலைப் பிரகடனப்படுத்தப்பட்ட பின்னர், மாநில நிர்வாக அதிகாரங்களைச் செயல்படுத்துவது குறித்து ஒன்றிய நிர்வாகம் மாநில நிர்வாகத்திற்கு உத்தரவுகளைப் பிறப்பிக்கலாம் என்றும், அவ்வாறு பிறப்பிக்கும் உத்தரவுகளை மாநிலங்கள் செயல்படுத்தத் தவறினால், அதைக் காரணம் காட்டியே பிரிவு 356-ன்படி அம்மாநிலத்தில் குடியரசுத்தலைவர் ஆட்சியைப் பிறப்பிக்கலாம் என்று வகை செய்யப்பட்டுள்ளது.

அவசரநிலை அமலில் இருக்கும்போது, ஒன்றியப் பட்டியலில் இடம் பெறாத விஷயங்கள் குறித்தும், ஒன்றிய அதிகார அமைப்புகளுக்குச் சில கடமைகளைச் சுமத்தவும், அதிகாரங்களை அளிக்கவும் சட்டம் இயற்றும் அளவிற்கு நாடாளுமன்றத்தின் அதிகாரமும் விரிவடைகிறது.

அவசரநிலை அமலில் இருக்கும்போது, ஒன்றியத்துக்கும் மாநிலங் களுக்கும் இடையே வருவாயைப் பகிர்ந்து கொள்ளும் ஏற்பாடுகளை (பிரிவுகள் 268-279) ஏற்றவாறு மாற்றியமைத்துக் கொள்ள பிரிவு 354 வகை செய்கிறது. அவசரநிலையின்போது 19ஆவது பிரிவின் வகையுரைகளைத் தற்காலிகமாக நிறுத்திவைக்க, பிரிவு 358 வகைசெய்கிறது. பிரிவு 20 மற்றும் 21-ல் அளிக்கப்பட்டுள்ள, தண்டனையிலிருந்து பாதுகாப்பு மற்றும் உயிருக்குப் பாதுகாப்பு ஆகிய அடிப்படை உரிமைகள் தவிர, அரசிய லமைப்பின் மூன்றாவது பகுதியில் உத்தரவாதமளிக்கப்பட்டுள்ள அடிப்படை உரிமைகள் அனைத்தும் நீதிமன்றங்கள் மூலமாக நிலைநாட்டப்படுவதை அவசரநிலையின்போது தற்காலிகமாக நிறுத்திவைக்க, பிரிவு 359 குடியரசுத்தலைவருக்கு அதிகாரம் அளிக்கிறது.

மொத்தத்தில் பார்க்கும்போது, பிரிவு 20, பிரிவு 21 ஆகிய இரண்டு பிரிவுகளிலும் அளிக்கப்பட்டுள்ள அடிப்படை உரிமைகளைத் தவிர ஏனைய அடிப்படை உரிமைகள் அனைத்திலும் நாடாளுமன்றம் மட்டுமின்றி நிர்வாகமும்கூட தலையிடலாம் என்பதையே பிரிவு 358 மற்றும் பிரிவு 359 ஆகிய இரண்டும் தெளிவுபடுத்துகின்றன.

பிரிவு 358 மற்றும் 359 ஆகியவற்றின்படி இயற்றப்படும் எந்த ஒரு சட்டமானாலும், அமலில் இருக்கும் அவசரநிலைக்கு ஏற்ப அவை இயற்றப் பட்டுள்ளன என்ற வாசகமும் சேர்க்கப்பட்டால்தான் செல்லுபடியாகும். அவ்வாறு இயற்றப்படும் சட்டங்களில் அடிப்படை உரிமைகளுக்கு முரணாக அமைகின்ற பகுதிகள் மட்டும் அவசரநிலை அல்லது குடியரசுத் தலைவரின் ஆணை முடிவுக்கு வந்த பின்னர் செயலற்றுப் போய்விடும்.

இதுவரை இந்தியாவில் மூன்றுமுறை தேசிய அவசரநிலை பிரகடனப் படுத்தப்பட்டிருக்கிறது. 1962ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் சீனப் படையெடுப்பின்போதும், 1971ஆம் ஆண்டில் பாகிஸ்தானுடன் போர் ஏற்பட்டபோதும், 1975ஆம் ஆண்டு ஜூன் மாதம் உள்நாட்டு நெருக்கடி என்ற காரணத்தின்பேரிலும் அவசரநிலைப் பிரகடனங்கள் வெளியிடப் பட்டன. அவசரநிலைகளின்போது, நாடாளுமன்றத்தில் இயற்றப்படும் பல்வேறு சட்டங்களின் மூலமும், அரசியலமைப்புத் திருத்தங்கள் மூலமும்

ஒன்றிய அரசாங்கம் அசாதாரணமான அதிகாரங்களை கைவரப் பெற்றது.

உள்நாட்டு நெருக்கடி காரணமாகப் பிறப்பிக்கப்பட்ட அவசர நிலையின்போது, அதிகாரங்கள் தவறாகப் பயன்படுத்தப்பட்டது பற்றி எல்லாத் தரப்பில் இருந்தும் கடுமையான விமர்சனங்கள் தோன்றின. அவசரநிலையை அடுத்துவந்த பொதுத்தேர்தலில் திருமதி இந்திராகாந்தியின் தலைமையிலான ஆளும் காங்கிரஸ் கட்சி படுதோல்வி அடைந்து, ஜனதா கட்சி ஆட்சியைப் பிடித்தது. அரசியலமைப்பு (நாற்பத்து நான்காவது திருத்த ) சட்டம் 1978தான் போரின்போதும் அன்னியப்படையெடுப்பின் போதும் பிறப்பிக்கப்படும் அவசரநிலைகளில் மட்டுமே பிரிவு 19ஐத் தற்காலிகமாக நிறுத்திவைக்கலாம் என்று கட்டுப்பாடு விதித்தது. அதாவது, 'ஆயுதக்கிளர்ச்சியின்' காரணமாகப் பிறப்பிக்கப்படும் உள்நாட்டு அவசர நிலையின் போது பிரிவு 19-ன் கீழ் உத்தரவாதம் அளிக்கப்பட்டுள்ள அடிப்படை உரிமைகளைப் பறிக்க முடியாது. அத்துடன் பிரிவு 20 மற்றும் 21 ஆகியவற்றின்கீழ் வழங்கப்பட்டுள்ள அடிப்படை உரிமைகளை அவசர நிலை உள்பட்ட எந்த ஒரு சூழ்நிலையிலும் மறுதலிக்க முடியாது என்றும் அந்தத் திருத்தம் வகை செய்தது.

நாற்பத்து நான்காவது திருத்தச் சட்டம் இயற்றப்படுவதற்கு முன்னர், அவசரநிலை ஏற்பாடுகள் பற்றிய பல வழக்குகளில் உச்சநீதிமன்றம் தீர்ப் பளித்திருக்கிறது. அந்த வழக்குகள் அனைத்துமே 1962ஆம் ஆண்டிலும் 1971ஆம் ஆண்டிலும் பிறப்பிக்கப்பட்ட முதலாவது மற்றும் இரண்டாவது அவசர நிலை சம்பந்தப்பட்டவையாகும். பிரிவு 21 மற்றும் 22 ஆகிய இரண்டிலும் அளிக்கப்பட்டுள்ள சுதந்திரத்தை நிலைநாட்டுவதற்காக ஒரு குடிமகன் நீதிமன்றத்தை அணுகும் உரிமையைத் தற்காலிகமாக நிறுத்தி வைக்கும் குடியரசுத்தலைவரின் ஆணை செல்லுபடியாகும் என்று உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்தது (மோகன் சௌத்ரி எதிர் முதன்மை கமிஷனர் AIR 1964 SC 173). மக்கன்சிங் எதிர் பஞ்சாப் அரசு என்ற வழக்கில் (AIR 1964 SC 381), உச்சநீதிமன்றம் தீர்ப்பளிக்கும்போது, குடிமக்களின் அடிப்படை உரிமைகளுக்கு இடையேயும், அவசரநிலை ஏற்பாடுகளுக்கும் நாட்டின் பாதுகாப்புத் தேவைகளுக்கும் இடையேயும், ஒரு சமநிலையை உருவாக்க முயன்றது. நாட்டின் பாதுகாப்புக்கு அச்சுறுத்தல் ஏற்படும்போது தனிமனித உரிமைகளை நாட்டின் நலன்கருதி விட்டுக்கொடுக்க வேண்டும் என்று ஒப்புக்கொண்ட நீதிமன்றம், இவ்வாறுகூறியது:

> "அவசரநிலைப் பிரகடனம் எவ்வளவு காலத்திற்குத் தொடர வேண்டும் என்பதும், அவசரநிலையின்போது குடிமக்களின் அடிப்படை உரிமைகள் மீது எந்தவிதமான கட்டுப்பாடுகள் விதிக்கப்படவேண்டும் என்பதும், நிர்வாகத்தால் தீர்மானிக்கப்பட வேண்டிய விஷயங்களாகும். ஏனெனில், நிலவுகின்ற சூழ்நிலையின் தேவைகளைப் பற்றியும், மிகவும் நெருக்கடியான சந்தர்ப்பங்களினால் ஏற்படும் விளைவுகளைப் பற்றியும் நிர்வாகமே நன்கு அறியும்."

எனினும், வஞ்சக எண்ணத்துடன் ஆட்களை அடைத்து வைத்திருக் கின்ற அவசரகாலச் சட்டம், அல்லது நிர்வாகம் தனது அதிகார வரம்பை மீறி இயற்றிய அவசரகாலச் சட்டம், செல்லுபடியாகுமா என்று ஆராய்ந்து

தீர்மானிக்கும் அதிகாரம் தனக்கு உண்டு என நீதிமன்றம் கூறியது. இன்னொரு வழக்கில், நிர்வாகத்திற்குக் கடுமையான அதிகாரங்களை வழங்கும் சட்டம் செல்லுபடியாகும் என்றும், விசாரணையின்றி ஒருவரைக் காவலில் வைக்கும் அதிகாரம் நிர்வாகத்திற்கே உரியது என்றும், அதனை நீதிப்புனராய்வுக்கு உட்படுத்த முடியாது என்றும் உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்தது (சாது சிங் எதிர் தில்லி நிர்வாகம் AIR 1966 SC 91). மகாராஷ்டிரா அரசு எதிர் பிரபாகர் பாண்டுரங் சன்ஜ்கிரி என்ற வழக்கில் (AIR 1966 SC 424), காவலில் வைக்கப்பட்டிருக்கிறும் ஒருவர் தான் எழுதிய புத்தகத்தை வெளியிடுவதற்காக அதனைச் சிறைக்கு வெளியே அனுப்பலாம் என்று உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்தது. அவசரகாலச் சட்டங்களை அமலாக்கு வதற்கும், நூலை வெளியிடத் தடைவிதிக்கும் அரசு ஆணைக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை என்று அவ்வழக்கில் நீதிமன்றம் கூறியது. இந்த நிலை கே.ஆனந்த் நம்பியார் எதிர் தலைமைச் செயலாளர் என்ற வழக்கிலும் (AIR 1966 SC 657) உறுதிப்படுத்தப்பட்டது. அவசரநிலை அமலில் இருக்கும்போது அடிப்படை உரிமைகள் நிலைநாட்டப்படுவதைத் தற்காலிகமாக நிறுத்தி வைக்கும் குடியரசுத் தலைவரின் ஆணையைப் பரிசீலிக்கும்போது, குடிமகனின் அடிப்படை உரிமைகளுக்கு அனுகூலமாகவே அதற்குப் பொருள் கொள்ள வேண்டுமென்று நீதிபதி கஜேந்திர கட்கர் இந்த வழக்கில் உறுதிப்படுத்தினார்.

ஒருவரை காவலில் வைக்கும் உத்தரவு மேலோட்டமாகப் பார்க்கும் போதே முறையானதாக இருக்க வேண்டும் என்றும், 'சட்டம் ஒழுங்கைப் பராமரிப்பது' என்பதை 'பொது ஒழுங்கைப் பராமரிப்பது' என்பதற்குச் சமமாகக் கொள்ளக் கூடாது என்றும், இந்தியத் தற்காப்பு விதிகளின்படி எடுக்கப்படும் நடவடிக்கைகள் 'பொது ஒழுங்கின் நலனைக்' கருத்தில் கொண்டு எடுக்கப்படும்போது மட்டுமே செல்லுபடியாகும் என்றும், 'சட்டம் ஒழுங்கினைப் பராமரிப்பதற்கு உதவியாக' மட்டுமே அந்நடவடிக்கைகள் மேற்கொள்ளப் பட்டால் அவை செல்லுபடியாகா என்றும் ராம்மனோகர் லோஹியா எதிர் பீகார் அரசு என்ற வழக்கில் (AIR 1966 SC 740) உச்சநீதி மன்றம் தீர்ப்பளித்தது. அவசரநிலையின்போது நாட்டின் பாதுகாப்பை உறுதி செய்ய வேண்டுமென்ற தலையாய கடமையை நிறைவேற்றுவதற்காக, இந்திய பாதுகாப்பு விதிகளில் சொல்லப்பட்டுள்ள நியாயமான காரணங்கள் இல்லாமல் குடிமக்களின் உரிமையைப் பறிக்க முடியாது. இந்தக் காரணத்தின் அடிப்படையில், ஒருவருடைய காவல், 'வஞ்சக நோக்கத்துடன் மேற்கொள்ளப் பட்டது தெளிவாகப் புலனாகிறது' என்று நீதிமன்றம் அறிவித்தது. (ஜி.சதானந்தம் எதிர் கேரள அரசு AIR 1966 SC 1925). சாது சிங் வழக்கில் உச்சநீதிமன்றம் தான் வழங்கிய தீர்ப்பை மீறி பி. எல். லக்கன்பால் எதிர் இந்திய அரசு என்ற வழக்கில் (AIR 1967 SC 1507), ஒருவரைக் காவலில் வைத்த ஆணையைப் பரிசீலனை செய்யும்போது, இயற்கைநீதிக் கோட்பாட்டைப் பொருத்திப் பார்க்க வேண்டுமெனக் கூறியது. மத்தியப் பிரதேச அரசு எதிர் பாரத்சிங் என்ற வழக்கில் (AIR 1967 SC 1170) உச்சநீதிமன்றம் இன்னும் ஒருபடி மேலே சென்று இவ்வாறு கூறியது:

"எந்த ஒரு நபருக்கும் கேடுவிளைவிக்கின்ற வகையில் செயல்படும்

நிர்வாகச் செயல்கள் அனைத்தும் சட்டப்படியான அதிகாரத்தைப் பெற்றிருக்க வேண்டும். இந்த விதிக்கு மாறாகச் செயல்படுமாறு பிரிவு 358-ன் வாசகங்கள் அமையவில்லை. குடிமக்களுக்கும் மற்றவர் களுக்கும் கேடு விளைவிக்கின்ற வகையில் நடவடிக்கை எடுப்பதற்கான தன்னிச்சையான அதிகாரம் எதனையும் பிரிவு 358 அரசுக்கு வழங்க வில்லை; அவசரநிலை அமலில் இருக்கும்வரை, அதற்கேற்ப சட்டங் களை இயற்றி, அச்சட்டங்களின்படியான அதிகாரத்தின் பேரிலேயே நிர்வாகத்தின் செயல்பாடுகள் இருக்கவேண்டும் என்றுதான் அது கூறுகிறது."

அவசரநிலைப் பிரகடனத்தின்போது நாட்டின் பாதுகாப்பைக் கருத்தில் கொண்டு அடிப்படை உரிமைகள் நிலைநாட்டப்படுவதைத் தற்காலிகமாக நிறுத்தி வைக்கக் குடியரசுத் தலைவர் ஆணை பிறப்பிப்பதால், பிரிவு 359-ன்கீழ் அதிகாரங்களைச் செயல்படுத்துவதற்கும் நாட்டின் பாதுகாப்பிற்கும் தொடர்பு இருக்கிறதா என்று நீதிப்புனராய்வு செய்வதற்கு வழியேதும் இல்லை என்று, முகமது யாகூப் எதிர் ஜம்மு-கஷ்மீர் அரசு என்ற வழக்கில் (AIR 1968 SC 765), உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்தது. பட்நாத் எதிர் மேற்கு வங்க அரசு என்ற வழக்கில் (AIR 1974 SC 806), அவசரநிலையை நீட்டிப்பது செல்லுபடியாகாது என அறிவிக்க நீதிமன்றம் மறுத்துவிட்டது. உண்மையான அவசரநிலை ஏதும் உருவாகியிருக்கவில்லை என்ற வாதம் நீதித்துறையின் கட்டுப்பாட்டு வரம்புக்கு அப்பாற்பட்டது என்று அந்த வழக்கில் நீதிபதி ஐயர் கூறினார். ஹைதராபாத் மாவட்ட ஆட்சியர் எதிர் இப்ராகிம் அண்ட் கம்பெனி என்ற வழக்கில் (AIR 1970 SC 1275), இந்நிலையை உறுதி செய்து நீதிமன்றம் இவ்வாறு கூறியது:

"பிரிவு 19-ல் இடம்பெற்றுள்ள வகையுரைகளின்படி அரசாங்கம் பிறப் பிக்கக் கூடிய ஆணைகளை நிர்வாகம் பிறப்பிக்கும்போது மட்டுமே அவை தாக்குதலில் இருந்து தப்பிக்கலாம். வேறுவிதமாகச் செல்லுபடி யாகாத நிர்வாகச் செயல், அவசரநிலை அமலில் இருக்கும்போது மேற்கொள்ளப்பட்ட காரணத்தாலேயே தாக்குதலில் இருந்து தப்பிக்க முடியாது"

அவசரநிலை அமலில் இருக்கும்போது செய்த செயல்கள் அல்லது செய்யாமல் விட்ட செயல்கள் குறித்து அவசரநிலை முடிவுக்கு வந்த பின்னரும்கூட, சம்பந்தப்பட்ட அவசரநிலைச் சட்டம் பிரிவு 19ஐ மீறியதாக வழக்குத் தொடரமுடியாது என்று பிரிவு 358 தெளிவு படுத்துகிறது (மேலே குறிப்பிட்ட மக்கன் சிங் வழக்கு; பென்னட் கோல்மேன் அண்ட் கம்பெனி லிட் எதிர் இந்திய அரசு (AIR 1973 SC 106); வேளாண்மை மற்றும் தொழில் கூட்டுறவுச் சங்கம் எதிர் இந்திய அரசு (AIR 1976 SC 958).

உள்நாட்டு அவசரநிலைப் பிரகடனத்தை (1975-1977) அடுத்துத் தோன்றிய அடிப்படை உரிமை மீறல் வழக்குகளில், அவசரநிலை ஏற்பாடுகள் பற்றிய உச்சநீதிமன்றத்தின் அணுகுமுறையில் பெருத்த மாற்றம் ஏற்பட்ட தாகத் தோன்றுகிறது. ஹேபியஸ் கார்பஸ் வழக்கில், காவலில் வைக்கப்படு கின்றவர்கள் விஷயங்களில் தான் தலையிட முடியாது என்று மறுத்த

உச்சநீதிமன்றம், தடுப்புக்காவலில் வைக்கும் நடவடிக்கைகள முற்றிலுமாக நிர்வாகத்தின் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டது என்று தான் நம்புவதாகக் கூறியது. காவலில் வைப்பதற்காக செல்லுபடியாகும் ஓர் ஆணை பிறப்பிக்கப்பட்டு அதன்படி காவலில் வைக்கப்பட்டவர்கள், ஆட்கொணர் விக்கும் நீதிப்பேராணையைப் பிறப்பிக்க வேண்டுமென நீதிமன்றத்தை அணுக முடியாது (மாவட்டக் கூடுதல் மாஜிஸ்ட்ரேட் எதிர் சிவ்காந்த் சுக்லா AIR 1976 SC 1207).

இந்திய அரசு எதிர் பானுதாஸ் என்ற வழக்கிலும்கூட (AIR 1977 SC1207) பிரிவு 19, 21, 22 ஆகியவற்றில் வழங்கப்பட்டுள்ள சுதந்திர உரிமைகள் அனைத்தையும் தேசிய அவசரநிலையின் போது பிரிவு 359-ன் கீழ் குடியரசுத்தலைவர் ஆணைப்படி தற்காலிகமாக நிறுத்தி வைப்பது செல்லுபடியாகும் என்று உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்தது. ஆனால், அரசிய லமைப்பின் நாற்பத்து நான்காவது திருத்தச் சட்டத்தின்படி பிரிவுகள்352, 358, 359 ஆகியவை திருத்தப்பட்டதால், பெரும்பாலான தீர்ப்புகள் செல்லுபடியாகும் தன்மையை இழந்துவிட்டன.

ஒன்றிய அரசு, வஞ்சக நோக்கத்துடனோ, பொருத்தமற்ற [illegible] ஒன்றுமேயில்லாத பொருண்மைகளின் பேரிலோ செய[illegible] திரக நிரூபித்தால், நீதித்துறை தலையிட்டுச் செயல்பட முடியும் என்[illegible] க்க மில்ஸ் வழக்கில் கூறப்பட்டது. அரசியல் ரீதியாக நிவாரணம் பெற[illegible] இதற்கு வேறு வழியாக இருக்கமுடியும். குடியரசுத்தலை[illegible] 'தி[illegible] அடைவது' என்ற விஷயம் நீதிமன்றத்திற்கு அப்பாற்பட்டது. குடியரசுத் தலைவருக்கு திருப்தி ஏற்பட்டிருக்கவில்லை என்றோ, அந்தத் திருப்தி முட்டாள்தனமானது, அல்லது வக்கிரமானது, அல்லது வஞ்சக எண்ணம் கொண்டது என்றோ நிரூபித்தால், அதிகாரப் பிரயோகம் அரசி[illegible]லமைப்புக்கு முரணானதாகும். அம்மாதிரியான வழக்கில் நீதிமன்றங்கள் தம்முடைய வரம்புற்ற நீதிப்புனராய்வு அதிகாரத்தின் கீழ் நிச்சயம் செயல்பட முடியும் (மினர்வா மில்ஸ் எதிர் இந்திய அரசு AIR 1980 SC 1789).

## குடியரசுத்தலைவர் ஆட்சிப் பிரகடனம்

மாநிலங்களுக்கு, அன்னியப் படையெடுப்பாலும் உள்நாட்டு நெருக்கடி யாலும் பாதிப்பு ஏற்படாமல் பாதுகாப்பதுடன், அரசியலமைப்பில் குறிப்பிட் டுள்ளபடி மாநிலத்தின் ஆட்சி முறையாகச் செயல்படுவதை உறுதி செய்வதும் ஒன்றியத்தின் கடமையாகும் (பிரிவு 355). ஒரு மாநிலத்தின் அரசாங்கத்தை அரசியலமைப்பில் சொல்லப்பட்டுள்ளபடி நடத்திச் செல்ல முடியாதநிலை ஏற்பட்டுள்ளது என்றோ, அரசியலமைப்பு இயந்திரம் அங்கே செயலிழந்து விட்டது என்றோ, அம்மாநில ஆளுநர் அளித்த அறிக்கையின்படி, அல்லது வேறு விதமாகக் குடியரசுத் தலைவருக்குத் திருப்தி ஏற்பட்டால் அம்மாநிலத்தின் ஆளுநர் மற்றும் பிற அதிகார அமைப்புகள் உள்ளிட்ட மாநில அரசாங்க அதிகாரங்கள் அனைத்தையும் குடியரசுத் தலைவரே தம் வசம் எடுத்துக் கொள்வதாகப் பிரகடனம் ஒன்றை [illegible] வாம் குடியரசுத் தலைவரின் திருப்தி என்பது ஒன்றிய [illegible] திருப்தியையே குறிக்கும்; அத்துடன், குடியரசுத் தலைவர் [illegible]

அது ஒன்றிய அரசாங்கத்தின் ஆட்சியே ஆகும். அரசியலமைப்பின் 256, 257, 353 ஆகிய பிரிவுகளின் கீழ் ஒன்றிய அரசு இடுகின்ற உத்தரவுகளை எந்த ஒரு மாநிலமாவது ஏற்றுச் செயல்படுத்தத் தவறினாலும், அம்மாநிலத்தில் அரசியலமைப்பு இயந்திரம் செயல்படாத நிலை உருவாகி விட்டதாக எடுத்துக் கொண்டு, பிரிவு 356-ன்படி அங்கே குடியரசுத்தலைவர் ஆட்சியைப் பிறப்பிக்கலாம்.

குடியரசுத்தலைவர் ஆட்சியின்போது மாநிலச் சட்டமன்றத்தின் அதிகாரங்களை நாடாளுமன்றமே செயல்படுத்தும். மாநிலச் சட்டப்பேரவை கலைக்கப்படலாம்; அல்லது பேரவையின் இயக்கம் நிறுத்தி வைக்கப்படலாம். மாநில உயர்நீதிமன்றத்தைத் தவிர, எந்த ஓர் அதிகார அமைப்புடனும் சம்பந்தப்பட்ட அரசியலமைப்பு ஏற்பாடுகளின் செயல்பாட்டை நிறுத்தி வைப்பது உள்பட, தேவையான பிற நடவடிக்கைகளையும் குடியரசுத்தலைவர் மேற்கொள்ளலாம். குடியரசுத்தலைவர் ஆட்சிப் பிரகடனத்திற்கு நாடாளுமன்றத்தின் இரண்டு அவைகளும் தீர்மானம் நிறைவேற்றி ஒப்புதல் அளிக்காவிட்டால், இரண்டு மாதங்களின் முடிவில் குடியரசுத் தலைவர் ஆட்சி ... ுக்கு வந்துவிடும். நாடாளுமன்றம் ஒப்புதல் அளித்தாலும்கூட, முடியாது ... ஆறு மாதங்களுக்கு மேலும், தொடர்ச்சியாக மூன்று மக்களா... ்மேலும், ஒரு மாநிலத்தில் குடியரசுத்தலைவர் ஆட்சியை ... டி ாது. எனினும், அரசியலமைப்பு (68ஆவது திருத்தச்) சட்டம் ... ்சாப் மாநிலத்தில் 1987ஆம் ஆண்டு பிறப்பிக்கப்பட்ட ...ரசுத்தலைவர் ஆட்சியைத் தொடர்ச்சியாக ஐந்தாண்டுகளுக்கு நீட்டிக்க வகை செய்யப்பட்டது (பிரிவு 356).

பிரிவு 356-ன்படி ஒரு மாநிலத்தில் குடியரசுத்தலைவர் ஆட்சி அமலில் இருக்கு போது அம்மாநிலத்தின் சட்டமியற்றும் அதிகாரங்களை நாடாளுமன்ற... குடியரசுத்தலைவரிடம் ஒப்படைத்து, அந்த அதிகாரத்தைப் பிற அமைப்புகள் ...வற்றுக்கேனும் பகிர்ந்தளிக்கவும் அங்கீகாரம் அளிக்கலாம் (பிரிவு 357).

மாநிலங்களில் குடியரசுத்தலைவர் ஆட்சியைப் பிறப்பிக்க வகை செய்யும் 356ஆவது பிரிவு மிகவும் கடுமையாக விமர்சிக்கப்படும் பிரிவுகளில் ஒன்றாகும். இந்தப் பிரிவின்படி, கடந்த 44 ஆண்டுகளில் கிட்டத்தட்ட 90 முறை மாநிலங்களின் ஆட்சியை ஒன்றியம் மேற்கொண்டிருக்கிறது. ஒன்றிய அரசாங்கத்தில் ஆட்சிப்பொறுப்பு வகிக்கும் கட்சி, அரசியல் காரணங் களுக்காக மாநிலங்களில் உள்ள எதிர்க்கட்சி ஆட்சிகளைக் கவிழ்க்கவே பெரும்பாலான சமயங்களில் இந்தப் பிரிவைப் பயன்படுத்தி வருவதாக, விமர்சகர்களும் எதிர்க்கட்சி உறுப்பினர்களும் கூறிவருகின்றனர். அரசியல் நிர்ணயசபையில் இந்தப்பிரிவை விமர்சித்தவர்களுக்குப் பதிலளித்த டாக்டர் அம்பேத்கர், இந்தப் பிரிவு உயிரில்லாத ஒரு வாசகமாகவே இருக்கும் என்றும், எல்லாவிதமான முயற்சிகளும் தோற்றுப்போன பிறகு கடைசி அஸ்திரமாகவே இது பயன்படுத்தப்படும் என்றும் நம்பிக்கை தெரிவித்தார்.

ராஜஸ்தான் ...சு எதிர் இந்திய அரசு என்ற வழக்கில் (AIR 1977 SC 1361) ... ப்பளிக்கும்போது, குடியரசுத் தலைவரின் திருப்தியைப் ... ஒன்றிய... வது பிரிவின் கீழ் குடியரசுத் தலைவர் ஆட்சி பிறப்பிக்கப்

படுகிறது என்றும், குடியரசுத்தலைவரின் திருப்திக்குப் பதிலாக நீதிமன்றம் தன்னுடைய திருப்தியை அந்த இடத்தில் வைத்துப்பார்க்க முடியாது என்றும், பிரிவு 74(2)-ன்படியான கட்டுப்பாட்டினால் குடியரசுத் தலைவருக்கு அமைச்சரவை அளித்த ஆலோசனையைப் பற்றி விசாரிக்க முடியாது என்றும் கூறியது. எனினும், குடியரசுத் தலைவரின் திருப்தி வஞ்சக எண்ணம் கொண்டது என்றோ, சம்பந்தமேயில்லாத காரணங்களின் அடிப்படையில் எட்டப்பட்டது என்றோ, அல்லது குடியரசுத் தலைவர் திருப்தியே அடையவில்லை என்றோ நிரூபணமானால், நீதிமன்றம் அவ்விஷயத்தில் தலையிட முடியும் என்றும் உச்சநீதிமன்றம் தனது தீர்ப்பில் கூறியது. இந்த அளவிற்கு, பிரிவு 356-ன்படி குடியரசுத் தலைவர் தனது அதிகாரங்களைச் செயல்படுத்துவதை நீதிப்புனராய்வின் கீழ்க்கொண்டு வந்துள்ளனர்.

## நிதிநிலை நெருக்கடி

இந்தியா முழுவதிலுமோ, ஏதேனும் ஒரு பகுதியிலோ நிதிநிலைமை சீர் கெட்டுப்போகும் அபாயம் உள்ளது என்று குடியரசுத் தலைவருக்குத் திருப்தி ஏற்பட்டால் நிதிநிலை நெருக்கடியை அவர் பிரகடனப்படுத்லாம் என்று 360ஆவது பிரிவு அதிகாரம் அளிக்கிறது. அதுமந[illegible] பிரகடனத்தை மற்றொரு பிரகடனத்தின் மூலம் மாற்றியமைக்க[illegible] அல்லது ரத்து செய்யலாம். அந்தப் பிரகடனங்களுக்கு நாடாளுமன்றத்தின் இரண்டு அவைகளிலும் தீர்மானம் நிறைவேற்றி ஒப்புதல் அளிக்கப்படா விட்டால், இரண்டு மாத முடிவில் அவை செயலிழந்துவிடும். ஆனால் ஒருமுறை நாடாளுமன்றத்தால் ஒப்புதல் அளிக்கப்பட்டுவிட்டால், 352ஆவது பிரிவின் படியான பிரகடனத்தைப்போல் அல்லாமல், ரத்து செய்யப்படும் வரை அல்லது மாற்றியமைக்கப்படும்வரை அது தொடர்ந்து அமலில் இருக்கும்.

நிதிநிலை நெருக்கடி அமலில் இருக்கும்போது, மாநில அரசுகள் சில குறிப்பிட்ட நிதிநிலைக் கட்டுப்பாடுகளைப் பின்பற்றுவதுடன், தேவையான வேறு சில ஒழுங்குமுறைகளைப் பின்பற்ற வேண்டும் என உத்தரவிட ஒன்றிய நிர்வாகத்திற்கு அதிகாரம் உண்டு. மாநில அரசின் கீழ் பணியாற்று வோரின் ஊதியத்தையும் படிகளையும் குறைப்பது, மாநிலச் சட்டமன்றங்கள் இயற்றிய பணமசோதாக்கள் உள்ளிட்ட மற்ற மசோதாக்களை குடியரசுத் தலைவரின் ஒப்புதலுக்காகப் பிரிவு 207-ன்படி நிறுத்தி வைத்தல் போன்றவை, இந்த ஒழுங்கு முறைகளில் அடங்கும். உச்சநீதிமன்ற-உயர்நீதிமன்ற நீதிபதிகள் உட்பட, ஒன்றியத்தின் கீழ் பணியாற்றும் அனைவருடைய ஊதியங்களையும் படிகளையும் குறைக்க வேண்டுமெனவும் குடியரசுத் தலைவர் உத்தரவிடலாம்.

நமது அரசியமைப்பு செயல்பட்ட கடந்த 44 ஆண்டுகளில் (1950-1993), இதுவரை ஒருமுறை கூட நிதிநிலை நெருக்கடி பிறப்பிக்கப்படவில்லை.

# 18

# ஒன்றிய-மாநில அரசுப் பணித்துறைகள்

## (பகுதி XIV & XIVA, பிரிவுகள் 308-323B)

### அரசாங்கப்பணி

நவீன மக்களாட்சி அரசாங்க முறையில், அரசாங்க இயந்திரத்தின் பிரிக்க முடியாத அங்கமாக சிவில் பணிகள் விளங்குகின்றன. சொல்லப்போனால், மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளின் கட்டுப்பாட்டின்கீழ், அவர்கள நெறிப்படுத்துகின்ற விதத்தில், சட்டதிட்டங்களுக்கு உட்பட்டு நிர்வாகத்தை நடத்திச் செல்லும் பொறுப்பை, அரசியல் சாராத—தேர்ந் தெடுக்கப்படாத—சிவில் பணியாளர்களே நிறைவேற்றுகின்றனர்.

நாம் சுதந்திரம் அடைந்தபோது, அமைபபு ரீதியாக நன்கு உருவாக்கப் பட்டிருந்த அனைத்திந்திய பணித் தொகுதியையும் பிரிட்டிஷாரிடம் இருந்து பெற்றுக் கொண்டோம். அதைத்தவிர, மத்திய, மாகாண, கீழ்நிலைப் பணியாளர் அமைப்பும் அப்போது இருந்தது.

அரசாங்கப்பணி சம்பந்தப்பட்ட விஷயங்கள், பொதுவாகச் சட்டங்கள் மூலம ஒழுங்குபடுத்தப்படுகின்றன. ஒன்றியப் பணியாளர்களுக்கும் மாநிலப் பணியாளர்களுக்கும், ஆளெடுப்பு மற்றும் பணிநிலைமை சம்பந்தமான விரிவான விதிகளை இயற்றிக்கொள்ளும் அதிகாரம், சம்பந்தப்பட்ட சட்ட மியற்றும் அவைகளிடம் விடப்பட்டுள்ள போதிலும் (முதல் பட்டியலில் 70ஆவது இனம்; இரண்டாவது பட்டியலில் 41ஆவது இனம்), ஆளெடுப்பு, பதவிக் காலத்திற்கு உத்தரவாதம், ஒழுங்கு நடவடிக்கை மேற்கொள்வதற்கான வழிமுறை போன்ற விஷயங்களில் அரசாங்கப் பணியாளர்களுக்கு அரசியலமைப்பு ரீதியாகச் சில உத்தரவாதங்களை அளிப்பது மிகவும் விவேகமானதாக இருக்கும் என்று நமது அரசியலமைப்பை உருவாக்கிய வர்கள் கருதினார்கள். எனவே சுயேட்சையான அரசுப் பணியாளர் தேர்வாணையம் ஒன்று ஏற்படுத்தப்பட வேண்டும் என்று அரசியலமைப்புக் கூறுகிறது. ஒன்றியம் மற்றும் மாநிலப் பணிகள் சம்பந்தப்பட்ட அனைத்தும், ஜம்மு-கஷ்மீர் மாநிலத்தைத் தவிர இந்தியா முழுமைக்கும் பொருந்தும் (பிரிவு 308).

ஒன்றியம் மற்றும் மாநிலப் பணிகளுக்கான ஆளெடுப்பு, பணிநிலைமை

போன்றவை, சம்பந்தப்பட்ட சட்டமியற்றும் அவை மூலம், அரசிய லமைப்பின் வகையுரைகளுக்கு உட்பட்டு முறைப்படுத்தப்பட வேண்டும் என்று பிரிவு 309 கூறுகிறது; அவ்வாறு சட்டங்கள் ஏதும் இயற்றப்படும்வரை முறையே குடியரசுத் தலைவர் அல்லது மாநில ஆளுநர் இயற்றும் விதிகளின் படி பணியாளர்களின் பணி ஒழுங்குபடுத்தப்படும்.

அரசாங்கப் பணியாளர்கள் ஒவ்வொருவரும்—அவர் இராணுவப் பணியில் இருந்தாலும் அல்லது சிவில் பணியில் இருந்தாலும்—குடியரசுத் தலைவர் அல்லது ஆளுநர் விரும்பும் வரையே பதவியில் இருப்பார் என்று பிரிவு 310 கூறுகிறது. எனினும் சில இனங்களில், குறிப்பிட்ட காலத்திற்கு முன்பே பணியில் இருந்து நீக்கிவிடுவதற்கு உரிய இழப்பீடு வழங்குவதென ஒப்பந்தம் செய்து கொள்ளவும் வழியுண்டு. உச்சநீதிமன்ற நீதிபதிகள், உயர்நீதிமன்ற நீதிபதிகள், தலைமைத் தேர்தல் ஆணையர், தலைமைக் கணக்குத் தணிக்கையர், அரசுப் பணியாளர் தேர்வாணையத்தின் உறுப் பினர்கள் போன்ற உயர்பதவி வகிப்போருக்கு அரசியலமைப்பு ரீதியாகச் சில சிறப்புப் பாதுகாப்புகள் அளிக்கப்பட்டுள்ளன. இவர்களை அரசிய லமைப்பில் சொல்லப்பட்டுள்ள முறைப்படியில்லாமல் (பிரிவுகள் 124, 217, 317, 324 போன்றவை) வேறு எவ்வகையிலேனும் பதவி நீக்கம் செய்ய முடியாது. சட்டமியற்றும் அவைச் செயலகங்களின் பணியாளர்கள், உச்சநீதி மன்றம் மற்றும் உயர்நீதிமன்றங்களின் பணியாளர்கள், இந்திய தணிக்கை மற்றும் கணக்குத் துறையில் பணிபுரிவோர் போன்ற சில வகையான அரசாங்கப் பணியாளர்களின் ஆளெடுப்பு, பணிநிலைமை போன்ற வற்றுக்குத் தனித்தனியான ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. இவர்களுக்குப் பிரிவு 309 பொருந்தாது.

குடியரசுத்தலைவர் அல்லது ஆளுநர் விரும்பும்வரை சிவில் பணியாளர்கள் பதவியில் இருக்கலாம் என்ற கோட்பாட்டுக்குப் பிரிவு 311 சில கட்டுப்பாடுகளை விதிக்கிறது. எந்த ஒரு சிவில் பணியாளரையும், அவரைப்பதவியில் அமர்த்திய அதிகாரியைக் காட்டிலும் கீழ்நிலையில் உள்ள அதிகாரியால் பணியில் இருந்து நீக்கமுடியாது; எந்த ஒரு சிவில் பணியாளரையும் அவர் மீது சுமத்தப்பட்டுள்ள குற்றச்சாட்டுகளைப்பற்றி அவருக்கு எடுத்துரைத்து, அவற்றைப்பற்றி அவருடைய கருத்துகளை எடுத்துரைக்க நியாயமான வாய்ப்பளித்து, உரிய முறைப்படி விசாரணை நடத்தாமல், அவரைப் பதவியிறக்கம் செய்வதோ, பணிநீக்கம் செய்வதோ கூடாது. பாதுகாப்புத் துறைப் பணியாளர்களுக்கு இந்தப் பாதுகாப்புப் பொருந்தாது. மேலும் சிவில் பணியாளர்களுக்கும்கூட, பதவியிறக்கம் அல்லது பணிநீக்கம் தவிர்த்த பிற தண்டனை அளிக்கப்பட்டாலும் இந்தப் பாதுகாப்புப் பொருந்தாது. தற்காலிகப்பதவி வகிப்பவர், நிரந்தரப் பதவி வகிப்பவர் என்று இந்தப் பிரிவில் எந்தவிதமான வேறுபாடும் காட்டப்படவில்லை. (நரசிம்மாச்சார் எதிர் மைசூர் அரசு AIR 1960 SC 247; புருஷோத்தம் எதிர் இந்தியஅரசு AIR 1958 SC 36).

பிரிவு 311-ன் கீழ் அளிக்கப்பட்டுள்ள பாதுகாப்பு, நடைமுறை பற்றியதே தவிர பொருண்மை பற்றியது அன்று. நடைமுறைகள் அனைத்தும் மிகச்சரியாகப் பின்பற்றப்பட்டிருந்தால் இதற்குத் தீர்வழி ஏதுமில்லை. (அ

நடவடிக்கை எடுக்கப்படவிருக்கின்ற சிவில் பணியாளர் மீது திட்டவட்டமான குற்றச்சாட்டுகள் சுமத்தப்பட வேண்டும்; (ஆ) அந்தக் குற்றச் சாட்டுகள் முறைப்படி அவருக்குத் தெரிவிக்கப்படவேண்டும்; (இ) அவற்றுக்குப் பதிலளிக்க அவருக்கு உரிய வாய்ப்பு அளிக்கப்பட வேண்டும்; (ஈ) சாட்சிகளை குறுக்கு விசாரணை செய்தும், அவர் சார்ந்துள்ள எல்லா சாட்சியங்களையும் தாக்கல் செய்தும், தன்னைத் தற்காத்துக் கொள்ள அவருக்கு வாய்ப்பளிக்கப்பட வேண்டும்; (உ) விசாரணை அதிகாரியின் முன் சமர்ப்பிக்கப்படும் பொருண்மை மற்றும் பொருள்வகைகளின் அடிப்படையிலேயே முடிவு அமைய வேண்டுவதுடன், அவற்றை ஆராய்ந்து விளக்கமளிக்க அப்பணியாளருக்கு வாய்ப்பளிக்கப்படாமல் எந்த ஒரு பொருள்வகையையும் விசாரணை அதிகாரி நம்பி ஏற்றுக்கொள்ளக்கூடாது; ஆகிய நடைமுறைகளையே பிரிவு 311 வலியுறுத்துகிறது. இயற்கை நீதி விதிப்படி விசாரணை அமைய வேண்டும் என்பதே இவற்றின் அடிப் படையான நோக்கமாகும். (இந்திய அரசு எதிர் வர்மா AIR 1957 SC 882).

சிவில் பணியாளர் ஒருவர் மீது மேற்கொள்ளப்பட்ட நடவடிக் கையின்காரணமாக, அவருக்கு ஊதியம் மற்றும் படிகள் அல்லது ஓய்வூதிய இழப்பு போன்ற தண்டனைகள் இல்லை என்றாலும் பிரிவு 311 பொருந்தாது என்று தீர்ப்பளிக்கப்பட்டிருக்கிறது. மாறாக, பணியில் இருந்து நீக்கப் படுவதானால் இந்தப்பிரிவு பொருந்தும். ஆயினும், ஒப்பந்தத்தின் அடிப் படையிலும், பணி முதிர்வின் பின்னரும், கட்டாய ஓய்வுத் திட்டப்படியும், பணிநீக்கம் செய்யப்படுவதற்கு 311 ஆவது பிரிவு எந்தவிதமான பாதுகாப்பும் அளிக்காது. பதவியிறக்கம் செய்யப்படுவதிலும் கூட, தண்டனை ஏதும் விதிக்கப்பட்டு அவ்வாறு செய்யப்படுகின்றதா என்ற அடிப்படையிலேயே இப்பிரிவு பொருந்துமா என்று பார்க்கவேண்டும். நிரந்தரமான பதவி ஒன்றை வகித்திருப்பவரை, பிரிவு 311-ல் குறிப்பிடப்பட்டுள்ள விசாரணை முறையைப் பின்பற்றாமல் பதவியிறக்கம் செய்யமுடியாது. ஆனால் தற்காலிகப் பதவியில் இருந்து கீழ்நிலையில் உள்ள நிரந்தரப் பதவிக்கு மாற்றுவது, தண்டனை நடவடிக்கை ஏதுமில்லாத பட்சத்தில், பதவியிறக்கம் ஆகாது. (புருஷோத்தம் எதிர் இந்திய அரசு).

பிரிவு 311-ன் கீழ் சொல்லப்பட்டுள்ள விசாரணைமுறையைக் கீழ்க்கண்ட சில இனங்களில் பின்பற்றாமல் விட்டுவிடலாம். அவை; (1) பணியாளர் ஒருவர் குற்றவியல் வழக்கிற்காகத் தண்டிக்கப்படும்போது, (2) விசாரணை நடத்த முடியாததற்கான காரணங்களை சம்பந்தப்பட்ட அதிகாரி எழுத்து மூலமாகப் பதிவுசெய்யும்போது, (3) நாட்டின் பாதுகாப்பு நலனைக் கருதி அத்தகைய விசாரணைகளை நடத்துவது உசிதமானது அன்று எனக் குடியரசுத்தலைவர் - ஆளுநர் திருப்தி அடையும்போது.

அனைத்திந்தியப் பணியாளர்களுக்கும், மத்திய மற்றும் மாநிலப் பணியாளர்களுக்கும் வேறுபாடு உண்டு. மத்தியப் பணியாளர்கள் ஒன்றிய விவகாரங்களில் மட்டும் சம்பந்தப்பட்டவர்கள்; மாநிலப் பணியாளர்கள் சம்பந்தப்பட்ட மாநில விவகாரங்களுடன் மட்டும் தொடர்புடையவர்கள்; ஆனால் அனைத்திந்தியப் பணியாளர்களோ, இரண்டிலும் மாற்றிமாற்றி முறைவைத்துப் பணியாற்றுவர். இந்திய ஆட்சிப்பணி (IAS), இந்தியக்காவல்

பணி (IPS) ஆகிய இரண்டு அனைத்திந்தியப்பணிகளும் அரசிய லமைப்பிலேயே குறிப்பிடப்பட்டுள்ளன. தேசிய நலன் கருதி அனைத்திந்திய நீதிப்பணி உள்ளிட்ட பிற அனைத்திந்தியப் பணிகள் எவற்றையேனும் ஏற்படுத்தவேண்டும் என்று மாநிலங்களவையில் மூன்றில் இரண்டு பங்கு பெரும்பான்மையுடன் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டால், அத்தகைய பணித்தொகுதியை உருவாக்க நாடாளுமன்றம் சட்டம் இயற்றலாம் என்று பிரிவு 312 கூறுகிறது. இந்தப் பிரிவின்படி, 1948 ஆம் ஆண்டில் ஏற்கெனவே உருவாக்கப்பட்டிருந்த இ.ஆ.ப. மற்றும் இ.கா.ப. ஆகியவற்றுடன் மேலும் பல அனைத்திந்தியப் பணிகளை உருவாக்கி அனைத்திந்தியப் பணிகள் சட்டம் 1951ஐ நாடாளுமன்றம் இயற்றியது. அனைத்திந்தியப் பணிகளில் நியமனம் பெறுவோரின் ஆளெடுப்பு, பணிநிலைமைகள் போன்றவற்றை ஒழுங்கு படுத்தும் அதிகாரத்தைப் பிரிவு 312 நாடாளுமன்றத்திற்கு அளிக்கிறது.

அரசியலமைப்பு நடைமுறைக்கு வருவதற்கு முன்னர் பிரிட்டிஷ் சிவில் பணிகளில் நியமிக்கப்பட்டவர்களின் பணிநிலைமைகளை மாற்றி யமைக்கவும், ரத்து செய்யவும், நாடாளுமன்றத்திற்கு அதிகாரம் அளிக்கும் வகையில், அரசியலமைப்பு (28ஆவது திருத்தச்) சட்டம் 1972-ன்படி, பிரிவு 312A என்ற புதிய பிரிவு ஒன்று சேர்க்கப்பட்டது. பிரிட்டிஷ் ஆட்சியிலிருந்து சுதந்திரம் பெற்று குடியரசான இடைக்காலத்தில் அமலில் இருந்த, சிவில் பணியாளர்கள் பற்றிய பிற சட்டங்கள் அனைத்தும் அவற்றைப் பற்றி எதுவும் சொல்லப்படாதவரை தொடர்ந்து நீடிக்கும் என்று பிரிவு 313 கூறுகிறது. சில வகையான பணிகளில் இருந்த பணியாளர்களுக்குப் பாது காப்பு அளித்த பிரிவு 314, 28ஆவது திருத்தச் சட்டம் மூலம் நீக்கப் பட்டுவிட்டது.

## அரசுப் பணியாளர் தேர்வாணையங்கள்

ஒன்றியத்துக்கு ஒரு பணியாளர் தேர்வாணையமும், மாநிலங்கள் ஒவ்வொன்றுக்கும் ஒரு பணியாளர் தேர்வாணையமும் இருக்க வேண்டுமென பிரிவு 315 கூறுகிறது. இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மாநிலங்களுக்குப் பொதுவான தேர்வாணையமும் இருக்கலாம். மாநிலங்களின் வேண்டு கோளுக்கு இணங்க, அவற்றின் தேவைகளை ஒன்றியப் பணியாளர் தேர்வாணையம் நிறைவு செய்யலாம்.

அரசாங்கத் தலையீடு அல்லது அரசியல் தலையீடு எதுவுமில்லாமல் அரசுப் பணிகளுக்கு ஆளெடுப்பு மற்றும் மேலாண்மைப் பொறுப்புகளை நிறைவேற்றுவதற்காக, அரசியலமைப்பு ரீதியான சுயேட்சையான அமைப்பு களாகப் பணியாளர் தேர்வாணையங்கள் திகழவேண்டுமென வகைசெய்யப் பட்டுள்ளது. தேர்வாணையங்களுக்கு ஆகும் அனைத்துச் செலவுகளும் சம்பந்தப்பட்ட ஒருங்கிணைப்பு நிதியத்தில் இருந்து வழங்கப்படும் (பிரிவு 322).

பணியாளர் தேர்வாணையங்களின் தலைவரும் உறுப்பினர்களும், ஒன்றியமாக இருந்தால், குடியரசுத் தலைவராலும், மாநிலமாக இருந்தால்,

அந்தந்த மாநில ஆளுநராலும், நியமிக்கப்படுகின்றனர். தேர்வாணையத்தின் உறுப்பினர்களில் குறைந்தது பாதிப்பேராவது ஒன்றிய அல்லது மாநிலப் பணியில் பத்தாண்டுகளாவது பணிபுரிந்து அனுபவம் பெற்றவர்களாக இருக்க வேண்டும். பணியாளர் தேர்வாணைய உறுப்பினர்களின் பதவிக் காலம் ஆறாண்டுகளாகும். ஆனால் ஒன்றிய தேர்வாணையத்தின் உறுப் பினர்கள் 65 வயது வரையிலும், மாநிலத் தேர்வாணையத்தின் உறுப்பினர்கள் 62 வயது வரையிலும் மட்டுமே பதவியில் இருக்கலாம். தேர்வாணையத்தின் ஓர் உறுப்பினர், திவாலாகிப் போனாலும், புத்திசுவாதீனம் இல்லாமல் போனாலும், உடல்நலம் குன்றிப் போனாலும், ஊதியம் பெறும் வேறு பணியில் ஈடுபட்டாலும், ஒழுக்கக் கேடாக நடந்து கொண்டதாக உச்சநீதி மன்றத்தால் நிரூபிக்கப்பட்டாலும், அரசாங்க ஒப்பந்தத்தில் அக்கறையோ ஆதாயமோ பெறுபவராக இருந்தாலும் ஒழிய அவரைப் பதவி நீக்கம் செய்யமுடியாது. தேர்வாணையத்தின் ஓர் உறுப்பினருடைய பதவிக்காலம் முடிவடைந்த பின்னர் மீண்டும அவர் அப்பதவிக்கு நியமனம் பெற முடியாது (பிரிவுகள் 316, 317; உபி. அரசுப் பணியாளர் தேர்வாணையம் எதிர் சுரேஷ் AIR 1987 SC 1953; ஹர்கோவிந்த் எதிர் ரகுகுல் AIR 1979 SC 1109; 317(1)ன் கீழ் ஆலோசனை, AIR 1983 SC 996).

பணியாளர் தேர்வாணையத்தில் ஒருவர் உறுப்பினராக நியமிக்கப்பட்ட பின்னர் அவருக்குப் பிரதிகூலமான வகையில் அவருடைய பணி நிலைமைகளை மாற்றக் கூடாது என்று பிரிவு 318 கூறுகிறது. தேர்வாணையங் களின் உறுப்பினர் எண்ணிக்கை மற்றும் ஊழியர்களின் எண்ணிக்கையைக் குடியரசுத் தலைவர் அல்லது சம்பந்தப்பட்ட மாநில ஆளுநர் நிர்ணயித்து, அவர்களுடைய பணிநிலையை ஒழுங்கு படுத்தலாம்.

பணியாளர் தேர்வாணையத்தின் உறுப்பினர்கள், வேறு அரசாங்கப் பணி எதிலும் நியமனம் பெறத் தகுதியற்றவர்கள். ஆனால் மாநிலப் பணியாளர் தேர்வாணையத்தின் உறுப்பினர், ஒன்றிய தேர்வாணையத்தின் உறுப்பினராகவோ, தலைவராகவோ ஆகலாம்; அல்லது வேறு மாநிலப் பணியாளர் தேர்வாணையத்தின் தலைவராக ஆகலாம். அதேபோல் ஒன்றிய தேர்வாணையத்தின் உறுப்பினர் அதன் தலைவராகவோ, மாநிலத் தேர்வாணையத்தின் தலைவராகவோ ஆகலாம் (பிரிவு 319).

பணியாளர் தேர்வாணையம் கீழ்க்காணும் பணிகளைச் செய்யும்.

(1) ஒன்றியம்/மாநிலப் பணிகளுக்கான ஆளெடுப்புக்காகத் தேர்வுகளை நடத்துவது;

(2) ஒன்றியம்/மாநிலப் பணிகளில் நியமனம் செய்வதற்குரிய நபர்களைப் பரிந்துரை செய்வது;

(3) சிவிலியன் பணியாளர்களின் ஆளெடுப்புக்கான முறைகள் பற்றியும், பணியமர்த்த நெறிகள் பற்றியும், பதவி உயர்வு, ஒரு பணியில் இருந்து இன்னொரு பணிக்கு மாற்றம், ஒழுங்கு நடவடிக்கைகள், போன்றவை பற்றியும் கலந்தாலோசித்தல்;

(4) குடியரசுத் தலைவர்/ஆளுநர் குறிப்பிடும் விஷயம் குறித்து ஆலோசனை வழங்குவது.

(5) இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மாநிலங்களின் வேண்டு கோளுக்கு இணங்க கூட்டான ஆளெடுப்புத் திட்டத்திற்கு உதவுதல்.
(6) குடியரசுத் தலைவர்/ஆளுநருக்கு ஆண்டறிக்கை ஒன்றைச் சமர்ப்பித்து, நாடாளுமன்றம்/மாநிலச் சட்டமன்றத்தில் அதனைத் தாக்கல் செய்வித்தல்;
(7) நாடாளுமன்றம்/மாநிலச் சட்டமன்றம் அளிக்கின்ற வேறு ஏதேனும் பணிகளையும் நிறைவேற்றுதல்;

தேர்வாணையத்தின் பணி ஆலோசனை வழங்குவதே என்றும், ஆலோசனை பெற வேண்டும் எனக் குறிப்பிட்டுள்ள ஏதேனும் ஒரு விஷயத்தில் அரசாங்கம் தேர்வாணையத்தைக் கலந்தாலோசிக்கவில்லை என்றாலும், பாதிக்கப்பட்ட அரசுப் பணியாளர், நீதிமன்றத்தின் வாயிலாகப் பரிகாரம் தேட முடியாது என்று உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்திருக்கிறது. ஆனால் ஒரு சட்டத்தின்படியோ, ஒழுங்குமுறைப்படியோ ஆலோசனை பெறவேண்டும் என்று விதிக்கப்பட்டிருந்தால் அவ்வாறு கலந்தாலோசிக்க வேண்டியது சட்டப்படியான கடமையாகும் என்றும் நீதிமன்றம் தெளிவு படுத்தியிருக்கிறது (பிரிவுகள் 320, 321, 323; உ.பி. அரசு எதிர் ஸ்ரீவத்சவா AIR 1957 SC 912; உ.பி. அரசு எதிர் ராஜஸ்தான் AIR 1988 SC 162; கேசவ் எதிர் உ.பி. எச் இ.எஸ்.சி (1985) ISCC 671; நீலிமா எதிர் ஹரியானா அரசு AIR 1987 SC 169).

## நிர்வாகத் தீர்ப்பாயங்கள்

அரசுப் பணியாளர்களின் ஆளெடுப்பு, பணிநிலைமை போன்ற விஷயங்கள் குறித்து எழும் வழக்குகளைத் தீர்த்து வைப்பதற்காக, நாடாளுமன்றமும் மாநிலச் சட்டமன்றங்களும் நிர்வாகத் தீர்ப்பாயங்களை ஏற்படுத்துவதற்கு அதிகாரம் அளிக்கும் வகையில் (நாற்பத்திரண்டாவது திருத்தச்) சட்டம் 1976-ன்படி நமது அரசியலமைப்பில் 14A என்ற ஒரு புதிய பகுதியும் 323A, 323B ஆகிய பிரிவுகளும் சேர்க்கப்பட்டன. அத்தகைய தீர்ப்பாயங்கள் தற்போது செயல்பட்டு வருகின்றன. இந்தத் தீர்ப்பாயங்களில் அளிக்கப்படும் தீர்ப்பினை எதிர்த்து உச்சநீதிமன்றத்தைத் தவிர பிற நீதிமன்றங்களில் மேல்முறையீடு செய்ய முடியாது.

# 19

# தேர்தல்கள்

## (பகுதி XV, பிரிவுகள் 324-329A)

நம்நாடு சுதந்திரம் பெற்ற பின்னர் நாம் செய்த மிகப்பெரும் புரட்சி என்ன வென்றால், மக்களவை மற்றும் மாநிலச் சட்டப்பேரவைத் தேர்தல்களில், வயதுற்றோர் அனைவருக்கும் வாக்குரிமை வழங்கியதுதான். அச்சுறுத்துகின்ற பின்தங்கிய நிலைமையும், கலங்க வைக்கின்ற வறுமையும், மட்டுமீறிய எழுத்தறிவின்மையும் இருந்த நிலையில், புதிதாகச் சுதந்திரம் பெற்ற ஒரு நாட்டில் 21 வயதுக்குக் குறையாத (தற்போது 18ஆகக் குறைக்கப் பட்டுவிட்டது) அனைத்துக் குடிமக்களுக்கும் வாக்குரிமை அளித்த செயல் நமது அரசியலமைப்பை உருவாக்கியவர்களின் நல்லெண்ணத்தைப் பிரதி பலிக்கிறது. இந்தியாவில் குடியிராதவர், புத்திசுவாதீனமற்றவர், குற்ற நடத்தையிலும், சட்டவிரோதமான நடவடிக்கையிலும் ஈடுபட்டவர் என்ற காரணங்களுக்காகச் சட்டப்படி தகுதியிழக்கப்பட்டவர்களுக்கு வாக்குரிமை கிடையாது (பிரிவு 326).

நாடாளுமன்றம், மாநில சட்டமன்றங்கள், குடியரசுத்தலைவர் பதவி, குடியரசுத் துணைத்தலைவர் பதவி ஆகிய அனைத்திற்கும் தேர்தல்களை நடத்த, நெறிப்படுத்த, கண்காணிக்க ஒரே தேர்தல் ஆணையம் இருக்கும் என்று பிரிவு 324 கூறுகிறது. தேர்தல் ஆணையத்தில் தலைமைத் தேர்தல் ஆணையர் ஒருவரும், குடியரசுத்தலைவர் அவ்வப்போது நியமிக்கின்ற பிற தேர்தல் ஆணையர்களும் இருப்பர். பிற தேர்தல் ஆணையர்கள் எவரேனும் நியமிக்கப்பட்டால், தலைமைத் தேர்தல் ஆணையர் தலைவராகச் செயல்படுவார். அண்மையில் (1993 அக்டோபரில்), ஓர் அவசரச் சட்டத்தின் மூலம் இரண்டு தேர்தல் ஆணையர்கள் நியமிக்கப்பட்டு, அவர்கள் இருவரும் தலைமைத் தேர்தல் ஆணையர் அந்தஸ்தில் செயல்படுவர் என்று அறிவிக்கப்பட்டது. மேலும், தேர்தல் ஆணையம் ஓர் ஒட்டுமொத்த அமைப்பாகச் செயல்பட்டு, ஒருமனதாகவோ, பெரும்பான்மை ஆதர வுடனோ, முடிவுகளை எடுக்க வேண்டும் என்றும் கேட்டுக் கொள்ளப் பட்டது. அந்த அவசரச் சட்டம் செல்லுபடியாகாது என்று தலைமைத்தேர்தல் ஆணையர் உச்சநீதிமன்றத்தில் தொடர்ந்த வழக்கு தற்சமயம் நிலுவையில் இருக்கிறது. பொதுத்தேர்தல்களின்போது தலைமைத் தேர்தல் ஆணையரின் ஆலோசனையின்பேரில் மண்டலத் தேர்தல் ஆணையர்களை நியமிக்க

பிரிவு 324 வழி செய்கிறது. உச்சநீதிமன்ற நீதிபதி ஒருவரைப் பதவிநீக்கம் செய்யும் காரணங்களின் பேரிலும் வழிமுறையின் பேரிலும் மட்டுமே, தலைமைத் தேர்தல் ஆணையரையும் பதவி நீக்கம் செய்ய முடியும். அவரைப்பதவியில் நியமனம் செய்த பின்னர் அவருக்குப் பிரதிகூலமான வகையில், அப்பதவியின் பணிநிலைமைகளை மாற்றியமைக்கக் கூடாது. பிற தேர்தல் ஆணையர்கள் எவரேனும் நியமிக்கப்பட்டிருந்தால், அவர்களைத் தலைமைத் தேர்தல் ஆணையரின் பரிந்துரையின் பேரிலேயே பதவிநீக்கம் செய்யமுடியும்.

நாடாளுமன்றத்தின் எந்த ஓர் அவைக்கும் அல்லது மாநில சட்ட மன்றத்தின் எந்த ஓர் அவைக்கும் நடைபெறும் தேர்தல்களுக்கு, ஒவ்வொரு தொகுதிக்கும் பொதுவான ஒரு வாக்காளர் பட்டியல் மட்டுமே இருக்கும் என்று பிரிவு 325 கூறுகிறது. சாதி, சமய, இன, பால் வேறுபாடுகளின் காரணமாக எந்த ஒரு நபரையும் வாக்காளர் பட்டியலில் சேர்க்கப்படுவதற்குத் தகுதியில்லை என்று கூற முடியாது; அதேபோல இந்தக் காரணங்களுக்காக எந்த ஒரு தொகுதிக்கும் உள்ள விசேஷ வாக்காளர் பட்டியலில், தன் பெயரைச் சேர்க்க வேண்டும் என்று எவரும் கோரமுடியாது.

நாடாளுமன்றத்தின் இரண்டு அவைகளுக்கும் மற்றும் மாநில சட்ட மன்றத்தின் இரண்டு அவைகளுக்கும் தேர்தல் நடத்துவது சம்பந்தமாக வாக்காளர் பட்டியல் தயாரித்தல், தொகுதிகளை வரையறை செய்தல், மற்றும் "தேர்ந்தெடுக்கப்படும் அவைகளை முறையாக உருவாக்குவதற்குத் தேவையான" அனைத்து விஷயங்கள் பற்றியும் சட்டம் இயற்றும் அதிகாரத்தைப் பிரிவு 327 நாடாளுமன்றத்திற்கு அளிக்கிறது.

மாநில சட்டப்பேரவை அல்லது இரண்டு அவைகளுக்கும் தேர்தல் நடத்துவது சம்பந்தமான அனைத்து விஷயங்கள் பற்றியும் சட்டம் இயற்றும் அதிகாரத்தைப் பிரிவு 328, மாநில சட்டமன்றத்திற்கு அளிக்கிறது.

பிரிவு 327 அல்லது 328-ன்படி இடங்களை ஒதுக்கீடு செய்வது அல்லது தொகுதிகளை வரையறை செய்வது சம்பந்தமான எந்த ஒரு சட்டமும் செல்லுபடியாகுமா என்பது குறித்தும், நாடாளுமனறத்தின் அல்லது மாநிலச் சட்டமன்றத்தின் அவைகளுக்குத் தேர்தல்கள் நடத்துவதிலும் நீதிமன்றங்கள் தலையிடுவதைப் பிரிவு 329 தடைசெய்கிறது. தேர்தல்கள் பற்றிய வழக்குகளை, நாடாளுமன்றம் அல்லது சட்டமன்றம், சட்டம் இயற்றிக் குறிப்பிட்டுள்ள அமைப்புகளிடம் முறைப்படி தேர்தல் மனுவாகத் தாக்கல் செய்ய வேண்டும். மக்கள் பிரதிநிதித்துவச் சட்டத்தின்படி, தேர்தல் சம்பந்தப்பட்ட வழக்குகளை விசாரிக்கும் அதிகாரம் உயர்நீதிமன்றங் களுக்கே உண்டு; உயர்நீதி மன்றத் தீர்ப்பை எதிர்த்து உச்சநீதிமன்றத்தில் மேல்முறையீடு செய்யலாம். ஆயினும் குடியரசுத்தலைவர், குடியரசுத் துணைத்தலைவர் பதவிகளுக்கான தேர்தல் வழக்குகளை உச்சநீதிமன்றமே விசாரிக்க முடியும்.

# 20

# மொழி பற்றிய பிரிவுகள்

## (பகுதி III, பிரிவுகள் 29,30; பகுதி V, பிரிவு 120; பகுதி VI, பிரிவு 210; பகுதி XVII, பிரிவுகள் 343-351; பகுதி XXII பிரிவு 394A; எட்டாவது அட்டவணை)

*நமது அரசியலமைப்பில், 'ஆட்சி மொழிக்காக' பகுதி 17 என்ற தனியொரு பகுதியிருந்த போதிலும், பல்வேறு பகுதிகளிலும் அத்தியாயங்களிலும் மொழி குறித்த வகையுரைகள் பற்றிய செய்திகள் விரவியிருக்கின்றன.*

**மொழிச் சிறுபான்மையினர் நலனைப் பேணிக் காத்தலும், சமயத்தின் அடிப்படையில் பாரபட்சம் காட்டாமையும்:** இந்தியாவின் எந்தப் பகுதியிலும் வசிக்கின்ற எந்த ஒரு பிரிவைச் சேர்ந்த குடிமக்களும் தமது மொழியையும், எழுத்து வடிவத்தையும், பண்பாட்டையும் பேணிக்காப்பதற்கான அடிப்படை உரிமையைப் பிரிவு 29 வழங்குகிறது. அரசாங்கத்தால் நிர்வகிக்கப்படுகின்ற அல்லது உதவியளிக்கப்படுகின்ற எந்த ஒரு கல்வி நிறுவனத்திலும், மொழி அல்லது சமயம் போன்ற காரணங்களைக்காட்டி எந்த ஒரு குடிமகனுக்கும் அனுமதி மறுக்கக் கூடாது. சமயச்சிறுபான்மையினரும் மொழிச்சிறுபான்மையினரும் தத்தமது விருப்பப்படி கல்வி நிறுவனங்களை ஏற்படுத்தி நிர்வகிக்கும் உரிமைக்குப் பிரிவு 30 பாதுகாப்பு அளிக்கிறது. எந்த ஒரு கல்வி நிறுவனத்தையும் அது மொழி அடிப்படையில் அல்லது சமய அடிப்படையில் நிர்வகிக்கப்படுகிறது என்ற காரணங்காட்டி, அதனை அரசு பாரபட்சமாக நடத்தக்கூடாது. (அடிப்படை உரிமைகள் என்ற அத்தியாயத்தில் காண்க).

மொழிச்சிறுபான்மைப் பிரிவினரைச் சேர்ந்த சிறார், அவர்களுடைய தாய்மொழியில் தொடக்கக் கல்வியைப் பெறுவதற்குத் தேவையான எல்லா வசதிகளையும், ஒவ்வொரு மாநிலத்திலும் உள்ள உள்ளாட்சி அமைப்புகள் செய்து தரவேண்டுமென, ஏழாவது திருத்தத்தின்மூலம் சேர்க்கப்பட்ட பிரிவு 350A கூறுகிறது. எந்த ஒரு மாநிலத்திற்கும் இது சம்பந்தமான ஆணைகளைக் குடியரசுத்தலைவர் பிறப்பிக்கலாம் என்றும் இந்தப் பிரிவு கூறுகிறது. இங்கே மொழிச் சிறுபான்மையினர் என்பது ஒரு மாநிலத்தின் ஏதேனும் ஒரு பகுதி அல்லது வட்டாரத்தில் சிறுபான்மையினராக

உள்ளவர்களைக் குறிக்காது. மாறாக, மாநிலம் முழுவதுமுள்ள மக்கள்தொகை எண்ணிக்கையில் சிறுபான்மையினராக இருப்பவர்களையே அது குறிக்கும் (கேரள கல்வி மசோதா வழக்கு, AIR 1958 SC 956).

மொழிச் சிறுபான்மையினர் நலன் பேணும் விஷயங்கள் குறித்து ஆய்வுகள்மேற்கொள்வதற்காக சிறப்பு அலுவலர் ஒருவரைக் குடியரசுத் தலைவர் நியமிக்கலாம் என்றும், அந்தச் சிறப்பு அலுவலர், குடியரசுத் தலைவர் குறிப்பிடுகின்ற கால இடைவெளியில் தனது அறிக்கையைச் சமர்ப்பிக்கவேண்டும் எனவும் பிரிவு 350B கூறுகிறது. அவ்வாறு சமர்ப்பிக்கப் படும் அறிக்கைகள் அனைத்தும் நாடாளுமன்றத்தின் இரண்டு அவைகளிலும் தாக்கல் செய்யப்பட்டுப் பின்னர் சம்பந்தப்பட்ட மாநில அரசுகளுக்கு அனுப்பபப்பட வேண்டும்.

## சட்டமியற்றும் அவைகளின் ஆட்சி மொழி

நாடாளுமன்றத்தின் ஆட்சிமொழியைப் பற்றி பிரிவு 120 கூறுகிறது. நாடாளுமன்றத்தின் நடவடிக்கைகள் இந்தி அல்லது ஆங்கிலத்தில் நடைபெற வேண்டும் என்று அப்பிரிவு கூறுகிறது. எனினும், அவையில், இந்தி அல்லது ஆங்கிலத்தில் சரளமாகத் தனது கருத்தை எடுத்துரைக்க முடியாத உறுப்பினர் தனது தாய்மொழியில் பேசுவதற்கு அவைத் தலைவர் அனுமதி அளிக்கலாம். முக்கியமான மாநில மொழிகளில் பேசுவதை உடனுக்குடன் இந்தியிலும் ஆங்கிலத்திலும் மொழி பெயர்த்துச் சொல்வதற்கு, நாடாளுமன்றத்தின் இரண்டு அவைகளிலும் தற்போது ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. இந்தியிலிருந்தும் ஆங்கிலத்தில் இருந்தும் பிற முக்கிய மாநில மொழிகளில் உடனுக்குடன் மொழிபெயர்த்துச் சொல்லவும், அதேபோல் முக்கிய மாநில மொழிகளில் இருந்து இந்தியிலும் ஆங்கிலத்திலும் உடனுக்குடன் மொழி பெயர்த்துச் சொல்லவும், ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளதால், நடைமுறையில் பெரும்பாலான சமயங்களில், இரண்டு அவைகளின் அனைத்து நடவடிக்கைகளும் இந்தி அல்லது ஆங்கிலத்திலேயே நடைபெறுகின்றன.

மாநிலச் சட்டமன்றத்தின் ஆட்சி மொழியைப் பற்றி பிரிவு 210-ல் கூறப்பட்டுள்ளது. சட்டமன்றத்தின் நடவடிக்கைகள் அம்மாநிலத்தின் ஆட்சி மொழியில் நடைபெறலாம்; ஒன்றுக்கு மேற்பட்ட ஆட்சி மொழிகள் இருந்தால் அந்த மொழிகள் அனைத்திலும் நடைபெறலாம்; அல்லது இந்தி மொழியிலோ, ஆங்கிலத்திலோ நடைபெறலாம். இந்த மொழிகள் எவற்றிலும் ஓர் உறுப்பினரால் சரளமாகப் பேசமுடியாத நிலையில், அவருடைய தாய்மொழியில் அவையில் பேசுவதற்கு அவைத்தலைவர் அனுமதி அளிக்கலாம்.

## ஒன்றிய ஆட்சி மொழி

நமது மொழிகளில் ஒன்றைத் தேசிய மொழியாக அறிவிப்பதே நமது அரசியலமைப்பை உருவாக்கியவர்கள் எதிர்கொண்ட மிகவும் சிரமமான பணி எனலாம். ஆட்சி மொழியாகக்கூட ஒரு மொழியை ஏகமனதாக ஏற்றுக்கொள்ள முடியவில்லை. பின்னர், இறுதியாக எட்டப்பட்ட உடன்பாடு பிரிவு 343-ல் இடம் பெற்றுள்ளது. அதன்படி ஒன்றிய ஆட்சி மொழியாக

தேவநாகரி வடிவிலான இந்தி மொழியும், சர்வதேச வடிவிலான இந்திய எண்களும் ஏற்றுக் கொள்ளப்பட்டன. முதல் 15 ஆண்டுகளுக்கு இந்தியுடன் ஆங்கிலமும் ஆட்சிமொழியாக நீடிக்கும் என்றும், அதற்குப்பின்னரும்கூட ஏதேனும்சில குறிப்பிட்ட நோக்கங்களுக்கு, ஆங்கிலத்தையும் தேவநாகரி எண் வடிவங்களையும் பயன்படுத்துவதற்கு, நாடாளுமன்றம் சட்டத்தின் மூலம் அனுமதி அளிக்கலாம் என்றும் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

அரசியலமைப்பு அமலுக்கு வந்த ஐந்தாண்டுகளுக்குப் பின்னரும், அதற்கடுத்து ஒவ்வொரு பத்தாண்டு இடைவெளியிலும், கீழ்க்காணும் விஷயங்கள் குறித்துக் குடியரசுத்தலைவருக்குப் பரிந்துரைப்பதற்காகக் குழு ஒன்றை அமைக்க வேண்டுமென பிரிவு 344 கூறுகிறது. அவ்விபரங்களாவன: (1) அலுவலகப் பணிகளில் இந்தி மொழிப் பயன்பாட்டில் கண்டுள்ள முன்னேற்றம், (2) அலுவலகப் பணிகளில் ஆங்கிலத்தின் பயன்பாட்டைக் கட்டுப்படுத்துதல்; (3) உச்சநீதிமன்றத்திலும் உயர்நீதிமன்றங்களிலும் பயன்படுத்தப்பட வேண்டியமொழி; (4) அலுவலகப் பணிகளில் பயன்படுத்தப்பட வேண்டிய எண் வடிவங்கள்; (5) ஒன்றிய ஆட்சி மொழி மற்றும் ஒன்றியத்துக்கும் மாநிலத்துக்கும் இடையே அல்லது மாநிலங்களுக்கு இடையேயான தகவல் தொடர்பு மொழி ஆகியவை சம்பந்தமான பிற விஷயங்கள். இந்தியாவின் தொழில்துறை மற்றும் அறிவியல் முன்னேற்றம், பண்பாட்டுத் தேவைகள், அரசுப்பணிகள் குறித்து இந்திமொழி பேசாத பகுதிகளில் உள்ள மக்களின் நியாயமான கோரிக்கைகள் போன்ற விஷயங்களில் அந்தக்குழு உரிய கவனம் செலுத்த வேண்டும் என்றும் கூறப்பட்டுள்ளது.

குடியரசுத்தலைவர் தேவையான ஆணைகளைப் பிறப்பிப்பதற்கு ஏதுவாக, அந்தக் குழுவின் பரிந்துரைகளை ஆராய்ந்து அவருக்கு அறிக்கை அளிப்பதற்காக நாடாளுமன்றத்தின் இரண்டு அவைகளையும் சேர்ந்த 30 உறுப்பினர்குழு ஒன்றை அமைக்கவும் பிரிவு 344 வகை செய்கிறது. இந்தக் குழுவின் அறிக்கை குடியரசுத்தலைவரால் பரிசீலிக்கப்படாமல் மொழி சம்பந்தமான எந்த ஒரு மசோதாவையும் அல்லது திருத்தத்தையும் நாடாளு மன்றத்தில் கொண்டுவர முடியாது என்று பிரிவு 349 கூறுகிறது. முதலாவது ஆட்சி மொழிக் குழு 1955ஆம் ஆண்டு நியமிக்கப்பட்டது. அது தனது அறிக்கையை 1956ஆம் ஆண்டு சமர்ப்பித்தது. அதனைப் பரிசீலித்த நாடாளுமன்ற உறுப்பினர்கள் குழுவும் தனது கருத்தைக் குடியரசுத் தலைவரிடம் சமர்ப்பித்தது. அதன்படி, அறிவியல், நிர்வாகம், சட்டவியல் ஆகியவற்றுக்கான இந்திச் சொற்களை உருவாக்கவும், ஆங்கிலப் படைப்புகளை இந்தியில் மொழிபெயர்க்கவும் நிலைக்குழு ஒன்றை நியமிக்கும் ஆணையை 1960 ஏப்ரல் 27ஆம் தேதியன்று குடியரசுத்தலைவர் வெளியிட்டார். அந்த ஆணையின்படி கல்வி அமைச்சகத்தின்கீழ் ஒன்றும், சட்ட அமைச்சகத்தின் கீழ் ஒன்றுமாக இரண்டு குழுக்கள் ஏற்படுத்தப் பட்டன. ஒன்றிய அரசுப் பணியாளர் தேர்வாணையத்தின் தேர்வுகளை தொடர்ந்து ஆங்கில மொழி வாயிலாக நடத்துவதற்கும் குடியரசுத்தலைவரின் ஆணை வகை செய்தது. அந்தத் தேர்வுகளுக்கு இந்தி மொழியும் மாற்று மொழியாக இருக்கும் என்று பின்னர் அறிவிக்கப்பட்டது. நாடாளுமன்றம்

இயற்றும் சட்டங்கள் தொடர்ந்து ஆங்கிலத்திலேயே இருக்க வேண்டும் என்றும், அவற்றுக்கு அங்கீகரிக்கப்பட்ட இந்தி மொழிபெயர்ப்புகள் செய்யப்பட வேண்டும் என்றும் வகை செய்யப்பட்டது.

முதலாவது ஆட்சி மொழிக் குழுவின் அறிக்கையின் தொடர் நடவடிக்கையாகவும், பிரிவு 343-ல் விதிக்கப்பட்டுள்ளதற்கு இணங்கவும், ஆட்சிமொழிச் சட்டம் 1963ஐ நாடாளுமன்றம் இயற்றியது. 15 ஆண்டுகளுக்குப் பின்னரும், ஒன்றிய அலுவல்களுக்கும், நாடாளுமன்றத்தின் நடவடிக்கைகளுக்கும், இந்தியுடன் ஆங்கிலமும் தொடர்ந்து பயன்படுத்தப்படும் என்று அச்சட்டம் கூறியது.

ஒன்றிய அரசுப் பணியாளர் தேர்வாணையத்தின் சில பாடங்களுக்கான தேர்வுகளில் மாற்றுமொழியாக இந்தி மொழி அறிமுகப் படுத்தப்பட்டது. எட்டாவது அட்டவணையில் இடம்பெற்றுள்ள அங்கீகரிக்கப்பட்ட ஏதேனும் ஒரு மொழியில் கூடத் தேர்வுகளை எழுதலாம் என்று பின்னர் அறிவிக்கப்பட்டது.

## மாநில மொழிகளும் இணைப்பு மொழியும்

ஒவ்வொரு மாநிலத்தின் ஆட்சி மொழிப் பிரச்சினையையும், அரசாங்க அளவில் மாநிலங்களுக்கு இடையேயான தொடர்பு மொழிப் பிரச்சினையையும் அரசியலமைப்பின் 345ஆவது பிரிவு தீர்க்க முயலுகிறது. ஒரு மாநிலத்தின் வழக்கத்தில் உள்ள ஏதேனும் ஒரு மொழியை அல்லது, ஒன்றுக்கும் மேற்பட்ட மொழிகளை, அல்லது இந்தியை, ஆட்சி மொழியாக ஏற்பதென மாநிலச் சட்டமன்றம் சட்டம் இயற்றி அறிவிக்கலாம். அவ்வாறு சட்டம் இயற்றப்படாதவரை முன்பு இருந்தது போல் ஆங்கிலமே தொடர்ந்து ஆட்சி மொழியாகப் பயன்படுத்தப்படலாம். ஒன்றிய ஆட்சி மொழியாக அங்கீகரிக்கப்பட்ட மொழியே, மாநிலங்களுக்கு இடையேயும், ஒன்றியத்துக்கும் மாநிலங்களுக்கும் இடையேயும் தொடர்பு மொழியாகவும் இருக்கும். எனினும், இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட மாநிலங்கள் தமக்குள் தொடர்புகொள்ள இந்தி மொழியைப் பயன்படுத்தத் தடையேதும் இல்லை (பிரிவு 346).

ஒரு மாநிலத்தில் உள்ள மக்களில் கணிசமானவர்கள் தம்முடைய மொழியையும் ஆட்சிமொழியாக அங்கீகரிக்க வேண்டும் என்று கோரி, அக்கோரிக்கை நியாயமானது எனக் குடியரசுத்தலைவரும் திருப்தி அடைந்தால், அந்த மொழியை அம்மாநிலம் முழுவதுமோ, ஏதேனும் ஒரு பகுதியில் மட்டுமோ, குறிப்பிடப்படும் காரணங்களுக்காக ஆட்சிமொழியாகப் பயன்படுத்த வேண்டும் என்று குடியரசுத்தலைவர் ஆணையிடலாம்.

ஒன்றியத்துக்கும் இந்திமொழி பேசாத மாநிலங்களுக்கும் இடையேயான தொடர்பு மொழியாக ஆங்கிலமே பயன்படுத்தப்பட வேண்டும் என்றும், இந்தி பேசும் மாநிலத்தில் இருந்து இந்தி பேசாத மாநிலங்களுக்கு இந்திமூலம் தொடர்பு கொள்ளப்பட்டால், அவற்றுடன் ஆங்கில மொழிபெயர்ப்பு சேர்த்து அனுப்பப்பட வேண்டும் என்றும் ஆட்சிமொழிச்சட்டம் 1963-ல் கூறப்பட்டுள்ளது.

## உயர்நீதிமன்றங்களின் மொழி மற்றும் அங்கீகாரம் பெற்ற சட்டவடிவங்கள்

நாடாளுமன்றம் சட்டம் இயற்றி வேறுவகையாகச் சொல்லாதவரை, உச்சநீதிமன்றம் மற்றும் உயர்நீதிமன்றங்களின் நடவடிக்கைகள் அனைத்தும் ஆங்கிலமொழி வாயிலாகவேஇருக்க வேண்டும். ஒன்றியத்திலும் மாநிலங் களிலும் இயற்றப்படும் சட்டங்கள், சட்டத்திருத்தங்கள், அவசரச்சட்டங்கள், ஆணைகள், விதிகள், ஒழுங்குமுறைவிதிகள, துணைவிதிகள் போன்ற எல்லாவற்றின் அங்கீகாரம் பெற்ற வடிவங்கள்ஆங்கிலத்திலேயே இருக்க வேண்டும். ஒரு மாநிலத்தின் உயர்நீதிமன்ற நடவடிக்கைகளில் இந்தி மொழியை அல்லது அம்மாநிலத்தில் ஆட்சிமொழியாக உள்ள ஏதேனும் ஒரு மொழியைப் பயன்படுத்துவதற்கு, குடியரசுத்தலைவரின் முன ஒப்புதல் பெற்று ஆளுநர் அங்கீகாரம் அளிக்கலாம். எனினும் உயர்நீதிமன்றத் தீர்ப்புகளும், ஆணைகளும் ஆங்கிலத்திலேயே வழங்கப்படவேண்டும் (பிரிவு 348).

குடியரசுத்தலைவரின் அங்கீகாரத்துடன் பிரசுரிக்கப்படுகின்ற, சட்டம் போன்றவற்றின் இந்தி மொழிபெயர்ப்புகள் அதிகாரப்பூர்வமானவையாகக் கருதப்பட வேண்டும் என்றும், எந்த ஒரு மசோதாவானாலும் அல்லது திருத்தமானாலும் அவற்றுடன் இந்தி மொழிபெயர்ப்பும் இணைககப்பட வேண்டும் என்றும் ஆட்சி மொழிச்சடடம் கூறுகிறது.

சில இனங்களில் மாநிலங்களின் சட்டங்களையும இந்தியில் மொழி பெயர்த்து அளிக்க வேண்டும் எனவும அச்சட்டம் கூறுகிறது. மாநில ஆளுநர், குடியரசுத்தலைவரின் முன்ஒப்புதலைப் பெற்றிருக்கும் பட்சத்தில் உயர்நீதிமன்றத் தீர்ப்புகள் போனறவற்றில் இந்திமொழியை விருப்ப மொழியாகப் பயன்படுத்தலாம் எனறும், அவறறுடன தீர்ப்புகளின்ஆங்கில மொழிபெயர்ப்பு இணைக்கப்பட வேண்டும் என்றும் ஆட்சி மொழிச்சட்டம் கூறுகிறது.

## பொதுமக்களின் முறையீட்டு மொழி

இந்தியக் குடிமக்கள் மட்டுமல்லாது எந்த ஒரு நபரானாலும் தனக்கு நேரிட்ட குறைகள் பற்றி ஒன்றிய அல்லது மாநில அரசின் அதிகாரிகளிடம் முறையிட்டு நிவாரணம் பெறுவதற்கு, அவற்றில் வழக்கத்தில் உள்ள ஏதேனும் ஒரு மொழியைப் பயன்படுத்த உரிமை உள்ளது என்ற முக்கியமான ஏற்பாடு பிரிவு 350-ல் இடம் பெற்றுள்ளது. எனவே ஒரு மனு ஆட்சிமொழியில் எழுதப்படவில்லை என்ற காரணத்திற்காக அதனை எந்த ஓர் அரசுத் துறையோ,அதிகாரியோ ஏற்றுக்கொள்ள மறுக்கக் கூடாது.

## இந்திமொழியை வளர்த்தல்

"இந்தியாவின் கதம்பப் பண்பாட்டுக் கூறுகளை வெளிப்படுத்தும் ஊடகமாக இந்திமொழி திகழ்கின்ற வகையிலும், இந்துஸ்தானி மற்றும் எட்டாவது அட்டவணையில் இடம் பெற்றுள்ள ஏனைய இந்தியமொழிகளில் வழங்கிவரும் இந்திமொழியின் வடிவங்களையும், பாணிகளையும், வெளிப்

பாட்டினையும், மொழியின் தனித்திறனைச் சிதைக்காமல் கிரகித்துக்கொண்டு அதனை வளப்படுத்த வேண்டும் என்றும், தேவையான இடங்களில் பிரதானமாக சமஸ்கிருதத்தில் இருந்தும், இரண்டாம் பட்சமாகப் பிற மொழிகளில் இருந்தும் சொற்களை இரவலாகப் பெற்றும்" இந்திமொழியை மேம்படுத்தி வளர்க்க வேண்டிய கடமை ஒன்றியத்துக்கு உண்டு என பிரிவு 351 கூறுகிறது.

அரசியலமைப்பில் இடம் பெற்றுள்ள மொழி பற்றிய ஏற்பாடுகளை, அதிலும் குறிப்பாக 343, 344, 351 ஆகிய பிரிவுகளைப் பார்க்கும்போது, இந்தி மொழியைப் பரப்பி வளர்ப்பதும், அதனை ஆட்சி மொழியாகவும் தொடர்பு மொழியாகவும் பயன்படுத்தும் நிலைக்குப் படிப்படியாக மாறிவிடுவதும்தான் இறுதியான இலட்சியம் என்பது தெளிவாகும். 15 ஆண்டுகளுக்குப் பின்னரும் ஆங்கிலத்தைப் பயன்படுத்த அனுமதிப்பதால் பிரிவு 351ஐ மீறியதாக ஆகாது என்றும், இந்தியை ஆட்சிமொழியாகப் பயன்படுத்துவதில் ஏற்பட்டுள்ள முன்னேற்றத்தைப் பொறுத்து, எந்தெந்த விஷயங்களில் ஆங்கிலத்தின் பயன்பாடு தொடர வேண்டுமெனக் குறிப்பிட்டுச் சொல்வதற்காகவே பிரிவு 343-ல் நாடாளுமன்றத்திற்கு அதிகாரம் அளிக்கப்பட்டுள்ளது என்றும், உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்துள்ளது. (இந்திய அரசு எதிர் முரசொலி, AIR 1977 SC 225). தளவாய் எதிர் தமிழ்நாடு அரசு என்ற வழக்கில் (AIR 1976 SC 1559), இந்தி எதிர்ப்புப் போராட்ட வீரர்களுக்கு ஓய்வூதியம் வழங்க மாநில அரசு பிறப்பித்த ஆணையை உச்சநீதிமன்றம் ரத்து செய்துவிட்டது. இந்தியை வளர்ப்பதற்குப் பதிலாக அதற்கு எதிராகப் போராட்ட உணர்வைத் தூண்டிய அந்த ஆணை, பிரிவு 351ஐ மீறியதாகும் என்று அந்த வழக்கில் நீதிமன்றம் தீர்ப்பளித்தது.

## அரசியலமைப்பின் அங்கீகரிக்கப்பட்ட இந்தி வடிவம்

அரசியலமைப்பின் அங்கீகரிக்கப்பட்ட இந்தி மொழிபெயர்ப்பு ஒன்று வெளியிடப்பட வேண்டுமென 56ஆவது திருத்தத்தின்மூலம் சேர்க்கப்பட்ட பிரிவு 394A கூறுகிறது. அதன்படி இந்தியில் அரசியலமைப்பு வெளியிடப் பட்டுள்ளது.

## எட்டாவது அட்டவணை

இந்தியைத் தவிர பிறமொழிகளையும், அவற்றின் வளர்ச்சிக்கான தேவையையும் நமது அரசியலமைப்பு உணர்ந்துள்ளது. அசாமி, வங்காளி, குஜராத்தி, இந்தி, கன்னடம், கஷ்மீரி, கொங்கணி, மலையாளம், மணிப்புரி, மராத்தி, நேபாளி, ஒரியா, பஞ்சாபி, சமஸ்கிருதம், சிந்தி, தமிழ், தெலுங்கு, உருது ஆகிய 18 மொழிகள் அரசியலமைப்பின் எட்டாவது அட்டவணையில் சேர்க்கப்பட்டுள்ளன.

# 21

# அரசியலமைப்பைத் திருத்துதல்

## (பகுதி XX, பிரிவு 368)

அரசியலமைப்பைத் திருத்துவது பற்றிய 368ஆவது பிரிவு, நாடாளுமன்றமே அரசியல் நிர்ணய அதிகார வைப்பிடமாகும் என்று கூறுகிறது. அரசிய லமைப்பைத் திருத்துவதுபற்றி இந்தப்பிரிவில் சொல்லப்பட்டுள்ள நடை முறைகள், நாடாளுமன்றத்தை அதன் சட்டமியற்றும் பணியில் இருந்து வேறுபடுத்தி, அரசியல் நிர்ணய அதிகாரம் கொண்ட அமைப்பாகக் காட்டுகின்ற சிறப்புக் கூறுகளைக் கொண்டுள்ளன. முதலாவதாக, நாடாளுமன்றத்தின் ஏதேனும் ஓர் அவையில் ஒரு மசோதாவை அறிமுகப் படுத்துவதன் மூலமே அரசியலமைப்பைத் திருத்தும் நடவடிக்கையைத் தொடங்க முடியும். எனவே இதற்கான தொடக்க முயற்சியை நாடாளு மன்றம்தான் மேற்கொள்ள முடியும். இரண்டாவதாக, அரசியலமைப்பின் பெரும்பாலான பிரிவுகளை அறுதிப் பெரும்பான்மையுடன், அதாவது, மூன்றில் இரண்டு பங்குக்கும் குறையாமல் உறுப்பினர்கள் ஆஜராகி வாக்களித்துப் பெரும்பான்மை ஆதரவுடன், நாடாளுமன்றமே திருத்திவிட முடியும். ஒரு சில விஷயங்களில் மட்டும் (ஏழாவது அட்டவணையில் இடம் பெற்றுள்ள பட்டியல்கள் சம்பந்தமானவை, நாடாளுமன்றத்தில் மாநிலங் களுக்குப் பிரதிநிதித்துவம், 368ஆவது பிரிவின் வகையுரைகள் போன்றவை) அரசியலமைப்புத் திருத்த மசோதாவை நாடாளுமன்றத்தின் இரண்டு அவைகளும் அறுதிப் பெரும்பான்மையுடன் நிறைவேற்றியபின்னர், பாதிக்கும் குறையாத மாநிலங்களின் சட்டப்பேரவைகள் ஏற்பளிக்க வேண்டும். மூன்றாவதாக, முறைப்படி நிறைவேற்றப்பட்ட/ஏற்பளிக்கப்பட்ட அரசியலமைப்புத் திருத்த மசோதாவுக்குக் குடியரசுத் தலைவர் கட்டாயமாக ஒப்புதல் அளித்தாக வேண்டும். மற்ற சாதாரண மசோதாக்களைப்போல் அதற்கு ஒப்புதல் அளிக்காமல் நிறுத்தி வைக்கவோ, மறுபரிசீலனை செய்யுமாறு மீண்டும் நாடாளுமன்றத்திற்கே திருப்பி அனுப்பவோ, குடியரசுத் தலைவருக்கு வாய்ப்புக்கள் ஏதுமில்லை. இறுதியாக, அரசியலமைப்பின் எந்த ஒரு பகுதியும் திருத்த முடியாததன்று என்பதும் மிகவும் முக்கியமான விஷயமாகும். அரசியலமைப்பின் எந்த ஒரு பிரிவையும் எப்படி வேண்டு மானாலும் திருத்தவோ, மாற்றியமைக்கவோ, அடியோடு நீக்கிவிடவோ, நாடாளுமன்றத்தால் முடியும். அவ்வாறு செய்யப்படும் திருத்தங்கள்,

அரசியலமைப்பின் அடிப்படையான கூறுகளைத் திருத்துவதாகவோ, மீறுவனவாகவோ இல்லாத பட்சத்தில் அவற்றை எதிர்த்து எந்த ஒரு நீதிமன்றத்திலும் வழக்குத் தொடர முடியாது.

1950-க்கும் 1972-க்கும் இடைப்பட்ட காலத்தில், அடிப்படை உரிமைகளைத் திருத்துவது சம்பந்தமான சட்டவினா, மூன்று வெவ்வேறு வழக்குகளில் உச்சநீதிமன்றத்தின் முன்வந்தது. அவை (1) சங்கரி பிரசாத் எதிர் இந்திய அரசு (AIR 1951 SC 458), (2) சஜ்ஜன்சிங் எதிர் ராஜஸ்தான் அரசு (AIR 1965 SC 845), (3) கோலக் நாத் எதிர் பஞ்சாப் அரசு (AIR 1912 SC 1643). கோலக்நாத் வழக்கில் உச்சநீதிமன்றம் தீர்ப்பளிக்கும்வரை, கீழ்க்கண்டவாறு சட்டம் இருந்தது.

(1) அரசியலமைப்புத் திருத்தச் சட்டங்கள் சாதாரண சட்டங்கள் போன்றவை அல்ல; அவை நாடாளுமன்றத்தின் சாதாரண சட்டமியற்றும் அதிகாரத்தில் இருந்து மாறுபட்ட அரசியல் நிர்ணய அதிகாரத்தால் நிறைவேற்றப்படுபவை. அரசியலமைப்பைத் திருத்துவதற்கு என்று தனியான அரசியல் நிர்ணய அமைப்பு ஏதுமில்லாததால், அரசியல் நிர்ணய அதிகாரமும் நாடாளுமன்றத்திடமே அளிக்கப்பட்டுள்ளது. பிரிவு 368-ல் வழங்கப்பட்டுள்ள அரசியலமைப்பைத் திருத்தும் அதிகாரம் ஏழாவது அட்டவணையில் பகிர்ந்தளிக்கப்பட்டுள்ள சட்டமியற்றும் அதிகாரங்களில் இருந்து மாறுபட்ட அரசியல் நிர்ணய அதிகாரம் என்று மிகவும் காலம் கடந்து 1981ஆம் ஆண்டில் உச்சநீதிமன்றம் உறுதிசெய்தது (சசன்கா எதிர் இந்திய அரசு AIR 1981 SC 522).

(2) அரசியலமைப்பைத் திருத்தும் அதிகாரத்திற்கு வரம்பே இல்லை; அதாவது திருத்த முடியாத பிரிவு என்று அரசியலமைப்பில் எதுவும் இல்லை. பிரிவு 368-ல் சொல்லப்பட்டுள்ளவை முற்றிலும் பொதுவானவை; எந்தவிதமான விதிவிலக்கும் இல்லாமல் அரசியலமைப்பைத் திருத்துவதற்கு அவை நாடாளுமன்றத்திற்கு அதிகாரம் அளிக்கின்றன.

(3) அரசியலமைப்பில் (பகுதி-III) உத்தரவாதமளிக்கப்பட்டுள்ள அடிப்படை உரிமைகளும் அரசியலமைப்பைத் திருத்தும் நாடாளுமன்றத்தின் அதிகாரத்திற்கு உட்பட்டவையே.

கோலக்நாத் வழக்கில் உச்சநீதிமன்றம் தீர்ப்பளிக்கும்போது தன்னுடைய முந்தைய தீர்ப்புகளுக்கு நேர்மாறாக, ஆறுக்கு ஐந்து என்ற பெரும்பான்மையுடன், பின்வருமாறு தீர்ப்பளித்தது: அரசியலமைப்பில் இடம் பெற்றுள்ள அடிப்படை உரிமைகள் வரம்பு கடந்தவை; அழிக்க முடியாதவை; அரசியலமைப்பினைத் திருத்துவதற்கான வழிமுறைகளை மட்டுமே பிரிவு 368 கூறுகிறது; அது அரசியலமைப்பைத் திருத்தக் கூடிய திட்டவட்டமான அதிகாரத்தையோ, சட்டமியற்றும் அதிகாரத்திலிருந்து மாறுபட்ட எந்தவிதமான அரசியல் நிர்ணய அதிகாரத்தையோ நாடாளுமன்றத்திற்கு அளிக்கவில்லை; பிரிவு 13-ன் பொருள்படி அரசியலமைப்புத் திருத்தச் சட்டமும் ஒரு சட்டமே; எனவே, 368ஆவது பிரிவின்படி

இயற்றப்படும் அரசியலமைப்புத் திருத்தச் சட்டத்தின் மூலமாகக்கூட நாடாளுமன்றம் அடிப்படை உரிமைகளைப் பறிக்கவோ ஒடுக்கவோ முடியாது.

1973ஆம் ஆண்டில் கேசவானந்த பாரதி எதிர் கேரள அரசு என்ற வழக்கில் (AIR 1973 SC 1461), உச்சநீதிமன்றம் தீர்ப்பளிக்கும்போது, கோலக்நாத் வழக்கில் அளித்த தீர்ப்பை மறுபரிசீலனை செய்தது. பதின்மூன்று நீதிபதிகளில் பத்துப்பேர், அரசியலமைப்பைத் திருத்தும் அதிகாரம் 368ஆவது பிரிவிலேயே அடங்கியுள்ளது என்றும், 368ஆவது பிரிவின்படி அரசியலமைப்பைத் திருத்தும் சட்டம் பிரிவு 13(2)இல் சொல்லப்பட்டுள்ள 'சட்டம்' ஆகாது என்றும் கூறினார்கள். அவ்வாறாக கோலக்நாத் வழக்கில் வழங்கிய தீர்ப்பு மீறப்பட்டது. 368ஆவது பிரிவின் கீழ் அளிக்கப்பட்டுள்ள அரசியலமைப்பைத் திருத்தும் அதிகாரம், முழுமையானதும் வரம்பற்றதுமான அதிகாரமா என்ற வினாவிற்கு ஏழு நீதிபதிகள் அடங்கிய பெரும்பான்மையினர், 368ஆவது பிரிவின் கீழான அதிகாரம் உட்கிடக்கையான ஒரு வரம்புக்கு உட்பட்டது என்றும், அந்த வரம்பு 'அரசியலமைப்பைத் திருத்துவதற்கான' அதிகாரம் என்ற தன்மையில் தோன்றுகின்ற வரம்பு ஆகும் என்றும் கூறினர். அதன்படி ஆறுக்கு ஏழு என்ற பெரும்பான்மையுடன் 'அரசியலமைப்பின் அடிப்படைக் கட்டமைப்பைத் திருத்துவதற்கான அதிகாரத்தை 368ஆவது பிரிவு நாடாளுமன்றத்திற்கு அளிக்கவில்லை' எனறு உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்தது. எனினும் அந்தப் பெரும்பான்மை நீதிபதிகள அடிப்படைக் கட்டமைப்பு என்றால் என்ன என்பதைத் தெளிவாக்கவில்லையாதலால் அது விடையளிக்கப் படாமலேயே இருக்கிறது.

கேசவானந்த பாரதி வழக்கில் உச்சநீதிமன்றம் அளித்த தீர்ப்பை அடுத்து, அரசியலமைப்பைத் திருத்தும் நாடாளுமனறத்தின் அதிகாரத்திற்கு இருந்த 'அடிப்படை கட்டமைப்பு' என்ற வரம்பினை நீர்த்து விடுவதற்காக, அரசியலமைப்பு (42ஆவதுதிருத்தச்) சட்டம் 1976-ன்படி, பிரிவு 368-ல் நானகாவது மற்றும் ஐநதாவது வகையுரைகள் சேர்க்கப்பட்டன. அவற்றின்படி, (அ) 368(1)இன் கீழ் நாடாளுமன்றத்திற்கு அளிக்கப்பட்டுள்ள அதிகாரம் அரசியல் நிர்ணய அதிகாரமாகும்; எனவே அரசியலமைப்பைத் திருத்தும் நாடாளுமன்றத்தின் அதிகாரத்திற்கு வெளிப்படையாகவோ, உட்கிடக்கையாகவோ எந்தவிதமான வரம்பும் கிடையாது. (ஆ) எனவே எந்த ஒரு காரணத்தின் அடிப்படையிலும் அரசியலமைப்புத் திருத்தச் சட்டத்தை நீதிப்புனராய்வுக்கு உட்படுத்த முடியாது. எனினும், அடிப்படைக் கட்டமைப்பு என்ற கோட்பாட்டை, மினர்வா மில்ஸ் எதிர் இந்திய அரசு (AIR 1980 SC 1789) என்ற வழக்கில் உச்சநீதிமன்றம் மீண்டும் வலியுறுத்தி, அரசியலமைப்பின் அடிப்படைக் கட்டமைப்பான நீதிப்புனராய்வை முற்றிலுமாக நீக்கிவிட வகைசெய்யும் நான்காவது மற்றும் ஐந்தாவது வகையுரைகள் செல்லுபடியாகா என்று தீர்ப்பளித்தது.

இப்போதுள்ள நிலைமை என்னவென்றால், கேசவானந்த பாரதி வழக்கில் உச்சநீதிமன்றம் அளித்த தீர்ப்பினை உச்சநீதிமன்றத்தின் இன்னொரு முழு பெஞ்ச், நேர்மாறாகத் திருப்பாதவரை, அரசியலமைப்பில் செய்யப்படும்

எந்த ஒரு திருத்தமானாலும், அது அரசியலமைப்பின் அடிப்படைக் கட்டமைப்பை மாற்றுவதாக இருந்தால், அதில் நீதிமன்றம் நிச்சயம் தலையிடலாம்.

கேசவானந்த பாரதி வழக்கில், நீதிபதி சிக்ரி (பத்தி 302) அரசிய லமைப்பின் அடிப்படைக் கூறுகளைக் கீழ்க்கண்டவாறு பட்டியலிட முனைந்தார்.

(1) அரசியலமைப்பின் மேலாண்மை
(2) குடியரசு மற்றும் மக்களாட்சி அரசுமுறை
(3) அரசியலமைப்பின் சமயச் சார்பற்ற தன்மை
(4) அதிகாரப் பிரிவினை
(5) அரசியலமைப்பின் கூட்டரசு இயல்பு

அதேவழக்கில் நீதிபதி ஹெக்டே, நீதிபதி முகர்ஜி ஆகிய இருவரும் 'இந்தியாவின் இறையாண்மையும் ஒற்றுமையும்', 'நமது அரசியல் முறையின் மக்களாட்சி இயல்பு'. 'தனிநபர் சுதந்திரம்' ஆகியவற்றையும் அரசிய லமைப்பின் அடிப்படைக் கூறுகளாகக் கருதினர். நலம் பேணும் அரசையும், சமத்துவ சமுதாயத்தையும் உருவாக்க வேண்டுமென்ற மக்களின் ஆணையை ரத்து செய்யும் அதிகாரம் நாடாளுமன்றத்திற்கு இல்லை என்று அவர்கள் கருதினர் (பத்தி 682). நமது மக்களாட்சி அரசுமுறையை சர்வாதிகார அமைப்பாகவோ, பரம்பரை மன்னராட்சி முறையாகவோ நாடாளு மன்றத்தால் மாற்றமுடியாது என்றும், மக்களவையையும் மாநிலங் களவையையும் ஒழித்துவிட அனுமதிக்க முடியாது என்றும், நீதிபதி கன்னா கூறினார். அதே போல், நம்நாட்டின் சமயச் சார்பற்ற தன்மையையும் நாம் விட்டுவிட முடியாது (பத்தி 1437).

இந்திரா நேரு காந்தி எதிர் ராஜ்நாராயண் என்ற வழக்கில் (AIR 1975 SC 2299, பத்திகள் 55 & 213), கீழ்க்கண்டவற்றை நமது அரசியலமைப்பின் அடிப்படைக் கூறுகள் என்று நீதிபதி சந்திர சூட் கூறினார்.

(1) இறையாண்மையுடைய மக்களாட்சிக் குடியரசாக இந்தியா திகழ்வது -
(2) சம அந்தஸ்தும் சம வாய்ப்புகளும்
(3) சமயச் சார்பின்மையும் மனச்சான்று சுதந்திரமும்
(4) நீதியின் ஆட்சி

அதே நீதிபதி, மினர்வா மில்ஸ் வழக்கில் தீர்ப்பளிக்கும்போது, அரசியலமைப்பைத் திருத்தும் நாடாளுமன்றத்தின் அதிகாரம்', 'நீதிப் புனராய்வு', 'அடிப்படை உரிமைகளுக்கும் நெறிமுறைக் கோட்பாடுகளுக்கும் இடையேயான சமநிலை' ஆகியவற்றையும் அரசியலமைப்பின் அடிப்படைக் கூறுகள் எனக் கூறினார்.

சில வழக்குகளில், ஒரு குறிப்பிட்ட கூறு, அரசியலமைப்பின் அடிப் படைக் கூறு ஆகுமா என்பது பற்றி நீதிபதிகளிடையே கருத்து வேறுபாடுகள் தோன்றியுள்ளன. எடுத்துக் காட்டாக, 'சுதந்திரமான மற்றும் நியாயமான தேர்தல்' அடிப்படைக்கூறு ஆகாது என தலைமை நீதிபதி ரே கருதினார்;

ஆனால் அதே வழக்கில் அது அரசியலமைப்பின் ஓர் அடிப்படைக் கூறாகும் என்று நீதிபதி கன்னா கூறினார் ( இந்திரா நேரு காந்தி வழக்கு, பத்திகள் 55 மற்றும் 213). அரசியலமைப்பின் முகப்புரையே அதன் அடிப்படைக் கூறுகளைத் தெளிவுபடுத்தும் என்ற கருத்தை நீதிபதி சந்திர சூட் ஏற்றுக் கொள்ளவில்லை (பத்தி 665). ஆனால் நீதிபதி பெக் கருத்துரைக்கும்போது, அரசியலமைப்பு ரீதியாகச் செல்லுபடியாகுமா என்று தீர்மானிக்க முகப்புரையையே பிரதானமாகக் கருதவேண்டும் என்று கூறினார். திருத்தங்களை அளவிடுவதற்குக் கூட முகப்புரையே அளவுகோலாகப் பயன்படுத்தப்படவேண்டும் என்று அவர் எண்ணினார் (பத்தி 623).

இவ்வாறாக, இதுவரை இந்த விஷயத்தில் நீதிபதிகளிடையே எந்தவிதமான கருத்தொற்றுமையும் உருவாகவில்லை. அரசியலமைப்பின் அடிப்படைக் கூறுகள் இவையென்று பட்டியலிடும் பெரும்பான்மைத் தீர்ப்பும் இதுவரை வரவில்லை. பல்வேறு வழக்குகளிலும் நீதிபதிகள் பலரும் கூறியுள்ள அடிப்படைக் கூறுகள் பட்டியலை நீதிமன்றமும் நிறைவு செய்துவிடவில்லை. “அடிப்படைக் கட்டமைப்பு என்ற கோட்பாட்டினை ஒவ்வொரு வழக்கிலும் சம்பந்தப்பட்டுள்ள திட்டவட்டமான பிரச்சினையின் அடிப்படையிலேயே தீர்மானிக்க வேண்டும்” என்று இந்திரா நேரு காந்தி வழக்கில் நீதிபதி சந்திரசூட் கருத்துரைத்தார்(பத்தி 246).

1950 ஆம் ஆண்டில் அரசியலமைப்பு நடைமுறைக்கு வந்ததில் இருந்து இதுவரை 74முறை அரசியலமைப்புத் திருத்தப்பட்டுள்ளது இவை அனைத்துமே நாடாளுமன்றத்தின் அரசியல் நிர்ணய அதிகாரத்தால் செய்யப்பட்டன.

அரசியலமைப்பைத் திருத்தும் அதிகாரம் தவறாகப் பயன்படுத்தப் பட்டிருக்கிறதா அல்லது அடிக்கடி பயன்படுத்தப்படிருக்கிறதா எனபது பற்றிப் பெருமளவுக்குக் கருத்து வேறுபாடு நிலவுகிறது. நேரு கூறியதைப் போல, ஓர் அரசியலமைப்பு எவ்வளவு சிறப்பானதாக இருந்த போதிலும், அது முழு நிறைவானதாக இருக்க முடியாது; எனவே அதனைச் செயல் படுத்தும் போது தோன்றுகின்ற குறைபாடுகளைக் களைவதற்காக அதனை மாற்ற வேண்டிய தேவை உருவாகலாம் (அரசியலமைப்பின் சிறப்புக் கூறுகள் என்ற தலைப்பின் கீழும் காண்க).

# பஞ்சாயத்து ராஜ்

## (பகுதி IX & IXA, பிரிவுகள் 243-243Z G)

73ஆவது மற்றும்74ஆவது அரசியலமைப்புத் திருத்தச் சட்டம் (1992)இன் படி பகுதி IX மற்றும் IXA ஆகிய இரு புதிய பகுதிகள் சேர்க்கப்பட்டுள்ளன. இவற்றின்படி பிரிவுகள் 243 முதல் 243 ZG வரையிலான 34 புதிய பிரிவு களையும், 11 மற்றும் 12 ஆகிய இரண்டு அட்டவணைகளையும் நாம் பெற்றிருக்கிறோம். 73ஆவது திருத்தச் சட்டம் பஞ்சாயத்துக்களுக்கும், 74ஆவது திருத்தச்சட்டம் நகராட்சிகளுக்கும் அரசியலமைப்பு ரீதியான அங்கீகாரம் வழங்குகின்றன.

பஞ்சாயத்துகள் நகராட்சிகள் ஆகியவை நீண்டகாலமாக இருந்து வருகின்றன: முற்றிலும் புதியதாக எதையும் இச்சட்டங்கள் கொண்டுவந்து விடவில்லை. உள்ளூர் அளவிலான சுய ஆட்சி அமைப்புகளும், பஞ்சாயத்து ராஜ் சட்டங்களும் இந்தியாவின் பல்வேறு பகுதிகளிலும் இருந்து வந்தன. ஆனால் துரதிருஷ்டவசமாக இந்த அமைப்புகள் நீண்ட காலத்துக்கு திருப்திகரமாக செயல்பட இயலாது போனது. பெரும்பாலும் அவை அதிகாரம் இழந்தன. இவ்விரு திருத்தச் சட்டங்களும், நம் அரசியல் கட்டமைப்பிலும் உள்ளாட்சி அமைப்புகளின் நிலையிலும் அடிப்படையான சில மாற்றங்களைச் செய்துள்ளன.

இந்த அமைப்புகளுக்கு இன்று அரசியலமைப்பு ரீதியான பாதுகாப்பு கிடைத்துள்ளது. திருத்தச் சட்டங்களின் மூலம் அரசியலமைப்பு வரையுரை களின்படி, பஞ்சாயத்துகள், நகராட்சிகளை நிறுவுவதற்காக ஏற்ற சட்டங் களை இயற்றும் அதிகாரம் மாநில சட்டமியற்றும் அவைகளுக்கு வழங்கப்பட் டுள்ளது. ஒவ்வொரு மாநிலத்திலும் கிராம-மாவட்ட அளவிலும், இவற்றுக்கு இடைப்பட்ட அளவிலும் பஞ்சாயத்துக்கள் நிறுவப்படவேண்டும். இருபது லட்சத்துக்கும் குறைவான மக்கள் தொகை கொண்ட மாநிலமாக இருந்தால் இடைப்பட்ட நிலையிலான பஞ்சாயத்து அமைப்புத் தேவையில்லை. முக்கியமாகக் கவனிக்க வேண்டியது என்னவென்றால், நீண்ட காலத்துக்கு பஞ்சாயத்துக்கள் நீக்கப்படவோ, கலைக்கப்படவோ முடியாது; ஒரு பஞ்சாயத்து கலைக்கப்பட்டால், ஆறு மாதங்களுக்குள் மீண்டும் தேர்தல் நடத்தப்பட்டாக வேண்டும். எல்லாப் பஞ்சாயத்துக்களிலும் பெண்கள், தாழ்த்தப்பட்ட சாதியினர், தாழ்த்தப்பட்ட பழங்குடியினருக்கு இட ஒதுக்கீடு

செய்யப்பட வேண்டும். எல்லா பஞ்சாயத்துகளுக்கும் பதவிக்காலம் ஐந்து ஆண்டுகளாக இருக்கும். ஒவ்வொரு பஞ்சாயத்துக்கும் சொந்த வரவுசெலவுத் திட்டம், விரிவிதிப்பு அதிகாரம் மற்றும் அதன் அதிகார எல்லைக்குள் அடங்கக் கூடிய விஷயங்களும் உண்டு. அந்தந்தப் பகுதிக்குள் தேவையான வளர்ச்சித் திட்டங்கள் போடவும், செயல்படுத்தவும் இயலும். பஞ்சாயத்துத் தேர்தல்களை நடத்துவதற்காக ஒவ்வொரு மாநிலத்திலும் மாநில தேர்தல் ஆணையர் ஒருவர் இருப்பார்; பஞ்சாயத்துக்களின் பொருளாதார நிலைமையைப் பற்றிக் கவனிக்க ஐந்தாண்டுகளுக்கு ஒருமுறை மாநில நிதி ஆணையம் அமைக்கப்படும்.

அதேபோல் 74ஆவது திருத்தச் சட்டத்தின்படி நகர் பாலிகா மற்றும் நகர பஞ்சாயத்துகள் அமைக்க வகை செய்யப்பட்டது. 73ஆவது திருத்தச் சட்டத்தை ஒத்ததாக—இட ஒதுக்கீடு, தேர்தல், வரிவிதிப்பு அதிகாரம், வளர்ச்சித் திட்டங்கள் மேற்கொள்ளல், நிதி ஆணையம் அமைத்தல் போன்ற அனைத்தும்—நகர பஞ்சாயத்துக்கான 74 ஆவது திருத்தச் சட்டத்திலும் ஏற்படுத்தப்பட்டுள்ளன.

அதேபோல் ஓராண்டுக்குள் அனைத்து மாநிலங்களுக்கும் அரசியலமைப்பு வகையுரைகளின்படி சட்டங்களை இயற்றியுள்ளன. சில மாநிலங்களில் உள்ளாட்சி அமைப்புகளுக்கான தேர்தல்கள் நடைபெற்று முடிந்தன, சிலவற்றில் நடைபெற உள்ளன. விதிவிலக்காக, ஓரிரு மாநிலங்களில் மட்டுமே 1995 மார்ச்சுக்குப்பின் தேர்தல்கள் நடைபெறும்.

புதிய பஞ்சாயத்து-நகராட்சி அமைப்புகள் மூலம், மக்களாட்சியில் பங்கேற்பு என்ற முறையிலும், அதிகாரம் எவரிடம இருக்க வேண்டுமோ அவருக்குக் கிடைக்கிறது என்ற முறையிலும், புதிய யுகம் பிறக்கிறது என நம்பலாம்.

# 23

# தற்காலிக ஏற்பாடுகள், சிறப்பு ஏற்பாடுகள் மற்றும் சில பிரிவுகள்

## (பகுதி XVI, XIX, XII - பிரிவுகள் 330-342, 361-367, 369-392)

### சில பிரிவினருக்கான சிறப்பு ஏற்பாடுகள்

மக்கள் அனைவருக்கும் சமூக நீதியும் பொருளாதார நீதியும் கிடைக்கச் செய்யவேண்டும் என்ற நோக்கிலும், பொருளாதார மக்களாட்சியை ஏற்படுத்த வேண்டும் என்ற நோக்கிலும், சமுதாயத்தின் நலிவடைந்த பிரிவினர் மற்றவர்களுக்குச் சமமான அந்தஸ்தை எட்ட உதவுவதற்காக அரசியலமைப்பில் சில ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. ஆதி திராவிடர்களுக்கும் பழங்குடியின மக்களுக்கும் சிறப்புப் பாதுகாப்புகள் அளிக்கப்பட்டுள்ளன; நாடாளுமன்றத்திலும், சட்டமன்றத்திலும், அரசுப் பணிகளிலும் அவர்களுக்கு இட ஒதுக்கீடுகள் செய்யப்பட்டுள்ளன.

ஆதி திராவிட வகுப்பையோ, பழங்குடி வகுப்பையோ அரசியலமைப்பு வரையறுக்கவில்லை. சம்பந்தப்பட்ட மாநில ஆளுநருடன் கலந்தாலோசித்து இந்த வகுப்பினரை இனங்கண்டு, அது பற்றிய அறிவிக்கையைக் குடியரசுத் தலைவரே வெளியிடுவார். பல்வேறு மாநிலங்களிலும் உள்ள ஆதி திராவிடர், பழங்குடியினர் பற்றிய பல்வேறு ஆணைகளைக் குடியரசுத்தலைவர் வெளியிட்டுள்ளார். அந்த ஆணைகளை நாடாளுமன்றமும் 341, 342 ஆகிய இரண்டு பிரிவுகளில் வழங்கப்பட்டுள்ள அதிகாரத்தின்படி திருத்தியுள்ளது.

அவ்வப்போது திருத்தப்பட்ட 334ஆவது பிரிவின்படி, அரசியலமைப்பு நடைமுறைக்கு வந்ததில் இருந்து ஐம்பது ஆண்டுகளுக்கு மக்களவையிலும், மாநிலச் சட்டப்பேரவைகளிலும் ஆதி திராவிடர்களுக்கும், பழங்குடியினருக்கும் இட ஒதுக்கீடு செய்ய வேண்டும் என்றும், ஆங்கிலோ-இந்திய சமூகத்தினருக்குப் பிரதிநிதித்துவம் அளிக்க வேண்டும் என்றும் ஏற்பாடு செய்யப் பட்டுள்ளது. மக்கள் தொகையில் ஆதிதிராவிடர் மற்றும் பழங்குடியினரின் விகிதாசசாரத்தைப் பொறுத்து அவர்களுக்கான இட ஒதுக்கீடு அமைய வேண்டும். ஆங்கிலோ-இந்திய சமூகத்தைச் சேர்ந்தவர்களுக்கு உரிய பிரதிநிதித்துவம் இல்லையென்றால் அச்சமூகத்தில் இருந்து மக்களவைக்கு அதிகபட்சம் இரண்டுபேரைக் குடியரசுத்தலைவரும், மாநிலச் சட்டப் பேரவைக்கு ஒருவரை ஆளுநரும் நியமிக்கலாம் (பிரிவுகள் 331,

334). ஆதிதிராவிடர்களுக்கும் பழங்குடியினருக்கும் என்று தொகுதிகள் ஒதுக்கீடு செய்யப்பட்டாலும், வாக்காளர்கள் பொதுவானவர்களே; அதாவது சாதி, சமய வேறுபாடுகளின் அடிப்படையில் தனியான வாக்காளர்கள் பட்டியல் கிடையாது. ஆதிதிராவிடர்கள் மற்றும் பழங்குடியினருக்கான ஒதுக்கீடுகூட, அவர்கள் மற்றவர்களுக்கு இணையாக முன்னேறுகிற வரைக்கும் ஒரு குறுகிய காலத்திற்கு மட்டுமே இருக்கும் என்று கூறப்பட்டது. ஆனால் ஒவ்வொரு முறையும் இட ஒதுக்கீடு முடிவுக்கு வரும்போது சம்பந்தப்பட்ட பிரிவைத் (பிரிவு 334) திருத்துவதன் மூலம். அதனை நீட்டிக்க அரசாங்கம் வகை செய்கிறது. கடைசியாக 62ஆவது திருத்தத்தின்படி 'ஐம்பதாண்டுகளுக்கு' அதாவது கிபி.2000வரை இட ஒதுக்கீட்டை நீட்டிக்க வகை செய்யப்பட்டுள்ளது.

அரசாங்கப் பணிகளுக்கு ஆளெடுக்கும்போது, நிர்வாகத் திறமையை விட்டுக்கொடுக்காமல், ஆதிதிராவிடர்கள் மற்றும் பழங்குடியினரின் கோரிக்கைகளுக்கும் செவிசாய்க்க வேண்டுமென பிரிவு 335 கூறுகிறது. ஆதிதிராவிடர்கள மற்றும் பழங்குடியினருக்கான தேசியக்கமிஷன் ஒன்றை ஏற்படுத்த வேண்டுமென பிரிவு 338 கூறுகிறது.

'சமூக ரீதியாகவும் பொருளாதார ரீதியாகவும் பின்தங்கிய பிரிவினரின்' நிலைமைகளை ஆராய்ந்து அவர்களுடைய இன்னல்களைப் போக்கவும், அவர்களுடைய நிலைமையை மேம்படுத்தவும், பின்தங்கிய பிரிவினர் கமிஷன் ஒன்றை நியமிக்க பிரிவு 340 குடியரசுத் தலைவருககு அதிகாரம் அளிக்கிறது. சமூதாய ரீதியாகப் பினதங்கிய நிலைமைக்குச் சாதி உள்ளிட பல்வேறு காரணங்கள் இருக்கலாம் என்றும், சாதியை மட்டுமே அடிப்படையாகக் கொண்ட பிரிவினை சட்டப்படியானது இல்லை என்றும், உச்சநீதிமன்றம் தீர்ப்பளித்திருக்கிறது (ஜானகி பிரசாத் எதிர் ஜம்மு-கஷ்மீர் அரசு, AIR 1973 SC 930). அண்மையில் மண்டல் வழககில், அரசுப் பணிகளில் பின்தங்கிய பிரிவினருக்கான 27 சதவீத இட ஒதுக்கீடு செல்லுபடியாகும் என்றும், பின்தங்கிய பிரிவினர்களிலேயே முன்னேறிய பிரிவினருக்கு (Creamy Layer) இட ஒதுக்கீடு கூடாது எனறும், மொத்த இட ஒதுக்கீடு எண்பது சதவீதத்தைத் தாண்டக்கூடாது என்றும் உச்சநீதி மன்றம் தீர்ப்பளித்தது. (அடிப்படை உரிமைகள் அத்தியாயத்தின் கீழும் காண்க).

## பிற ஏற்பாடுகள்

ஒன்றியத் தலைவரையும் (குடியரசுத் தலைவர்), மாநிலங்களின் தலைவர்களையும் (ஆளுநர்கள்), அவர்கள் தமது கடமையைச் செய்யும்போது மேற்கொள்ளும் நடவடிக்கைகளுக்காக நீதிமன்றங்களின்முன் தனிப்பட்ட முறையில் பதில் அளிக்க வேண்டிய பொறுப்பில் இருந்தும், அவர்கள் பதவியில் இருக்கும்போது அவர்களுக்கு எதிராகக் குற்றவியல் வழக்குகளைத் தொடருவதில் இருந்தும், எந்த ஒரு நீதிமன்றமும் கைது செய்யப்படுவதற்கான உத்தரவு பிறப்பிக்கப்படுவதில் இருந்தும். எழுத்து மூலமாகக் குறைந்த பட்சம் இரண்டு மாத கால அவகாசம் அளிக்காமல் ஏதேனும் நிவாரணம்

வேண்டி உரிமையியல் வழக்குத் தொடர்வதில் இருந்தும் பாதுகாப்பு அளிக்கப் பிரிவு 361 வகை செய்கிறது.

ஒன்றியத்தின் கௌரவத்திற்கும் மாநிலங்களின் கௌரவத்திற்கும் பிரதிநிதிகளாக உள்ள குடியரசுத்தலைவர், ஆளுநர் பதவிகளுக்கு உரிய கௌரவத்தையும், உயரிய அந்தஸ்தையும் போற்றிக் காப்பதற்காகவே அந்தப் பிரிவு உள்ளது. அவர்கள் அரசியலமைப்பின பாதுகாவலர்களாகவும், ஆணையுரிமையின் அடையாளமாகவும் திகழ்கின்றனர்.

குடியரசுத் தலைவர் நிலையில் ஏதேனும் தவறு நடந்தால், 61ஆவது பிரிவின்படி நாடாளுமன்றத்தில் குற்றச்சாட்டுத் தீர்மானம் நிறைவேற்றி குடியரசுத் தலைவரைப் பதவியிலிருந்து நீக்குவதுதான் அதற்குரிய தீர்வழியாகும். மாநில ஆளுநர்கள குடியரசுத் தலைவர் விரும்புகின்றவரையில் மட்டுமே பதவியில் இருக்கமுடியும்

நாடாளுமன்றம் மற்றும் மாநிலச் சட்டமன்றங்களின நடவடிக்கை களைச் செய்தித்தாள்களில் வெளியிடுவதற்குப் பாதுகாப்பு அளிப்பதற்காக, 44ஆவது திருத்தத்தின் மூலம் 361 A என்ற புதிய பிரிவு சேர்க்கப்பட்டது சட்டமியற்றும் அவைகளின் நடவடிக்கைகள சிறப்புரிமை பெற்றவை யாதலால், சம்பந்தப்பட்ட அவையின் முன் அனுமதி பெறாமல அவற்றைப் பிரசுரிக்க முடியாது. சட்டமியற்றும் அவைகளின் ரகசியக் கூட்டங்களைத தவிர, மற்றவற்றின் நடவடிக்கைகள் பற்றி நல்லெண்ணத்துடன, உண்மையான முறையில் செய்தித்தாளகளில் பிரசுரம் செய்தமைக்காக எந்த ஒரு நபர் மீதும் நடவடிக்கை எடுக்க முடியாது என பிரிவு 361 A கூறுகிறது. வானொலி ஒலி பரப்புகளுக்கும் இந்தப் பாதுகாப்புப் பொருந்தும்

இந்திய அரசாங்கம் அல்லது அதற்கு முன் இருந்த அரசாங்கத்திற்கும சுதேசி சமஸ்தான மன்னர்களுக்கும் இடையேயான ஒப்பந்தங்கள், உடன் படிக்கைகள போன்றவற்றின் அடிப்படையில் தோன்றும் தகராறுகளில் நீதிமன்றங்கள் தலையிடக்கூடாது என்று பிரிவு 363 தடைசெய்கிறது

மன்னர் மானிய முறையும், மன்னர்களின் சிறப்புரிமையும் ஒழிக்கப் பட்டதற்குப் பிரிவு 363 அரசியலமைப்பு ரீதியான அங்கீகாரத்தை அளிக்கிறது.

நாட்டின் முக்கியத் துறைமுகங்கள் மற்றும் விமான நிலையங்களுக்கு எந்த ஒரு சட்டமும் பொருந்தாது என்று விதிவிலக்கு அளிக்கும் அதிகாரத்தைக் குடியரசுத் தலைவருக்குப பிரிவு 364 வழங்குகிறது.

ஒன்றியத்தின் உத்தரவுகளுக்குப் பணிந்து எந்த ஒரு மாநிலமேனும் செயல்படவில்லை என்றால், அரசியலமைப்பின்படி அம்மாநில நிர்வாகத்தை நடத்திச்செல்ல முடியாத நிலை உருவாகி விட்டது என்று குடியரசுத்தலைவர் தீர்மானித்தது, பிரிவு 356-ன்கீழ் அம்மாநிலத்தில் குடியரசுத்தலைவர் ஆட்சியைப் பிறப்பிக்கலாம் என்று பிரிவு 365 கூறுகிறது (அவசரநிலை ஏற்பாடுகள் என்ற அதிகாரத்தின் கீழ்க்காண்க).

பிரிவு 366, வரையறைகள் வழங்கும் பிரிவாகும். அரசியலமைப்பில் பயன்படுத்தப்பட்டுள்ள பல்வேறு சொற்களுக்கு இப்பிரிவு விளக்கம் தருகிறது.

பிரிவு 367, விளக்கமுரைக்கும் பிரிவாகும். பொதுவாக அரசிய

லமைப்புக்கு விளக்கமுரைக்கும் போது பொது சட்டத்தினபடியே பொருள் கொள்ள வேண்டும் என்றும், சட்டங்கள் என்று குறிப்பிடும்போது குடியரசுத் தலைவர் அல்லது ஆளுநர் பிறப்பிக்கும் அவசரச் சட்டங்களையும் குறிக்கும் என்றும், அரசியலமைப்பில் குறிப்பிடப்பட்டுள்ள 'அன்னியநாடு' என்பது இந்தியாவைத் தவிர எந்த ஒரு வெளிநாட்டையும் குறிக்கும் என்றும், ஆனால் எந்த ஒரு நாட்டையும் அன்னிய நாடாகக் கொள்ள வேண்டாம் என்று குடியரசுத் தலைவர் அறிவிக்கலாம் என்றும், இப்பிரிவு கூறுகிறது.

## தற்காலிக மற்றும் சிறப்ப ஏற்பாடுகள்

நமது அரசியலமைப்பில இடம் பெற்றுள்ள சில தற்காலிக மற்றும் இடைப்பட்ட காலத்திற்கான ஏற்பாடுகள் ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு மட்டுமே; அவை ஏற்கெனவே காலாவதியாகிவிட்டன. எடுத்துக்காட்டாக, மாநிலப் பட்டியலில் உள்ள விஷயங்கள் குறித்து பிரிவு 369-ன்படி நாடாளுமன்றம் சட்டமியற்றும் அதிகாரம் ஐந்தாண்டுகளுக்கு மட்டுமே இருநதது அதேபோல, பிரிவு 373-ன் கீழ் தடுப்புக்காவலில் வைப்பதற்கான குடியரசுத்தலைவரின் அதிகாரம் ஓராணடுக்கு மட்டுமே இருந்தது.

மிகவும் முக்கியமானதும், அரசியல ரீதியாக பெரிதும் சர்ச்சைக்கு உள்ளானதுமான ஏறபாடு, பிரிவு 370-ல் இடம்பெற்றுள்ள, 'ஜம்மு-கஷ்மீர் மாநிலத்திற்கு உரிய தற்காலிக ஏற்பாடுகள்' ஆகும். ஜம்மு-கஷ்மீர் மாநிலம் இந்தியாவுடன் சேர்ந்த இணைப்புப் பத்திரத்தில குறிப்பிடப்பட்டுள்ள சில விஷயங்களுக்கு மட்டுமே நாடாளுமனறம் சட்டம் இயற்றலாம் என்றும், அந்த மாநிலததின் ஒபபுதலைப் பெற்றே ஏனைய சடடஙகளை அங்கே அமல்படுத்தலாம் எனறும் அப்பிரிவு கூறுகிறது

நாகலாந்து, அசாம, மணிப்பூர், ஆந்திரப்பிரதேசம், சிக்கிம், மிஜோரம் அருணாசலப் பிரதேசம், கோவா ஆகிய மாநிலங்களுக்கான சிறப்பு ஏற்பாடுகள், 371லிருந்து 371-Iவரையிலான பிரிவுகளில் இடம் பெறறுளளன. இம்மாநிலங்களின வட்டார மற்றும் பழங்குடிப் பகுதிகளின் தேவைகளை நிறைவு செய்யவும், அப்பகுதி மக்களின் நலனைப் பாதுகாக்கவும், இந்த ஏற்பாடுகள் செயயப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக, சமயங்கள், சமூகப் பழக்கங்கள், பரம்பரையான சட்டதிட்டங்கள, நில உரிமை போன்றவற்றைப் பாதிக்கும் வகையில நாடாளுமன்றம் இயற்றும் சட்டங்கள நாகாலாந்துக்கு பொருந்தா. நாகாலாந்து ஆளுநருக்குச் சில விசேஷப் பொறுப்புகளும் உண்டு.

ஏற்கெனவே அமலில் உளள சட்டங்கள் தொடர்ந்து நீடிகக பிரிவு 372 வகை செய்கிறது. அரசியலமைப்பு அமலுக்கு வருமுன்னர் இருந்த சட்ட விதிகளை அரசியலமைப்பின் வகையுரைகளுக்கு ஏற்ப மாற்றியமைத்துக் கொள்ள பிரிவு 372A குடியரசுத்தலைவருக்கு அதிகாரம் அளிக்கிறது. அரசியலமைப்பு அமலுக்கு வரும் முன்னர் இருந்த சமஷ்டி நீதிமன்றம், உயர்நீதிமன்றங்கள் ஆகியவற்றின் நீதிபதிகள், நிலுவையில் இருந்த வழக்குகள், தலைமைக்கணக்குத் தணிக்கையர், அரசுப் பணியாளர் தேர்வாணையங்கள, ஆந்திரப்பிரதேச சட்டப்பேரவையின் பதவிக்காலம் போன்றவை குறித்த

தற்காலிக ஏற்பாடுகள் 374லிருந்து 378A வரையான பிரிவுகளில் இடம் பெற்றுள்ளன.

அரசியலமைப்பு செயல்முறைக்கு வருவதில் ஏதேனும் இடர்ப்பாடுகள் இருந்தால் அவற்றை நீக்குவதற்கு பிரிவு 392 குடியரசுத்தலைவருக்கு அதிகாரம் அளிக்கிறது.

# 24

# நடைமுறையில் நமது அரசியல் சட்டம், பரிசீலனைக்கு சில பரிந்துரைகள்

இந்தியாவைப் போன்ற பரந்துபட்ட வேற்றுமைகள் நிறைந்த ஒரு நாட்டில், அனைவருக்கும் ஏற்புடைய ஓர் அரசியலமைப்பை இயற்றி ஏற்றுக் கொள்ளச் செய்வது எளிமையான பணி அன்று. ஒருவாறாக உருவாக்கப்பட்ட நமது அரசியலமைப்பு, மக்களாட்சி, சமத்துவ சமுதாயம், சமயச்சார்பின்மை, நீதியின் ஆட்சி ஆகியவற்றை வலியுறுத்துவதாக, இடையறவுபடாது உயிர்த் துடிப்புடன் இயங்குகின்ற நவீன அரசியல் முறையைக் கொண்டதாக விளங்குகிறது. சோஷலிச சமுதாய அமைப்பை உருவாக்குவதற்காகத் திட்டமிட்ட வளர்ச்சிக்கு முக்கியத்துவம் அளிக்கப்படுகிறது. அடுத்தடுத்து நிறைவேற்றப்பட்ட ஐந்தாண்டுத் திட்டங்களின்மூலம் ஏழை மக்களையும், அடித்தட்டு மக்களையும் மேம்படுத்துவதற்கும், அறிவியல்-தொழில் நுட்பக் கட்டமைப்புகளை உருவாக்குவதற்கும், விவசாயத்துறையில் புரட்சிகரமான மாற்றத்தை ஏற்படுத்தவும், தொழில்துறையை வேறுதிசையில் திருப்பி உற்பத்தித் திறனையும் உற்பத்தியையும் பெருக்கவும், பல முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

பல சாதனைகளையும் நாம் படைத்திருக்கிறோம். சுமார் 600-க்கும் மேற்பட்ட சுதேசி சமஸ்தானங்களை இந்தியாவுடன் இணைத்தது, அகதிகளுக்குக் குடியேற்றம் தந்தது, ஜமீன்தாரி முறையை ஒழித்துவிட்டுப் பல புதிய நிலச்சீர்திருத்தங்களைக் கொண்டுவந்தது, ஹைதராபாத் மற்றும் ஜம்மு-கஷ்மீர் ராஜ்யங்களை இந்தியாவுடன் இணைத்தது, நம்மிரு அண்டை நாடுகளிடமிருந்து வந்த பல்வேறு படையெடுப்புகளைச் சமாளித்தது, அணிசேராமை மற்றும் அமைதி வாழ்வு என்ற கோட்பாடுகளின் அடிப்படையிலான வெளிநாட்டுக் கொள்கையை உருவாக்கியது, (ஒரு சமயத்தில் நூறுக்கும் மேற்பட்ட நாடுகள் இந்தியாவின் கொள்கையையும் தலைமையையும் ஏற்றுக்கொண்டிருந்தன) உலகத்திலேயே மிகப்பெரிய மக்களாட்சி முறையான நமது நாட்டில் பொதுத்தேர்தல்களை நடத்தி, பல சமயங்களில் ஒரு கட்சியிடமிருந்து இன்னொரு கட்சிக்கு அமைதியான முறையில் ஆட்சிமாற்றங்களைச் செய்தது, உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் இருந்து தீயசக்திகள் தோற்றுவித்த பல இன்னல்களையும் நெருக்கடிகளையும் சமாளித்து தலைதூக்கி நிற்பது போன்றவற்றை நாம் பெருமையுடன் நமது சாதனைகளாகக் குறிப்பிடலாம்.

அரசியல் ரீதியாகப் பார்த்தால் மற்ற விவரங்களை எல்லாம் தள்ளி விட்டு, இருபெரும் மகத்தான சாதனைகளை நாம் நிகழ்த்தியுள்ளோம் என்று துணிந்து கூறலாம். அதாவது, (1) நமது நாட்டில் ஒற்றுமையையும் ஒருமைப் பாட்டையும் உருவாக்கி அவற்றைத் தொடர்ந்து பேணிக்காத்து வருவதுடன், நமது அரசியலின் சமயச்சார்பற்ற தன்மையையும நாம் போற்றிக் காத்து வருகிறோம். (2) பிரதிநிதித்துவ நாடாளுமன்ற மக்களாட்சி முறையைத் தக்கவைத்துக்கொண்டு, தனிமனிதனின் கண்ணியத்தையும் சுதந்திரத்தையும் உறுதிப்படுத்தி வருகிறோம். நம்மைச் சுற்றியுள்ள உலக நாடுகளில் ஒரு சில நாடுகளில் மட்டுமே உண்மையான சுதந்திரமும் மக்களாட்சி முறையும் செயல்பட்டு வருவதைப் பார்க்கும்போது நம்முடைய இந்தச் சாதனைகள் இன்னும் மகத்தானவையாகத் தோன்றுகின்றன ஒரு சில தற்காலிகத் தோல்விகளைத் தவிர நம்மை எதிர்கொண்ட பிரச்சினைகள் எவையானாலும் அவற்றையெல்லாம் நம்முடைய அமைப்புக்குள்ளேயே தீர்த்திருக்கிறோம்; அல்லது தீர்க்க முயனறிருக்கிறோம் என்பதிலே நாம் நிச்சயம பெருமிதம் கொள்ளலாம்.

எனினும் எதிர்மறையான இனனொரு பக்கமும் இருக்கிறது நிகழ்காலம் பெரிதும் மகிழ்வூட்டுவதாக அமையவில்லை. அதிலும் குறிப்பாக எல்லாத் துறைகளிலும் தொழில்களிலும் மாண்புகள் வீழ்ச்சியடைவதையும், வகுப்புக் கலவரங்கள், சாதிக்கலவரங்கள, மொழிப்போராட்டங்கள், இனப போராட்டங்கள், வட்டாரப்போராட்டங்கள், பயங்கரவாத நடவடிக்கைகள, தேர்தல்களில் ஆள்பலமும் பணபலமும் பயன்படுத்தப்படுவது (குற்ற வாளிகளை அரசியலாக்குவதும் அரசியலை குற்றவாளிகள் மயமாக்குவதும என்று பிரதமர் ராவ் கூறியதைப்போல) போன்றவறறையும், சட்டமியற்றும் அவைகள் சிலவற்றில் நடைபெறும் காட்சிகளையும், சாதியம், வகுப்புவாதம், போன்ற பிரிவினைச் சக்திகள் இங்குமங்கும் தலையெடுப்பதையும் காணுமபோது நாம் மிகவும் மருண்டு போய் விடுகிறோம்.

எந்த ஒரு பிரதிநிதித்துவ மக்களாட்சி அமைப்பானாலும், ஸ்திரத் தன்மையும் பொறுப்புடைமையுமே நாம் பெரிதும் அக்கறை கொளளும் இரண்டு முக்கிய விஷயங்களாகும். அதாவது, மக்களின் பாதுகாப்புக்கும், முன்னேற்றத்திற்கும், நலனுக்கும், தேவையான பலமும் ஸ்திரத்தன்மையும் கொண்டதாக அரசு இருப்பதுடன், அரசாங்கத்தை நடத்திச் செல்பவர்கள் மக்களுக்கும் மக்கள் பிரதிநிதிகளுக்கும் பொறுப்புடையவர்களாகவும் இருக்க வேண்டும்.

நமது அரசியலமைப்பை உருவாக்கியவர்கள் தன்னிச்சையான காலனியாதிக்க ஆட்சியின் மோசமான அனுபவங்களைப் பெற்றிருந்தனர். அந்த ஆட்சிமுறை மக்களைப் பிரதிநிதிப்படுத்துவதாகவோ, அவர்களுடைய தேவைகளையும் விருப்பங்களையும் நிறைவு செய்வதாகவோ இருக்கவில்லை இந்திய மக்களின் எந்த ஒரு பிரதிநிதித்துவ அமைப்புக்கும் பொறுப்புடைய தாகவும் அது இருக்கவில்லை. எனவேதான் நமது அரசியலமைப்பை உருவாக்கியவர்கள், மற்ற எல்லாவற்றையும்விட 'நிர்வாகத்தின் பொறுப் புடைமையையே' நமக்குப் பரிசாக அளிக்க விரும்பினர்.

எனவேதான், அமைச்சரவையின் பொறுப்புடைமையுடன்கூடிய நாடாளுமன்ற முறையை அவர்கள் ஏற்றுக் கொண்டனர். ஆயினும், அமைச்சரவையின் பொறுப்புடைமை என்பது, பொதுமக்களுக்கு எந்த விதமான பொறுப்பும் இல்லாததாகப் போய், கட்சித் தாவல்களையும், மக்கள் பிரதிநிதிகளின் சபையில் தற்காலிகப் பெரும்பான்மையையும், நம்பிக்கையற்ற நிலையில் எதிர்பார்த்தே ஆட்சி தொடரவேண்டிய நிலைஉருவாகும் என்று அவர்கள் முன்கூட்டியே ஊகித்தறியவில்லை.

கட்சித்தாவல் தடை மசோதாவின் பினனிணைப்பான நோக்கங்களும் காரணங்களும் பலவாறாகப் பிரஸ்தாபித்துச் சொல்லவில்லை என்றாலும், அதனுடைய பிரதான நோக்கம் அரசாங்கத்தில் ஏற்படும் ஸ்திரமற்ற தன்மையைத் தடுத்து நிறுத்துவதே ஆகும். ஒன்றிய அளவில் சிலகாலம் அம்முயற்சி வெற்றிபெற்றது. ஆனால் சிலகாலததிறகுப் பின்னர் ஒன்றிய அளவிலும், மாநிலங்கள் அளவிலும், நிலைமை வெகுவாக மாறிவிட்டது. கட்சித்தாவல் தடைச்சட்டத்தால் கட்சித்தாவல்களைத் தடுக்கமுடியவில்லை. இணைப்பு எனறும் பிளவு என்றும் தகுதி பெறுவதற்குக் கூட்டம் கூட்டமாகக் கட்சி மாறவேண்டும் என்று ஆகிவிட்டது. மக்கள பிரதிநிதிகளின் முக்கியமான சிறப்புரிமையான சுதந்திரமாக வாக்களிககும் உரிமையையும் பத்தாவது அட்டவணை பறித்துவிட்டது. ஜனதாதள் கட்சி பிளவுபட்ட வழக்கில் மக்ககளவைத தலைவர் சிவராஜ் பாடீல் குறிப்பிட்டதுபோல், நாடாளுமன்றத்திற்கு வெளியே ஒவ்வொரு சாதாரண குடிமகனுக்கும் இருக்கக்கூடிய சுதந்திரமாக வாக்களிககும் உரிமையைக்கூட, மக்கள் பிரதிநிதிகளிடம் இருந்து கட்சித்தாவல் தடைச்சட்டம் அபகரித்துவிட்டது. தமது கட்சிக்கொறடாவின் உத்தரவுப்படியே நாடாளுமன்ற உறுப்பினர்கள் வாக்களிக்க வேண்டும்; இல்லையென்றால் அவர்கள் பதவியை இழக்க நேரிடும்.

அமெரிக்காவின் குடியரசுத்தலைவர் ஆட்சிமுறையில் நிர்வாகம் மிகவும் ஸ்திரமாக இருக்கும். ஏனெனில் நாட்டின் தலைவரும், தலைமை நிர்வாகியுமான அதிபர் நான்காண்டு காலத்திறகுத் தேர்ந்தெடுக்கப்படுகிறார்; அவருடைய தனிப்பட்ட ஒழுக்கக கேட்டுக்காக மட்டுமே குற்றச்சாட்டு நடவடிக்கை மூலம் அவரைப் பதவியிறக்க முடியும். அமெரிக்க நாடாளு மன்றத்தின் இரண்டு அவைகளுக்கும் அதிபர் பொறுப்புடையவராக இல்லை என்றாலும், நான்காண்டுகளுக்கு ஒருமுறை நேரிடையாக அவர் மக்களுக்குப் பொறுப்புடையவராகிறார்.

பல்வேறு வகையான அரசியல் முறைகளை ஒருங்கிணைத்து அமைச் சரவையின் பொறுப்புடைமையுடன் கூடிய நாடாளுமன்ற முறையும், அதன்மீது திணிக்கப்பட்ட அசைக்க முடியாத அதிபர் முறையும் சேர்ந்த கலவை ஆட்சிமுறையைப் பிரான்ஸ் செயல்படுத்தி வருகிறது. அங்கே பிரதம மந்திரியின் தலைமையில் அமைச்சர்கள் தேசிய சட்டப்பேரவைக்குப் பொறுப்புடையவர்கள்; அதிபரை மக்களே நேரிடையாக ஏழாண்டுகளுக்குத் தேர்ந்தெடுக்கின்றனர்; அதிபர் தேர்தலில் வெற்றிபெற ஐம்பது சதவீதத்திற்கும் அதிகமான வாக்குகளைப் பெறவேண்டும்.

நாட்டின் பொருளாதாரத்தைப் பாதிக்கின்ற வகையில் அண்மைக்

காலத்தில் இந்தியாவில் ஏற்பட்டு வருகின்ற மாற்றங்கள், பிரதிநிதித்துவ அமைப்புகள் மூலம் நிர்வாகம் மக்களுக்கு நேரிடையாகப் பொறுப்புடையதாக மாறவேண்டிய அவசியத்தை வலியுறுத்துகின்றன. இன்னொரு புறத்தில், அடுத்தடுத்து உருவான பல ஊசலாடும் நாடாளுமன்றங்களும் மற்றும் மாநிலச் சட்டமன்றங்களும், சிறுபான்மை அரசுகளும், அடிக்கடி வந்த பொதுத்தேர்தல்களும், ஸ்திரத்தன்மையைப் பெரிதும் கேள்விக்குரியதாக ஆக்கிவிட்டன.

மக்களாட்சி அல்லது ஸ்திரத்தன்மை-இவற்றில் ஏதேனும் ஒன்றைத் தேர்ந்தெடுக்க வேண்டி வந்தால் எதைத் தேர்ந்தெடுப்பீர்கள் என்று ஆர்னால்டு டாயின்பீயிடம் ஒருமுறை வினவியபோது, "என்னுடைய தேர்வு துக்கரமானதாக இருக்கலாம்; நிச்சயம் ஸ்திரத்தன்மையையே நான் தெரிவு செய்வேன்" என்று, புகழ்பெற்ற அந்த வரலாற்றாசிரியர் பதிலுறுத்தார். எனினும் இந்தக் கருத்தை ஏற்காமல், பொறுப்புடைமை என்பது நீர்த்துப் போய்விட நாம் விரும்பவில்லை. எனவே, இப்போதுள்ள நாடாளுமன்ற முறையிலேயே ஸ்திரத்தன்மையை மேலும் உறுதிப்படுத்துவதற்குரிய வழிவகைகளை நாம் கண்டறிய வேண்டும். பெரும்பொருள் செலவையும், பிற விளைவுகளையும் ஏற்படுத்துகின்ற பொதுத் தேர்தல்களை நாம் அடிக்கடி எதிர் கொள்ளமுடியாது என்பதை அனைவரும் ஒப்புக் கொள்வர்.

அறிஞர்களும், நீதித்துறை நிபுணர்களும், பொதுவாழ்வில் ஈடுபட்டுள்ளோரும் நமது அரசியலமைப்பை மீள்பார்வையிட, திட்டவட்டமான பல யோசனைகளைத் தெரிவித்துள்ளனர். அவை அனைத்துமே ஒன்றுக்கொன்று ஒத்திசைவானவையாகவோ, ஏற்றுக் கொள்ளக்கூடியவையாகவோ, இல்லாமல் இருக்கலாம்; ஆனால் அரசியலமைப்பு சம்பந்தப்பட்ட நமது சிந்தனைகளைக் கிளறுபவையாக அவை இருக்கும். அந்த யோசனைகளில் சிலவற்றைக் கீழ்க்கண்டவாறு சுருக்கி வரையலாம்.

1. கட்சித்தாவல் தடைச்சட்டம், ஸ்திரமற்ற தன்மையைத் தடுத்து நிறுத்துவதில் தோல்வியடைந்த பின்னர் அதனை ஏன் முற்றிலுமாக ஒழித்துக்கட்டக் கூடாது? பொறுப்புடைமையை நீர்த்துவிடாமல் அரசாங்கத்தின் ஸ்திரத்தன்மையை மேலும் உறுதிப்படுத்துகின்ற வகையில், வேறு ஏதேனும் திருத்தங்களைச் செய்து, பத்தாவது அட்டவணையைத் தேவையற்றதாக ஆக்கிவிட முடியுமா என்று அரசியலமைப்பை இன்னொரு முறை ஆழ்ந்து நோக்க வேண்டும்.
2. ஜெர்மனியில் உள்ளது போன்று அமைச்சரவை மீது ஆக்கப்பூர்வமான நம்பிக்கையில்லாத் தீர்மானத்தை மட்டும் கொண்டுவர வேண்டும் என்று விதிக்கலாம். அப்படியானால், பதவியிலிருக்கும் பிரதமரைத் தூக்கியெறிகின்ற அதே சமயத்தில் மாற்று அமைச்சரவையைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பு மக்களவைக்கு வந்துவிடும்.
3. அடிக்கடி ஆட்சிகள் மாறினால், இந்தியாவில் உள்ள பல பிரச்சினைகளுக்குத் தீர்வு காணவே முடியாது. தற்போதுள்ள விதிகளின்படி, நாடாளுமன்றத்தின் ஒரு கூட்டத்தொடரில், ஒருமுறைக்கு மேல் அமைச்சரவை மீது நம்பிக்கையில்லாத் தீர்மானத்தைக் கொண்டு

| | | |
|---|---|---|
| Positive Right | - | உடன்பாட்டு உரிமை |
| Preamble | - | அரசியல் சட்ட முகப்புரை |
| Presidential Ordinance | - | குடியரசுத்தலைவர் பிறப்பிக்கும் அவசரச்சட்டம் |
| Preventive detention | - | தடுப்புக் காவல் |
| Proclomation of Emergency | - | அவசரநிலைப் பிரகடனம் |
| Prohibition | - | தடை |
| Province | - | மாகாணம் |
| Provision | - | வகையுரை (ஷரத்து) |
| Public Interest Litigation | - | பொதுநல வழக்கு |
| Public order | - | பொது ஒழுங்கு |
| Quo warranto | - | நெறிமுறையுறுத்தல் |
| Rajya Sabha | - | மாநிலங்களவை |
| Referrendum | - | பொது வாக்கெடுப்பு |
| Religious Minority | - | மொழிச் சிறுபான்மையினர் |
| Republic | - | குடியரசு |
| Restriction | - | கட்டுப்பாடு |
| Schedule | - | அட்டவணை |
| Second preference vote | - | இரண்டாவது விருப்ப வாக்கு |
| Secret Ballot | - | ரகசிய வாக்கெடுப்பு |
| Section | - | பிரிவு |
| Secular | - | மதச்சார்பின்மை |
| Simple majority | - | பெரும்பான்மை |
| Single transferable vote | - | ஒற்றை மாற்று வாக்கு |
| Social Justice | - | சமூக நீதி |
| Socialism | - | சமத்துவம் |
| Sovereign | - | இறையாண்மை |
| State | - | அரசு/மாநிலம் |
| State List | - | மாநிலப் பட்டியல் |
| Supreme | - | மேலாண்மை வாய்ந்த |
| Tribunal | - | தீர்ப்பாயம் |
| Union | - | ஒன்றியம் |
| Union of States | - | மாநிலங்களின் ஒன்றியம் |
| Union Executive | - | ஒன்றிய நிர்வாக அமைப்பு |
| Union List | - | ஒன்றியப் பட்டியல் |
| Union Territory | - | ஒன்றிய நேரடி ஆட்சிப்பகுதி |
| Union-State relations | - | ஒன்றிய-மாநிலஉறவுகள் (மைய-மாநில உறவுகள் என்றும் வழக்கிலுள்ளது) |
| Unitary | - | ஓரடுக்கு |
| Writ | - | நீதிப்பேராணை |